ஓம்

ஸ்ரீ கணேசாய நம: 19.6

சர்வஞ்ஞ மகர்ஷியாகிய

ஸ்ரீ வேதவியாச பகவான் அருளிச்செய்த

# ॥ श्रीगणेशगीता ॥

# ஸ்ரீ கணேச கீதை.

தஞ்சை

ஸ்ரீ ல ஸ்ரீ பிரஹ்மானந்த ஸ்வாமிகள் அவர்கள்

இயற்றியருளிய

தமிழ் விருத்தியுரையுடன்

தஞ்சை கல்யாணசுந்தரம் ஹைஸ்கூல், சமஸ்கிருத பண்டிதர்,

பிரஹ்மஸ்ரீ சுப்பிரமண்ய சாஸ்திரிகள் அவர்களால்

பார்வையிடப்பட்டு,

மகா-ள-ள-ஸ்ரீ M. K. பொன்னம்பலம் பிள்ளையவர்கள்

பொருளுதவியைக்கொண்டு

மானேஜிங் டிரஸ்டி சூ. பாக்கியம்பிள்ளை அவர்களால்

தஞ்சை

ஸ்ரீ சங்கரவிலாச சாரதாமந்திர முத்திராசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1929.

கலியுகாதி 5030 சுக்லஹு சித்திரை மீ



[தன் விலை]  [ரூ. 2

ஓம்
ஸ்ரீ கணேசாய நம:

# முகவுரை.

சர்வஜீவ தயாபரராகிய ஸ்ரீ பரமேசுவரன், சம்சாரசாகரத்தில் மூழ்கி வருந்துகின்ற ஜீவர்களை இரக்ஷித்தற்பொருட்டு நாநா ரூபங்களைத் தரித்து, சர்வஜீவர்களும் தம்மை யாராதித்துச் சுலபமாய் அபீஷ்ட சித்தியைப் பெற்றுச் சுகிக்குமாறு, விஷ்ணு சிவ கணேசாதி பல தேவதாரூபமாய் விளங்குகின்றார் அந்த ரூபங்களுள் ஒவ்வொன்றிலும் தமது அதிகார சக்திகளைத் தனித்தனியே அமைத்து, அரசனானவன் மந்திரி சேனாபதி முதலிய பலவடிவமாகத் தனது சக்தியினைத் தனித் தனி விபாகித்து நிறுத்திப் பிரஜைகளைப் பரிபாலித்து வருவதுபோல் ஜகத்தைப் பரிபாலித்து வருகின்றனர். ஆதலால் இங்கு எவர்கள் எக்காரியத்தினை யுத்தேசிக்கின்றனரோ, அவர்கள் அக்காரியத்தினை அத்தேவதாரூப பரமேசுவரன் வாயிலாகவே பெறவேண்டும், வேறு தேவதா ரூபத்தாற் பெற முடியாதென்பது ஈசுவர நியதி. அவ்வாறாகவே, இங்குப் போக மோக்ஷங்களைப் பெற விரும்புவோர் செய்யும் பிரயத்தினங்கட்கு அநேக விக்கினங்களுண்டாகின்றன:—இந்திராதி தேவர் போகாபேக்ஷையால் தவஞ் செய்வோரைத் தங்கள் பதத்திற்குக் கேடு வருமென்றெண்ணித் தடைசெய்வர். முத்தி யுத்தேசமாகத் தவஞ் செய்வோரை, இடையன் தனது மந்தையில் ஓர் மாடேனும் ஆடேனும் குறைந்தால் தனது வளம் குறைந்ததாக வருந்துவதுபோல, இங்கு ஒரு புருஷன் முக்தனானால் அவனாற் செய்யப்படும் காமத்தினாலாகும் தமது வளம் குறையுமென்னும் கருத்தால் தடைசெய்வர். அசுர முதலிய துஷ்டரும் பொறாமையால் தடைசெய்வர். அன்றியும், தேசம், காலம், திரவியம், உணவு முதலியன, ஆதி, வியாதி, துர்ச்சங்க முதலியன, சற்குரு சற்சங்க சற்சாத்திராதி சாதனங்கள் நேராமை புத்திமாந்திய முதலிய மற்றும் பல தடைகளுண்டாவது பிரசித்தமேயாம். இவ்விக்கினங்கள் நீங்கினாலல்லாது நரர்போக மோக்ஷங்கட்கேதுவான சாதனங்களை யப்பியசித்தும் சித்திபெறுதல் கூடாததாம். இவ்விக்கினங்கள் யாவும், சர்வதேவ பூதேந்திரியாதிகளும் எவனது ஆளுகைக்குட்பட்டிருக்கின்றனவோ, அத்தன்மைய கணேசனது பிரசாதத்தினாலன்றி வேறு வகையால் நீங்குவதில்லையாம். விக்கினங்களெல்லாவற்றையும் தன்னை யாராதியாதவரிடத்துச் செல்லும்படியாகவும், ஆராதிப்பவரிடத்து நெருங்காது விலகும்படியாகவும் நடத்தும் ஆற்றலுடைமையின் விக்கினேசுவர னென்னும் காரண

விடுகுறிப் பெயரமைந்த ஸ்ரீ கணேசரது ஆராதனையின்றி வேறெவ்வகையாலும் விக்கினங்கள் நிவாரணமாகாவென்பதனைத் திரிபுரசங்காராரம்பத்தில் நேர்ந்த விக்கின நிவாரணார்த்தம் ஸ்ரீபரமேசுவரன் கணேசனை ஆராதித்தமையும், உலகத்தில் நம்மவ ரெவரும் விக்கினேசுவராராதனமின்றி எக்காரியத்தினையும் தொடங்காமையும், நமது தேசத்தெங்குபார்க்கினும் காரியசித்தி யுத்தேசமாய் ஸ்ரீ கணேசப் பிரதிஷ்டை செய்திருக்கக் காணப்படுவதுமே சாக்ஷியாம். அன்றி சித்தி புத்தியென்னு மிரண்டையும் தரும் சாமர்த்திய ரூப இரண்டு சக்தியும் இக்கணேசன்பாலே யுள்ளனவாம். ஆதலால் போக மோக்ஷங்களை விரும்புவோர் தமது விக்கினமொழிந்து சுலபமாய்ச் சித்திபெறுமாறு அக்கணேசரது திருமுகத்தாற் சொல்லப்பட்ட இக் கணேச கீதையினை இந்நூலிற் கூறப்பட்டுள்ள விதிப்படி படனஞ் செய்யவேண்டியது அத்தியாவசிகமாம். இதன் படனத்தாலேயே போகமோக்ஷங்களை யெளிதிற் பெறலாமென்பதனை இந்நூலிறுதியில் ஸ்ரீ வியாசபகவானாற் கூறப்பட்டுள்ள பல்சுருதியாற் காண்க. இக்கீதை சமஸ்கிருதம் சிறிதுணர்ந்தவரும் முற்று முணராதவரும், பொருளுணர்ச்சியோடு படித்தலாலாம் விசேஷ லாபத்தினை விரும்புவோருமான பலருக்கும் உபயோகமாமாறு, சமஸ்கிருத சுலோகங்களோடு தஞ்சை பிரஹ்மநிஷ்ட பண்டித வெ. சுப்பு ஸ்வாமி ராஜு என்னும் பூர்வாச்சிரம நாமம் பூண்டிருந்த ஸ்ரீலஸ்ரீ பிரஹ்மாநந்த ஸ்வாமிகளாகிய எமது ஸத்குரு மூர்த்திகளால், நீலகண்ட பண்டிதர் வியாக்கியானநுசாரமாகச் செய்யப்பட்ட தமிழ் விருத்தியுரையுடன் பிரகடனஞ் செய்யப்பட்டது.

இக்காலத்திற் சிறந்த சாதனமெனப்படும் பக்திமுக்திகளை அடையச் செய்யும் இக்கணேசகீதையை யாவரும் படனஞ்செய்து போகமோக்ஷங்களைப் பெற்றுய்யுமாறு ஸ்ரீ கணேசமூர்த்தியினிடத்தில் விசேஷ பக்தியுள்ளவரும் ஸ்ரீ கணேசஆலய வழிபாடு முதலிய கைங்கிரியங்களிலீடுபெற்றவருமாகிய திருநெல்வேலி ஜில்லா முன்னீர்ப்பள்ளம் பொ. குப்பையாண்டாபிள்ளை அவர்கள் குமாரர் மெஸ்ஸர்ஸ் ராலிபிரதர்ஸ் சப்யேஜண்டு, M. K. பொன்னம்பலம்பிள்ளையவர்கள் பொருளுதவிகொண்டு இந்நூல் அச்சிடுவித்த பேருபகாரம் உலகம் பெரிதும் பாராட்டற்பாலதாம்.

சுபம்.

சு. பாக்கியம் பிள்ளை,
மானேஜிங் டிரஸ்டி.





ॐ



॥ श्रीगणेशाय नमः ॥

# ॥ श्रीगणेशगीता ॥

# ஸ்ரீ கணேசகீதை.

## உரைமங்கலம்.

### ஸ்ரீ துண்டிவிநாயகர்.

கண்டு சர்க்கரை கனியொடு பாலெனத்
தொண்டர் சுவைத்துத் துதிசெய நின்றிடும்
துண்டி விநாயகன் றுணையடி போற்றிடின்
மண்டு வினைகண் மருவிடா வென்றுமே. (க)

### ஸ்ரீ சரஸ்வதி.

பரைமுத னுல்வாக் காகிப் பங்கயன் முதலோர் தேகந்
தாமுடன் வைகி யெல்லாச் சத்தமும் பொருளு மாகிப்
பரவிக போகந் தந்து பல்கலை யோடு மெய்ம்மைப்
பாகதி யளிக்கும் வாணி பதமலர்ப் போற்றி வாழ்வாம். (உ)

### ஸ்ரீ சற்குரு.

என்னுளத் தென்று நீங்கா திருந்தவஞ் ஞானந் தன்னை
யென்னுளத் தென்று நீங்கா திருக்குமச் சிதம்ப ரேசன்
றன்னுளக் கருணை யாலே சற்குரு வடிவாய் வந்திங்
கென்னுளத் தகலச் செய்தா னிதற்கொரு கைம்மா றுண்டோ.

ஸ்ரீ விசுவநாதர்.

இச்சகத் தலைகள் வீசி யெய்தினர் பாவம் போக்கிப்
பிச்சர்தம் முடிமே லென்றும் பிறங்கிடு கங்கை யாட்டிப்
பச்சிலை யோடு பாலும் பழமுமே நல்கு வார்க்கு
வித்தையோ டின்ப மீவன் விச்சுவ நாதன் றானே. (௪)

ஸ்ரீ விசாலாக்ஷி.

விச்சுவ நாத னோடு விளங்கிடு சத்தி யாகி
இச்சக மெல்லா மன்பா லெழிற்கணா லொருங்கே பார்த்து
மெய்ச்சுக மளித்த லாலே விசாலமாக் கண்ணி னாளென்
றிச்சக மழைக்கு மம்மை யெழிற்பதம் போற்றல் செய்வாம்.()

ஸ்ரீ அந்நபூரணி.

சென்னியிற் கரங்கு வித்துச் சிந்தனை செய்து நிற்போர்
மன்னிடு பாவம் போக்கி வான்பத மளித்தி யார்க்கு
மன்னமு மளித்துக் காக்கு மகிலபூ ரணியா மெங்க
ளன்னபூ ரணியின் பாத மநுதினஞ் சிந்தை செய்வாம். (௬)

மெய்யடியார்.

அம்மையோ டப்ப னாகி யனைத்துமா யிலகா நிற்குஞ்
செம்மலாஞ் சங்க ரன்றாட் சிந்தனை மறவா தென்று
மெய்ம்மையா மின்பந் துய்க்கு மெய்யடி யவர்கட் போற்றிச்
செம்மையாங் கணேச கீதைச் சீருரை செய்கு வாமால். (எ)



தஞ்சைமாநகரம்

ஆசாபூரகவிநாயகர் துதி.



மாக மண்ணு மலரடி யேத்திட
வேக னாகி யெங்குமெய்ப் பூரண
னாக விளங்கு மாசா பூரக
னேக தந்த னிணையடி யேத்துவாம். (க)

அண்டர் போற்று மாசா பூரகன்
றெண்டர் மிடிக டூத்துங் கயமுகன்
பண்டு தேவர் பயங்க ளொழித்தவன்
கண்டு பணிபவர் கண்டிலர் துன்பமே. (௨)

வாசி யோக வல்லவர் தம்மொடு
நேச யோக நிபுணருங் காண்டகு
மாசில் கணேச ஞசா பூரகன்
மாசின் மலரடி வாழ்த்தி வணங்குவாம். (௩)

தஞ்ச மாநகர் தன்னில் வைகுமெம்
மஞ்சு கரத்த ஞசா பூரகன்
தஞ்ச மென்றே தம்மை யடைபவர்க்
கெஞ்ச லிலாத வின்பமளிப்பவன். (௪)

ஆசு தொழித்திடு மாசா பூரனை
வாச மலர்கொடு வாழ்த்தி வணங்கியுன்
ரூச ஞனெனத் தண்பதஞ் சார்குவார்
பாச மொழிந்து பரகதி சேர்வரே. (௫)

நல்ல மனத்தொடு நாடொறு மேத்துவார்
அல்ல லகற்றிடு மாசா பூரகன்
செல்ல வைங்கரன் றிப்பிய நாமமுஞ்
சொல்ல வொழிந்திடுந் தொல்லை வினைகளே. (௬)

பந்த மகன்று பரகதி தன்னையே
இந்த லோகத் தெய்தவும் விரும்புவார்
அந்த மிலாதவ ஞசா பூரகன்
சொந்த மலரடி துணையெனக் கொள்கவே. (௭)

அன்ன தானமே யாசா பூரக
னன்ன தான மளித்துநற் றாசொடு
சொன்ன தானந் துதிபெறக் கொடுத்திடிற்
றன்ன தானத் தளிப்பத மீவனே. (௮)

நாக மீன்றவ னயந்தவோர் பால்க
னாக மாதியா நலம்பெற விளங்குவோ
னாக பூடண னுடவே நிற்பவ
னாக வானன னற்கழல் வெல்கவே. (கூ)

அன்பர் துதித்திடு மாசா பூரகன்
றன்பால் வந்து தாழ்ந்திடு நோயினர்
துன்ப மொழித்திடு துதிக்கை தரித்தவ
னின்ப வுருவதா வென்று மிலகவே. (கo)

அன்பு மிகுந்திவ் வாசா பூரகன்
றுன்ப மொழித்திடு தோத்திரந் தன்னையே
யென்பு முருகிட வியம்பு மவரெலா
மின்பு மெய்துவ ரென்பது முண்மையே. (கக)



## நூல்.

## முதல் அத்தியாயம்.



सूत उवाच ॥

अष्टादशपुराणोक्तममृतं प्राशितं त्वया ।
ततोऽतिरसवत्पातुमिच्छाम्यमृतमुत्तमम् ॥ १ ॥

(அவதாரிகை) இங்கு நிச்சயமாக ஸ்ரீபகவான் பாராசரியர் (வியாஸர்) மந்த மத்தியம மதியினரெல்லோரையும் அநுக்கிரகித் தற்பொருட்டுச் சர்வவேதாந்த சங்கிரகார்த்தம் இதிகாசங்களோடு கூடிய புராணங்களைச் செய்தருளினர். அவற்றில் தர்மார்த்தகாம மோக்ஷார்த்தங்களைச் செவ்வையாய்ச் சொல்லியிருக்கின்றனர். அவற்றுள்ளும் சிறந்ததான மகாபாரதத்திலுள்ள ஸ்ரீபகவத் கீதையான உபநிஷதங்களால் அறிவிக்கப்பட்டவனுபினும், அர்ஜுனன் அவ்வெல்லாவற்றினையும் மறந்தனன். அவன் மறுபடி

யும் பகவானைச் சரணடைந்தான். ஆசுவமேதிகத்தில் மறுபடியும் உத்தரகீதையில் பகவானால் அறிவிக்கப்பட்டான். ஆதலால் வெகு விக்கினமுடையதான இவ்வாத்ம வித்தை ஸ்ரீவிக்கினராஜன் திருமுகத்தினின்று பெறப்படுமாயின், நிர்விக்கினமாய்க் கைவல்ய சித்தியின் பொருட்டதாகுமென்று கருதி ஸ்ரீகஜானனரை நல்ல வக்தாவாகவுடையதும் வரேணியனை யதனை யறிபவனாகவுடையதுமான கீதையினைக் கணேசபுராண நடுவில் கோத்தருளினர். அதினும் முதலில் அறிஞர் பிரவிருத்தியின்பொருட்டுச் சூதாது பிரசின முகத்தால் விஷயத்தினையும் பிரயோஜனத்தினையும் இரண்டு சுலோகங்களாற் காட்டுகின்றார்.

(சுலோகார்த்தம்) சூதர் கேட்கலாயினர்:—பதினெண் புராணங்களிற் சொல்லப்பட்ட அமிருதம் (அமிருதம்போற் பிரீதியினைச் செய்யும் புருஷார்த்தம் நான்கும்) தம்மால் பருகுவிக்கப்பட்டது. (தம்மாற் கேட்பிக்கப்பட்டது; என்னால் கேட்கப்பட்டது, என்பது பொருள்). அப்புராணங்களினின்றும் அதி (அத்தியந்த) ரஸமுடையதான உத்தமமாகிய அமிருதத்தினைப் பருக விரும்புகின்றேன். (எ-று).

இங்குச் சுகமாயறிதற்பொருட்டு ஒருவர் கேட்பதுபோலும் மற்றொருவர் சொல்லுவதுபோலும் இவ்வாறு கதை முகத்தால் ஜனக யாஜ்ஞவல்கிய சம்வாதப் பிரகாசகங்களான பிருகதாரணியகாதி யுபநிஷதங்களிற் போல பிரத்தியகாத்ம தத்துவம் சொல்லப்படுகின்றது. அவ்வுணர்வும் மோகத்தினை நிவிருத்திக்கும் வாயிலாகக் கைவல்யத்தினை யடைவிப்பதாகின்றதென்பது சர்வ வேதாந்தங்களிலும்கண்டாகோஷமாம் (மணியோசைபோற் பிரசித்தமாம்.) அங்கு. இம்முதல் சுலோகத்தினர்த்தம் பதினெண் புராணங்களிலும் சொல்லப்பட்டுளது.

பதினெண் புராணங்களாவன:— “मद्वयं भद्वयं चैव ब्रत्रयं वचतुष्टयम् । आलिंपाग्निपुराणानि कूस्कं गारुडमेव च ॥ ம-விரண்டு, ப-விரண்டு, பிர-மூன்று, வ-நான்கு ஆ-லிங்-ப-அக்னி புராணங்களும் கூ-ஸ்கந்-காருடமுமாம்.” என்னும் சுலோகத்தின்படி மார்க்கண்

டேயம், மத்ஸ்யம் (ம-இரண்டு), பவிஷ்யத்து, பாகவதம் (ப-த்வயம்), பிரஹ்மாண்டம், பிரஹ்ம புராணம், பிரஹ்ம வைவர்த்தம் (பிர-த்ரயம்), விஷ்ணு புராணம், வாயு புராணம், வராக புராணம், வாமன புராணம் (வ-சதுஷ்டயம்), ஆதித்தியம், லிங்கம், பத்ம புராணம், அக்னி புராணம், கூர்ம புராணம், ஸ்கந்த புராணம், கருட புராணம் என்பனவாம்.

பதினெண் புராணங்களைக் கேட்டும் யான் கிருதார்த்தனுகாமையின், 'அவற்றினின்றும் அதிரஸமுடைய உத்தமாமிருதத்தினைப்பருக(கேட்க)விரும்புகிறே' னென்றார். இதற்கு "रसो वै सः–இரஸம் அந்தப் பிரஹ்மமாம்" என்னும் சுருதியினுல் இரஸமாகிய பிரஹ்மாநந்தமேதுவோ, அதுவே பிரதானத்தன்மையாகப் பிரதிபாதிக்கப்படுந்தன்மையால் எதன்கண்ணிருக்கின்றதோ, அத்தன்மைய சாஸ்திரம் அத்தியந்தம் இரஸமுடையதாதலின் அதிரஸமுடையதாம். அதனை ஆதரவோடு கேட்கத் தம்மைப் பிரார்த்திக்கின்றேன் என்பது பொருளாம். அல்லது அப்புராணங்களினின்றெது அதிரஸமுடையதாகப் பருகப்பட்டதோ அது பன்முறை கேட்கப்பட்டதாயினும், ஆத்யாத்மிக ஆதிபௌதிக ஆதிதைவிகங்களான விக்கினங்களின் மிகுதிப்பாட்டால் நழுவுகின்றது. (ஆதிவியாதிகளாம் விக்கினம் ஆத்யாத்மிகம். சீதோஷ்ணுதிகளாலாவது ஆதிபௌதிகம். *தேவர்கள் பிரஹ்ம வித்தையினைப் பெருத வண்ணம் செய்யும் விக்கினங்கள் ஆதிதைவிகம்). ஆதலால் அவ்வமிருதத்தினைப் பருக மூவகை விக்கினங்களினின்றும் இரக்ஷிக்க விரும்புகின்றேன். விக்கினேசுவரர் திருமுகத்தினின்று வெளிப்பட்ட வித்தியாமிருதத்தினைப் பருகுவிப்பீராயின் அது விக்கினங்களால் நழுவ (கெட)க் கூடியதாகாது என்பது கருத்து.

---

* தேவர்கள் விக்கினம் செய்தலை "ஆதலால் மனிதர்கள் இதனை அறிக என்பது எதுவோ அது இத்தேவர்கட்குப் பிரியமன்று" என்னும் (பிரு-க-ச-கo) சுருதியினுல் காண்க.

புத்திராதியர் பாமரர்களான நிகிருஷ்டமான (தாழ்ந்த)வர்களது) அமிருதமாம். † யஞ்ஞத்தினு லடையப்படுவதான ஸ்வர்க்கம் உத்கிருஷ்டமான (உயர்ந்த)வர்களது அமிருதமாம். "அதன்மேல் வந்து அமிருதத்தன்மை யடைகின்றுன்" என்னும் சுருதியால் உச்சிநாடி வழியாகக் கிரம முக்திஸ்தானத்தினை யடைதல் உத்கிருஷ்டதரமான (அவரைவிட உயர்ந்த) வர்களது அமிருதமாம். "அதனுல் மர்த்தியன் அமிருதனுகின்றுன் இங்கு பிரஹ்மத்தினைச் செவ்வையாய் வியாபிக்கின்றுன்" (பிரு-௬௪) என்னும் சுருதியால் பிரஹ்மபாவம் உத்கிருஷ்டதமமான(எல்லோரினும் உயர்ந்த) வர்களது அமிருதமாம். அதுவே இங்கு உத்தமம் என்று தமப் (तमप्) என்னும் பிரத்தியயத்தால் (தமவென்னும் விகுதியால்) சொல்லப்பட்டதாம்.

இதனுல் அறிய விரும்பப்படும் விஷயம் பரப்பிரஹ்மம் என்பது காட்டப்பட்டது. (க)

येनामृतमयो भूत्वाऽऽप्नुयां ब्रह्मामृतं यतः ।
योगामृतं महाभाग तन्मे करुणया वद ॥ २ ॥

[உ] (அ-கை) விஷயத்தினைக் கூறிப்பிரயோஜனத்தினைக் கூறுகின்றுர் :—

(சு-ம்) எதனுல் நிக்கிரகிக்கப்பட்ட பதினேரிந்திரியங்களை யுடையவனும் மேலெழுந்ததன்மையாக வேதார்த்த முணர்ந்தவனுமான முமுக்ஷு பிரஹ்மவித்தையில் அதிகாரியாவானே அதனுல் மகாபாகரே! தம்மால் உபதேசிக்கப்பட்ட எந்தப் பிரஹ்மாமிருதத்தினுல் அமிருதமய (ஈசுவர)னுய் அதாவது கடாகாசம் மகாகாசத்தன்மையடைவதுபோல காரியோபாதியினீக்கத்தால் காரணுேபாதித்தன்மையினை யடைந்து (அநுபவித்து), அமிருதமான (காரணுேபாதியினையும் விடுதலால் சுத்தசின்மாத்திரமான) பரம் பிரஹ்மத்தினை அடைவேனே, அந்த யோகாமிருதத்தினைக் கருணையால் எனக்குச் சொல்லியருள்வீராக. (எ-று)

† "சோமத்தைப் பருகினேம் அமிர்தர்களாயினேம்" (அதர்வசி-௩) என்னும் சுருதியால்.

மிருகம் (அழிவது) என்பது அசேதனமாகிய காரணத்தோடு கூடிய பஞ்சகோசமாம். அதனின் வேருனது அமிருதம் சின்மாத்திரமாம். அதனைப் பிரதானமாகவுடைய ஈசுவரனை அமிருதமயனென்ருர். "இச்சரீரத்தினின் றெழும்பிப் பரஞ்சோதியினையடைந்து தனது ரூபமாகயாகின்றான்" என்றும் (சாந்-அ-கஉ-ங), "இவ்வாறு அந்தவித்வான் இச்சரீரபேதிப்பால் மேற்கிளம்பி இச்சுவர்க்கலோகத்தில் எல்லாக் காமங்களையுமடைந்து அமிருதனுவன்." (ஐதரே-ச-சு.) என்றும் சுருதிகள் கூறுதலால் வேதங்களில் எங்கும் சகுணப்பிரஹ்ம பாவத்தினையடைதலை முன்னிட்டதாகவே நிர்குணபிரஹ்ம பாவத்தினடைவு கேட்கப்படுகின்றது அதுபற்றியே 'அமிருதமயனுய் அமிருதமான பிரஹ்மத்தினையடைவேனே' வென்ருர். எனவே ஸ்வரூபமாக ஆகுதலும் ஸ்வர்கலோகப்பிராப்தியுமான சகுணத்தினடைவும், பரஞ்சோதியைச் சார்தலும் அமிருதபாவமுமான நிர்க்குணப் பிரஹ்மத்தி னடைவும் வித்தையின் பிரயோஜனமாமென்பது கூறப்பட்டதாம்.

யோகமென்பது பிரஹ்மாத்மைக்யம். அதனைப் பிரதிபாதிக்கும் நூல் அமிருதசாதன மாதலால் அமிருதமாம். அத்தகைய பிரஹ்மோபநிஷதமான இக்கீதையினை 'யோகாமிருத' மென்ருர்.

குரவனை 'மகாபாகரே,' வென்று விளித்தமையால் "ஞானம் வைராக்கியம் ஐசுவரியம் தர்மம் என்னும் நான்கும் பிரஹ்ம வடிவமாகிய ஆத்மாவுக்கு நித்யமேயாம்" என்னும் தக்ஷஸ்மிருதியினுல் பிரஹ்மவித்தியாபலத்தால் பெற்ற தடையற்ற ஞானைசுவரியாதிகளையுடைய குரு அநுசரிக்கத்தக்கவ ராவரென்பது காட்டப்பட்டது. பகமென்னும் ஐசுவரியாதிகளின் சமுகம் பாகமாம்; மகத்தான பாகம் எவனுக் கிருக்கிறதோ அவன் மகாபாகன் எனப்படுவன்.

தீவிர சேவையினுலாவது மிகுந்த சாதனத்தினுலாவது வேறு வித்தையினுலாவது பிரஹ்மவித்தையின் விநியோகம் சம்பவியாதென்பதனைச் சூசிப்பித்தற் பொருட்டுக் 'கருணையால்' என்ருர்.

அதற்குத் திவிரசம்சாரதுக்கக் கிரஸ்தர்களான இவர்கள் அவசியம் சம்சாரத்தினின்று விடுவிக்கவேண்டியவர்கள் என்னும் புத்தியால் என்பது பொருளாம்.

இங்குப் பிரஹ்மத்திற்கும் கீதைக்கும் பிரதிபாத்தியப் பிரதிபாதகபாவ சம்பந்தமாம்; அதனை விரும்புகிறவன் அதிகாரியாவன்.

இவ்வாறு சூதப்பிரசின நிமித்தத்தால் அநுபந்த சதுஷ்டயம் கூறப்பட்டது. (௨)

व्यास उवाच ॥

अथ गीतां प्रवक्ष्यामि योगमार्गप्रकाशिनीम् ।
नियुक्ता पृच्छते सूत राज्ञे गजमुखेन या ॥ ३ ॥

[௩] (அ-கை) இவ்வாறு சாஸ்திராரம்பாங்கமான அநுபந்த சதுஷ்டயத்தினைச் சூதப்பிரசினமுகத்தாற் காட்டி ஸ்ரீகஜானனன் வரேணிய சம்வாத முகத்தால் சாஸ்திரத்தினை ஆரம்பிக்கின்றவராய் ஸ்ரீவியாஸர் கூறலாயினர்:—

(சு-ம்) இனி, சூத! பிரசினஞ்செய்த ஜிஞ்ஞாசுவாகிய வரேணியராஜனுக்குபதேசித்த ஸ்ரீகஜமுகரால் பிரேரிக்கப்பட்டது எதுவோ அத்தன்மைய யோகமார்க்கத்தினைப் பிரகாசிப்பதான (சரஸ்வதியாகிய) கீதையினைச் சொல்லுகிறேன். (எ-று)

இங்கு, 'அதிரஸமுடையதனைப் பருக விரும்புகின்றேன்' என்று கூறிய சூதரால் துச்சமாக நிச்சயிக்கப்பட்டன வாகிய அற்ப ரஸமுள்ள தர்மார்த்த காமபலங்களினின்று ஆத்மாவின் (தனது) நித்தியாநித்திய விவேகமுடைமையும், இகாமுத்திரார்த்த பலபோகவிராகமும், 'எதனால்' என்பதனால் சமதமாதி சம்பன்னத்துவமும், 'பிரஹ்மாமிருதத்தை யடைவேனோ' என்பதனால் முமுக்ஷுத்துவமும் காட்டப்பட்டமையால், இவற்றின் பின் என்பது 'இனி' என்றதற்குப் பொருளாம்.

இத்தன்மைய சாதனசதுஷ்டய சம்பன்னனான உனக்குச் சொல்லுகிறேன் என்று வருவித்துக் கூட்டுக.

எவரைப் பிரளயகாலத்தில் எல்லாப்பிரஜைகளும் அடைகின்றனவோ, எவரிடத்தினின்று யாவும் பிறக்கின்றனவோ, என்பதனால் சகலபிரபஞ்சயோனியான ஈசுவரன் கஜமென்னும் சொற்பொருளாவர். அவரே எவருக்கு முகமோ அதாவது முதற்காரியமோ, அத்தன்மைய பரமாத்மா கஜமுகரெனப்படுவர்.

"எப்போது மனதோடு ஐய்யறிவுகளும் நிற்கின்றனவோ புத்தியும் சேஷ்டிக்கிறதில்லையோ, அதனை மேலான கதியென்று கூறுவர். ஸ்திரமான இந்திரியதாரணையாகிய அதனை யோகமென்று மதிக்கின்றனர். அப்போது சோர்வில்லாதவனாகின்றான். யோகமே உற்பத்தி யொடுக்கங்களாம்" என்று (கடவல்லி-சு-கo) சுருதியிலும், "இந்திரியக்கிராமங்களைத்திரட்டி புத்தியில் நிச்சலமாக வைத்து, விஷயங்களையும் அவற்றின் நினைவையும் விட்டுச்சித்தினை யொட்டிநிற்க இவ்வுபாயமானது தத்துவமஸியாதி வாக்கியார்த்தஞானோற்பத்தியின் பொருட்டு ஆதரவோடு எல்லா வேதாந்தங்களிலும் நிலைத்துள்ளதாம்," என்று வார்த்திகத்திலும் யோகத்திற்குப் பிராதானியம் காணப்படுகின்றது. ஆதலால் வித்தை அதனையின்றி உண்டானதாயினும்கெடும்; உண்டாகவும்மாட்டாது என்று மதித்து 'யோகமார்க்கத்தினைப் பிரகாசிப்பதான' என்று கூறப்பட்டது. ஞானமார்க்கப் பிரகாசினியென்று கூறவில்லை. இதனாற்றான் பாதஞ்சல சூத்திரபாஷ்யகர்த்தாவான பகவான் பாதராயணர் (வியாஸர்) நிர்விகற்பசமாதியினை யெடுத்துக்கொண்டு "இவ்வவஸ்தையில் ஈசுவரனுக்காவது அநீசுவரனுக்காவது ஞானிக்காவது கைவல்யம் சித்தித்ததேயாம்." என்று கூறியிருக்கின்றனர். (௩)

वरेण्य उवाच ॥

विघ्नेश्वर महाबाहो सर्वविद्याविशारद ।
सर्वशास्त्रार्थतत्त्वज्ञ योगं मे वक्तुमर्हसि॥ ४ ॥

[ச] (அ-கை) இவ்வாறு கிருஷ்ணார்ஜுனர்களைப்போல கணேச வரேணியரிருவருக்கும் சாஸ்திரத்தினால் தத்துவம் நிர்ணயிக்கப்பட்டதாயினும், லோகதிருஷ்டியினை யநுசரித்து, அவ்விருவரின் சம்வாதத்தினைக் கூறுகின்றார். அதில் ஜிஞ்ஞாஸுவான வரேணியன் கூறலாயினன்:—

(சு-ம்) விக்கினேசுவரரே! மகாபாகுவே! சர்வ வித்தையிலும் தேர்ந்தவரே! சர்வ சாஸ்திரார்த்த தத்துவமுணர்ந்தவரே! யோகத்தினை எனக்குச் சொல்லக்கடவீராக. (எ-று)

இங்ஙு வியாதி ஸ்தியானம் (மனமெலிவு) சம்சயமுதலியனவும், தூக்கம் தூர்மனத்தன்மை (மனச்சஞ்சலம்) முதலியனவும் தன்னாலாம் விக்னங்களாம். யக்ஷராக்ஷஸ மிலேச்சர் திருடர் வியாதர் முதலியோர் பிறராலாம் விக்கினங்களாம். பாஷண்டமார்க்காபிநிவேச முதலியன சாஸ்திரத்தாலாம் விக்கினங்களாம். அந்த ஞானயோக விரோதிகளின் கிரமமான நீக்கத்தினைப் பிரார்த்திப்பவராய் முற்பாதியால் விளிக்கின்றார். அவற்றுள், அவ்வப்பாப பலன்களும் விசேஷமாய்க் கெடுப்பனவுமான முதலாவது விக்கினங்களின் நாசம் விக்கினேசுவராதீனமாம். அதனால் 'விக்னேசுவரரே' என்றும், சர்வஜன பாகுமுதலியவற்றாலாம் பாகுவுடையவனது இடைப்பட்ட விக்கினங்களின் நாசம் மகாபாகுவினதீனமாம். ஆதலால் 'மகாபாகுவே' என்றும், கடைசியானவை சத்தசத்து மார்க்கமுணர்ந்தவரும், மாதாபிதாக்கள் நூற்றுவரினும் ஆப்ததமருமானவரின் தயையினாலேயே நாசமாமாகலின் 'சர்வவித்தையிலும் தேர்ந்தவரே' என்றும் விளித்தனர்.

சர்வசாஸ்திரங்களிலும் சம்யமாதிகளாற் சாதிக்கப்படும் யோகமும் அதன் சித்தியை முன்னிட்டதான கைவல்யப்பிராப்தியும் சமானமா மென்பதனால் சாக்தாதி மார்க்கங்களின்று நிவிருத்தி எவ்வாறு மென்னு மாசங்கையை நீக்குதற்பொருட்டு 'சர்வ சாஸ்திரார்த்த தத்துவ முணர்ந்தவரே' என்று விளிக்கப்பட்டது. எவன் உயர்ந்த அல்லது தாழ்ந்த பிறமார்க்கத்தினை ஆசிரயிக்கின்றானோ அவன் பிரத்தியவாயத்தால் தகிக்கப்பட்டவனாய் எதனின்றும் சித்தியினையடையான் என்பது அவ்வச் சாஸ்திரக் கருத்தாம். அது "எவன் சாஸ்திர விதியினைவிட்டு இச்சையின்படி நடக்கின்றானோ அவன் சித்தியினை அடையான் சுகத்தையும் மேலான கதியினையுமடையான்." என்றும் "செவ்வையா யநுஷ்டிக்கப்பட்ட பிறர் தர்மத்தினும் விகுணமான (குறையுள்ள) தனது தர்மம் மேலானதாம். தனது தர்மத்தில் மரித்தல் சிரேயசுளது. பரதர்மம் பயத்தைத்

தருவதாம்.'' என்று பகவத்கீதையில் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால் எந்த சாஸ்திரார்த்தம் எவனுக்கு அநுகூலம் எவனுக்குப் பிரதிகூலம் என்றும் தத்துவத்தினைச் செவ்வையாயுணர்ந்து பரம காருணிகரான தாமே எனக்கு நல்ல உசிதமான யோகத்தினை அனுக்கிரகிக்கச் சமர்த்தராகின்றாரென்பது கருத்தாம். (ச)

श्रीगजानन उवाच ॥

सम्यग्व्यवसिता राजन्मतिस्तेऽनुग्रहान्मम ।
शृणु गीतां प्रवक्ष्यामि योगामृतमयीं नृप ॥ ५ ॥

[ரு] (அ-கை) இவ்வாறு வரேணியராஜனால் பிரார்த்திக்கப்பட்டவரான ஸ்ரீ கஜாநநர் அவனைப் புகழ்ந்து சொல்லலாயினர்:—

(சு-ம்) இராஜனே! எனது அநுக்கிரகத்தால் உனது யோக சிரவண விருப்புடைய மதியானது செவ்வையான நிச்சய முடையதாயிற்று. ஆதலால் நிருபனே! யோகாமிருதமயமான கீதையினைச் சொல்லுகிறேன்; கேள். (எ-று)

"எவனையே இவன் விரும்புகின்றானோ அவனால் அடையப்படுபவனுவன்'' என்பதும் "மகாபயத்தி னின்று இரக்ஷிப்பதான ஈசுவராநுக்கிரகத்தினாலேயே அத்வைத வாசனை புருஷர்கள் இருவர் மூவருக்கேயுண்டாகின்றது.'' என்பதுமான சுருதிஸ்மிருதிவாதங்கள் யோகநிஷ்டைத்தன்மை ஈசுவராநுக்கிரக பலனுதலைக் காட்டுகின்றன. ஈசுவராநுக்கிரகமும் எதனாலா மென்னு மாசங்கை நீக்குதற்பொருட்டு நிருபனே என்று விளித்தனர். விசுவபாலகனான உன்னிடத்து விசுவரூபனான எனது அநுக்கிரகம் யுக்தமேயா மென்பது தாற்பரியம்.

பிரஹ்மாத்மைக்கியப் பிரதிபாதகமான சாஸ்திரத்தினைப் பிரதானமாகவுடைய தென்பார் 'யோகாமிருதமயமான' என்றார். சிருஷ்டியாதிகளோ அதனை யறிதற் குபாயமாந் தன்மையால் இங்கு கூறப்படுகின்றது; தாற்பரியத்தாலன் றென்பது கருத்து. (ரு)

न योगं योगमित्याहुर्योगो योगो न च श्रियः ।
न योगो विषयैर्योगो न च मात्रादिभिस्तथा ॥ ६ ॥

[சூ] (அ-கை) இனி வைராக்கியம் முதற்சாதனமாதலின், அதனை யுண்டு பண்ணுதற்பொருட்டுப் பிறரால் கொள்ளப்பட்ட யோகங்களை நிஷேதிக்கின்றார்:—

(சு-ம்) பெறுததனைப் பெறுவதாகிய யோகத்தினைப் பிரஹ்ம வித்துக்கள் தமது சாஸ்திரத்தில் யோகசப்தார்த்தமாகக் கூறார். (மற்றோ, நித்தியப்பிராப்தமேயான ஆத்மாவினைக் கண்டத்தி லுள்ள ஆபரணம் மறந்து மீண்டும் நினைக்கப்பட்டபோது பெறப் பட்டதாவதுபோல அஞ்ஞானத்தினழிந்து ஞானத்தினல்பெறப் பட்டதாகக் கூறுவர். ஆதலால் உலகசித்தமான யோகசப்தார்த்தத் தினை அவர்கள் ஆதரிக்கிறதில்லையென்பது பொருளாம்.) செல்வத் தின் யோகமும் யோகமென்னர். விஷயங்களோடாம் யோகமும் யோகமென்னர். அவ்வாறே பிரமாதா முதலியவற்றோ (பிரமாணப் பிரமேயங்களோ)டாம் யோகமும் யோகமென்னர். (எ-று)

தேகாத்ம வாதிகளான சார்வாகர், ஸ்வாதந்திரியம் (தன்வசுத் தனுதல்) முக்தியும், பாரதந்திரியம் (பிறர்வசமாதல்) பந்தமுமாம். அவ்விரண்டும் தன (செல்வ)த்தின் உண்மையின்மைகளின் வசத்த வாம் என்பதனல் தனயோகமே யோகமென்பார். அதனை நிஷே திக்க 'செல்வத்தின் யோகமும் யோகமென்னர்' என்றார்.

யோகத்திற் குபயோகப்படாத தனம் புருஷார்த்தமாகாது. ஆதலால் தனசாத்தியமாய், மாலை சந்தனம் ஸ்திரீ முதலியன வாகிய விஷயங்களோடாம் யோகம் சுகஹேதுவாம். அதுவே புருஷார்த்தமாமென்று மற்றோர் சார்வாகனன இந்திரியாத்மவாதி கூறுவன். அவன் மதத்தினை நிராகரிக்க 'விஷயங்களோடாம் யோகமும் யோகமென்னர்' என்றார்.

சுழுத்தியில் தேகத்திற்கும் இந்திரியங்கட்கும் போக்திருத்து வமின்மை ஸ்பஷ்டமாம்; போகமும் பிரமாத்திருப் பிரமாணப் பிரமேயங்களின் யோகமின்றிச் சம்பவியாது என்று மனஆத்ம

வாதியான மற்றோர் சார்வாகன் பிரமாதாவினது தனத்தின் யோகத்தினை யோகபதத்தின் அர்த்தமாகக்கொள்ளுகின்றான். அவன் மதத்தினை நிஷேதிக்க 'பிரமாதா முதலிய வற்றோடாம் யோகமும் யோகமென்னுர்' என்றார். பிரமாதா முதலிய வற்றோடாம்யோக மெதுவோ அதுவும் யோகமாகா தென்பது பொருள். இதனுற்றான் சிலர் "ஜீவித்திருக்கும்வரையில் சுகமாக ஜீவிக்கவேண்டும். கடன் பட்டாவது நெய்யைக் குடிக்கவேண்டும். பஸ்மமான தேகம் மறுபடியும் வருவதேது?" என்பர். (சு)

योगो यः पितृमात्रादेर्न स योगो नराधिप ।

[எ] (அ-கை) ஆருகதர்களோ சர்வஞ்ஞ குலத்திற் பிறத்தலே மிக்கா மேற்கதிவடிவ கைவல்யத்திற்குச் சாதகமாம், ஆகாயத்திற் சரிக்குந்தன்மைக்குப் பக்ஷியின் பிறப்பினைப்போல என்பர். அதனை நிஷேதிக்கின்றார்:—

(சூ-ம்) நராதிபனே! பிதா மாதா முதலியோருடைய யோகம் எதுவோ அதுவும் யோகமன்று. (எ-று).

"தாயினை யுடையவன் பிதாவினை யுடையவன் ஆசாரியனை யுடையவன் என்று சொல்லுக" என்னும் (பிருக-ச-க-உ) சுருதியினல் விசிஷ்டமான (மேன்மையான) தாய் முதலியோர் யோகம் (சம்பந்தம்) விசிஷ்டமான நராதிபனது யோகம்போல் இவனைத் தீயவழியினின்று வேறுபடுத்துக, நல்வழியினைப்பற்றுதலோ நல்ல அதிருஷ்ட சாமக்கிரியின் பயனும். ஆதலால் அஃதின்றி அவர்களோடாம் யோகம் பயனின்றியதா மென்பது பொருள்.

மூலத்துள்ள ஆதி (முதலிய) என்னும் பதத்திற்கு ஆசாரியன் அர்த்தமாம். அவர்களுக்கும் நிர்ஜாமெனப்படும் யோகாப்பியாசத்தினலேயே இஷ்டசித்தி யுண்டாகிறது; குலத்திற் பிறத்தன்மாத்திரத்தா லுண்டாகிறதில்லை யென்பது பொருள்.

यो योगो बन्धुपुत्रादेर्यश्चाष्टाभूतिभिः सह ॥ ७ ॥

(அ-கை) அப்பியசிக்கப்பட்ட யோகமுடையவன் இருதயத்தினுள், சென்றவர்களான பந்துக்களையும் இனி வருபவர்களான

புத்திர பௌத்திராதியரையும் அலௌகிகமான பிரத்தியக்ஷத்தாற் காண்கின்றான் என்றும் அதுவும், "அணிமா மகிமா கரிமா லகிமா பிராப்தி பிராகாமியம் ஈசித்துவம் வசித்துவமென்பன அஷ்டசித்திகள்" என்னும் பிரசித்தமானவற்றோடாம் சம்யோகமெதுவோ, அதுவும்யோகமாகாதெனக் கூறுகின்றார்:—

(சு-ம்) பந்து புத்திராதியரின் யோகம் எதுவோ அதுவும் அஷ்டைசுவரியங்(அஷ்டசித்தி)களோடுகூட வுண்டாம் யோகம் எதுவோ, அதுவும் யோகமன்று. (எ-று)

சென்றன முதலியவற்றைக் காண்டலும் விபூதி யெட்டுமாகிய இவற்றோடாம் யோகமும் யோக மன்றென்பது பொருள்.

துகள் எதுவோ அதனினும் அணுவாதல் அணிமா. மகத்தான மேருவாதிகளினும் மகான் (பெரியவன்) ஆகுதல் மகிமா. பஞ்சு முதலியவற்றினும் இலகு (இலேசு) ஆதல் இலகிமா. பருவத முதலியவற்றினும் குரு (கனம்) ஆதல் கரிமா. சந்திரமண்டலத்தினையும் விரலாற் றீண்டுவது பிராப்தி. ஒரு பிடி (கை) யளவினதான அந்நாதியினையும் நூறு ஆயிர போஜனங்கட்குப் போதுமானதாக்கல் பிராகாம்யம். சந்திர சூரியாதியரையும் தன்வசத்திற்செய்தல் ஈசித்துவம். திவ்வியமான ஸ்திரீகளை யடைந்தும் மனதினால் விகாரப்படாமை வசித்துவம். (எ)

न स योग स्त्रिया योगो जगदद्भुतरूपया ।
राज्ययोगश्च नो योगो न योगो गजवाजिभिः ॥ ८ ॥

[அ] (அ-கை) ஆருகதாதியர் கொண்ட யோகத்தினை மறுத்துச்சித்தர் கொண்டுள்ள யோகத்தினை மறுக்கின்றார் :—

(சு-ம்) மூவுலகத்தும் அற்புதவழகுடைய ஸ்திரீயோடுண்டாகும் யோகமெதுவோ அதுவும் யோகமன்று. இராஜ்யயோகமும் யோகமன்று. யானை குதிரைகளோடுண்டாம் யோகமும் யோக மன்று. (எ-று)

பிருதிவி யப்புத் தேயு வாயு ஆகாசங்களில் செவ்வையாயெழுந்த ஐந்து வடிவ யோககுணம் பிரவிருத்தித்தபோது,

"அதனைப் பெற்ற அவனுக்கு சரீரம் யோகாக்கினி மயமாம்; ரோகமுமில்லை, ஜரையுமில்லை, மரணமுமில்லை" என்னும் (சுவேதா-உ-௧௨) சுருதியினால் பஞ்சபூதங்களை ஜயித்த யோகிக்குப் பாஞ்ச பௌதிகமான சரீரம் அஜரமும் அமரமு மாகின்றது. அவன் அச் சரீரத்துடனே சர்வ தேவலோகங்களிலும் சஞ்சரித்து இரம்பை திலோத்தமை ஊர்வசி முதலிய அற்புத ஸ்திரீகளோடு சம்பந்தித் தல் எதுவோ அதுவும், ஜீவித்திருந்த ஜநகராஜனது தேகத்தில் * ஸுலபை என்னும் யோகினீ பிரவேசித்தாள் அத்தன்மையதும், மரித்த நந்தராஜனது சரீரத்தில் ஒரு யோகிபிரவேசித்து யோக நந்தனென்னும் இராஜாவானன் அத்தன்மையதும், வசிஷ்டரது காமதேனுவானது விசுவாமித்திரராஜனை அடக்குதற்கு அநேக யானை குதிரைகளையுடைய சேனைகளை யோகபலத்தினால் சிருஷ் டித்தது அத்தன்மையதுமான சித்தர்கள் கொள்ளும் யோகம் இந்த மோக்ஷ சாஸ்திரத்தில் யோகபதத்தின் அர்த்த மாகாதென் பது பொருள். (அ)

योगो नेन्द्रपदस्यापि योगो योगार्थिनः प्रियः ।

[௯] (அ-கை) சார்வாக மதத்தில் மரணமே மோக்ஷம் என் பது சர்வசாஸ்திர விரோதமாதலால் தள்ளத்தக்கதேயாம். மற்றைய விரண்டு மதமும் "அவை சமாதியில் உபஸர்க (விக்கின)ங்களாம். விழித்தபோது சித்திகளாம்." என்னும் பரமரிஷியின் வசனத்தால் சித்திபெற்ற யோகிகளின் சித்திகள் சமாதி விக்கினத் தன்மையால் கைவல்யப் பிரதிபந்தக மாதலால் தள்ளத்தக்கனவேயாம். அவைதி கமாதலால் வேதத்தில் உபதேசிக்கப்பட்ட யோகம் தள்ளத்தக்க தன்று மென்றுசங்கித்துக் கூறுகின்றார் :—

(சு-ம்) (ஜீவப் பிரஹ்மைக்கியமான) யோகத்தினை விரும்பு கிறவனாகிய முமுக்ஷுவுக்கு (அசுவமேதம் நூறுலடையப் படுவ

* "சுலபையென்னும் பிரஹ்மவாதினியானவள் ஜநகரோடு விவா திக்க விரும்பியவளாய்த் தன் சரீரத்தினைவிட்டு ஜநகர்தேகத்தில் பிரவே சித்து அவரோடு விவாதித்துப் பின் தனது தேகத்திற் பிரவேசித்தாள்" என்பது ஸ்மிருதியாம்.

தான) இந்திரபதத்தின் ஆதிபத்தியத்தினையடைதல்வடிவ யோகம் எதுவோ அதுவும் பிரியமான யோகமன்று. (எ-று)

"எப்படி இங்கு கர்மத்தா லீட்டப்பட்ட லோகம் நசிக்கின்றதோ அவ்வாறே அங்குப் புண்ணியத்தினு லீட்டப்படும் லோகமும் நசிக்கின்றது" என்னும் (சாந்.அ.க-சூ) சுருதியினுல் அதற்கு அநித்தியத்துவம் சொல்லப்படுதலின், யோகமன்றென்றார்.

योगो यः सत्यलोकस्य न स योगो मतो मम ॥ ९ ॥

(அ-கை) இருக்குக. அப்படியானுல் உபாசனையோடுகூடிய கர்மத்தினு லடையப்படும் சத்தியலோகத்தின் யோகம் எதுவோ அதுவே முக்கிய யோகமா மென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

(சு-ம்) சத்திய(பிரஹ்ம) லோகத்தின் யோகம் எதுவோ அது யோகமென்று என்னுல் மதிக்கப்பட்ட தன்று. (எ-று)

"அவர்கள் எல்லோரும் பிரஹ்மலோகத்தில் பராந்த காலத்தில் (மகா பிரளயத்தில்) பராமிருதாய் முக்தராகின்றனர்." (தை.சூ.கo-கo.)

"பரனது (இரண்யகர்பரான பிரஹ்மாவின்) அந்தத்தில் (அதிகாரமுடிவில்) மகாப்பிரளயம் நேருங்கால் கிருதாத்மர்களான அவர்கள் எல்லோரும் விடுபடுகிறவரான பிரஹ்மாவோடு பரமபதத்திற் பிரவேசிக்கின்றனர்." என்னும் சுருதிஸ்மிருதிகளால் சத்திய லோகத்தின் யோகமான கிரமமுத்தி பலம் முடிவில் கிருதாத்மாவால் அடையப்படுகின்றதெனினும், அங்கு பாவனு தாரதம்மியத்தினுலாகிய நீச உச்ச பாவமான (தாழ்வு உயர்வெனுந் தன்மையான) மலர்ச்சி வாட்ட மென்பவற்றின் ஹேதுவானது இருத்தலால், எதுவரையில் பிரஹ்மாவின் நிலைப்புளதோ அதுவரையில் பவம் பரிகரிக்கத் தகாததாம். ஆதலால் உடனே கைவல்யத்தினை யடைவிக்கும் ஞானத்தினைத் தருபவனுன எனக்குச் சத்தியலோகத்தின் யோகமும் முக்கியயோகத் தன்மையாகக் கருதப்பட்டதன்று என்பது பொருள். (கூ)

शैवस्य योगो नो योगो वैष्णवस्य पदस्य यः ।

[கo] (அ-கை) கேவல கர்மத்தினுலாவது உபாசனையோடு கூடிய கர்மத்தினுலாவது பெறப்படும் லோகத்தின் யோகம் அநித்திய பயனுதலாலும் சாதிசய (ஏற்றமுள்ள) சுகத்திற்கிடமாதற்றன்மையாலும் முக்கிய யோகமாக வேண்டாம். எங்கும் யானே சர்வேசுவரன் இந்தர்நிகேசுவரர் முதலியோரும் ஜய விஜயாதியருமான சேவகர்கள் என்னுடையவர்களே. சநகாதியரும் என்னையே ஸ்துதிக்கின்றனர். ஹிரண்யகர்பர் முதலியோர் என் புத்திரர்களே. என்னுடைய ஆணையால் சிருஷ்டியினைச் செய்கின்றனர் என்னும் அபிமானம் கோமுதலியவற்றில் கோத்துவ முதலியவற்றைப்போல் ஒவ்வொரு உபாசகனிடத்தும் முடிவு பெற்றதாகக் காணப்படுகின்றது. "அத்தன்மையவர்களெல்லோருமே சமமானவர். எல்லோரும் அநந்தர் (அந்தமில்லாதவர்). எல்லோரும் சதுர்புஜர் அங்கு" என்னும் சுருதி புராணுதிப் பிரமாண முண்மையால் அந்தச் சைவ அல்லது வைஷ்ணவ லோகத்தின் யோகம் முக்கிய யோகமாகுக வென்ருசங்கித்துக் கூறுகின்ருர் :—

(சு-ம்) சைவ பதத்தின் யோகமெதுவோ அதுவும் யோகமன்று. அவ்வாறே வைஷ்ணவபதத்தின் யோகமெதுவோ அதுவும் யோகமன்று (எ-று)

மூலத்துள்ள नो (நோ) என்பது न + उ (ந+உ) என்னும் நிபாதம் (உரிச்சொல்) இரண்டன் சமாசமாம் (தொகையாம்.) அதற்கு नैव = இல்லவே யில்லை யென்பது பொருளாம்; இப் பக்ஷமிரண்டன் அவைதிகத் தன்மையைச் சூசித்தலைப் பிரயோஜனமாக வுடையதாம் उ (உ) என்னும் एव (ஏ)காரார்த்த முடைய நிபாதம். வைதிக மதத்திலோ சத்தியலோகத்திற்குமேல் ஞான கர்ம பலமானது இல்லை யென்பது நிச்சயமாம். இரஜ்ஜு சர்ப்பமானது பிரதி புருஷனிடத்தும் எப்படி முடிவு பெற்றதாகின்றதோ அப்படியே ஈசுவரத்துவாபிமானமும் அத்தன்மையதாய் அவித்தையினுலாகியதாயிருத்தலின் அதிகரிக்கிறதில்லை யென்பதுகருத்து.

न योगो भूप सूर्यत्वं चन्द्रत्वं न कुबेरता ॥ १० ॥

(அ-கை) அந்தந்தத் தேவதாபதப்பிராப்தி யோகமாதல்வேண்டாம். அந்தந்த தேவதைத் தன்மையினடைவு யோகமாகலாமேயென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

(சு-ம்) பூபனே! சூரியத்தன்மை யோகமன்று. சந்திரத் தன்மை யோகமன்று. குபேரத்தன்மை யோகமன்று. (எ-று)

எப்படி உனக்குப் பூபத்துவம் (ராஜத்தன்மை) கிரியையின் பயனோ, அப்படியே சூரியத்தன்மை முதலியனவும் காரியமாதலால் கிரியையின் பயனேயாம். இவ்வாறே சைவ வைஷ்ணவ பாவமும் பாவனையின் காரியமாதலால் மானஸக்கிரியையின் பயனும். அவ்விரண்டும் அநித்திய மென்பதனை "எது பாவனையினாலாகிய பயனோ எது கர்மத்தின் பயனோ அது திரவிடர்களிடத்துள்ள * சுகிர்த்தன்மை (உகந்தவரார்தன்மை) போல நிலைக்குமியல்பினதாக மதிக்கத்தக்கதன்று" என்று வார்த்திகாசாரியார் கூறியிருத்தல் காண்க. சைவ வைஷ்ணவாபாஸர்களாய்த் தத்தம் பக்ஷங்களை மேலாக் கூறுபவர்களை நிராகரித்தற்பொருட்டு இரண்டும் கொண்டதாம்.

नानिलत्वं नानलत्वं नामरत्वं न कालता ।
न वारुण्यं न नैर्ऋत्यं योगो न सार्वभौमता ॥ ११ ॥

[கக] (அ-கை) ஐந்துமகா பூதங்களில் ஒவ்வொரு விஷய தாரணையால் அந்தந்த பூதத்தன்மையினடைவுண்டாகின்றதென்று பௌதிகர் கொள்ளுகின்றனர். அதனை நிராகரிக்கின்றார்:—

(சு-ம்) அநிலத்துவமும் (வாயுவபிமானி தேவதாத்தன்மையடைவும்) யோகமன்று. அநலத்துவமும் (அக்கினியபிமானி தேவதாத்தன்மையடைவும்) யோகமன்று (அவர்கட்கு பிரளயத்

* எல்லோருக்கும் இதத்தை நாடுவோன் சுகிர்த் தெனப்படுவோன். அவனது சுகிர்த்தன்மையாம்.

தில் தமது உபாதி நாசமாகுங்கால் நாசமே நேர்தலால்). அமரத்துவமும் (ஆகாசத்தன்மையடைவும்) யோகமன்று. காலத்துவமும் (காலாபிமானி தேவதைத்தன்மையடைவும்) யோகமன்று. வாருணியமும் (ஜலாபிமானி வருண தேவதாத்தன்மையடைவும்)யோகமன்று. நைருத்யமும் (நிருதியெனப்படும் பிருதிவியின் அபிமானி தேவதாத்துவப் பிராப்தியும்) யோகமன்று. சார்வபௌமத்துவமும் (சர்வ சித்தாலம்பன பூமிகளிலும் சஞ்சரிப்பவன்றன்மையடைவும்) யோகமன்று, (எ-று)

ஆகாசமோ நிரவயவமாம். நாசகாரணமான அவயவ விபாகம் அதற்குச் சம்பவியாமையால் அமரமாம், அதன்றன்மையடைவு அமரத்துவ மெனப்பட்டது.

ஜன்ம மாத்திரம் காலோபாதியென்பதனல் ஆகாசாந்தமான உபாதிகள் நசிக்குங்கால் காலமும் நசிக்குமாகலின் காலாபிமானிதேவதைத்தன்மை யடைவும் யோகமன் றென்றூர்.

“அதிதி, இலா, நிருதி” என்று வேதாங்க நிகண்டுவில் பிருதிவியின் பெயர்களில் நிருதிபதம் படிக்கப்பட்டிருத்தலின், அதனபிமானி தேவதையினடைவு நைருத்ய மெனப்பட்டது.

எவன் சர்வ சித்தாவலம்பன பூமிகளான பிரகிருதி மகத்து அகங்காரம் இந்திரியம் பூதம் பௌதிகம் எனப்படுபவைகளில் சஞ்சரிக்கின்றனே, அவன் அந்தந்த பூமியுயர்ச்சிக் காலத்தில் அந்தந்த பூமி தாதாத்மியத்தினையடைந்து நசிக்கிறதில்லை. அது யோக வாசிஷ்டத்தில் கூறப்பட்டிருக்கக்கண்டாம். அதாவது புசுண்டரென்னும் காகம் அநந்தமான பூத பௌதிகப் பிரளயங்களுண்டாயிருக்கவும் இதுவரையில் ஜீவித்திருக்கிற ரென்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்புசுண்டரும் சகுண வித்தையின் பயனல் பெத்தராய் இன்றுவரையிலும் விதேக கைவல்யத்தினை அடைந்திலர். ஆதலால் அச்சார்வபௌமனது தன்மையினடைவும் யோகமன் றெனப்பட்டது,

இவ்வெல்லா யோகங்களின் யோகபலத்திற்கும் பரிமிதத்துவம் (அளவுபட்டதன்மை) வாயு புராணத்தில் "இந்திரிய சிந்த (உபாஸ)கர் இங்கு பத்து மநுவந்திரங்கள் நிற்கின்றனர். பௌதிகர் பூர்ணமாக நூறு மநு வந்திரமும், ஆபிமானிக (அகங்காரோபாஸக)ர் ஆயிரமும், பௌத்தர் (புத்தியுபாஸகர்) ஜ்வர நீங்கியவராய்ப் பதினாயிரமும் நிற்கின்றனர். நிர்குணனான புருஷனை அடையின் காலசங்கையில்லை." என்று சொல்லப்பட்டுளது.

நிர்குண சுத்த புருஷனான துவம்பதார்த்தத்தினை யடையின் காலசங்கையில்லை யென்பதனால் பிரகிருதியில் ஒடுங்குகின்றான் என்று சொல்லப்பட்டதாம். அவனும் கற்பாந்தரத்தில் மறுபடியும் வெளிப்படுகின்றான். அவ்வாறே பரமரிஷியின் சூத்திரம் "விதேக (தேவ)ர்கட்கும் பிரகிருதிலயர்கட்கும் பவப்பிரத்தியயமாம் (பிறப்புக்காரணமாம்) (அவர்களது சமாதி லாயத்தில் ஜன்மமே காரணமாம். அல்லது அவர்கள் சமாதி ஜன்ம காரணமாம்; கைவல்யகாரண மன்று")என்று கூறுகின்றது.

இக்கூறப்பட்ட யோகபலன்களினின்று எவன் விரக்தனாவனோ அவன் என்னால் கருதப்பட்ட யோகமாகிய ஜீவப் பிரஹ்மைக்கிய சாக்ஷாத்காரத்தில் அதிகாரியாவன் என்பது ஆறு சுலோகங்களால் நிரூபிக்கப்பட்டது. (கக)

योगं नानाविधं भूप युञ्जन्ति ज्ञानिनस्ततम् ।
भवन्ति वितृषा लोके जिताहारा विरेतसः ॥ १२ ॥

[கஉ] (அ-கை) கூறியவிதமான எல்லா யோகங்களின் பயன்களும் நதீ சமுத்திர நியாயத்தால் எதி லடங்குகின்றனவோ அத்தன்மையதான தனதபிப்பிராயமுள்ள ஞானயோகத்தினைக் கூறுகின்றார் :—

(சு-ம்) பூபனே! ஞானி (ஜிஞ்ஞாசுக்கள்) நாநாவிதமான யோக (ஞானோபாய)த்தினை அநுஷ்டிப்பர். அது விஸ்தரிக்கப்பட்டுள்ளது. அவர் ஜிதாஹாரர் (போகேச்சையில்லாதவர்) களாய், விபரீத (ஊர்த்துவ) ரேதஸுடையவராய் லோக (விஷய)த்தில் தாகம் (இச்சை) அற்றவராகின்றனர். (எ-று)

பூபனேயென்று விளித்தது எப்படி பூமியினைச் சாவதான மாய்ப் பாலிக்கின்றாயோ அதுபோலவே யோகபூமியினையும் படியேறுதற் கிரமமாக அந்தந்த ஜயிக்கப்பட்டதனை பாலனஞ்செய்யச் சமர்த்தனாகின்றாய் என்று இராஜனை மிக உற்சாகப்படுத்தற் பொருட்டாம்.

இங்கு 'அகாமரான' அதிகாரிகள் வரும் விருத்தியினை யாசிரயித்து ஞானிகளென்று சொல்லப்படுகின்றனர். ஞானிகள் ஞான விருப்புடையோர்.

யோகம் ஞானத்திற் குபாயமாதல் பகவானாகிய இரணியகர்பரால் "இனி அதன் தரிசனோபாயம் யோகமாம்" என்று சூத்திரிக்கப்பட்டுளது. தக்ஷராலும், "குமரியின் ஸ்திரீசுகம்போல அந்தப் பிரஹ்மம் ஸ்வசம்வேத்யமாம் (தன்னாலேயே செவ்வையாயறியத்தக்கதாம். பிறவிக்குருடன் குடத்தினையறியாதது போல அயோகி (பிரஹ்மத்தினை) அறியவேமாட்டான். (யோகியே யறிவான்)" என்று எதிர்மறைமுகத்தால் காட்டப்பட்டிருக்கின்றது.

யோகம் நானாவிதமாமாறு:—சம்பிரஞ்ஞாத அசம்பிரஞ்ஞாத பேதத்தால் யோகம் இருவகையினதாம். சம்பிரஞ்ஞாதமும் விதர்க்காநுகதம் (ஸ்தூல விஷயத்தினைத் தியானித்தலாகிய விதர்க்கத்தினை யநுசரித்தது), விசாராநுகதம் (சூக்ஷ்மவஸ்து தியானத்தினை யநுசரித்தது), ஆநந்தாநுகதம் (இந்திரியங்களை விஷயங்களில் செல்லாது தத்தமிடங்களில் நிறுத்தலாலாம் அநுபவ (தியான) மாகிய சுகத்தினை யநுசரித்தது), அஸ்மிதாநுகதம் (மற்ற விருத்திகள் வாராமற் றடுத்து நானென்ற பிரஞ்ஞைமாத்திரமா யிருத்தலான அஸ்மிதையினை யநுசரித்தது) என்று நால்வகையினதாம். அவற்றுள்ளும், விதர்க்கம் ஸவிதர்க்கம் நிர்விதர்க்கமென்னும் பேதத்தால் இருவகையினதாம். இவ்வாறே விசாரமும் ஸவிசார நிர்விசார பேதத்தால் இருவகையினதாம். அஸம்பிரஞ்ஞாதமும் பவப்பிரத்தியயம் (பிறப்பினைக் காரணமாகவுடையது) உபாயப் பிரத்தியயம் (புருஷசாக்ஷாத்காரத்தை யுண்டுபண்ணுவது) என்று இருவகையினதாம், பவப்பிரத்தியயமும் விதேகர் (தேவ)ர் களுக்கு,

அந்நியமும் பிரகிருதிலயர்களுக்கு அந்நியமுமாக இருவகையின தாம். உபாயப்பிரத்தியயமும் தன்னால் எழுவது, பிறரால் எழுவது (விழிப்பது) இருவராலும் எழாதது என்று மூவகையினதாம். ஆக அசம்பிரஞ்ஞாதத்திற்கு ஐந்து பேதங்களாம். இவற்றின் இலக்ஷணங்கள் மேல் விளக்கப்படும்.

'விரிக்கப்பட்டுளது' என்பதற்குப் பிரமாணம் ஸ்வரூபம் சாதனம் பயன் என்பவற்றால் செவ்வையாய் விரித்துரைக்கப்பட்டுளது அல்லது யோகாந்தர பயன்களான ஐசுவரியாதிகள் எதன் ஏகதேசத்தில் ஒடுங்குகின்றனவோ அதனால் இது விரிக்கப்பட்டுளது என்பது பொருளாம்.

இங்கு लोक्यत इति लोकः காணப்படுகின்றது என்பது லோகம் என்னும் விற்பத்தியால் விஷயமான ஸ்வர்க்கலோகம் லோகமென்னப்பட்டது; "மனதினால் செவ்வையாய் விளங்குகின்றது" என்னும் சாஸ்திரத்தினால், போகபூமியும் லோகமாம். இருவித லோகத்திலும் ஆசையில்லாதவரெனப் பொருள் செய்க. "அவன் எல்லா லோகங்களையும் எல்லாக் காமங்களையும் அடைகின்றான். அவ்வாத்மாவினை யொட்டி யறிகின்றான்" என்பதனால் ஞானத்தின் பயனில் எல்லாப் பயனுமடங்குதலால், இரண்டையும் விரும்பான். இவ்வைராக்கியம், சித்தனுக்கு இயல்பாகச் சித்தித்ததும், சாதகனுக்கு யத்தனத்தாற் சாதிக்கப்படுவதுமாம். அது "ஆத்மஞான முண்டானவனுக்குத் துவேஷிக்குந் தன்மையின்மை முதலிய குணங்கள் யத்தனமில்லாமலுண்டாகின்றன. சாதனரூபமுள்ளவனுக்கு அவ்வாறுண்டாகிறதில்லை." என்று சொல்லப்பட்டிருக்கிறது. எவை சித்தனது லக்ஷணங்களோ அவையே சாதகனது சாதனங்களாம் என்னும் வார்த்தையுமுளது. மேலும் இவ்வாறு விதித்தல் காணத்தக்கதாம்.

போகேச்சையில்லாதவர்கள் என்பதற்கு 'ஜீவர்களை ஹிம்சிக்காமல் போகம் சம்பவியாது' என்னும் நியாயத்தால் அத்தியந்த அஹிம்ஸாபரரென்பது பொருளாம்.

ஊர்த்துவ ரேதஸ-ருடையவர் என்பதற்குப் பிரஹ்மசாரி விரதத்தில் நிலைத்தவரென்பது பொருளாம். "எதனைப் பிரஹ்ம சரியத்தினால் அடைகின்றனரோ அந்த இவ்வாத்மா நசிக்கிற தில்லை" என்பதனால் பிரஹ்மசரியத்திற்கு அவிநாசியாத்ம ஞானத்திற் கேதுவாந்தன்மை காணப்படுகின்றது. இதுவும் இயமங்கட்கும் நியமங்கட்கும் உபலக்ஷணமாம். அவை, "அஹிம் ஸை சத்தியம் திருடாமை பிரஹ்மசரியம் அபரிக்கிரகம் (சரீர நிர்வாகத்திற் கதிகமானதைப் பிறரிடத்தினின்று கொள்ளாமை) என்பன இயமங்கள்" "சௌசம் (தூய்மை) சந்தோஷம் (திருப்தி) தவம், சுவாத்தியாயம் (தன்சாகை யோதல்) ஈசுவரப் பிரணிதானம் என்பன நியமங்கள்" என்னும் சூத்திரமிரண்டி னால் யோகசாஸ்திரத்திற் காட்டப்பட்டுள்ளனவாம். (கஉ)

पावयन्त्यखिलाँल्लोकान्वशीकृतजगत्त्रयाः ।
करुणापूर्णहृदया बोधयन्ति च कांश्चन ॥ १३ ॥

[கங] (அ-கை) வைராக்கிய முதலிய மூன்றும் அமானித்து வாதி சர்வசாதனங்களின் உபலக்ஷணார்த்தமாகச் சொல்லப்பட் டது. அதன் அவாந்தர பயனைக் கூறுகின்றார்:—

(சு-ம்) உலகத்தின ரெல்லோரையும் பவித்திரராக்குகின்றனர் (வைராக்கியாதிகளோடுகூடியவ ராக்குகின்றனர்). வசீகரித்த ஜகத்து மூன்றினையுடையவர்களாய், கருணைநிரம்பிய வுள்ளத்தின ராய்ச் சிலருக்கு (அதிகாரிகட்கு) அறிவிக்கின்றனர் (எ-று)

அவர்கள் வைதிருஷ்ணிய (வைராக்கிய) முதலியவற்றால் உபலக்ஷிக்கப்பட்ட இயம நியமாதிகளால் ஸ்வயம் ராகத்துவேஷா திகளின்றிய தன்மையால் பவித்திர (புனித) ராயிருத்தலால் எல் லோரையும் பவித்திரராக்க வல்லவராகின்றனர். எல்லோருக்கும் உபகாரஞ்செய்யுந் தன்மையினாலேயே உத்தம மத்தியம அதமப் பிராணிகளான ஜகத்து மூன்றையும் வசப்படுத்தியவரு மாவர். அதனை "அஹிம்ஸையென்னும் இயமம் நிலைத்தபோது அச்சாதக னது சந்நிதியில் (ஜாதிவைரமுள்ள அதமமான பூனை எலி முதலி

யனவும்) வைரத்தினைவிட்ட (அஹிம்ஸையுள்ள)ன வாகின்றன" என்னும் சூத்திரத்தால் காண்க. கருணையாவது தீன(தளர்ந்தவ)ர்களிடத்து அநுக்கிரக புத்தியாம். இது மைத்திரியாதிகட்கும் உபலக்ஷணமாம். இதனுற்றான் சர்வ சுஹிருத்தாக் (எல்லோருக்கும் இதம் செய்பவர்) களான அவர்கள் அதிகாரிகட்கு இதத்தினையுபதேசிக்கின்றனர்; அநதிகாரிகளை உபேக்ஷிக்கின்றனர். (கங)

जीवन्मुक्ता ह्रदे मग्नाः परमानन्दरूपिणि ।
निमीलियाक्षीणि पश्यन्तः परं ब्रह्म हृदि स्थितम् ॥ १४ ॥

[கச] (அ-கை.) இவ்வாறு சாதனங்களையும் அவற்றின் பயன்களையும் கூறி யோகத்தின் சொல்லப்பட்ட நாநாவிதத்தன்மையினை விவரிக்கின்றார்:—

(சு-ம்) ஜீவன்முக்தர்களாய், பரமாநந்த ரூபமுடையதாகிய மடுவில் மூழ்கினவர்களாய், ஹிருதயத்திலிருப்பதான (பாலனத்தாலும் பூரணத்தாலும் சர்வேசுவரனும் சர்வாத்மகமுமான) பரப்பிரஹ்மத்தினை(மனதோடுகூடிய பதினொரு)இந்திரியங்களை அடக்கிக் காண்பவராவர். (எ-று)

இங்கு, "விசேஷம் அவிசேஷம் லிங்கமாத்திரம் அலிங்கமென்பன குணத்தின் விகாரங்களாம்" என்னுமிது யோகசூத்திரமாம். அதில் விசேஷங்கள் ஸ்தூலபூதங்கள், அவிசேஷங்கள் பஞ்சதன்மாத்திரைகளும் பதினோரிந்திரியங்களுமாம். லிங்கமாத்திரமென்பது மகத் தத்துவமாம். அலிங்கம் பிரதானமாம். அவற்றுள், இயமநியமமுடையவனும், பிராணஜயமுடையவனும் மனதினை நிறுத்துகிறவனும் விசேஷத்தினின்று அவிசேஷத்தினை அடையவிரும்புவோனும் முற்கூறிய யுக்தியினால் சித்த ஏகாக்கிரப்படுத்துவோனுமான யோகிக்குத்தினந்தோறும் இலயமாகுவதான அப்பியாசத்தினால் அவிசேஷத்தின் பிராப்திக்கு முன் எந்தச் சித்தலய முண்டாகின்றதோ அது சுழுத்தியேயாம், அவிசேஷத்தினை யடைந்து அதன்பின் லிங்கமாத்திரத்தினை யடைய விரும்பு

றிறவனுக்கு அதன் பிராப்திக்குமுன் எந்தச் சித்தலயமுண்டா கிறதோ அது விதேகர்களின் அசம்பிரஞ்ஞாதமாம். இவ்வாறே லிங்கமாத்திரத்தினை யடைந்து அதன்பின் புருஷனையடைய விரும்புகிறவனுக்கு அப்புருஷனை யடையாது இடையில் எந்தச் சித்தலயமுண்டாகிறதோ அது பிரகிருதிலயர்களின் அசம்பிரஞ் ஞாதமாம். அவர்களுள் முதலாமவன் ஸ்தூலதேகத்தினின்று விடுபட்டமையால் விதேகன் எனப்படுவன். அவன் இங்கு ஜீவன் முக்த பதத்திற்குப் பொருளாவன். இரண்டாமவன் பிரகிருதியில் ஒடுங்குதலால் பிரகிருதிலயனெனப்படுவன். அவன் இங்கு மடுவில் (காரணத்தில்) மூழ்கினவ னெனப்படுகின்றான்.

மடுவின் விசேஷணமான பரமானந்தவடிவினது என்பதற்குப் பரமமாகிய ஆநந்தத்தினது ரூபம் துவைதத்தின் அதரிசனமாம், அதனை யுடையது என்பது பொருளாம். துவைததரிசனமின்மை சுழுத்தியிலும் அசம்பிரஞ்ஞாதத்திலும் சமமுள்ளதாக "எதனால் அதனைக் காண்கிறதில்லையோ கண்டும் அக்காணத்தக்கதனைக் காண்கிறதில்லையோ" என்றல் முதலியவற்றால் சுருதி கூறு கின்றது. அவ்விரண்டு கௌண அசம்பிரஞ்ஞாதங்களும் பவப் பிரத்தியயங்களாம். சமாசத்தினால் தொகுக்கப்பட்டதான பரமா நந்த பதத்தினால் உபாயப் பிரத்தியயமான முக்கிய அசம்பிரஞ் ஞாதம் சொல்லப்படுகின்றது. உபாயமும் "விதேகப் பிரகிருதி லயர்கட்கு இச்சமாதி பவப்பிரத்தியயமாம்" என்னும் சூத்திரத்தாற் சொல்லப்பட்டுளது. "சிரத்தை (கைவல்ய நோக்கமுள்ள மனத் தெளிவும் அதனாலாம் மனதின் விசேஷமுயற்சியும்) வீரியம் (மன தின் உற்சாகம்), ஸ்மிருதி (தியானம்), சமாதி (மனஞ்சலியாமை), பிரஞ்ஞை (உண்மையுணர்வு) என்பவற்றை முன்னிட்டது விதேகப் பிரகிருதிலயர்க ளல்லாதவருக்காம்." என்னும் சூத்திரத்தாற் சொல்லப்பட்ட சிரத்தை முதலியவற்றை முன்னிட்டதான அசம் பிரஞ்ஞாத சமாதி முக்கியமாம். இங்கும் பரம சப்தமான கடைசி வாசகத்தால் முதலாவதும் மத்தியமானதும் ஆக்ஷேபிக்கப்படுகின் றன. அதனால் தன்னுலெழுவது முதலாவதாம், பிறனலெழுவது

மத்தியமமாம். இருவராலும் எழாததான கடைசியானது பரமானந்த பதத்தி னர்த்தமாம். இத்தன்மைய ஐவகை அசம்பிரஞ்ஞாதமும் சுலோகத்தின் முற்பாதியாற் கூறப்பட்டுளது. புத்தியினை நிரோதஞ் செய்யாது அஸ்மி (இருக்கிறேன்) என்னும் பிரத்தியயமாத்திராலம்பனமாகிய ஸாஸ்மித (அஸ்மிதையோடு கூடிய)சம்பிரஞ்ஞாதம் இந்திரியங்களை யடக்கி யென்பனுற் சொல்லப்பட்டுளது. "எதன் விஞ்ஞானத்தினல் எல்லாவற்றின் விஞ்ஞானமு முண்டாமோ, எதனல் கேட்கப்படாதது கேட்க்கப்பட்டதாமோ, நினைக்கப் படாதது நினைக்கப்பட்டதாமோ, அறியப்படாதது அறியப்பட்டதாமோ" (சாந் சு-க-ங) என்று கேட்கப்படுகின்ற அவ்வாத்மாவினை ஸாநந்தமாகிய சம்பிரஞ்ஞாதத்தில் யோகிகள் காண்பர். இங்குப்பாவனையினல் கற்பிக்கப்பட்டதன் றென்பார் "இருதயத்தி லிருப்பதான" என்றூர். இவ்வாறு சுலோகத்தின் பிற்பாதியால் இரண்டு சம்பிரஞ்ஞாதங்கள் சொல்லப்பட்டுள்ளன. இவ்வாறு பூமி வித்து முளை விருக்ஷம் பழ மென வுபமிக்கப்படும். ஐந்து பிரஹ்மங்களில் பூமி ஸ்தானத்ததான நிர்குண மெதுவோ அது முக்கியமான அசம்பிரஞ்ஞாதத்தின் ஆலம்பனமாம் (பற்றுக்கோடாம்). வித்தினுவமையுடைய காரணமெதுவோ, அது கௌணமான அசம்பிரஞ்ஞாதத்தினதாம். முளையுவம முடைய சூத்திரமெனப்படும் சூக்ஷ்மமான காரியமெதுவோ அது ஸாஸ்மிதமான சம்பிரஞ்ஞாதத்தினதாம். விருக்ஷோபம முடைய ஸ்தூலமான விராட்டெனப்படும் காரிய மெதுவோ அது ஸாநந்தமாகிய சம்பிரஞ்ஞாதத்தின் ஆலம்பனமாம். ஐந்தாவதான பழவுவமையுடைய ஹரி ஹரன் கௌரி கணேசன் ஆதித்தன் என்பவற்றுளொரு விக்கிரகவடிவ மெதுவோ அது மானஸமும் பாகியப் பிரதிமாதி வடிவமுமென இருவகையினதாம். அவற்றுள், மானஸம் விசாரத்தின் ஆலம்பனமாம். பாகியம் விதர்க்கத்தினுலம்பனமாம். அவற்றுள், எப்போது மானஸங்களான சப்தார்த்த ஞான விகற்பங்களோடு கலந்ததான பிரஹ்மபாவனை பிரவர்த்திக்கின்றதோ அப்போது இது ஸவிசாரமென்றுசொல்லப்படுகின்றது. எப்போது சப்தமுதலியவற்றின் அநுசந்தானமின்றியே மிகுந்த

பரிசய (பழக்க)த்தால் தானாகவே பிரஹ்மபாவம் ஸ்புரிக்கின்றதோ, அப்போது அது நிர்விசார சம்பிரஞ்ஞாத மெனப்படுகின்றது. (கச)

ध्यायन्तः परमं ब्रह्म चित्ते योगवशीकृतम् ।
भूतानि स्वात्मना तुल्यं सर्वाणि गणयन्ति ते १५ ॥

[கரு] (சு-ம்) பரமமான பிரஹ்மத்தினைத் தியானிக்கின்றவராகின்றனர். சித்தத்தில் யோகம் வசிகரிக்கப்பட்டதாகின்றது. அவர்கள் எல்லாப் பூதங்களையும் தமதாத்மாவோடு சமானமாகக் கணிக்கின்றனர். (எ-று)

கற்பித மூர்த்தி விஷயமான சித்தவிருத்திப் பிரவாகத்தினைச் செய்கின்றவர் அதே பரமமான பிரஹ்மத்தினைக் காண்கின்றனர். அதன் தரிசனபலன், பதஞ்சலி பகவானால் "நிர்விசாரத் தேர்ச்சியுண்டாகியபோது அத்தியாத்மப் பிரசாதமா (மனத்தெளிவா)ம். அங்குப் பிரஞ்ஞை ருதம்பரையாம் (யதார்த்தவஸ்துவினையறிவதாம்); சுருதாநுமானப் பிரஞ்ஞை (சுருதி அநுமானங்களாலாம் உணர்வு) களிரண்டினும் வேறான விஷயமுள்ளதாம் விசேஷார்த்தமுடைமையால்" என்று சூத்திரிக்கப்பட்டுள்ளது. அத்தியாத்மப் பிரசாதமாவது இரஜஸ்தமோகுணங்களிரண்டின் சூநியமான சித்தத்தின் சத்துவ மேலீடாம். அங்கு எதனால் யோகிகள் சென்றன முதலிய அர்த்தங்களை கரதலா மலகம்போல் காண்பரோ அத்தன்மைய உண்மை வடிவ அர்த்தத்தினை விஷயிக்கும் சாக்ஷாத்கார வடிவினதாகிய பிரஞ்ஞை யுண்டாகின்றது. ஆதலால் அந்தப் பிரஞ்ஞையின் விஷயமான பிரஹ்மம் மானஸமாயினும் உண்மை வடிவினதேயாகின்றது. இதனாற்றான் நித்தியம் மூர்த்தியினது பக்தியினையும் கூறுகின்றனர். அது இங்கு "பரமப்பிரஹ்மத்தினைத் தியானிக்கின்றவராவர்" என்பதனால் சொல்லப்பட்டுளது. "சித்தத்தில் யோகம் வசிகரிக்கப்பட்டதாம்" என்பதனால் விசாரப் பிரவிருத்தி விதர்க்கத்தினை முன்னிட்டதா மென்று கூறுவதாயிற்று. யோகம், சித்தத்திற்கு ஸ்தூலமான ஆலம்பனத்தில்

முன்போல சப்தாதி யநுசந்தானத்தினை முன்னிட்டதும் அஃ தின்ரியதுமான பாவனை பிரவர்த்திக்கின்றது, அப்போது அவ் விரண்டும் சவிதர்க்க நிர்விதர்க்க சம்பிரஞ்ஞாதங்களாகின்றன, அங்கு நிர்விதர்க்க யோக வசீகிருதமாய்ச் சித்தத்தில் நுழைந்து, உண்மையர்த்தத்தினை விஷயிக்கும் பிரஞ்ஞையினைத் தருவதாகின் றது என்பது பொருள். " அவர்கள் எல்லாப் பூதங்களையும் தம தாத்மாவோடு சமானமாகக் கணிக்கின்றனர். என்றதனால் ருதம் பரைப் பிரஞ்ஞையைத் தருவதான இந்த ஞானத்தினால் என்ன பிரயோஜனமென்பது பரிகரிக்கப்பட்டதாயிற்று. எப்படி என்று சர்வாத்மத்தன்மை இயல்பாகச் சித்தித்ததோ, தேகமாத்திரம் அவித்தையினாலாகியதோ, அதுபோலவே எறும்பு முதலிய வற்றிற்கும் அது வேறுபாடின்றியதாம் என்று எதனையும் அவ மதியார்கள் என்பது பொருள். (கரு)

ये न केनचिदाच्छिन्ना ये न केनचिदाहताः ।
ये न केनचिदाक्रुष्टा ये न केनचिदाश्रिताः ॥ १६ ॥

[கசு] (அ-கை) இவ்வாறு அறிபவர் உலகத்தில் எவ்வாறு இருப்பர் என்பதனை மூன்று சுலோகங்களாற் கூறுகின்றனர்:—

(சு-ம்) எப்புருஷர்கள் (திருடன் முதலிய) எவனாலும் (ஆயுதாதிகளால்) சேதிக்கப்படாரோ (தனாதி பரிக்கிரகமின்றிய வர்களா யிருத்தலின்); இவ்வாறே எவர்கள் (பங்காளி முதலிய) எவனாலும் (உதை முதலியவற்றால்) அடிக்கப்படாரோ (கிருக க்ஷேத்திராதிகளை விட்டமையால்); எவர்கள் எவனாலும் (வசனி னால் பீடிக்கப்பட்டவர்களாய்) கோபமுடையவ ராகிறதில்லையோ (ஹிம்ஸையின்றிய விருத்தியினராதலின்), எவர்கள் (சிஷ்யன் முதலிய) எவனாலும் ஆசிரிதராகாரோ, (ஏகாகியாய் அதாவது தனித்தவரா யிருத்தலின்) (எ-று)

அல்லது ये न என்று இரண்டு பதமாகக்கொள்ளாது येन என்று ஒரு பதமாகக் கொள்ளின், எவனாயினு மோருன்மத்த னால் சிதைக்கப்பட்டவராயினும், எவனாயினு மோர் பாவியால்

அடிக்கப்பட்டவராயினும், எவனுயினுமோர் பராபவாதசீலனுல் கோபிக்கப்பட்டவராயினும், எவனுயினும் ஓர் ராஜ சேவகனுல் ஜடபரதனைப்போல் சிவிகையாதி சுமக்கும்பொருட்டு ஆசிரயிக்கப் பட்டவராயினும் விகாரப்படார். (எ-று) (கசு)

करुणापूर्णहृदया भ्रमन्ति धरणीतले ।
अनुग्रहाय भूतानां जितक्रोधा जितेन्द्रियाः ॥ १७ ॥

[கஎ] (அ-கை) இதில் ஏதாவினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) கருணைநிறைந்த வுள்ளத்தினராய், குரோதத்தினை ஜெயித்தவராய், இந்திரிய ஜயமுடையவராய், ஜீவர்களது அநுக்கிரகத்தின்பொருட்டுப் பூதலத்தில் சஞ்சரிக்கின்றனர். (எ-று)

கோபத்தினை ஜயித்தவராகலின் அபகாரத்திலும் விகாரமடையார். கருணைநிறைந்த வுள்ளத்தினராகலின் துஷ்டர்களான ஜீவர்களுக்கும் விநாசமுண்டாகலாகாதென்று அவர்கட்கு ஞானத்தினைக் கொடுத்தலால் அநுக்கிரகிக்கும்பொருட்டு உலகத்தில் சஞ்சரிக்கின்றனர். சஞ்சரிப்பவராயினும் இந்திரியங்களை ஜயித்த தன்மையால் ஜீவர்களது அநுக்கிரகத்திலும் வேறான தெதனையும் விரும்பார்கள் என்பது பொருள். (கஎ)

देहमात्रभृतो भूप समलोष्टाश्मकाञ्चनाः ।
एतादृशा महाभाग्याः स्युश्चक्षुर्गोचराः प्रिय ॥ १८ ॥

[கஅ] (சு-ம்) தேகமாத்திரந் தாங்கியவர்களும், பூபனே! மண்ணாங்கட்டி இரத்தினம் பொன் என்பவற்றைச் சமமாகக் காண்பவர்களுமான இத்தன்மைய தீவிர வைராக்கியவடிவ ஐசுவரியமான பெரும்பாக்கியமுடையவர் பிரியனே! எனது கண்களுக்கு விஷயராகக் கடவர். (எ-று)

“தேகமாத்திரத்தினைத் தாங்கியவர்” என்பதனுல் கந்தை கமண்டலம் தண்டம் பாதுகை முதலியனவும் தரியார் என்பது கூறப்பட்டது.

"பூபனே" என்பதனுல் பூபாலகனுன உன்னுல் திகம்பரர்கள் சர்வோபாயங்களாலும் பரிபாலிக்கத்தக்கவராவர் என்று அறிவித்ததாம். வைராக்கியத்தின் மேலான பாக்கியமில்லை யென்பதனுல் வைராக்கியத்திற்குப் பெரும் பாக்கியத்துவம் ஸ்மரிக்கப்பட்டது.

'பிரியனே' என்று விளித்தலால் அவர்கள் எனது கண்களுக்கு விஷயராகுக வென்று யானும் அவர்கள் தரிசனத்தினை விரும்புகின்றேன், நீயும் எனது பிரியனுதலால் அவர்கள் தர்சனத்தினைப் பெறுவாய் என்பது சூசிக்கப்பட்டதாம். (௧அ)

तमिदानीमहं वक्ष्ये शृणु योगमनुत्तमम् ।
श्रुत्वा यं मुच्यते जन्तुः पापेभ्यो भवसागरात् ॥ १९ ॥

[௧௯] (அ-கை) முதலிரண்டு சுலோகங்களால் விஷயமும் பிரயோஜனமும், மூன்றினுல் கிரந்தசங்கதியும் (தொடர்பும்) ஆறினுல் பிறமதங்களின் நிராகரிப்பும், கடைசி மூன்றினுல் (௧௬-௧௭-௧அ) ஞானிகளின் ஸ்திதியும் காட்டப்பட்டது. மிஞ்சிய 'யோகம் நாநாவிதம்' என்றல் (௧௨-௧௫) முதலிய நான்கினுல் பிரஹ்மவித்தையினை என்றல் முதலியன சூத்திரிக்கப்பட்டன. அத்தன்மைய சூத்கரிக்கப்பட்ட இந்த யோகத்தினை அத்தியாய சேஷத்தால் அதன் விருத்திவடிவமாக வியாக்கியானஞ்செய்யப் பிரதிஞ்ஞைசெய்கின்றார்:—

(சு-ம்) எந்த வேதாந்தப் பிரதிபாத்தியமான யோகத்தினைக் கேட்டு, ஜந்து பாபங்களினின்றும் பவசாகரத்தினின்றும் விடுபடுவனே, (சூத்திரிக்கப்பட்டதான) அந்த அநுத்தமமான யோகத்தினை இப்போது (உனது அதிகாரவடைவின் பின்னர்) வேதங்களின் கர்த்தாவான பரமேசுவரனுகிய யான் விரித்துக்கூறுகின்றேன். (என்னுல் விரித்துரைக்கப்படும்) அதனைக்கேள். (சாவதானமாகுக என்பது பொருள்.)

இந்த யோகத்தினைக்கேட்டு, மத்தியமனுன ஜந்து (கீழ்ச் செல்லற்கேதுவான) பாபங்களினின்று விடுபடுகின்றான். அவ்

வாறே சுருதி, "வேதாந்த விஞ்ஞானத்தினால் நல்ல நிச்சயிக்கப் பட்ட அர்த்தத்தினை யுடையவர்களாய்ச் சந்நியாசயோகத்தினால் யதிகள் (யத்தன சீலர்) சுத்தசத்துவராகின்றனர். அவர்களெல் லோரும் பர (ஹிரண்யகர்ப) னது அந்தகாலத்தில் (அதிகார முடி வில்) பிரஹ்மலோகங்களில் மேலான அமிருதவடிவராய் முக்த ராகின்றனர்." (முண்ட. ௩-௨-௬) என்று வேதாந்தத்தினா லுண் டாகிய பரோக்ஷ ஞானமுடையவர்கட்குக் கிரமமுக்தி ஸ்தானத் தின் பிராப்தியினைக் கூறுகின்றது.

உத்தமனான ஜந்து கர்மங்களினால் சுத்தமாக்கப்பட்டதும் உபாசனையால் ஏகாக்கிரப்படுத்தப் பட்டதுமான சித்தத்தில் இந்த யோகத்தினைக் கேட்டு, பத்தா மவன் நீ யென்னும் வாக்கியத்தினால் பத்தாமவனை யறிவதுபோலத் தத்துவமஸி (அது நீ) என்னும் வாக் கியத்தினால் பிரஹ்மாத்ம ஐக்கியத்தினைக் கேட்டு அபரோக்ஷ மாக்குகின்றான். அதனால் சம்சாரத்தினின்றே விடுபடுகின்றான்; "ஜனகனே! அபயத்தினை அடைந்தவனாகின்றாய் அப்போது இதனை யறிகின்றாய்" என்று சிரவணமாத்திரத்தினாலேயே அப யப் பிராப்தியும் ஞானோற்பத்தியும் கேட்கப்படுதலால்.

அதமனான ஜந்து எவனோ அவனும் தேச விசேஷ விசிஷ்ட ரான குருவின் அநுக்கிரகத்தினால் இந்த யோகத்தினைக்கேட்டுச் சம்ஸாரத்தினின்று விடுபடுகின்றான். அவ்வாறே அவிமுக்தத்தினை யெடுத்துக்கொண்டு ஜாபாலர்கள் "இங்கு (காசியில்) ஜந்துவின் பிராணன்கள் வெளிப்படும்போது உருத்திரர் தாரகமான பிரஹ்மத்தினை உபதேசிக்கின்றனர். அதனால் இவன் அமிருதனாய் முக்தனாகின்றான்" என்று கூறுகின்றனர். இதுவும் தர்மத்தி லதிகாரமில்லாத க்ஷுத்திர (தாழ்ந்த) பிராணிவாசகமான ஜந்து வென்னும் பதப்பிரயோகத்தால் பகவானாகிய கஜானனரால் சூசிக் கப் பட்டதாகின்றது.

"இதனின் வேறானது பொய்" (பிருஹ. ௩-௪-௨) என்னும் சுருதியினால் இந்த யோகத்தின் வேறான உத்தமமானதில்லாமை யால் அநுத்தம மெனப்பட்டது. (௧௬)

शिवे विष्णौ च शक्तौ च सूर्ये मयि नराधिप ।
याऽभेदबुद्धिर्योगः स सम्यग्योगो मतो मम ॥ २० ॥

[௨௦] (அ-கை) அவ்வுத்தம யோகத்தினையே கூறுகின்றார்:-

(சு-ம்) நராதிபனே! சிவனிடத்திலும், விஷ்ணுவினிடத்திலும், சக்தியினிடத்திலும், சூரியனிடத்திலும், என்னிடத்திலும் உண்டாம் அபேதபுத்தியாகிய யோகம் எதுவோ அது (சர்வஞ்ஞனா) என்னுடைய நல்ல யோகமென்று கருதப்பட்டதாம். (எ-று)

இங்குச் சிவாதி பஞ்சாயதன தேவதைகளிடத்துண்டாம் அபேதபுத்தி எதுவோ அது பரமயோகமென்னும் அர்த்தம் காணப்படுகின்றது; இது சம்பவியாது; பரஸ்பர வியாவர்த்தக வுபாதிகளான அவை விழிப்புடையனவாயிருக்குங்கால், முக்கியமான அபேதபுத்திக்குச் சம்பவமின்மையாலும், ஆஹரிக்க (இழுத்துக் கொள்ள)ப்பட்ட அதற்கு முக்கியத்தன்மை பொருந்தாமையாலும், வேறுபடுத்தப்பட்ட எல்லா வுபாதியின் அபேக்ஷையாலோ அபேதபுத்தி பிரஹ்மாதி ஸ்தாவர பரியந்தமானவைகளில் விசேஷமின்றியதா (சமமா)மென்பதனால் ஐந்திற்குமாத்திரம் கொள்ளுதல் அநர்த்தமுடையதாம். ஆதலால் இவ்வர்த்தம் சாதிக்கக்கூடியதன்றெனின், கூறப்படுகின்றது:— "நான்காவதனை (துரியத்தினை) அத்வைத சிவமாக அறிகின்றனர்" என்னும் சுருதியினால் விசுவதைஜஸ பிராஞ்ஞர்களின் அபேக்ஷையால் நான்காவதான நிர்குணப் பிரஹ்மமாகிய சிவனிடத்திலும், "பூதங்களும் விஷ்ணு புவனங்களும் விஷ்ணு" என்னும் வைஷ்ணவத்தால் உபாதானத் தன்மையால் வியாபகமான மாயாசபள விஷ்ணுவினிடத்திலும், அதனிற் றாழ்ந்த மாயையாகிய சக்தியினிடத்திலும், ஆதித்திய மண்டலத்திலிருக்கும் ஹிரண் (பிரகாச) மயனான சூரியனிடத்திலும், கணேசனிடத்திலும், சுத்த சின்மாத்திர வடிவினரே இவர் என்னும் அபேதபுத்தி எதுவோ அதுவே நல்ல யோகமாம்.

சங்கை:- வேறுபடுத்தப்பட்ட எல்லாவுபாதிகளினபேக்ஷயினாலேயே இங்கு அபேதபுத்தியானது வேறுவகையினாற் சொல்

லப் பட்டதாமெனின், அவ்வாறன்று, உபாதிகட்கும் இங்குச் சின்மாத்திரத் தன்மையே சொல்லக்கருதியதாகலின். அது வருமாறு:- "அத்தியாரோபாபவாதங்களால் நிஷ்பிரபஞ்சம் பிரபஞ்சமாம் (விரிக்கப்படுகின்றது)." என்னும் வசனத்தால் அத்தியாரோப பக்ஷத்தில் பரிணாமவாதம் ஆசிரயிக்கப்படுதலின், குடம், சட்டி, சால் முதலியன மண்ணின் வேறுகா வாயினும், அவற்றினொன்றற் கொன்றுள்ள பேதம் நிவர்த்திக்கத் தக்கதன்றாம். அவ்வாறு சிவனுதியர் சத்தின்வேறுகாரெனினும், ஒருவரின் ஒருவர் வேறுபட்டவர்களான அவர்களிடத்து அபேதபுத்தி சம்பவியாமையால் அத்தியாரோபமன்று; அபவாதத்திலேபரிணமிக்கப்படாத விவர்த்திதமான அபேத புத்திவிகற்பிக்கப்பட்ட சின்மாத்திரூபத் தன்மையாக எல்லாவற்றிலும் சம்பவித்தலால்; அவ்வபிப்பிராயத்தால் சிவனுதியரிடத்து அபேதபுத்தி விதிக்கப்படுகின்றது. இதனுற்றுன் வேதாந்தங்களில் அத்தியாரோபாதிகம் சுத்தப்பிரஹ்மப்பிரதிபத்தியின் பொருட்டுச் சொல்லப்படுகின்றது. அவ்வாறே, "அவர் வெகுவாவேன், பலவாப் பிறப்பேன் என்று விரும்பினர்" என்றும், 'இவ்வெல்லாவற்றையும்சிருஷ்டித்தார். அதனைச்சிருஷ்டித்து அதிற்றுனே அநுப்பிரவேசித்தார். அதனை அநுப்பிரவேசித்து சத்து (பிரத்தியக்ஷமு)ம் தியத்து (பரோக்ஷமு) மானுர்" (உ-சூ-க) என்னும் தைத்திரீயகத்திலும், ஈசுவானது சத்தியோடுகூடிய ஆத்மா காமபூர்வகமான தன்னை வெளிப்படுத்தினர் என்னும் வியாக்கியானமிரண்டு கேட்கப்படுதலால் தனதாத்மாவினைத் தானே சர்வப்பிரபஞ்சவடிவமாகச் செய்தனர்; அதன்பின் அதேபிரபஞ்சத்திற் பிரவேசித்து, அந்தந்த மூர்த்தா மூர்த்தரூபமாயினர் என்று அவருக்கே ஜகஜ்ஜீவரூபமாப் பரிணமித்தல் சொல்லப்பட்டுளது. அவ்விது அத்தியாரோபமாம். அதன்பின் சத்தியமும் பொய்யும் சத்திய மாயிற்று. இது யாதொன்றுளதோ அது சத்தியமென்று கூறுகின்றது. (தை-உ-சூ-க) என்பதனுல் பரமான சத்தியத்தில் ஈசஜீவஜகங்கள் மூன்றன் அத்தியாசமாம். மூன்றிலும் சத்தியத்தின் அத்தியாசமாம். இவ்வாறு அந்நியோந்நியாத்தியாஸவாயிலாக மூன்றற்கும் சத்தியத்தின் விவர்த்தத்துவம் சொல்லப்பட்

டுளது. அதன்பின், "இது முன் அசத்தாக இருந்தது" அத னின்றும் சத்துண்டாயிற்று அது ஆத்மாவினைத் தானேஆக்கியது அதனால் அது சுகிருத மெனப்படுகின்றது." (தை-உ-எ-க) என் பதனால் விவர்த்த ஹேதுவான அஞ்ஞானத்தினைச் சத்தியத்தி னின்று வேறுசெய்து, அசத் சப்தத்தாற் சொல்லப்படுவதும், அந்நியாபேக்ஷையின்றியதுமான அதற்கே சர்வகாரணத்துவம் சொல்லப்பட்டுளது. சொப்பனப்பிரபஞ்ச சிருஷ்டியில் அஞ்ஞா னத்திற்கே சர்வகாரகமுடைமையும் கண்டதாம். அஞ்ஞானமும் துச்சதன்மையால் அசத்தாதலினாலேயே பரிணமத்திற் குரிய தாகாதென்பதனால் அதனை மூலமாகவுடைய விகற்ப மாத்திரமாம் மூன்றும் என்பது சித்தித்தது. "யாதொரு அந்தச் சுகிருதமோ அது இரஸமாம் (தை-உ-எ-க) என்பதனால் சுகிருதமென்னும் பெயருடைய அதற்கே பாதமென்னும் வேறு பெயருள்ள இரஸா வசேஷமான நாசம் சொல்லப்பட்டுளது. அவ்விது அபவாதமாம். அதுவும் லோகத்தில் இருவகையாகக் காணப்பட்டதாம். அது எரிக்கப்பட்ட படத்தின் வியக்தி (பொருள்)நாசமாகியும் ஆகிருதி (வடிவம்) விளங்குவது ஒன்றும். எரிக்கப்பட்ட கர்ப்பூரத்தினது எதுவும் விளங்குகிறதில்லை. அது மற்றையதாம். அவற்றுள், முத லாவதான சர்வாத்மாவாகத் தோற்றுதல் வடிவத்தினை சோபாதிப் பிரஹ்மவித்து அநுபவிக்கின்றான். அது சாமகானத்தில் "யான் அந்நம் யான் அந்நம் யான் அந்நம். யான் அந்நமுண்பவன் யான் அந்நமுண்பன் யான் அந்நமுண்பவன். யான் சுலோகஞ் (கீர்த்தி யினைச்) செய்பவன் யான் சுலோகஞ்செய்பவன் யான் சுலோகஞ் செய்பவன். யான் ருதத்தின் (சத்திய சங்கற்பத்தினது) முதற் பிறந்தவன் (முதலேயிருப்பவன்) (தை-௩-௧௦-௬) என்று காட்டப் பட்டுளது. இரண்டாவது அநுபாக்கியம் (காணத்தகாதது); நிரு பாதிப் பிரஹ்மஞானி அநுபவிக்கின்றான். அதுவும், "எப்போது இவன் இந்த அதிருசியமும் அநாத்மியமும் அநிருத்தமும் (சொல் லப் படாததும்) அநிலயனமு (ஆதாரமின்றியது) மானதில் அபய மான பிரதிஷ்டையினை அடைகின்றானோ, அதனால் அவன் அபய மடைந்தவனாகின்றான்" என்னும் சுருதியினால் காட்டப்பட்டுளது

அது வார்த்திகத்தில் "பிரஹ்மவித்து சோபாதிகன் நிருபாதிகன் என்று இருவகையாகச் சொல்லப்படுகின்றான். சோபாதிகன் சர்வாத்மாவாகின்றான். நிருபாதிகன் நிருபாக்கியமா (இன்னதென்று சொல்லமுடியாத)வன்." என்று சொல்லப்பட்டிருக்கிறது. (௨௦)

अहमेव जगद्यस्मात्सृजामि पालयामि च ।
कृत्वा नानाविधं वेषं संहरामि स्वलीलया ॥ २१ ॥

[௨௧] (அ-கை.) இவ்வாறு நிஷ்களாநந்த ஸ்வரூபமாத்திரமான ஆத்மாவினுக்கே ஜகத்தின் ஜன்மஸ்திதி லயகாரணத்துவம் கூறுகின்றார்:—

(கு-ம்) யானே நாநாவிதவேஷ (பிரஹ்ம விஷ்ணு ருத்திராதியரின் வடிவ)த்தினைச் செய்து தனது லீலையினால் (பிறரால் பிரேரிக்கப்படாதவனாகவே) ஜகத்தினைச் சிருஷ்டிக்கின்றேன், இரக்ஷிக்கின்றேன், சம்ஹரிக்கின்றேன். (எ-று)

இதனைச் சுருதியும் "ஆநந்தமாகிய ஆத்மாவினின்றே நிச்சயமாக இப்பூதங்கள் பிறக்கின்றன. ஆநந்தத்தினால் உண்டானவை ஜீவிக்கின்றன ஆநந்தத்திற்சென்று லயமாகின்றன (தை-ங-கூ-க) என்று கூறுகின்றது.

இதனால் முந்திய சுலோகத்திற் சொல்லப்பட்டவரான மாயாவிலாசாதி கர்த்தாவாகிய விஷ்ணு ஆநந்தைகரஸனான என்னின் வேறுபடார் என்பது சொல்லப்பட்டதாம். (௨௧)

अहमेव महाविष्णुरहमेव सदाशिवः ।
अहमेव महाशक्तिरहमेवार्यमा प्रिय ॥ २२ ॥

[௨௨] (அ-கை.) தேவதாதிபேதங் காட்டுவதான தனது காரியத்தோடு கூடியதான மாயையும் யானேயென்று கூறுகின்றார். :—

(௬-ம்) பிரியனே! யானே மகாவிஷ்ணு; யானே சதாசிவன்; யானே மகாசக்தி, யானே அர்யமா (சூரியன்). (எ-று)

அகார உகார மகாரார்த்தம் பிரஹ்மவிஷ்ணு ருத்திரராவர். மற்றையோர் முழுப்பிரணவார்த்தமாவர். சூரியமூர்த்தி வேறும். அதனை வைஷ்ணவர் மகாவிஷ்ணுவென்றும் சைவர் சதாசிவனென்றும் ஸௌரர் (சூரிய சித்தாந்திகள்) அர்யமா என்றும், சாக்தர் சக்தியென்றும் கூறுவர். அவரெல்லோரும் அகண்டாநந்த ரூபனான யானே; அவர்கள் என்னிடத்தினின்றுண்டானவர்களாகலின். "அப்போது இரஜஸுமிருந்ததில்லை. அபரமான ஆகாயமெதுவோ அதுவுமில்லை." என்று சிருஷ்டிக்கு முன் இரஜசு முதலியவற்றைப் போல மாயையினின்மையும் கேட்கப்படுதலால் என்னிடத்தினின்றே பரமவியோக மெனப்படும் சக்தி உற்பத்தியாகின்றது என்றால், அதனின்றுண்டானவர்கள் மகாவிஷ்ணுவாதியர். ஆதலால் அவர்களும் விசுத்தனான என்னின் வேறுபடார். அல்லது முந்திய (௨௦-வது) சுலோகத்தில் சிவ விஷ்ணு சக்தி சூரிய சப்தங்களால் கிரமமாகச் சுத்த சபள சாக்ஷிய சாக்ஷிகளாகச் சொல்லப்பட்டவர்கள் எவர்களோ அவர்கள் ஒவ்வொருவரையும் 'என்னிடத்து' என்பதனால் சாமானாதி கரணியத்தால் அகம் (யானெனும்) அர்த்தத்தின் அபேதமாகச் சொல்லப்பட்டது. அதனால் அகம் அர்த்தத்திற்கே ஆநந்தத்தன்மையிருத்தலின், அதனின்று ஜகத்தின் ஜன்மாதி சொல்லப்பட்டது. இரண்டாவது மூன்றாவதில் உபக்கிரம சுலோகம் சூசிக்கப்பட்டதாய் அவர்களின் அகமர்த்தாபேதம் ஸ்பஷ்டமாக்கப்பட்டது. அவ்வாறே சாமகானத்தில் உதாகரிக்கப்பட்டுள்ளது. "யான் அந்நம்" என்று சாக்ஷியத்தோடும், "யான் அந்நமுண்பவன்" என்று சாக்ஷியோடும், "யான் சுலோகஞ்செய்பவன்" என்று சபளத்தோடும், "யான் முதற் பிறந்தவன்" என்று அவர்களினதிஷ்டானமான சுத்தத்தோடும் அகமர்த்தத்திற்கு அபேதம் கேட்கப்படுகின்றது. இது அந்தச்சுலோக மூன்றன் அர்த்த சங்கிரக வாக்கியமாம்:—

"அசத்தினை திருசியம் சக்தி; பிராணனைத் தாங்குவதும் திருக்கும் (காண்பதும்) சுகமயமும் அர்க்கன். அவ்விரண்டனையும் படைப்பவர் விஷ்ணு. அவர்களின் அதிஷ்டானம் சத்தியமான சிவம் என்பதனால், இந்த அந்நால்வரின் சங்க(கண)ம் எதன் அபேதமாக விளக்குகின்றதோ அந்த அகங்கிருதி விளக்க ஜோதியான கணராஜன் ஜயிக்கின்றார் என்று அறியப்பட்டதாம்" என்பதாம்.

"இது முன் அசத்தாக இருந்தது" (தை-உ-எ-க) என்னும் சுருதியினாற் சொல்லப்பட்ட அசத்தான பரமவியோமமெனப்படும் மாயை பஞ்சாய தனதேவதைகளில் சக்தியென்று சொல்லப்படுகின்றது. அதுவே எல்லாத் திருசியமுமாம். "அர்க்கன் ஆத்மா சூரியன் ஆத்மாஜகத்தின் பொக்கிசமாம்" என்னும் மந்திர வர்ணத்தால் அது பிராணனைத் தாங்குவதாம். பிராணோபலக்ஷிதமான கோச பஞ்சகத்தினை ஆத்மத் தன்மையாகத் தரிக்கின்றது என்பதனால் பிராணனைத் தாங்குவதாம்; மனிதன் யான், உண்கின்றேன், சோகிக்கின்றேன், செய்கின்றேன், உறங்குகின்றேன், என்று அந்நமயாதி தர்மங்களின் ஆரோபம் ஆத்மாவில் காணப்படுதலால். இவ்வாறே திருக்காம் அதாவது சூரியனைப்போல விளங்குவதாம்; என் தேகம் என் பிராணன் என் மனம் என் புத்தி எனது ஞானம் என்று அதன் திருக்குத் தன்மை யநுபவ மிருத்தலால். "தமசினால் கூடமான (மறைந்துள்ள) சூரியனைத் தம நீங்கிய துரியமான பிரஹ்ம ரூபத்தால் அத்திரி அடைந்தார்" என்பதனால் எல்லா மோகமுடைமையி னீக்கத்தால் சூரியனை ஜீவாத்மா சுக (ஆநந்த) மய ஈசுவரனவன். அவன் ஜகத்து ஜீவனிரண்டினையும் சிருஷ்டிப்பவனவன்; "அவன் வெகு வாவேன் நாநாவாகப் பிறப்பேன் என்று விரும்பினன். இவ்வெல்லாவற்றையும் படைத்தான் அதனைத் தொடர்ந்து பிரவேசித்து சத்தும் (அபரோக்ஷமும்) தியத்து (பரோக்ஷமு) மானான்" (தை-உ-சு-க) என்பதனால் அவனுக்கே அவ்வடிவமாதல் காணப்படுதலால், அவன் இங்கு விஷ்ணு வெனப்படுகின்றான், எது அம்மூன்றன் அத்தியாசத்திற் கதிகாரணமாய்த் தனது சத்தையினால் பிம்பம் பிரதிபிம்பங்களைப் பூரிப்பது போல் பூரிக்கின்றதோ, "சத்தியமும் பொய்யும் சத்திய

மாயிற்று. இது யாதொன்றுளதோ அதனைச் சத்தியமென்று கூறுகின்றது" (தை-உ-சு-க) என்னும் சுருதிப் பிரசித்தமான சத்தியமோ, அது இங்கு சிவசப்தார்த்தமாம். நான்கன் சங்கமாகிய இந்தக் கணம் எதன் அபேதமாக "யான் அந்நம், யான் அந்நமுண்பவன், யான் சுலோகஞ்செய்பவன், யான் முதலுள்ளவன்." (தை-௩-க0-சு) என்று பிரகாசிக்கின்றதோ அது அகங்கிருதி விளக்க ஜோதியாம் அதாவது அகமென்னும் அபிமானத்தினைச் செய்வது அகங்கிருதியாம்; அது புத்தியும் அதிற் பிரதி பிம்பித்த சைதன்யமுமாம். அது எதனல் பிரகாசிக்கிறதோ அந்தப் பிம்பவடிவம் நான்காவதான சிவ மெனப்படும் அகங்கிருதி விளக்கமாம். உபாதி நாசத்தில் பிரதி பிம்பம்போல் பிம்பத் தன்மைக்கும் நீக்க முண்டாகும்போது மிஞ்சுவதும் வேறு பிரிக்கப்படாத உள்ளீடின்றியதும், நான்காவதனினு வேருகாததும் துரியாதீதமுமான ஜோதி எதுவோ, அதுவே चतुर्णां गणो राजतेऽनेन' நான்கன் கணம் இதனல் விளங்குகின்றது' என்னும் விற்பத்தியால் கணராஜனென்று சொல்லப்பட்டதாம். அது ஜயிக்கின்றது என்பது (மேற்கோள் சுலோகத்தின்) பொருள். அவ்வாறே மந்திரவர்ணமும் " சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மம் " (தைத்-க-க-க) என்று கூறுகின்றது. சிவத்திற்குச் சத்தியஞானரூபத்துவ மிருக்கினும், நான்கன் பூரணத் (நிரப்புதல்) தன்மையாகப் பிரிதினின்று வேறுபட்ட தனது முக்கியமான அநந்தத் தன்மை பொருந்தவில்லை. ஆதலால் எது துரியாதீதமோ அதுவே கணராஜ சப்தார்த்த வடிவமான பிரஹ்மமாம். (உஉ)

अहमेको नृणां नाथो जातः पञ्चविधः पुरा ।
अज्ञानान्मां न जानन्ति सर्वकारणकारणम् ॥ २३ ॥

[உ௩] (அ-கை) இவ்வாறு அவ்வாத்மாவின் தத்துவத்தினைக் கூறி, மந்தமதியினரை அறிவித்தற்கு அதனதேயான மாயாசபளரூபத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) யானெருவனே. நரர் (ஸ்தாவர ஜங்கமமான ஜீவர்) கட்கு நாதன் (ஈசுவரனுன அந்தரியாமி). முன் (சிருஷ்டியினுதி)

காலத்தில் (ஆகாயாதி) ஐந்துவிதங்களை யுடையதானேன். (பொற் கடக நியாயமாக யானே ஆகாயாதித் தன்மையினை யடைந்தேன் என்பது பொருள்). அசங்கரான நீர் ஆத்மாவின் மாயா சபளத் தன்மையினை ஏன் எடுத்துச் சொல்லுகிறீரெனின்) எல்லாவற்றிற் கும் காரணனான மாயாவிற்கும் காரணமான சுத்தானந்த ரூபமாகிய என்னை அஞ்ஞான (மோக)த்தினால் அறிகின்றிலர். (ஆதலால் அவர்களது அநுக்கிரகத்தின் பொருட்டு மாயாசபளமான ரூபமே முதலிற் பிரகாசிக்கப்படுகின்றது என்பது பொருள்.) (உ௩)

मत्तोऽग्निरापो धरणी मत्त आकाशमारुतौ ।
ब्रह्मा विष्णुश्च रुद्रश्च लोकपाला दिशो दश ॥ २४ ॥

[உ௪] (அ-கை) யான் ஐந்து விதங்களுடையதானேனென்று கூறப்பட்டது. அவ்வைந்துவித முடைமையினையே கூறுகின்றார்:-

(சு-ம்) என்னிடத்தினின்று அக்கினி அப்பு பிருதிவிகளுண் டாயின என்னிடத்தினின்று ஆகாசவாயுக்களுண்டாயின. பிரஹ்மா வும் (நான்முகனும்), விஷ்ணுவும் (லக்ஷ்மீபதியும்), ருத்திரனும் (பார்வதிபதியும்), (இந்திராதி) லோகபாலரும், (சூரியகதியாற் கற்பிக்கப்படும்) பத்துத்திக்குக்களும் உண்டாயின. (எ-று)

என்னிடத்தினின்று என்னும் பஞ்சமியால் (ஐந்தாம் வேற் றுமையால்) 'ஜன்ம கர்த்தாவின் பிரகிருதி' என்னும் ஸ்மிருதி யினால் பிறப்பனவாகிய அக்கினியாதிகட்கு உபாதானமாந்தன்மை ஆத்மாவிற்குக் காட்டப்பட்டது. இதுவும் ஆத்மைக்கிய முணர் தற்பொருட்டாம். எங்கும் வேதாந்தங்களில் சிருஷ்டி சுருதி கள் ஆத்மாவினேகத்துவ முணர்தற்பொருட்டாமென்பது கண்டா கோஷமாம் (மணியோசையாம்). அதனை "எதன் அநந்தத் தன்மையினைப் பிரதிஞ்ஞை செய்து, அது சித்திக்கும்பொருட்டுச் சுருதியானது பிரபஞ்சத்திற்கு அதன் காரியத்தன்மையினைக் கூறு கின்றதோ அது பிரஹ்மமென்று நிச்சயஞ்செய்க" என்று முதியோர் கூறுகின்றனர்.

“பிரஹ்மாவும்” என்றல் முதலியவற்றால் கேவலம் பஞ்சமகா பூதங்கள் மாத்திரமே என்னிடத்தினின் றுண்டாயின வென்பதில்லை; பௌதிகங்களான பிரஹ்மாதி ஸ்தாவராந்தங்களான சரீரங்களும் என்னிடத்தி னின்றே யுண்டாயின், வேறு அவாந்தரகாரணமில்லை யென்று கூறியதாம். (உச)

वसवो मनवो गावो मुनयः पशवोऽपि च ।
सरितः सागरा यक्षा वृक्षाः पक्षिगणा अपि ॥ २५ ॥

[உரு] (சு-ம்) (தராதியரான அஷ்ட) வசுக்களும், (பதினான்கு) மனுக்களும், (சுரபி முதலிய) கோக்களும், (வசிஷ்டாதியரான) முனிவரும், பசுக் (மாடு குதிரை முதலிய விலங்கு)களும் अपि என்பதனால் சொல்லப்படாத கந்தர்வர் முதலியோரும், (கங்கையாதி) ஆறுகளும் (பாற்கடல் முதலிய) சாகரங்களும், (குபேரன் முதலிய) இயக்கரும், (ஆல் அரசு முதலிய) விருக்ஷங்களும் (அன்னம் சாரஸ முதலிய) பக்ஷிகளும், अपि என்னும் சொல்லால் மற்றைய கேசர (ஆகாயத்துச் சரிப்பவ)ரான பூதவேதாளாதிகளும் உண்டாயின. (எ-று)

“வசுக்கள்” என்பது பதினொருருத்திரர் பன்னிரண்டாதித்தர் பதின்மூன்று விசுவே தேவர்களென்னும் இவை முதலிய கணதேவதைகட்கும் உபலக்ஷணமாம். (உரு)

अथैकविंशतिः स्वर्गा नागाः सप्त वनानि च ।
मनुष्याः पर्वताः साध्याः सिद्धा रक्षोगणास्तथा ॥ २६ ॥

[உசு] (சு-ம்) இனி இருபத்தொரு ஸ்வர்க்கங்களும், (வாசுகி முதலிய) நாகங்களும், (காமியக முதலிய) ஏழுவனங்களும், च காரமாகிய உம்மையால் நைமிசமுதலிய ஒன்பது ஆரணியங்களும், மனிதர்களும், பர்வதங்களும் (தேவர்கட்கும் தேவர்களான) சாத்தியர்களும், (கபிலாதி) சித்தர்களும், (பௌலஸ்தியர் முதலிய) அரக்கர் கணங்களும் அவ்வாறே (அவர்கட்குச் சமமான இரணியாக்கன் முதலிய) அசுரர்களு முண்டாயினர். (எ-று)

இருபத்தொரு ஸ்வர்க்கங்களாவன:-எழு த்வீபங்களும் மேரு விருச்சியுமான எட்டு, பூலோகத்துள்ள போகபூமிகளும் புவர் முதலியனவுமான ஆறு, பாதாளம் எழு ஆக இருபத்தொன்றும். ()

अहं साक्षी जगच्चक्षुरलिप्तः सर्वकर्मभिः ।
अविकारोऽप्रमेयोऽहमव्यक्तो विश्वगोऽव्ययः ॥ २७ ॥

[உஎ] (அ-கை.) இவ்வாறு "சிவனிடத்திலும் விஷ்ணுவிடத்திலும்" என்றல் (உ0-வது) முதலிய மூன்று சுலோகங்களால் துரியாதீதமான கணேசனை விரித்துரைத்து, "யானொருவனே" என்றல் (உரு-வது) முதலிய நான்கு சுலோகங்களால் மூன்றாவதான விஷ்ணுவினை விரித்துரைத்து, சாக்ஷியத்தினின்று வேறுபடுத்தப்பட்ட சாக்ஷியாகிய சூரியனை விரித்துரைக்கின்றனர்:—

(சு-ம்) யான் ஜகத்தின் நேத்திரம் (ஜகந்நேத்திரம் சூரியன்; அதுபோல சாக்ஷியமான ஜகத்தின் வேறாயிருந்துகொண்டு விளக்குகிறவன்), (அதனாலேயே சாக்ஷாத் அதாவது இந்திரியம் மனம் ஒளி யென்பவற்றின் மறைப்பின்றி * ஈக்ஷித்தலால்) சாக்ஷி, (கோசங்கள்) எல்லாவற்றின் கர்மங்களால் (காயம் வாக்கு மனது என்பவற்றால் செய்யப்பட்ட பாபங்களால்) பற்றப்படாதவன்; ("எவ்வாத்மா பாபமின்றியதும், ஜரையின்றியதும், மிருத்தியுவின்றியதும், சோகமின்றியும், பசியின்றியதும் தாகமின்றியதுமாமோ" (சாந்-அ-சுஎ) என்று அதில் தொடர்பாடுள்ள கோசதர்மங்கள் நிஷேதிக்கப்படுதலின்) விகாரமில்லாதவன்; அப்பிரமேயன் (ரூபாதிகளின்றியவன்); அவ்யக்தன் (ரூபாதிகளின்றியவனாயினும் ஆகாசாதிகளைப்போல வெளிப்படாதவன்); விசுவகன், அவ்யயன் (குறைதலாதி தர்மமில்லாதவன்) (எ-று)

'விசுவகன்' என்றதனால் விசுவத்திருந்து வேறுபடுத்தப்பட்ட தன்மையும் விசுவத்தினுள் ளிருத்தற் றன்மையும் கூறப்பட்டதாம். (உஎ)

*ஈக்ஷித்தல்=பார்த்தல்.

अहमेव परं ब्रह्माव्ययानन्दात्मकं नृप।

[உ-அ] (அ-கை) உபஹித (உபாதியுடையவ)னுய் உபாதிதர்மங்களை ஆத்மாவி (தன்) னிடத்தில் அபிமானிப்பவனுன சாக்ஷிக்கு அவிகாரத்துவ முதலியன எவ்வாறு மென்று சங்கித்து, பரமார்த்தமாக அது பரப்பிரஹ்மத்தினும் வேருகாமையாலாமென்று கூறுகின்றுர்:—

(சு-ம்) அரசனே! யானே (தேகாதி யுபாதியுடையவனுயினும் உண்மையாக) அவ்யய (அகண்ட) ஆநந்தவடிவினதான பரமாகிய பிரஹ்மம். (ஆதலால் காரணத்தோடுகூடிய கோசபஞ்சகத்தின் மேலான பிரஹ்மமாகிய எனக்கு விகாரமின்றிய தன்மை முதலியன யுக்தமேயாமென்பது பொருள்.)　　　　(எ-று)

मोहयत्यखिलान्माया श्रेष्ठान्मम नरानमून् ॥ २८ ॥

(அ-கை) "என்னிடத்தினின்று அக்நினி யுண்டாயிற்று ஜலமுண்டாயிற்று" என்றல் (உசு-வது) முதலிய தனது வசனத்தினுலேயே அக்கினியாதி வடிவமாக விகாரத்தினை யடைந்தவரும், பாகியேந்திரிய கிராஹியரும், விபக்தரும், பரிச்சின்னரும், காரியரும் ரூபத்தால் ஜன்மாதி யுடையவருமான தமக்கு 'அவிகாரன், அப்பிரமேயன், அவ்யக்தன், விசுவகன், அவ்யயன் யான்,' என்று சொல்லப்பட்ட தர்மசம்பந்தமுடைமை எவ்வாறும்? அதனுல் முன்னுக்குப் பின் விரோதப்படுமே யென்றுசங்கித்துக் கூறுகின்றுர்:—

(சு-ம்) (நிகழாததனை நிகழ்த்துவிக்கும் சாமர்த்தியமுடையதான) எனது மாயை சிரேஷ்டர்களான (ஆத்மஞானைசுவரியாதியுடைமையால் மிகமேம்பட்டவரான பிரஹ்மாதி) இவ்வெல்லா (சுரநராதிக் கிரமமாக ஸ்தாவராந்தமான) நரர்களை (தேகேந்திரியாதிகளை நடத்துதற்றன்மையால் அதனபிமானத்தால் பிரஹ்மாவின் யான் என்றல் முதலியனவாகச் சொல்லப்பட்ட வடிவத்தோடு கூடியவர்களை) மோகிக்கச்செய்கின்றது (வேற்றுத்தன்மைப் புத்தியினை யுண்டுபண்ணுகிறது.)　　　　(உஅ)

सर्वदा षड्विकारेषु तानियं योजयेद्दृशम् ।
हित्वाजापटलं जन्तुरनेकैर्जन्मभिः शनैः ॥ २९ ॥
विरज्य विन्दति ब्रह्म विषयेषु सुबोधतः ।

[உக] (அ-கை) மோகிக்கச்செய்கின்றதென்பதனையே ஒன்றரைச் சுலோகத்தினால் விவரிக்கின்றார்:—

(சு-ம்) அவர்களை ஷட்விகாரங்களில் இது அத்தியந்தம் (அவ்வடிவத் தன்மையாக) எப்போதும் (ஆதியந்தமின்றியநவரதம்) பொருத்தும். ஜந்துவானவன் மாயாபடலத்தினைத்தரித்து மெல்ல (எற்றமுறையாக) அநேக ஜன்மங்களால் வைராக்கியத்தினையடைந்து விஷயங்களில் நல்லுணர்வால் பிரஹ்மத்தினை அடைகின்றான். (எ-று)

"பிறக்கிறது, இருக்கிறது, பரிணமிக்கிறது, வளருகிறது, தேய்கிறது, நசிக்கிறது" என்று நிருக்தத்தில் யாஸ்கராற் சொல்லப்பட்டவை எவற்றிற்கிருக்கின்றனவோ அவை ஷட்விகாரங்களாம். அவை எண்பத்துநான்கிலக்ஷம் யோனி வடிவினவாகிய உபாதிகளாம்.

பொருந்துவதான மாயை பாலியாதிகளும் ஜாக்கிரதாதிகளுமான பரஸ்பரம் வேறுபட்டனவாகிய அவஸ்தைகளிலும் தொடர்ந்திருக்கின்ற ஏகமான அகமர்த்தத்தின் ஆலம்பனமாகிய ஆத்மாவினை குஸுமசூத்திரநியாயத்தால் (புஷ்பங்களும் நூலும்போல) பின்னமாக அறிந்தும், அதன் அபேதாத்தியாசத்தால் அதன் தர்மத்தின் பங்குடையது மாகின்றது; எந்த யான் பாலியத்தில் பெற்றோரை அநுபவித்தேனோ, அந்த யான் முதுமையில் பேரன் முதலிய சந்ததியோரை அநுபவிக்கின்றேன். அவ்வாறே எந்தயான் ஒன்றுந்தெரியாமல் அழுத்தமாய்த் தூங்கினேனோ, அந்த யானே சொப்பனத்தினைக் கண்டேன். அந்த யானே இப்போது விழிக்கின்றேன் என்பதாக. இவ்வாறே தேகாதிகளின் வேறு வடிவமான ஆத்மாவினை அறிந்தும் பாலன் யான், யௌவனன் யான், விருத்

தன் யான், மெலிந்தவன் யான், மூடவன் யான் என்று தேக தர்மங் களை ஆத்மாவில் நிச்சயிக்கின்றது. ஒற்றைக்கண்ணன் யான், செவிடன் யான் என்று இந்திரியதர்மங்களையும், பசித்தவன் யான், தாகமுடையவன் யான், சோகிக்கின்றேன் யான், மோகிக்கின்றேன் யான், சுகி யான், துக்கி யான், கர்த்தா யான், போக்தா யான், அறி பவன் யான், அறியாதவன் யான், யான் சிந்திக்கிறதில்லை என்று கிரமமாகப் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆநந்தமய மெனப்படும் கோச நான்கின் தர்மங்களையும் ஆத்மாவில் நிச்சயிக் கின்றது. இவ்வாறே சங்காதங்கட்கு வேறாயிருந்தும் ஜீவன் எப் படி சங்காதாத்மத் தன்மையினை தன்னதாக மதிக்கின்றானோ அதன் பின் கர்மவாயிலாக எல்லாப் போக்கியக் கூட்டங்களையும் சிருஷ் டித்துக் காத்து அழிக்கின்றானோ, அவ்வாறே சிவன் மாயையினை விளக்குகிறவனாயினும், மாயையினைத் தனது சரீரத்தன்மையாகக் கிரகித்து, அதன் தர்மங்களான ஜகத்தின் சிருஷ்டி ஸ்திதி சம் ஹார கர்த்திருத்துவாதிகளை தன்னிடத்தில் மதிப்பவனாகியே ஜகத்தின் ஜன்மாதிகட்குக் காரணமாக மதிக்கின்றான். அது "என்னிடத்தினின்றே அக்கினி யுண்டாயிற்று அப்பு உண்டா யிற்று" என்றல் முதலியவற்றால் காட்டப்பட்டுள்ளது.

இவ்வாறு மாயைக்குப் பிரபாவமிருக்குமாயின், எம்மனோர் முதலியோருக்கு மோக்ஷத்தினைக் குறித்து என்ன ஆசை யிருக் கிறது? என்னும் ஆசங்கையை "மாயாபடலத்தினைத் தரித்து" என்பதனால் பரிகரித்தனர்.

மாயாபடலமாவது மாயைவடிவ ஆவரணமாம், அது பிராஹ் மணன் யான், கிருகஸ்தன் யான் என்னும் வர்ணாசிரமாபிமான ரூபமாம். 'தரித்து' என்பதற்கு அதிலதில் விதிக்கப்பட்ட கர்மங் களைச் செய்து என்பது பொருளாம். வைராக்கியம் பெற்றவன் அதனால் இயமாதிகளை அநுஷ்டித்து நல்லாசிரியரின் பிரசாதத்தால் பெறப்பட்ட யோகமார்க்கமுடையவனாய்ச் சத்திய ஞானாநந்தாநந்த ஸ்வரூபமான பிரஹ்மத்தினை முழுமாயையும் நீங்கியபோது அடை கின்றான் எனக் கொள்க. கர்மங்கட்குச் சித்தத்தினைச் சுத்தமாக் குந் தன்மையால் மோக்ஷஹேதுத்துவம் சொல்லப்படும். அது

ஸ்ரீ விஷ்ணுபகவானல் கீதையில் "ஜநகாதியர் கர்மத்தினலேயே நற்சித்தியினைப் பெற்றனர்." என்றும், "ஆரம்பிக்கப்படாத கர்மத்தால் முத்தியினை புருஷன் அடையான்" என்னும் அந்வய வியதிரேகங் (உடன்பாடெதிர்மறை) களால் கூறப்பட்டுமுளது.

சித்த சுத்தி முதலியன மாயையினை ஆசிரயித்து உண்டாகுக. பிரஹ்மபாவமோ மாயையின் நீக்கமாத்திர வெல்லையினதாம். அவ்வாறாக, அம்மாயையினைத் தரித்தெனக் கூறிய தெவ்வாறென்பதனை 'விஷயங்களில் நல்லுணர்வால்' என்பதனுல் பரிகரித்தார். 'விஷயங்களில் அதாவது திருசியங்களான பிரமாத்திரு பிரமாணப் பிரமேயங்களுள்ள போது அவற்றினை விளக்குவதான திருக்கு ரூபப் பிரஹ்மம் பிரகாசிக்கின்றது. அவ்வாறில்லையாயின், உனக்குச் சுழுத்தியிற்போல நான் பிரஹ்மம் என்னும் உணர்வு நிகழ்தல் இல்லையாம். அது "வெளியர்த்தங்களான பிரமேயங்களில் வாக்கிய ஐக்கியத்தன்மையாகச் சம்மதிக்கப்பட்ட சம்வித்து எதுவோ அதுவே இங்கு வேதாந்தவாக்கியப் பிரமாணத்தால் பிரமேயமான அர்த்தமாம்." என்று கூறப்பட்டுளது. அகம்பிரஹ்மாஸ்மி என்னும் வாக்கியத்தினுலாம் விருத்தியும் மாயையேயாம். அதில் எப்படி ஜலசந்திரன் வாயிலாக முக்கிய சந்திரன் கிரகிக்கப்படுகின்றதோ அதுபோல வாக்கியத்தினுலாகிய விருத்தியில் பிரதிபிம்பித்த சித்தின் வழியாய் முக்கியமான சித்து கிரகிக்கப்படுகின்றது. மாயையின் நீக்கம் அதன் சாதனத்தன்மையாக உபயோகிக்கப்படுகின்றது; வாக்கியத்தினுலாம் விருத்தியின்றி அதுமாத்திரத்தினுல் பிரஹ்மலாபம் சம்பவியாமையால் என்பதனுல் "விஷயங்களில் நல்லுணர்வால்" என்று கூறியது யுக்தமேயாம். (உகூ)

अच्छेद्यं शस्त्रसंघातैरदाह्यमनलेन च ॥ ३० ॥

[௩௦] (அ-கை) இவ்வாறு விஷ்ணு சூரியன் சக்தியென்னும் பெயருள்ள சோபாதிகப் பிரஹ்மங்களான பரம்பரம் வேறுபட்டவைகளில் தொடர்ந்திருப்பதும் முக்தர்களால் சேரத்தக்கதுமான சிவமெனப்படும் நான்காவது பிரஹ்மம் எதுவோ அந்தப்பிம்ப

வடிவப் பிரஹ்மத்தில் பிரதிபிம்பங்களிற் போல உபாதி தர்மங்களின் பிரசக்தியில்லை யென்று சொல்லுதற்குப் பிராப்பியமான பிரஹ்மத்தினை விசேஷித்துக் கூறுகின்றார்:—

(சு-ம்) ஆயுதக்கூட்டங்களால் சேதிக்கப்படுவதன்று; அக்கினியினுல் தகிக்கப்படுவது மன்று. (எ-று)

எப்படி கட்டையினை யுபாதியாகவுடைய அக்கினியானது கட்டைசேதிக்கப்பட்டபோது சேதிக்கப்படுகிறதில்லையோ, தகிக்கப் பட்டபோது தகிக்கப்படுகிறதில்லையோ, அதுபோலவென்க. எதனுல் உபகித விஷ்ணுவினையும் உபாதி தர்மங்கள் பற்றுகிறதில்லையோ அப்போது உபகிதமல்லாத சிவத்தில் அதன் பிரசக்தி தூரமாக விலக்கப்பட்டதேயா மென்பது பொருள். (௩௦)

अक्लेद्यं भूप भुवनैरशोष्यं मारुतेन च ।

[௩௧] (அ-கை) விஷ்ணுவுக்கு ஐசுவரியத்தினுல் உபாதிதர்மங்களால் ஸ்பரிசிக்கப்படாத தன்மை பொருந்தியதாம். ஜீவனிடத்திலோ ஜலசூரிய நியாயத்தால் உபாதிதர்மங்களின் ஸ்பரிசம் நீக்கத் தகாததா மென்றுசங்கித்துக் கூறுகின்றார்:—

(சு-ம்) பூபனே! நனைக்கப்படுகிறதில்லை (ஜலத்தினுல் தளர்ந்த அவயவமுடையதாக்கப் படுகிறதில்லை), புவனங்களாலும் வாயுவினுலும் உலர்த்தப்படுகிறதில்லை. (எ-று)

ஜல சூரியனிடத்தில் அசைவினைப்போல தேகியினிடத்தில் துக்காதிகள் தோற்றினும், அது வாஸ்தவமன்று; உபாதி யுபகித மிரண்டற்கும் வாஸ்தவமான சங்க மின்மையால். அது "நிச்சங்க கூடஸ்தனை ஆத்மாவிற்குச் சங்கமுடையதும் விகாரியுமான அநாத்மாவோடு சம்பந்தம் வாஸ்தவமாகப் பொருந்தாது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினுனே எப்படிச் சூரியப்பிரதிபிம்பம் உள்ளே பிரவேசிக்கப்பட்டதாய் ஜலத்தினுல் நனை (கரை) கிறதில்லையோ அதுபோல ஜீவனும் உபாதிதர்மங்களால் விகாரப்படுகிறதில்லையென்பது பொருள். அது, "நர்த்தனத்தில் விக்கிரியையினை யடைந்து துக்கமுடையவனுகின்றுன். விகாரிக்குச் சாக்ஷித்

துவம் எது? (அவிகாரிக்குள்ளதாம், அதுபோலப் புத்தியின் விக்கிரியை (விகாரம்) கள் ஆயிரங்கட்குச் சாக்ஷியாவேன். ஆதலால் யான் அவிக்கிரியன்'' என்று கூறப்பட்டிருக்கிறது.

இவ்வாறே எப்படி வாயுவினால் ஜலம் உலர்த்தப்படினும் ஜல சூரியன் உலர்த்தப்படுகிறதில்லையோ, அதுபோல ஜீவனும் உபாதி நீங்கியபோது சூரியனைப்போல உபஹிதமின்றிய வடிவமாகவே இருக்கின்றது என்பது பொருள்.

अवध्यं वध्यमानेऽपि शरीरेऽस्मिन्नराधिप ॥ ३१ ॥

(அ-கை) அவ்வாறே வெளிப்படாத வடிவினதாகிய சக்தியானது வெளிப்பட்டதின் வதத்தினால் வதைக்கப்படுவதாகா தென்று கூறுகின்றார்:—

(சு-ம்) நராதிபனே! இச்சரீரம் வதைக்கப்படினும் (ஆத்மா) வதைக்கப்படாததாம். (எ-று)

நசித்தற்குரிய வியக்தமான காரணமாய மண்சுவர்ணாதிகளைவயோ அவையும் கடம் கடக முதலியவற்றின் நாசத்தால் நசிக்கிற தில்லை யெனின், நசித்தற்குரியதாகாத அவ்யக்தம் நசியாதென்பதைப் பற்றி என்ன சொல்லவேண்டும் என்பதுபொருள். ()

यामिमां पुष्पितां वाचं प्रशंसन्ति श्रुतीरिताम् ।
त्रयीवादरता मूढास्ततोऽन्यन्मन्वतेऽपि न ॥ ३२ ॥

[௩௨] (அ-கை.) இவ்வாறு "பரமாநந்தவடிவ மடுவில் மூழ்கினவர்களான ஜீவன்முக்தர்கள்'' என்றவிடத்து சூசிக்கப்பட்ட பரம ஆநந்தம், விஷ்ணு சூரிய சக்திகளாகிய பிரதிபிம்பங்களினும் பிம்பவடிவ சிவத்தினும் வேறான கணபதியென்று விரித்துரைக்கப்பட்டது. 'ஜீவன்முக்தர்கள்' என்பதனால் முக்திப்பிரதியோகித் தன்மையாகச் சூசிக்கப்பட்டதான பக்ஷமும் விரித்துரைக்க வேண்டியதாம். அவ்வாறே ஜல சந்திரனிடத்தில் அசைவுபோல ஜீவனிடத்தில் துக்காதிகள் மித்தையாமென்று அறியாத பஞ்சதேவதா

விமுகனான மந்தனுடையகதியும் விரித்துரைக்கத்தக்கதாம். அவ்விரண்டனையும் தந்திரத்தால் விரித்துரைக்கின்றார் மூன்று சுலோகங்களால்:—

(௪-ம்) யாதொரு இந்த (ஓதுபவரிடத்துப் பிரசித்தமான) (தானே பிரமாணவடிவினதாகிய) சுருதியினாற் சொல்லப்பட்ட ("சாதுர்மாஸ்ய யாகஞ்செய்பவனுக்கு அழிவில்லாத சுகிருதமுண்டாகின்றது." "சோமரஸத்தைப் பருகினோம்; அமிருதரானோம்" (அதர்வசி-௩) என்றல் முதலிய (கர்மபலத்திற்கு அழிவின்மையைப் பிரதிபாதிப்பதான) புஷ்பித்ததான (புஷ்பித்தகொடிபோல் மேலெழுந்தன்மையாக ரமணியமான) வாக்கினை, மூன்றெனப்படும் வேதத்தில் உதாகரிக்கப்பட்ட வாத(அக்ஷய்யபலத்துவ முதலிய அர்த்தவாத) ங்களில் இரமித்தவர் (அது மாத்திரத்தில் நின்றவர்) களான மூடர்கள் புகழ்கின்றனர். மூடர்களாதலால் இதனின் வேறானதை (மேலான சாதனமான உபாசனைவடிவ அல்லது ஞானவடிவ மகாபலமுளது என்று) மனதினாலும் கருதுகிறதில்லை. (எ-று)

கர்மபலத்திற்கு அநித்தியத்துவம் சம்பவித்தலால் புஷ்பித்ததென்றார். சொல்லக்கருதியதல்லாத ஸ்வார்த்தமுடையது என்பது பொருள். அவ்வாறே எது ஆக்கப்பட்டதோ அது அநித்தியம் என்னும் தர்க்கத்தினால் அநுக்கிரகிக்கப்பட்ட சுருதி "எப்படி இங்கு கர்மத்தினால் சம்பாதிகப்பட்ட லோகம் க்ஷயமாகின்றதோ அப்படியே அங்குப் புண்ணியத்தினால் சம்பாதிக்கப்பட்ட லோகம் நசிக்கின்றது" (சாந்-அ-க-௬) என்று கூறுகின்றது. அவ்வாறே, "எவற்றின் ஆசிரயமாகத் தாழ்ந்த (அழியும் பயனுடைய) கர்மம் சொல்லப்பட்டுளதோ அந்த அதிருடமான யஞ்ஞரூப வுபாதியுடையனவாகிய (ருத்துவிக்கு-௧௬-யஜமானன் பத்தினி) பதினெட்டும் நமுவுவ (நாசமுடைய) னவாம். இத (கர்மத்தி) னைச் சிரேயசாக எவர்கள் களிக்கின்றனரோ அம்மூடர்கள் மறுபடியும் மறுபடியும் ஜரா (மூப்பின் முன்னிட்ட) மரணத்தினை யடைகின்றனர்." (முண்ட-க-உ-எ) என்பதனால் கர்மங்களால் சம்சார நிவிருத்தி காணப்படவில்லை.

कुर्वन्ति सततं कर्म जन्ममृत्युफलप्रदम् ।
स्वर्गैश्वर्यरता ध्वस्तचेतना भोगबुद्धयः ॥ ३३ ॥

[௩௩] (இ-ம்) ஸ்வர்க்கமான முக்கிய ஐசுவரியரதரும் இழந்த விவேகமுடையவருமான போகபுத்தியினர் ஜனன மரண பலத்தைத் தருவதான கர்மத்தினை இடைவிடாது செய்கின்றனர். (எ-று)

இதனுற்றான், வெகுவழியினதாகிய தர்மத்திற்கு இங்கு பயனின்றிய கிரியை இல்லை என்று பாரதத்தில் சர்வதர்மத்திற்கும் பயனின்மை யில்லையென்று சொல்லப்பட்டுளது. அவ்வாறே "(மழையின்றி) உலரும் பயிர்கள் செவ்வையாய்த் தளிர்க்க விரும்பியவன் காரீரியினால் யஜிக்கக்கடவன்" என்றல் முதலிய சாஸ்திரங்களால் விதிக்கப்பட்ட திருஷ்டபலமான காரீரியாதி தர்மம், திருஷ்டபலமுள்ளனவும், வெகு திரவியச்செலவாலும் வருத்தத்தாலும் சாதிக்கப் படுவனவுமான கர்மங்களில் சிரத்தையினை யுண்டுபண்ணுதற் பொருட்டு உபயோகிக்கப்படுகின்றது. அவ்வாறே ஸ்வர்க்கத்தினை முக்கிய பயனாக வுடைய தர்மமும் விசிஷ்ட (விசேஷமுள்ள) தேகத்தினை யடைவிப்பதாயிருத்தலின், விசிஷ்டதேகத்தில்கர்ப்பம் சத்துவோத்கர்ஷத்தின் வசத்ததாயிருத்தலால் சத்துவோத்கர்ஷமும் (சத்துவ மேலீடும்) வைராக்கியாதிகட்கு ஏதுவாய்ப் பரம்பரையாக முக்திக்கேதுவாகும் என்க. அது வார்த்திகத்தில், "ஊர்ப் பன்றி முதலிய தேகத்தினல் இந்திரனது பதம் புசிக்கப்பட மாட்டாது." என்றும், "சித்தசுத்தி யநுசாரமாக போகத்தினை அழியுமியல்பினதாகக் காண்கின்றனர்" என்றும் கூறப்பட்டுளது. ()

संपादयन्ति ते भूप स्वात्मना निजबन्धनम् ।
संसारचक्रं युञ्जन्ति जडाः कर्मपरा नराः ॥ ३४ ॥

[௩௪] (இ-ம்) பூபனே! அவர்கள் சுவாத்மாவினல் (தமது அந்தக்கரணத்தினல்) தமது பந்தனத்தினைச் சம்பாதிக்கின்றனர். ஜடரான கர்மபரராகிய நரர்கள் சம்சாரசக்கரத்தினைப் பொருந்துகின்றனர். (எ-று)

பரம்பரையாக மோக்ஷஹேதுக்களான வைதிக கர்மங்கட்குப் பந்தத்தினைச் சம்பாதிக்குந்தன்மை கூறுதல் பொருந்தாததா மெனின், உண்மை. கர்மத்தி லதிகாரமுள்ளவர் மூவகையாவர்:— ஒருவர், இழந்த அறிவினரும் அத்தியந்த மூடரும் தாமதருமான பரலோக வார்த்தையினை யறியாதவர். சித்தலோபத்தினால் மூட னும் பிரமாதமடைந்தவனுமான பாலனுக்குப் பரலோகம் தெரி யாது; இதுவே லோகம் வேறில்லை யென்பதனால்; அது "கர்மத் தினை யிடைவிடாது செய்கின்றனர்" என்பதனால் சொல்லப்பட்டது. மற்றையவர், இகலோக பரலோக சுகங்களிற் பற்றுள்ளவர் களும் ஸ்வர்க்கமான முக்கிய ஐசுவரியபரர்களாதலால் இராஜஸர் களுமான "மானி மீண்டு மீண்டும் வசப்படுகின்றான்" என்னும் சுருதிப் பிரசித்தராவர். அவர்கள் சத்துருவதாதிபயனுடைய சியேன முதலிய வைதிகங்களில் இடைவிடாது பிரவிருத்திக் கின்றவர்களாய் ஜனன மரண பரம்பரையினையே அடைகின்ற னர்; சியேனயாகாதிகள் பலத்தின் வாயிலாக அநர்த்த ஹேது வாதலால் தர்மமாகாமையின். அது "பலத்தினாலும் எந்தக்கர்மம் அனர்த்தத்தினைத் தொடர்கிறதில்லையோ; அது கேவலம் பிரீதிக்கு ஏதுவாதலால் தர்மமென்று சொல்லப்படுகின்றது." என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

யயாதி நகுஷன் முதலியோர் இராஜஸின் பரிணாமமான சர்வ பூதாபிமானத்தினாலும் பரதாராபிலாஷையினாலும் தம்மாலேயே கீழ்விழுதல் வடிவினதும், திரியக்குயோனிப்பிரவேசமுமான தமது பந்தனத்தினைச் சம்பாதித்தனர் என்பது பாரதத்தில் பிரசித்தம்.. அத்தன்மைய இது "ஸ்வர்க்கமான முக்கிய ஐசுவரியபரர்" என்பத னால் சொல்லப்பட்டுளது. 'ஜடரான கர்மபரர்' என்றல் முதலியவற் றால் முடிக்கின்றார். சொல்லப்படும் எனதபிப்பிராயமுள்ள கர்ம யோகத்தினை யறியாத ஜடர் சம்சாரசக்கரத்தி லிடைவிடாது சுழலுகின்றனர், வைதிககர்மபர ராயினும் முக்தித் துவாரத்தினை யடையாரென்பதுபொருள். வெகுவழியினதாகியதாம் என்பதும் 'பேதகத்தினை அழியுமியல்பினது" என்பதுமான இவை முத

லிய (ந௬-வது சுலோகவுரையிலுள்ள) பாரத வார்த்திக வசனமோ சாத்துவிக தர்மாபிப்பிராயமுடையதாமென்பதனால் ஓர்விரோதமுமில்லை. (௩௪)

यस्य यद्विहितं कर्म तत्कर्तव्यं मदर्पणम् ।
ततोऽस्य कर्मबीजानामुच्छिन्नाः स्युर्महाङ्कुराः ॥ ३५ ॥

[௩௫] (அ-கை) இவ்வாறு தாமஸமும் இராஜஸமுமான கர்மம் வேதத்தாற் கூறப்பட்டதாயினும் பந்தத்தைத் தருவதாமென்று கூறப்பட்டது. இப்போது மாயாபடலத்தினைக்கரித்து என்பது (உ௯-வது) னால் மாயையினை ஆசிரயித்தே வைராக்கியாதியினுற்பத்திவாயிலாகப் பிரஹ்மம் அடையப்படுகிறதென்று சொல்லப்பட்டதெதுவோ அதனை விவரிக்கின்றார் ஐந்து சுலோகங்களால்:—

(சு-ம்)("அந்தர்பாஹியேந்திரியங்களின் வசியத்துவம்" என்றல் (கக-அத்-உ௯-வது) முதலியவற்றால் சாஸ்திரமுடிவிற் சொல்லப்படும் கிரமமாக) எவனுக்கு (பிராஹ்மணாதி வர்ணத்திற்கு அல்லது கிருகஸ்தாதி யாசிரமத்தினுக்கு)ச் சுருதிஸ்மிருதி யாசாரங்களால் விதிக்கப்பட்ட கர்மம் எதுவோ அதனை அநுஷ்டித்து அவன் எனதர்ப்பணம் செய்யவேண்டும். [अर्प्यतेऽनेन இதனால் அர்ப்பிக்கப் படுகின்றது என்னும் கரணவிற்பத்தியால் அர்ப்பணஸாதனம் மனமாம். अर्प्यतेऽस्मिन् அர்ப்பிக்கப்படுகின்றது இதில் என்னும் அதிகரண விற்பத்தியால் அர்ப்பண ஸ்தானமுமாம். ஈசுவரனாற் பிரேரிக்கப்பட்டவனால் செய்யப்பட்ட கர்மம் ஈசுவரனிடத்தில் அர்ப்பிக்கப்பட்டதாகுக என்று ஸகல பலத்தியாக பூர்வகமான கர்மம் செய்யவேண்டியதாமென்பது பொருள்]. அதனால் (இத்தன்மைய கர்மஞ் செய்தலால்) இவனுடைய (கர்த்தாவின்) கர்மபீஜங் (வாசனை) களின் மகாங்குரங்கள் (பெரும்பயனுள்ள காரியாசைகள் அதாவது பலபரியந்தம் பிரவிருத்தி யுண்டுபண்ணுவனவாகிய இஃது எனக் குண்டாகுக இஃது எனக் குண்டாகுக வென்னும் மனோரதங்கள்) கெடுக்கப்பட்டனவாகின்றன. (எ-று) (௩௫)

चित्तशुद्धिश्च महती विज्ञानसाधिका भवेत् ।
विज्ञानेन हि विज्ञातं परं ब्रह्म मुनीश्वरैः ॥ ३६ ॥

[௩௬] (அ-கை) அதனால் என்னை யெனக் கூறுகின்றார்:—

(சூ-ம்) (இவ்வாறு கர்மங்களை என்னிடத்து அர்ப்பணஞ்செய்பவனுக்கு) பெரிதான சித்தசுத்தியு முண்டாம். அது விஞ்ஞானத்தினைச் சாதிப்பதாம். விஞ்ஞானத்தி (வித்தையி) னால் பரம்பிரஹ்மம் முனீசுவரர்களால் அறிய (சாக்ஷாத்கரிக்க) ப்பட்டதாம். (எ-று)

இது எனக் குண்டாகுக என்று காமம் உதியாதபோது இராகத் துவேஷாதி தோஷமின்றிய சித்தம் என்னுற் கூறப்பட்ட யோகாநுஷ்டான யோக்கியமாகின்றது. சகாரத்தால் (உம்மையால்), சுத்தமான சித்தத்தில் என் விஷயமான ஜிஞ்ஞாஸையும் (ஞான விருப்பமும்) விஞ்ஞானமும் அந்தக் கர்மார்ப்பண யோகத்தினாலேயே யுண்டா மென்று நிச்சயிக்கத் தக்கதாம். அவ்வாறன்றோ, "எவனுக்கு இந்த நாற்பத்தெட்டுச் சமஸ்காரங்களுளவோ, அந்தப் பிராஹ்மணன் சாயுஜ்யத்தினை சலோகத்தன்மையினை யடைகின்றான்" என்னும் ஸ்மிருதியினால் காமங்கட்குச் சித்தசுத்தி வடிவ சம்ஸ்கார மாத்திரார்த்தத் தன்மை அறியப்படுகின்றது. அவ்வர்த்த முள்ள அவற்றிற்கும் ஸ்வர்களுபபலம் பிந்திய தொடர்புடைய (மறுமையின) தாமென்று அறியப்படுகின்றது. அது, எப்படி மாமரம் பலத்தின்பொருட்டு வைக்கப்பட்டதாயினும் நிழலும் மணமும் கூடவே யுண்டாகின்றனவோ, அப்படியே செய்யப்படும் தர்மத்தினை யொட்டி அர்த்தங்களும் உண்டாகின்றன." என்று ஆபஸ்தம்பத்திற் சொல்லப்பட்டுள்ள மாவிருக்ஷத்தினால் காணப்படுதலின். அவ்வாறே "அத்தன்மைய இதனை வேதாநுவசனத்தினாலும் யஞ்ஞத்தினாலும் தானத்தினாலும் தபசினாலும் உணவின்மையினாலும் பிராஹ்மணர்கள் (முமுக்ஷுக்கள்) அறிய விரும்புகின்றனர்" என்னும் சுருதியினால் வேதாநுவசனாதிகளான பிரஹ்மசாரி தர்மங்கட்கும், யஞ்ஞதானாதிகளான கிருகஸ்த தர்மங்கட்கும், தபசு உண்டியின்மை முதலிய வானப்பிரஸ்ததர்மங்கட்கும் ஆத்மஞான விருப்பமாகிய அர்த்தத்தன்மை அறியப்படு

கின்றது; இவ்வாக்கியத்தினுடையே குதிரையாற் செல்ல விரும்புகின்றான், வாளினாற் கொல்ல விரும்புகின்றான், என்பதுபோலகரணத்திற்குந் தாதுவின் (வினைப்பகுதியின்) அர்த்தத்தோடு அன்வயமிருத்தலின், கர்மங்கட்கு வித்தியார்த்தத்துவமும் அறியப்படுகின்றது. இவ்வாறு முதலாவதோடுகூட மூன்று பக்ஷங்களாம். அவற்றுள், கர்மங்கட்கு சம்ஸ்கார முடைமையாகிய பக்ஷத்தில் ஞான விருப்ப முதலியன சற்சங்க முதலியவற்றின் பயனும், விவிதிஷா (ஞான விருப்பா) ர்த்தத் தன்மையிலோ வசிஷ்ட (மேன்மையான) குருமுதலியோர் லாபம் தனது முயற்சியாற் சாதிக்கப்படுவதாம். வித்தியார்த்தத்துவ பக்ஷத்தில் தடையின்றிய வித்தியாலாப பரியந்தம் கர்மாபூர்வமே வியாபிக்கின்றது என்பது விசேஷம். "விஞ்ஞானத்தினைச் சாதிப்பதாம்" என்பதனால் இப்பக்ஷமே என்னாற் கொள்ளப்பட்டதாமென்று கூறியதாயிற்று. (௧௬)

तस्मात्कर्माणि कुर्वीत बुद्धियुक्तो नराधिप ।

[௧௭] (அ-கை) முற்கூறிய ஸ்வரூபபயனுடைய கர்மயோகத்தினை உபசங்கரிக்கின்றார்:—

(சு-ம்) நராதிபனே! (எதனால் இவ்வாறிருக்கின்றதோ) அதனால் புத்தியுக்தன் (அது எனதர்ப்பணம் செய்யத்தக்கதாமென்று என்னாற் சொல்லப்பட்ட புத்தியோடு கூடியவனான விஞ்ஞான விருப்புடையவன்) சாத்துவிகமான கர்மங்களைச் செய்யக்கடவன். (எ-று)

न त्वकर्मा भवेत्कोऽपि

(அ-கை) ஸ்வரூபமாகக் கர்மத்தினை விடுதலில் தோஷத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) எவனும் கர்மமில்லாதவனாகலாகாது (விதிக்கப்பட்ட கர்மத்தினை எல்லாவிதத்தாலுமே விடலாகாதென்பது பொருள்) (எ-று)

स्वधर्मत्यागवांस्तथा ॥ ३७ ॥

(அ-கை) விபக்ஷத்தில் தோஷத்தினைக் கூறுகின்றார் :—

(சூ-ம்) அவ்வாறாயின் (கர்மத்தியாகம் செய்யின்) ஸ்வதர்மத்தினை விட்டவனாகின்றான் (எ-று)

விதிக்கப்பட்டதனைச் செய்யாமையால் தோஷத்தை யடைகின்றானென்பது பொருள். அவ்வாறே ஸ்மிருதியும், "ஏழுநாள் பிராதக்காலத்தில் ஸ்நானஞ் செய்யாதவனும், மூன்று நாள் சந்தியை செய்யாதவனும் பன்னிரண்டு நாள் அக்னிஹோத்திரமில்லாதவனுமான பிராஹ்மணன் சூத்திரத்தன்மையினை அடைகின்றான்" என்று கர்மத்தியாகத்திற்கு ஜாதி பிழப்பினைச் செய்யுந் தன்மை கூறுகின்றது. (௩௭)

जहाति यदि कर्माणि ततः सिद्धिं न विन्दति ।

[௩அ] (அ-கை) இதனையே கூறுகின்றார் :—

(சூ-ம்) (சுத்திகரிக்கப்படாத சித்தமுள்ளவனாயிருந்தும் பிரமாதத்தினால் இவன்) கர்மங்களை விடுவானாயின், அதனால் (அத்தன்மைய கர்மத்தியாகத்தினால்) சித்தியினை (சந்நியாஸ பலமான யோகத்தினை) அடையான். (மாறாகத் தோஷத்தினையே பெறுவானென்பது பொருள்.)

आदौ ज्ञाने नाधिकारः कर्मण्येव स युज्यते ॥ ३८ ॥

(அ-கை) ஞான விருப்புடையோனால் சமாதி பூர்வகமான சிரவணாதியான ஞானசாதனமே அநுஷ்டிக்கத்தக்கதாம். இவனுக்குக் கர்மயோகாநுஷ்டானத்தினால் என்ன பயன்? "தினந்தோறும் குரு பணிவிடையாற் பெறப்பட்ட பக்தியோடு கூடியதான வேதாந்த சிரவணத்தினால் எண்பது கிருச்சிரத்தின் பலனைப் பெறுகின்றான்." என்னும் ஸ்மிருதியினால் சிரவணத்தினாலுண்டாம் தர்ம (புண்ய)த்தினால் சித்த சுத்தியும் சம்பவித்தலால் எனக் கூறுகின்றார் :—

(சு-ம்) [கர்மம் செய்யாதவனுக்குக் கர்மபல வடிவமான ஞான விருப்ப மில்லாமையால், வித்தியா சாதனத்தில் பிரவிருத்தி சம்பவியாமையால், உற்சாக முடைமையால் சிரவணாதியில் பிரவிருத்தித்தவனுக்கு விதியோடு கூடியதாயினும் பலத்தின் பொருட்டாகாது, மலடியின் கணவனுக்கு, ருதுகாலத்தில் மனைவியைக்கூடுக என்னும் விதியினாற் பெறப்பட்ட கூடுதலாலாம் பயனைப்போல. அவ்வாறே சுருதியும், "எது சிரவணத்தின் பொருட்டு வெகுபேர்களால்பெறப்படுவதன்றோ, எதனைக் கேட்பவராயினும் வெகுபேர் அறியமாட்டாரோ" (கட ௨-௨-௭) என்று கூறுகின்றது]. ஆதலால் ஆதியில்(கர்மாநுஷ்டானத்திற்குமுன்) ஞானத்தில்அதிகாரமில்லை. கர்மத்திற்குபின் அது பொருந்துகின்றது. (எ-று)

ஜடபரதர், விதுரர், தர்மவியாதன் முதலிய எவருக்கு அதிகாரமின்மையால் கர்மம் செய்யாதவராயினும் ஞானோற்பத்தி காணப்படுகின்றதோ, அவருக்கு முந்திய ஜன்மங்களில் கர்மாநுஷ்டானம் செய்யப்பட்டதாகக் கற்பிக்கப்படுகின்றது. ஆதலால் தோஷமின்றியதாம்; சாஸ்திரத்தினாற் சமர்ப்பிக்கப்பட்ட சாதனத் தன்மைக்கு வியபிசாரமுடைமை பொருந்தாமையின். (௩அ)

कर्मणा शुद्धहृदयोऽभेदवुद्धिमुपैष्यति ।
स च योगः समाख्यातोऽमृतत्वाय हि कल्पते ॥ ३९ ॥

[௩௯] (அ-கை) தான்கூறிய புத்தியோகத்தினைப் பயனோடு உபசங்கரிக்கின்றார் :—

(சு-ம்) சோதிக்கப்பட்ட ஹிருதயன் ["தர்மத்தினால் பாபத்தினைப் போக்குகின்றான்" (தைத்-ஆர-௧௦-௬௩) என்னும் சுருதியினால் ஸ்வதர்மாநுஷ்டானத்தினால் சுத்திகரிக்கப்பட்ட சித்தமுடையவன்] அபேதபுத்தியை (ஐகாத்மிய ஞானத்தினை அதாவது ஆத்மா வொன்றெனு முணர்வினை) அடைவன் (வேதாந்தங்களால் தாமதமின்றியே பெறுவான்.) (என்றால் முன் பரமாநந்தத்தினை யடைவிப்பதான) எந்த யோகம் சொல்லப்பட்டதோ அதுவும்

(அபேக்ஷ புத்தி லாபத்திற்கு முன் அநுஷ்டிக்கப்பட்டதாயினும் ஐகாத்மிய ஞானமுதய மாகுங்கால்) அமிருதத்துவத்தின்பொருட்டு (கைவல்யத்தினைத் தருவதற்கு)ச் சாமர்த்தியமுடைய தாகின்றது (எ-று)

சிரவணத்திற்கு முன் சமமுதலியவற்றி னிடையில் யோகம் அநுஷ்டிக்கப்பட வில்லையாயின், அப்போது நிதித்தியாசனபரி பாகவடிவமான அதுவே அமிருதத்துவத்தின்பொருட்டுச் சாமர்த்திய முடையதாகின்றது. இங்கு முதலாவது பக்ஷத்தில் "அந்த வுபநிஷத்தினு லறியப்படும் புருஷனைக்கேட்கின்றேன்" என்னும் சுருதியின்படி ஆத்மாவுக்கு உபநிஷத் ஒன்றினாலேயே அறியத் தக்க தன்மை சொல்லப்படுகின்றது. இரண்டாவது பக்ஷத்தில் மனோமாத்திரத்தினால் அறியப்படுந் தன்மை "மனதினாலேயே இது அடையத்தக்கதாம்" என்னும் சுருதிப்படி சொல்லப்படு கின்றது. (ங.சு)

योगमन्यं प्रवक्ष्यामि शृणु भूप तमुत्तमम् ।
पशौ पुत्रे तथा मित्रे शत्रौ बन्धौ सुहृज्जने ॥ ४० ॥

[சு०] (அ-கை) இவ்வாறு சங்கபலன்களை விடுதல் பூர்வக மாகிய ஸ்வதர்மாநுஷ்டானம் புத்தியோகமாம்; அதன் பயன் புத்திப்பிரசாதமாம்; பிரசன்னமான புத்தியில் பாவனாயோகத்தின் அதிகாரமுண்டாகின்றது என்னு மதனைச் சொல்லப் பிரதிஞ்ஞை செய்கின்றார் ஆறு சுலோகங்களால் :—

(சு-ம்) பூபனே! (கர்மயோகத்தினைவிட) உத்தமமான வேறு (சமத்துவ பாவனாவடிவ) யோகத்தினைச் சொல்லுகின்றேன், அதனைக்கேள். பசுவினிடத்தும் (கோகுதிரையாதியிலும்,) புத் திரனிடத்தும், மித்திரனி (உபகாரியினி)டத்தும், சத்துருவி (அப காரியி)னிடத்தும், பந்துவினி (வித்தியா சம்பந்தமுடைய அல்லது யோனிசம்பந்தமுடைய ஆசாரியன் அல்லது மருமகன் முதலிய வரி)டத்தும், சுகிருத்துக் (உபகாரத்தினை யெதிர்பாராது சர்வ பூதங்கட்கும் ஹிதஞ்செய்பவரான சாதுக்) களிடத்திலும் (எ-று)

அ

என்னைக்காண்க வென்று ௩௩-வது சுலோகத்துள்ள என்னை யென்பதனைக் கூட்டுக. (௪௦)

बहिर्दृष्ट्या च समया हृत्स्थयाऽऽलोकयेत्पुमान् ।

[௪௧] (அ-கை) இவற்றில் எவ்வாறு தம்மைக் காண்பே னெனக் கூறுகின்றார் :—

(ச-ம்) புருஷன் சமமான பாகிய திருஷ்டியினாலும் இருதயத்திலிருப்பதான சமதிருஷ்டியினாலும் (பிரத்தியகாத் மாவான என்னை) பார்க்கக்கடவன். (எ-று)

"என்னிடத்தினின்று அக்கினியுண்டாயிற்று அப்பு உண்டாயிற்று" என்றல் முதலிய வசனங்களால் ஈசுவரனிடத்தினின்றுதித்த யாவும் ஈசுவரனே என்னும் அபேத புத்தியெதுவோ அதுவே ஆதித்தியாதிகளிலும் பாகியமான சமதிருஷ்டியாம். இப்பசுவாதிகள் என் மனோ மாத்திர கற்பிதங்கள் என்னின் வேறுபடா வென்னும் இத்தன்மைய வடிவினது இருதயத்திருப்பதான சமதிருஷ்டியாம். அவ்வாறே "ஈசுவரனான பகவான் ஜீவகலையால் பிரவேசித்திருக்கிறா ரென்று குதிரை, சண்டாளன் கோ, கழுதைபரியந்தமானவற்றைப் பூமியில் தண்டம்போல் விழுந்து நமஸ்கரிக்க" என்று யாஞ்ஞவல்கிய சுருதியும் ஸ்மிருதியும், "ஆத்மாவே இவ்வெல்லாம் யாதொரு இவ்வாத்மா" (சாந்-௭-௨௫-௨) என்று சுருதியும் கூறுகின்றன. இது வஸ்துவின் ஸ்திதியாயினும், பேததரிசன பிரபலத்தன்மையினால் பாவனைத்தன்மையால் 'இருதயத்திலிருப்பதான' என்னும் அம்சத்தினால் விதிக்கப்படுகின்றது.

सुखे दुःखे तथाऽमर्षे हर्षे भीतौ समो भवेत् ॥ ४१ ॥

(அ-கை) இதன் பயனைக் கூறுகின்றார் :—

(சு-ம்) சுகத் (அநுகூலமா யறியத்தக்க) திலும், துக்கத் (பிரதிகூலமா யறியத்தக்க) திலும், அமர்ஷத்தி (பிறர் மேன்மையைச்சகி

யாமையி)லும், ஹர்ஷ (இஷ்டலாபத்திற் செலுத்தப்பட்ட சித்த வுல்லாச)த்திலும், தனக்கு நாசமுண்டாகுமோ வென்னும் சங்கையினலுண்டாகும்) பயத்திலும் சமமுள்ளவன் (இவை நேர்ந்த போது விசாரப்படாதவ) னென்றான். (எ-று) (சக)

रोगाप्तौ चैव भोगाप्तौ जये वा विजयेऽपि च ।
श्रियोऽयोगे च योगे च लाभालाभे मृतावपि ॥ ४२ ॥

[சஉ] (சு-ம்) (சூலை முதலிய) ரோகங்கள் நேர்ந்த போதும் (திவ்யஸ்திரீ முதலிய) போக சாதனங்கள் கிட்டியபோதும், வெற்றியிலும் அல்லது தோல்வியிலும், अपि च இன்னும் என்னும் பதங்களால் சீதோஷ்ணமானபமானதிகளிலும், செல்வநீங்கிய போதும், செல்வம் கிட்டியபோதும், முயன்றது (பயன்) கிட்டிய போதும், கிட்டாதபோதும், சாவிலும், अपि இன்னும் என்னும் சொல்லால் மூப்பிலும் அதனலாகிய குருட்டுத்தன்மை செவிட்டுத்தன்மை முதலியவற்றிலும் (சமமுள்ளவனுகுக). (எ-று) (சஉ)

समो मां वस्तुजातेषु पश्यन्नन्तर्बहिः स्थितम् ।

[சங-சச-சரு] (அ-கை) எவ்வாறு சமமுள்ளவனவன் எனக் கூறுகின்றார் :—

(சு-ம்) (மனோமாத்திரமான தத்தம் மனோத சுகதுக்கரூபத்தினல்) உள்ளிருப்பவனும் எல்லாப் பௌதிகவடிவத்தால் வெளியிலிருப்பவனுமாக இருக்கின்ற என்னை சர்வவஸ்து சாமானியங்களிலும் சத்ரூப (இருப்புவடிவ)த்தால் உட்கலந்தவனுகக்கண்டு சமமுடையவனவன் (எ-று)

(அ-கை) வஸ்துக்கூட்டங்களையே கண்டத்தாற் படிக்கின்றார் :—

सूर्ये सोमे जले वह्नौ शिवे शक्तौ तथाऽनिले ॥ ४३ ॥

द्विजे ह्रदे महानद्यां तीर्थे क्षेत्रेऽघनाशिनि ।
विष्णौ च सर्वदेवेषु तथा यक्षोरगेषु च ॥ ४४॥

गन्धर्वेषु मनुष्येषु तथा तिर्यग्भवेषु च ।
सततं मां हि यः पश्येत्सोऽयं योगविदुच्यते ॥ ४५ ॥

(சூ-ம்) சூரியனிடத்தும், சந்திரனிடத்தும், ஜலத்திலும், தீயிலும், சிவத்திலும், சக்தியிலும், அவ்வாறே வாயுவிலும், துவிஜனிடத்தும், மடுவிலும், மகாநதியிலும், தீர்த்தத்திலும், பாபத்தினைப் போக்கும் (புண்ய) க்ஷேத்திரத்திலும், விஷ்ணுவிடத்தும், சர்வ தேவர்களிடத்தும், இயக்கர் உரகரிடத்தும், கந்தர்வரிடத்தும், மனிதரிடத்தும், திரியக்குஜன்மங்களிலும் இடைவிடாது எவன் என்னைக் காண்பானோ அத்தன்மைய இவன் யோகமுணர்ந்தவனெனப் படுகின்றான். (எ-று)

எப்படி பொன்மயங்களான தேவர் நரர் திரியக்குவடிவப் பிரதிமைகளில் பொன்றன்மை மிஞ்சியதாயிருக்கிறதோ, அது போலச் சூரியன் சந்திரன் சத்துரு மித்துரு நாய் கழுதை முதலியவற்றில் சர்வோபாதானவடிவப் பிரஹ்மம் சமானமா மெனனும் இத்தன்மைய வடிவினதாகிய சேதிக்கப்படாத புத்தி யெதுவோ அதுவே பாவனாயோகமாம். அதனை யுடையவன் புத்தியோக முணர்ந்தவனைவிடச் சிரேஷ்டனென யோகமுணர்ந்தவனுவனென்பது பொருள். (சங-சச-சரு)

संपरावृत्य स्वार्थेभ्य इन्द्रियाणि विवेकतः ।
सर्वत्र समताबुद्धिः स योगो भूप मे मतः ॥ ४६ ॥

[சகூ] (அ-கை) இவ்வாறு 'எவனுக்கு விதிக்கப்பட்ட கர்மம் எதுவோ' என்றல் (ரு௫-வது) முதலிய சுலோகங்களினால் புத்தி விசேஷப் பிரதானமாகிய சாக்தயோகம் சொல்லப்பட்டது. அவ்வாறே 'வேறு யோகத்தினைச் சொல்லுகின்றேன்' என்றல் (சஅ-வது) முதலியவற்றால் சர்வம் விஷ்ணுமயம் ஜகத்து என்னுமித்தன்மைய ஐகாத்மிய (ஒருமைப்) பாவனாரூபமான வைஷ்ணவமாகிய இரண்டாவது யோகம் சொல்லப்பட்டது. இப்போது

கர்மத்தோடு கலந்ததும் ஆத்மாநாத்ம விவேகரூபமுமாகிய மூன்ருவதான ஸௌரயோகத்தினை இரண்டு சுலோகங்களால் விதிக்கின்ருர்:—

(சு-ம்) (சுரோத்திராதி ஐந்து) இந்திரியங்களையும் எதிர்ப்படுவனவாகிய தத்தம் விஷயங்களான பாகிப சப்தாதிகளினின்றும் திருப்பி (விபரீதப் பிரவிருத்தியினுல் உள்நோக்கமுடையனவாக்கி) (ஆத்மா நாகம) விவேகத்தின் பொருட்டு எங்கும் (யாதானுமோர் விஷயத்தில்) புத்தி சம்யமமுடைய (தாரணத்தியான சமாதியுடைய) தாகின்றதோ, அந்தப் புத்தி சம்யம வடிவயோகமே (சிரேயசுக்குச் சாதன மாதற்றன்மையாக) பூபனே! என்னுல் கொள்ளப் பட்டதாம். (எ-று)

'எங்கும்' என்பது "எல்லாக்காமங்களினுல் தர்சபூர்ணமாசங்கள்" என்னுமிடத்தில் எப்படி ஒரு பிரயோகத்தில் ஒரு காமமே கொள்ளப்படுகின்றதோ பிறிதின் அநர்த்தமுடைமை நேர்தலால் எல்லாம் கொள்ளப்படுகிறதில்லையோ, அதுபோல ஒரு சம்யமத்திற்கு ஓரே விஷயமாம்; ஒருங்கே எல்லாமாகா. "சூரியனிடத்துச் சம்யமஞ்செய்தலால் புவனஞானமாம். சந்திரனிடத்துச் செய்தலால் நக்ஷத்திர கிரக ஞானமாம். பிரத்தியயத்தின் (புத்திவிருத்தியின்) சம்யமத்தால் பிறர் சித்த ஞானமாம" என்று விஷய பேதத்தினுல் சம்யமத்திற்கு நாநாத்துவம் ஸ்மரிக்கப்படுதலால் சம்யமமும், ஓரேவிஷயத்தில் தாரணைத் தியானம் சமாதியெனும் மூன்றுமாம். அவ்வாறே பரமரிஷியின் சூத்திரங்கள் "தாரணைசித்தத்தினை ஒரு இடத்திற்கட்டுதல் (நிறுத்துதல்)" "நிறுத்திய விடத்தில் சித்த விருத்தியின் ஓரே தொடர்பான தன்மை தியானமாம்" "அந்தத்தியானமே (தியாதாதியானங்களின்) ஸ்வரூப சூநியம் போன்றதாய் அர்த்த (தியானிக்கப்படும் பொருள்) மாத்திரத் தோற்றமுள்ளதாதல் சமாதியாம்." "மூன்றும் ஓரிடத்தில் சம்யமமாம் (மனவடக்கமாம்)." என்று கூறுகின்றன. (சகூ)

आत्मानात्मविवेकेन या बुद्धिर्दैवयोगतः ।
स्वधर्मासक्तचित्तस्य तद्योगो योग उच्यते ॥ ४७ ॥

[சஎ] (சு-ம்) தனது தர்மத்திற் பற்றிய மனதுடையவனுக்குத் தைவயோகம் (எல்லாத் தர்மங்களினுலுமாகிய அதிருஷ்டவச)த்தால் ஆத்மாநாத்ம விவேகமாக (புருஷன் புத்தி சத்துவமென்னுமிரண்டன் வேற்றுத் தன்மையுணர்ச்சிவடிவாக) ப்பரிணமித்த புத்தியெதுவோ, அதன் யோகம் (அடைவு) யோகம் (முன் யோகமிரண்டினும் முக்கியமான யோகம்) என்று சொல்லப்படுகின்றது. (எ-று)

'தனது தர்மத்திற் பற்றிய மனதுடையவனுக்கு' என்பதனால் இவனுக்கு வருணுசிரம தர்ம சமுச்சயம் (கலப்பு) விதிக்கப்படுகின்றது. நழுவிய ஆசாரமுடையவனுக்கு யோகாநுஷ்டானம் சம்பவியாதென்பது பொருள். இதன் பயன் யோகசாஸ்திரத்தில் "சத்துவபுருஷான்யதாக்கியாதி (சத்துவம் வேறு புருஷன் வேறு என்னும் அறிவு) மாத்திரமுள்ளவனுக்கு எல்லா வஸ்துக்கட்கு மதிபதியாந்தன்மையும், எல்லா வஸ்துக்களையு மறியுந்தன்மையுமுண்டாம்' என்று சூத்திரிக்கப்பட்டுளது. (சஎ)

धर्माधर्मौ जहातीह तथा त्यक्त उभावपि ।
अतो योगाय युञ्जीत योगो वैधेषु कौशलम् ॥ ४८ ॥

[சஅ] (அ-கை) இவ்வாறு சௌரமான மூன்றாவது விவேக யோகத்தினைக் கூறி, சைவமாகிய நாலாவதான அசம்பிரஞ்ஞாத யோகத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) அவ்வாறு (சத்துவபுருஷாந்யதாக்கியாதியெனப்படும் விவேக புத்தியினால்) விடுபட்டவன் (யோக்கிய சம்பிரஞ்ஞாதசுமாதியினையடைந்தவன் அதன் மாகாத்மியத்தினால்) இவ்வுலகத்திற்றானே (பிறப்பின் வித்துவடிவினவாகிய) தர்மாதர்மங்க ளிரண்டனையும் விடுகின்றான் (எதனால் யோகத்திற்குஇத்தன்மைபமாகாத்மியமுளதோ) அதனால் யோக (நிர்பீஜயோகலாப) த்தின் பொருட்டு யோகத்தினை அநுஷ்டிக்கக்கடவன். எதனாலெனின், இவ்வசம்பிரஞ்ஞாத யோகம், புருஷமுயற்சியினாற் சாதிக்கத்தக்கனவாய் வேத

த்தில் விதிக்கப்பட்டுள்ளவைகளில் மிக்க சாமர்த்தியமுள்ளதாம் (பிரஜ்ஞையின் தியாகம் வரையில் புருஷ முயற்சியாற் சாதிக்கத் தக்கதாம்). (எ-று)

அது "எதனால் விடுகிருயோ அதனை விடுக" என்னும் "பிரஜ்ஞையினால் சங்க மின்றியவனாகுக" என்றும் கூறப்பட்டுளது. (சஅ)

धर्माधर्मफले त्यक्त्वा मनीषी विजितेन्द्रियः ।
जनिबन्धविनिर्मुक्तः स्थानं संयात्यनामयम् ॥ ४९ ॥

[சகூ] (அ-கை) இதன் பயனைக் கூறுகின்றார்:—

(கூ-ம்) தர்மாதர்ம பயன் (மேற்கீழ்க்கதி) களைவிட்டு, ஜிதேந்திரிய (விஷயங்களினின் றிழுக்கப்பட்ட கரணமுடைய,) வனாய், (அதனால்) மனதடக்கு மியல்பினனாய், ஜன்மமாகிய பந்தம் தானே நீங்கப் பெற்றவனாய், அநாமயமாகிய (சம்ஸாரயோகமின்றிய) ஸ்தான (மீண்டும் திரும்பிவராத லோக) த்தினைச் செவ்வையாயடைகின்றான். (எ-று)

'ஜிதேந்திரியன் மனதடக்கு மியல்பினன்' என்னு மிரண்டு விசேஷணங்களாலும், "அது பரவைராக்கியம் புருஷனது ஞானமுண்டாவதால் குணங்களில் பற்றின்றியதன்மையாம்", 'இகலோக பரலோக விஷயங்களில்பற்றின்றியவனுக்கு வசீகாரம் (விஷயங்களை வசமாக்குவது, என்னும் பெயருடைய வைராக்கியமாம்." என்னும் இரண்டு சூத்திரங்களாலும் சொல்லப்பட்ட பராபர வைராக்கியங்களை யடைந்த தன்மை சொல்லப்பட்டது.

எந்தஸ்தானத்தினை எடுத்துக்கொண்டு "இந்திரியோபாசகர் பத்து மந்வந்திரங்கள் இங்கு நிற்கின்றனர்" என்றல் முதலாக "நிர்குணனை புருஷனை யடைந்து காலசங்கையிருப்பதில்லை" என்று சொல்லப்பட்டதோ, அதனையடைகின்றான். இதற்குக் காரியப் பிரஹ்மத்தினோடு முக்தனாகின்றான் என்பது பொருளாம். அதுவும், "அவர்களெல்லோரும பராமிருதராய் முக்தராகின்றனர்." என்று உதாகரிக்கப்பட்டுளது. (சகூ)

यदा ह्यज्ञानकालुष्यं जन्तोर्बुद्धिः क्रमिष्यति ।
तदासौ याति वैराग्यं वेदवाक्यादिषु क्रमात् ॥ ५० ॥

[௫௰] (அ-கை) பரவைராக்கியத்தினை யெடுத்துக்கொண்டு யோகபாஷியத்தில், "இதனுடைய இடையீடின்றிய பயனை கைவல்யமாம்' என்று சொல்லப்பட்டுளது. அப்படியே நிரோதசம்ஸ்காரத்தின் பிரபலத்தன்மையால் உத்தான (எழுதற்) சம்ஸ்காரங்கட்கு ஆத்தியந்திகப் பிரளயமொடுக்கமுண்டாகும்போது அறியத்தக்கது இல்லாமையால் புத்திக்கும் எரிக்கப்பட்ட விறகின் நெருப்புப் போல சிதைவு அவசிய முண்டாகும் என்றும், தடைகளின்றிய கைவல்யம் ஆத்மாவுக்கு நிரோத சமாதியினாலேயே சித்திக்கின்றது என்றும் பாதஞ்சலர் கூறுவர். அவ்வாறாக, "அநாமயமான ஸ்தானத்தினைச் செவ்வையா யடைகின்றனர்" என்பது (சகூ)ல் அசம்பிரஞ்ஞாத சமாதியின் பயனாமென்று எவ்வாறு சொல்லப் படுகின்றது என்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

(சு-ம்) எப்போது ஜந்துவின் புத்தியானது அஞ்ஞானமாகிய கலங்கலை (அழுக்கினை)க்கடக்கின்றதோ, அப்போது இவன் வேத வாக்யாதிகளிற் கிரமமாக வைராக்கியத்தினை யடைகின்றான். (எ-று)

நிச்சயமாகச்சென்ற அநந்தகோடி ஜன்மங்களில் சேகரிக்கப் பட்ட வாசனைத்துளிமயமான அஞ்ஞான சமுத்திரமுளது. அதன் அலையாம் நித்தியமும் ஆவிர்பாவதிரோபாவ ஸ்வபாவமுடைய புத்தி அஞ்ஞானமாகிய விசுவரூபத்தில் விலசிக்கின்ற அது எவ்வாறு ஆத்தியந்திக உச்சேத(நாச)த்தினை அடையும்? அதுவே திரிகுணாத்மகமான அஞ்ஞானத்தின் பிரகாசிக்குந்தன்மையால் சாத்துவிகபரிணாமமாய்; இராஜோதமோ மலங்களால் கலங்கியதாம். அதுவும், அசம்பிரஞ்ஞாத சாமாசியந்தமான கர்மயோகத்தினால் அழுக்கு நீங்கியதாய்த் தேற்றாம் பொடியினைப்போலக் கிரமமாக அஞ்ஞானத்தினைப் போக்குவதாய்த் தானும் ஒடுங்குகின்றது. இது

'எப்போது ஜந்துவின் புத்தியானது அஞ்ஞானமாகிய கலங்கலைக் கடக்கின்றதோ' என்பதனாற் சொல்லப்பட்டது. மூலத்திலுள்ள ஹி என்னும் சொல், "ஞானத்தினாலேயே கைவல்யம்" "ஆத்மஞானி சோகத்தினைக் கடக்கின்றான்" (சாந்-எ-க-ந) என்னும் ஞான மொழியினாலேயே சாதிக்கத்தக்கதான கைவல்யத்தின் பிரசித்தி யினை விளக்குதற் பொருட்டதாம்.

"போகத்தினால் எந்த ஆத்மதரிசனமுண்டாகிறதோ இதுவே பரம (மேலான) தர்மமாம்" என்பதனால் யோகத்திற்கு ஆத்ம தரிசனசாதனத்துவ மிருக்கினும், யோகத்தினாலாகும் தரிசனம் தர்மமேயாம்; அது "அகம் பிரஹ்மாஸ்மி (யான் பிரஹ்மம்)" "அயமாத்மா பிரஹ்மம் (இவ்வாத்மா பிரஹ்மம்)," "தத்துவமஸி (அது நீ)" என்றால் முதலியவாக்கியங்களாற் பிறந்த விருத்தி (உள்ளநிகழ்ச்சி) வடிவமன்று, அஃதின்றிக் கைவல்யம் சம்பவி யாமையால். 'அவ்வாறு விடுபட்டவன் ஸ்தானத்தினை அடைகின் றான்' (சகூ) என்பதனால்யோகத்தினால் விடுபட்டபுத்தியுடையவனுக் க்குக்கிரமமுக்தி ஸ்தானப்பிராப்தியென்று கூறியதுயுக்தமாம். எப் போது அநேக கர்மம் ஒருஜன்மத்தில் ஆரம்பிக்குமோ, அப்போது மேலுண்டாகத்தக்க வாசனைகளின்மையால் அடைந்த ஜன்மத்தி லெழுந்தவாசனைகள் நிரோதாப்பியாசத்தினால் கெடுதலால் கைவல் யம் சம்பவிக்கக்கூடியதாம் என்னும் இது யுக்தமன்று; ஒரு கர்மத்திற்கு அநேக ஜன்மங்களை யுண்டுபண்ணுந்தன்மை காணப் படுதலால். அவ்வாறே ஒரு மானுடஜன்மம் கர்மத்தினைச்சம்பாதிக் கும் ஸ்தானமாம்; அநந்தமான போகஸ்தானங்கள் காணப்படுகின் றன; ஆதலால் இந்த ஏகபவிக (ஒரு ஜன்மத்தில் நீங்குமென்னும்) நியாயம் அயுக்தமாம்.

'அப்போது இவன்' என்றால் முதலியவற்றால் எவ்வுபாயத் தினால் புத்தி அஞ்ஞானக்கலங்கலைக் கடக்குமென்னு மாசங்கை பரிகரிக்கப்பட்டதாம்.

வேத வாக்கியங்களாவன, தத்துவம் பதார்த்தங்களைச் சோதிப்பனவாகிய "எவன் சர்வஞ்ஞனோ எவனது தபசு ஞான

மயமோ அவனிடத்தினின்றும் இந்தப் பிரஹ்மமும் (இரண்யகர்பனும்) நாமரூபமும் அந்நமும் பிறந்தன.” (முண்ட-க-க-௯) “எவன் விஞ்ஞானமயனே பிராணன்களிலும் இருதயத்திலும் அந்தர் ஜோதியான புருஷனே” என்றல் முதலிய அவாந்தரவாக்கியங்களும், “தத்துவமஸி” என்றல் முதலிய மகாவாக்கியங்களுமாம். அவற்றின் சிரவணமாவது உபக்கிரமோபசங்காரங்களின் ஏகரூபத்துவ முதலிய ஆறு லிங்கங்களால் தாற்பரியத்தினை நிச்சயித்தலாம். அதனால் பிரமாணத்துள்ள அசம்பாவனை (பொருந்தாமை)யின் நிவிருத்தியாம். வேதவாக்கியாதிகளில் என்பதிலுள்ள ஆதியென்னும் சொல்லால் மனனநிதித்தியாசனங்கள் கொள்ளப்படும். மனனமாவது கேட்ட அர்த்தத்தினை யுக்திகளால் தொடர்ந்து சிந்தித்தலாம். அதனால் பிரமேயத்திலுள்ள அசம்பாவனையின் நிவிருத்தியாம். நிதித்தியாசனமாவது விஜாதீயப்பிரத்தியயத்தினை (வேற்றினமான விருத்தியினை) நீக்குதல் பூர்வகமாக ஸஜாதீய (ஒரே இனமான) பிரத்தியயத்தினை ஆற்றொழுக்குப்போல் தொடர்புடைய தாக்குதலாம். அவற்றால் சமமுதலியவற்றோடு கூடியவனும் கிரமமாக அதாவது படியேறும் நியாயமாக மேல் மேல் பூமியில் ஏறுகிறவனும், சாக்ஷாத்கரிக்கப்பட்ட ஆத்மயதார்த்தத்துவ முள்ளவனுமான அதிகாரியாகிய புருஷனுக்கு அந்தச் சிரவணாதிகளில், கரை கடந்தவனுக்குக் கப்பலிற்போல வைராக்கியம் பிறக்கின்றது. எப்போது வைராக்கியமுண்டாகுமோ, அப்போதுதான் புத்தியின் அஞ்ஞானக்கலங்கல் நீங்கியதென்று மதிக்கத்தக்கதாம்.

இங்கு ‘கிரமமாக’ என்பதனால் “சிரௌத அறுஞ்ஞாதிரு அறுஞ்ஞை அவிகல்ப மென்பவற்றால்” என்று வேறு சுருதிப்பிரசித்தங்களான நான்கு திருஷ்டிகள் சொல்லப்பட்டனவாம். அவற்றின் சங்கிரகம், “அத்தியாரோபத்தில் ஜகத்தானது சித்தாகிய பொன்னின் திரிபாம்; ‘சர்வம் ஆத்மா’ என்னும் சுருதிவாதத்தால். இது பழுதையிற் பாம்பு போன்றதான சித்தின் விவர்த்தமாமென்பது பொருந்தியதாம், ‘சொப்பன மாயாமயம்’ என்னும்

வாதத்தால். சுருதியினால் இது ஆகாயதலம் போன்றதாய்ச் சித்தின் விகற்பமாம்; 'இங்கு நாநா இல்லை' என்னும் வாதத்தால். கழுவப் பட்ட புத்தியுடையவனுக்கு நிர்விகற்பமாகிய பிரத்தியக்கான சித்து ஜனிக்கின்றது. 'வாக்கு மனதுக்கெட்டாதது' என்னும் வாதத்தால் என்னுமிதுவாம்.

சங்கை, "இவ்வெல்லாம் யாதொரு இவ்வாத்மா, இந்திரஜாலம் போல மாயாமயமாம், சொப்பனம்போல மித்தியாதரிசனமாம், இங்கு நாநா வெதுவுமில்லை" (பிருக-௪-௪-௧௯) "வாக்குகள் மன தோடு கூட அடையமுடியாது எதனின்று திரும்புகின்றனவோ" (தைத்-௨-௪-௧) என்னும் பரஸ்பர விரோதமுள்ள சுருதிகட்குத் தத்துவத்தினை யுணர்த்துந் தன்மைலக்ஷணமான பிரமாணத்துவம் எவ்வாறு மென்றுசங்கித்து அதிருதமான சத்திற்கே கற்பவர்புத்தியி லிறங்குதற்பொருட்டுப்பரிணாம முதலிய திருஷ்டிகள் காட்டப்பட் டிருக்கின்றன என்பதும் சுலோகத்தினால் சங்கிரகிக்கப்படுகின்ற து. அன்றியும், அதனை வாக்குமனதுகளிரண்டன் புறம்பே லோகா காரத்தினைப் பரமுணர்ந்தவன் அவிகற்பமாகக் கற்பிக்கின்றான். தைத்திரீயத்தில், 'பரமமான வியோம (ஆகாய) மாகிய குகையில் வைக்கப்பட்டுள்ள சத்தியமும் ஞானமும் அநந்தமுமான பிரஹ்ம த்தினை எவன் அறிகின்றானோ" (௨-௧-௧) என்று பிரஹ்மமும் அதனை மறைக்குந் தன்மையால் குகை யெனப்படும் பரமவியோம மும் உபந்நியசிக்கப்பட்டன. அங்குப் பிரஹ்மத்திற்குச் சத்திய ஞான ரூபத்துவத்தினையும் அநந்தத்துவத்தினையும் பிரகாசப் படுத்துவதான மந்திரவர்ணத்தினால் அதனின் வேறான வியோ மத்திற்கு அர்த்தத்தினால் அசத்திய அஞ்ஞான ரூபத்துவமும் சாந்தத்துவமும் (அந்தமுடைமையும்) காட்டப்பட்டதாம். அவ் வாறே, "அந்த இந்த ஆத்மாவினின்று ஆகாய முண் டாயிற்று" (தை-௨-௧-௧) என்னுமிடத்தில் ஆகாசாதிகளைச் சிருஷ்டிக்கும் ஆத்மாவிற்குப் பிரஹ்மத்தினையும் வியோமத்தி னையும் பராமரிசிப்பனவாகிய அந்த இந்த என்னும் சப்தங்களிரண் டினாலும் சாமானாதிகரணியத்தினால் அதன் சத்தியாசத்தியத்தோடு கூடிய தன்மை அறியப்படுகின்றது. அதுவும் சத்தியாம்சப்

பிரதானத்தன்மையால் ஈசனும்; அசத்தியாம்சப்பிரதானத்தன்மையால் ஜீவனுமாம். உலகத்திலும் மதியின்மை பூர்வகமான இரஜ்ஜுசர்ப்பாதி சிருஷ்டியும் மதிபூர்வகமான மனோராஜ்ய சிருஷ்டியும் அமிருதமா (பொய்யா) கவே காணப்படுகின்றன. அவ்விரண்டும் இங்குக் கிரமமாகக் காணப்படுகின்றன:- அது "ஆத்மாவினின்று ஆகாயமுண்டாயிற்று" என்பதும் "அவன் வெகு வாவேன்; நானாவாய்ப் பிறப்பேன் என்று விரும்பினான்" (தை.உ-சு-க) என்பதுமான இவைமுதலியனவாம். அது "பசு தமோலோகத்தினையும் பசுபதி அசலமான மனோராஜ்யத்தினையும்" என்று சொல்லப்பட்டுளது. அசலமான வென்னும் விசேஷணத்தினால் பசுபதியின் மனோராஜ்யத்திற்குக் கற்பிதக் தன்மையால் அமிருதத்துவமிருக்கினும் சொப்பன ராஜ்யம் போல பிரதீதிபுஷ்களமான அர்த்தக்கிரியையை யுண்டுபண்ணுந்தன்மை சொல்லப்பட்டதாம். எப்போது சாதிசய (குறைவுள்ள) ஐசுவரியமுடையவர்களான சௌபரி பரத்துவாஜர் கும்போற்பவர் (அகஸ்தியர்) முதலியோர்களால் கற்பிக்கப்பட்டனவாகிய அர்த்தங்கட்குப் புஷ்களமான அர்த்தக்கிரியையுண்டுபண்ணுந் தன்மை புராணாகமாதிகளில் காணப்படுகின்றதோ அப்போது நிரதிசய (குறைவின்றிய) ஐசுவரியமுடையவனான பசுபதியினாற் கற்பிக்கப்பட்டதில் அவ்விதத் தன்மை இருப்பதைப் பற்றி என்ன சொல்லவேண்டும்? இதனாலே, கர்மோபாசனா காண்டமிரண்டிலும் சாதனம் பயன் முதலியவற்றைப் பிரதிபாதிப்பதும் ஞானகாண்டத்தில் ஆத்மாவின் சர்வஞ்ஞத்துவமும் சர்வகர்த்திருத்துவமும் சர்வாத்மத்துவமும் சர்வபோக்திருத்துவமுமான இவை முதலியவற்றைப் பிரதிபாதிப்பதுமான வேதம் அஞ்ஞானமுள்ளவரையில் நிரங்குசமான பிராமாணியத்தினை அடைகின்றது. சககாரியாத்மாவின் அபேக்ஷையின்றியதான அமிருதமான அஞ்ஞானத்திற்காவது அதன் விசிஷ்டனான புருஷனுக்காவது சொப்பன மனோராஜ்யங்களின் சர்வகாரகத்தன்மையும் கண்டதேயாம். சத்தியமானதாகிய எதற்கு மில்லை. சத்தியமான பீஜசக்தி (வித்தினுள்ளிருக்கு முளைக்குமாற்றல்) வேறு பிரகிருதியி

ன்றி வடம் (ஆல்) ஆகுதற்குரியதாகாது சத்தியமான பொன்னும் வேறு நிமித்தமின்றி குண்டலமாதற் குரியதாகாது. சுருதியும், "இது முன் அசத்தாயிருந்தது" (தை-உ-எ-க) என்று அஞ்ஞான மாத்திரத்திற்கும், "அவன் விரும்பினன்" (தை-உ-சு-க) என்னு மிடத்து அவ்வஞ்ஞான விசிஷ்டனை ஆநந்தமயனுக்கும் ஒன் றற்கே சர்வகாரகத்தன்மையினைக் காட்டுகின்றது. சங்கை, இவ்வி தத்தால் பசுபதியிருவருக்கும இங்கு விசிஷ்டத்தன்மை யின்மை வாஸ்தவமாமென்றுசங்கித்து, அவ்விருவருக்கும் தம்மால் படைக் கப்பட்ட ஜகத்தோடுகூட பரமாகிய சத்தியத்தில் அத்தியாசத் தினையும் அம்மூன்றிலும் அதிஷ்டான சத்துவத்தின் (இருப்பின்) அத்தியாசத்தினையும் சுருதியானது 'யாதொரு சத்தியமும் அநிருத முமான இது சத்தியமாயிற்று' என்று (சாந்-எ-உ-க) கூறுகின் றது. அதன் பின்னும் சத்தியத்தில் அத்தியசிக்கப்பட்டனவாயிருத் தலின் சத்தியத்தின் விவர்த்தமான மூன்றும், அஞ்ஞானத்தினை மூலமாகவுடையனவா யிருத்தலின், ஸ்வரூபமாக அசத்தான அஞ் ஞானமாகிய நான்காவதன் விகற்பமாத்திரமாய்ச் சப்தத்தினு லாகி யதாம் அது என்று கூறுகின்றது. சத்தியத்தின் விவர்த்தமான மூன்றும் விகற்பமாம்; அது அசத்தாதலால்; மூன்றும் விவர்த்தம் மூன்றும் விகற்பம் என்று பொருத்தத்தக்கதாம். ஆகையினுலே மூன்றற்கும் காரணமான அசத்தான சுகிருத மென்னும் வேறு பெயருடையதன் இரஸாவசேஷமாகிய (ஆநந்தம் மிஞ்சுதலான) போதம் காணப்படுகின்றது; "அந்த சுகிருதம் எதுவோ அது ரஸமாம்" என்பதனுல் அந்தப் போதமாகிய இரஸாவசேஷமும் அசம்பிரஞ்ஞாதத்தில் அநுபவிக்கப்படுகின்றது. ஆதலால் சமா தியினின்று விழித்த யோகி விசுவத்தினைப் பிரத்தியகபின்ன இர ஸாகாரமாகக் காண்கின்றுன். அவ்விரண்டும் "எப்போது அடை கிறுனே" என்பதும், "யான் அந்நம்" என்பதுமான சுருதியி னுல் காட்டப்படுகின்றது. அவ்விது அசத்து பாதத்தால் என் றல் முதலியவற்றுற் சொல்லப்பட்டுளது. இதனுற்றுன் விஷ்ணு புராணத்தில், "விவேகிகள் இந்த ஜகத்தினை ஞானஸ்வரூப

மென்று கூறுவர். குதிருஷ்டிகளான பிறர் பிரமித்தவர்களாய் அர்த்தஸ்வரூபமாகக் காண்பர்" என்று ஜகத்திற்கு ஞானஸ்வரூபத்துவம் ஸ்மரிக்கப்படுகின்றது. "சர்வம் பிரஹ்மம்" என்னும் சாமானுதிகரணியமான தன்மாத்திரார்த்தமும் சத் விநேய(சிஷ்யர்) பேதத்தினலாவது அடைதலின் கிரமபேதத்தினலாவது அபேதத்தில் பாதத்தில் அல்லது அவ்யதிரேகத்தில் சொல்லப்படுகின்றது. அவ்வாறே:—தார்க்கிகன் காரியகாரண மிரண்டற்கும் கோ குதிரைகட்குப்போல பேதத்தினை விரும்புகின்றான். அதனை பாதித்தற் பொருட்டாம் முதற் பக்ஷம் ஆரம்பவாத நிராகரிப்பாம். காரணைக்கிய சித்திக்குபயோகமுள்ள ஆத்மாநாத்மாக்களின் இதரேதரா (அந்நியோந்நியா) த்தியாசத்தினல் அநாத்மாவினைப்போல ஆத்மாவுக்கு அத்தியஸத்துவவிசேஷ மின்மையால் அநிருதமா மென்பதனல் ஜகத் பிரமத்தின் அதிஷ்டானம் சூநியமாகவே மிஞ்சுகின்றது என்பது மாத்தியமிகனது (சூநியவாதியின்) பக்ஷத்தினை நிராகரித்தற் பொருட்டாம். இரண்டாவது பக்ஷம் காரண சத்தையினைச் சாதிப்பதான சூநியவாத நிராகரிப்பாம். அதிஷ்டானமின்றிய பிரமம் சம்பவியாமையானும் எல்லையின்றியதாம் பாதம் பொருந்தாமையானும் அவ்விரண்டன் ஆலம்பனம் ஒன்று சத்தியமாம் என்பது எது இரஜதமோ அது சுத்தியே எது பாம்போ அது இரஜ்ஜுவே என்பது போல எது விசுவமோ அது பிரஹ்மமே என்பது பாதத்தில் சாமானுதிகரணியமாம். சாங்கியர் சமசத்தையுடைய காரிய காரண மிரண்டிற்கும் அபேத மிச்சிக்கின்றனர். அதனை நிராகரித்தற் பொருட்டு அவ்வியதிரேக பக்ஷமான மூன்றாவதாம். பரிணாம வாதத்தினை நிராகரித்தற் பொருட்டாம். எது காரணமோ அதுவே காரியம். காரணத்தின் வேறுபட்டதான காரியமில்லை. ஆகாயத்தின் வேறாகத் தலம் (கவிழ்த்த பெரிய நீலரத்தினக்கொப்பரை வடிவத் தன்மை) இல்லாததுபோல, அல்லது மந்தாதிகாரிக்கு ஐகாத்மியத்தில் புத்தி பதிதற்பொருட்டுப் பரிணாமவாதத்தினை ஆசிரயித்துச் சர்வம் பிரஹ்ம மென்னும் சாமானுதிகரணியம் அபேதத்திலும்,

அதே பக்குவனுக்குப்பிரபஞ்சமித்தியாத்துவத்தைப் போதிக்கும் பொருட்டு விவர்த்தவாதத்தினை ஆசிரயித்து அதுவே பாதத்திலும் இஷ்டமாம். அதே பக்குவதரனுக்குப் பிரபஞ்சத்தின் அத்தியந்தாபாவத்தினைப் போதிக்கும் பொருட்டு விகற்பவாதத்தினை ஆசிரயித்து அவ்யதிரேகத்தில் அது இஷ்டமாம்; விகற்பத்திற்கும் நீக்கமிருத்தலால் அவிகற்பத்தில் பரம் விளங்குகின்றது. அது சம்க்ஷேபசாரீரகத்தில் பரிணுமாதிகளின் உபபாதன முடிவில் "அத இனி என்னும் சொல்லாற் சூசிக்கப்பட்டுள்ள முமுக்ஷு நிச்சயமாக சொல்லிய கிரமத்தால் இந்தச் சிருஷ்டி பேதத்தினைத் தொலைக்கின்ருன். அதன்பின் கரைந்த சர்வ புத்தியினையுடையவனுய்த் தனது மகிமையில் நிலைக்கின்ருன்." என்று சொல்லப்பட்டிருக்கின்றது. (ருo)

त्रयीविप्रतिपन्नस्य स्थाणुत्वं यास्यते यदा ।
परात्मन्यचला बुद्धिस्तदासौ योगमाप्नुयात् ॥ ५१ ॥

[ருக] (அ-கை) இவ்வாறு சிரவணுதிகளால் நசித்த வஞ்ஞானமுடையவனுக்கு, அநுஷ்டிக்கத்தக்க மகாயோகத்தினைக் கூறுகின்ருர்:—

(சு-ம்) மூன்றனை விசேஷமாக அடைந்தவனுடைய பரமாத்மாவினிடத்து அசலமான புத்தி எப்போது ஸ்தாணுத் தன்மையடைகின்றதோ, அப்போது இவன் யோகத்தினை அடைவன் (எ-)

"சுபேச்சை யெனப்படும் ஞானபூமி முதலாவதென்று சொல்லப்படுகின்றது. விசாரணை இரண்டாவதாம். தநுமானஸா மூன்ருவதாம். சத்துவாபத்தி நான்காவதாம். அதன் பின் அசம்சக்தி யென்பது ஐந்தாவதாம். பதார்த்தாபாவினீ ஆருவதாம். துரியகா வென்பது ஏழாவதென்று கருதப்படுகின்றது" என்று வாசிஷ்டத்தில் சப்தஞானபூமிகள் ஸ்மரிக்கப்படுகின்றன. அவற்றுள், முதலாவது சாதன சதுஷ்டய சம்பத்தியாம், சிரவண மனன மென்னும் வடிவினது இரண்டாவதாம். நிதித்தியாசனம் மூன்ருவதாம்.

இம்மூன்றால் விதிக்கப்பட்ட விஷயம் எதுவோ அது மூன்று என்னும் சொல்லால் சொல்லப்படுகின்றது. அந்த மூன்றையும் விசேஷமாக அடைந்தவனான பூமி மூன்றையும் ஜயித்தவனுக்குச் சத்துவாபத்தி யெனப்படும் நான்காவது பூமி நிரோத சமாதிக்கு முன்னமே பொருந்துகின்றது. அதனிடையில் பஞ்ச சம்பிரஞ்ஞாதங்களின் பயன் வடிவங்களான சித்திகளில் பற்றின்றியவனும் வசிகார சம்ஞையெனப்படும் வைராக்கியத்தோடு பொருந்தியவனுமாகிய அவனுக்கு அசம்சக்தி யென்னும் அசம்பிரஞ்ஞாத யோக வடிவினதாகிய ஐந்தாவது யோகபூமி எதிர்முகத்தின தாகின்றது. அந்த இது புத்திக்கு விஷயத்தினைக் கொள்ளாமை வடிவ ஸ்தைரியம் பரமாத்மாவினிடத்தில் ஸ்தாணுத்துவம் எனப்படுகின்றது. எவன் இந்தப் பூமியினை எப்போது ஸ்வயமே விடுகிறதில்லையோ, பிறர் முயற்சியினாலேயே எழு (விழிக்) கின்றானோ, அப்போது பதார்த்தாபாவினீ யென்னும் ஆறாவது பூமியிலேறியவனாகின்றான் என்று அறியத்தக்கதாம். எப்போது தன்னாலாவது பிறனாலாவது எழுகிற (விருத்தியர்த்தத்தில் நிலைத்தவனாகிற) தில்லையோ, அப்போது எழாவது பூமியினை யடைந்தவனாகின்றான். அந்த இது "பரமாத்மாவினிடத்து அசலமான புத்தி" என்று சொல்லப்படுகின்றது. எப்போது ஐந்து இத்தன்மைப நிலையுடையவனாகின்றானோ, அப்போது ஜீவப்பிரஹ்மாபேதமான யோகத்தினைப் பெறுகின்றான்; வேறுவிதத்தினா லில்லை என்றதாம். (ருக)

मानसानखिलान्कामान्यदा धीमांस्त्यजेत्प्रिय ।
स्वात्मनि स्वेन संतुष्टः स्थिरबुद्धिस्तदोच्यते ॥ ५२ ॥

[ருஉ] (சு-ம்) பிரியனே! மானதங்களான எல்லாக்காமங்களையும் எப்போது புத்திமான் விடுவானோ, ஸ்வாத்மாவில் (அவிகற்பத்தில்) தன்னால் (அகண்டாநந்தாநுபவத்தினால்) சந்துஷ்ட (திருப்த) னாகின்றானோ, அப்போது ஸ்திரபுத்தி யென்று சொல்லப் படுகின்றான். (எ-று)

எல்லாக்காமங்களாவன:— தனது பிரதீதிக்கு மாத்திரம் விஷயமாவனவாய் இருதயாகாசத் திருப்பனவும், சௌபரி முதலியோருக்குப் போலக் காயவியூக முதலியனவாகிய வியாவகாரிகங்களும், ரம்பையின் இலாப முதலியனவாகிய திவ்யங்களுமாம். (ருஉ)

वितृष्णः सर्वसौख्येषु नोद्विग्नो दुःखसंगमे ।
गतसाध्वसरुड्रागः स्थिरबुद्धिस्तदोच्यते ॥ ५३ ॥

[ருரு] (அ-கை) இனி எழுந்தவனை (சமாதியினின்று விழித்த) ஸ்திரபுத்தியின் லக்ஷணத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) எப்போது சர்வ சௌக்கியங்களிலும் ஆசையற்றவனாய், துக்கம் நேர்ந்தபோது வியாகுலப்படுகிற தில்லையோ, பய கோப ராகங்களொழிந்தவ னாகின்றானோ, அப்போது ஸ்திர புத்தியெனப்படுகின்றான். (எ-று)

எழுந்தபோதும் பேததரிசன மின்மையால் பயமில்லாதவனும், சர்வ பூதங்கட்கும் அபயங்கொடுக்குந்தன்மை யிருத்தலால் கோபநீங்கியவனும், எல்லாக் காமங்களையும் பெற்றவனாயிருத்தலால் இராகமொழிந்தவனுமாவன். (ருங)

यथाऽयं कमठोऽङ्गानि संकोचयति सर्वतः ।
विषयेभ्यस्तथा खानि संकर्षेद्योगतत्परः ॥ ५४ ॥

[ருச] (சு-ம்) யோகதற்பரன் (யோகி) எப்படி ஆமை அவயவங்களை சுவேச்சையாக முற்றும் சுருக்கிக் கொள்ளுகின்றதோ அதுபோல விஷயங்களினின்று (அநாயாஸமாக) வசப்பட்டுள்ள இந்திரியங்களை இழுத்துக்கொள்ளுகின்றான் (அவன் ஸ்திர புத்தியெனப்படுகின்றான் என்று முந்தியதனோடு அன்வயமாம்.) எ-று ()

व्यावर्तन्तेऽस्य विषयास्त्यक्ताहारस्य वर्ष्मिणः ।
विना रागं च रागोऽपि दृष्ट्वा ब्रह्म विनश्यति ॥ ५५ ॥

[ருரு] (அ-கை) இந்திரிய ஜயோபாயத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) தேகாபிமானமுடையவனுயினும் ஆகாரம் விட்டவனுகிய இவனுடைய விஷயங்கள் தாமே (இயல்பாக) நீங்குகின்றன. ஆனல் இராகமும் உம்மையால் துவேஷமுமின்றி (சுகத்தினைத்தரும்விஷயத்தில்) இராகமும் (துக்கத்தினைத்தருவதான விஷயத்தில்) துவேஷமும் (சூக்ஷ்ம வடிவாக உள்ளத்திருப்பனவாய் நீங்குகிறதில்லை.) இரண்டும் பிரஹ்மத்தினைக் கண்டு நீங்குகின்றன. (எ-று)

அவ்விரண்டும் பிரஹ்மதரிசிக்கு நீங்குகின்றன வித்தையின் மாகாத்மியத்தினு லென்பது பொருள். (ருரு)

विपश्चिद्यतते भूप स्थितिमास्थाय योगिनः ।
मन्थयित्वेन्द्रियाण्यस्य हरन्ति बलतो मनः ॥ ५६ ॥

[ருசு] (சு-ம்) (எதனு லிவ்வாறிருக்கின்றதோ, அதனுல் பிரஹ்மதரிசனத்தினுல் இராகம் நீங்கினும்) ஆத்ம தரிசியானவன், அரசனே! யோகியின் ஸ்திதியினை (காலப்படி சமாதியநுஷ்டானத்தினை) அவலம்பித்து முயலுகின்றுன் (ஆதலால் முயலவேவேண்டுமென்பது பொருளாம்.) (எ-று)

(அ-கை) விபக்ஷத்தில் பாதத்தினைக் கூறுகின்றுர்:—

(சு-ம்) (ஆத்மதரிசியாயினும் யோகமில்லாத) இவனுடைய இந்திரியங் (களாகிய கர்த்தாக்)கள் மன (மனமாகிய காமத்தினைக் கடைந்து (வியாகுலப்படுத்தி) வலிந்து (தமது சாமர்த்தியத்தால் ஞான நிஷ்டையினின்று நழுவச்செய்து) ஹரிக்கின்றன (விஷய நோக்க முள்ளதாக்கு கின்றன.) (ஆதலால் ஞான சம்ரக்ஷணத்தின் பொருட்டுச் சமாதி யப்பியாசத்தினை விடலாகாதென்பது பொருள்.) (ருசு)

युक्तस्तानि वशे कृत्वा सर्वदा मत्परो भवेत् ।
संयतानीद्रियाणीह यस्यासौ कृतधीर्मतः ॥ ५७ ॥

[ருஎ] (அ-கை) இதனையே கூறுகின்றுர்:—

(சு-ம்) (அடக்கப்பட்டிருப்பனவாகிய இந்திரியங்களை வசத்திலாக்கி எப்போதும் எனது பரனுகக்கடவன். இங்கு எவனுடைய

இந்திரியங்கள் அடக்கப்பட்டனவாகின்றனவோ, அவன் ஸ்திருத புத்தியுடையவன்) புத்தியினாலாக வேண்டியதைச் செய்தவன்) என்று மதிக்கப்பட்டவனாவன். (எ-று)

மனதொருக்கியவனும் விசேஷமாக இந்திரிய ஜய முடையவனுமான தியானபரன் எவனோ அவனே ஸ்திருத புத்தியினன்; மற்றவ னல்லனென்பது பொருள். (ருஎ)

चिन्तयानस्य विषयान्संगस्तेषूपजायते ।
कामः संजायते तस्मात्ततः क्रोधोऽभिवर्धते ॥ ५८ ॥

क्रोधादज्ञानसंभूतिर्विभ्रमस्तु ततः स्मृतेः ।
भ्रंशात्स्मृतेर्मतेर्ध्वंसस्तद्ध्वंसात्सोऽपि नश्यति ॥ ५९॥

[ருஅ-ருகூ] (அ-கை) இந்திரியஜயமில்லாதவனான ஆத்ம தரிசியின் விநாசக்கிரமத்தினை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார்:-

(சு-ம்) விஷயங்களைச் சிந்திக்கின்றவனுக்கு அவற்றில் சங்கம் (பற்று) உண்டாகின்றது. அதனின்றும் காமம் பிறக்கின்றது. அதனால் குரோதம் வளர்கின்றது. குரோதத்தினால் அஞ்ஞானத்தினடைவாம். அதனால் புத்தி மயக்கமாம். அதனால் ஸ்மிருதியினிழப்புண்டாம். நினைவிழப்பால் (மறதியால்) புத்தியின் நாசமுண்டாகின்றது. அதன் நாசத்தால் அவனும் நசிக்கின்றான். (எ-று)

ஆத்மதரிசியாயினும், இந்திரியத்தினாற் கண்ட விஷயத்தினைச் சிந்தித்து, அதில் இஃது எனக்கு இஷ்டம் என்று சங்கத்தினைச் செய்கின்றான். அதனால் இஃது எனக்குண்டாகுக வென்று அதனை இச்சிக்கின்றான். அதனைச் சம்பாதிக்கதலில் பிரவிருத்திக்கவனுக்கு விக்கினமுண்டாயின் கோபிக்கின்றான். கோபத்தினால் நன்றாய் மோகிக்கின்றான். மூட(அறிவிழந்தவ) னுக்குச் செய்ய வேண்டிய அர்த்தத்திலும் புத்தி விபரீதப்படுகின்றது. அதனால் அவசியம் அநுஷ்டிக்கவேண்டியதான அர்த்தத்தினையும் மறக்கின்

ருன். அதனுல் முன்னமே சாதிக்கப்பட்டுள்ள பிரஞ்ஞை கெடு கின்றது. அது நஷ்டமானபோது இவனும் நசிக்கின்ருன் (சம்சாரத்தினை யடைகின்ருன்) என்பது பொருள். (ரு-அ-ருசு)

विना द्वेषं च रागं च गोचरान्यस्तु खैश्चरेत् ।
स्वाधीनहृदयो वश्यैः संतोषं स समृच्छति ॥ ६० ॥

[சூ0] (அ-கை) இவ்வாறு இந்திரிய ஜயமில்லாதவனும் மனோ ஜய மில்லாதவனுமான ஆத்மதரிசியின் நாசம் சொல்லப்பட்டது. இந்திரிய ஜயமுடையவனும் மனோஜயமுடையவனும் எவனோ, அவன் வசப்பட்டுள்ள இந்திரியங்களால் விஷயங்களை யநுபவிக்கினும் வசீகரிக்கப்பட்ட மனதுடையவனாய் அநேக ராகத்துவேஷமின்றிய தன்மையால் சங்க முதலியவற்றைச் செய்யான். மற்ருே, போதுமென்னும் புத்தியாகிய சந்தோஷத்தினையே செவ்வையாய்ப் பெறுகின்ரு னென்று கூறுகின்ருர்:—

(சூ-ம்) இராகமும் துவேஷமுமின்றிச் சுவாதீன சித்தனாய் வசப்பட்டுள்ளனவாகிய இந்திரியங்களால் விஷயங்களை எவன் அநுபவிக்கின்ருனோ, அவன் சந்தோஷத்தினை (திருப்தியை)ச் செவ்வையாய்ப் பெறுகின்ருன், (எ-று) (சூ0)

त्रिविधस्यापि दुःखस्य संतोषे क्षेपणं भवेत् ।
प्रज्ञया संस्थितश्चायं प्रसन्नहृदयो भवेत् ॥ ६१ ॥

[சுக] (அ-கை) சந்தோஷம் சாதகனுக்கும் இஷ்டமா மென்று கூறுகின்ருர்.—

(சூ-ம்) சந்தோஷத்தில் மூவகையான துக்கத்தின் நாசமு முண்டாகின்றது. பிரஞ்ஞையினுல் செவ்வையாய் நிலைத்துள்ள (புத்தியோகமுடைய) இவ (சாதக) னும் பிரசன்ன ஹிருதயனுகின் ருன். (எ-று)

மூவகைத் துக்கங்களாவன:-ஆதிகளும் வியாதிகளும் ஆத்யாத்மிகதுக்கமாம். சீதவாதங்களா லுண்டாவது ஆதிபௌதிகமாம். பூதப்பிரேதாதிகளா லுண்டாவது ஆதிதைவிகமாம். (சுக)

विना प्रसादं न मतिर्विना मत्या न भावना ।
विना तां न शमो भूप विना तेन कुतः सुखम् ॥ ६२ ॥

[சுஉ] (அ-கை) சந்தோஷத்தினல் பிரசன்ன ஹிருதயனுய்க் கூறிய விதமான கர்மயோகத்தினை அநுஷ்டிப்பவனுக்கு முற்கூறப் பட்ட பூமிலாபமுண்டாகின்றதென்பதனை எதிர்மறைமுகத்தாற் கூறுகின்றார்:—

(சு-ம்) பிரசாதமி (மனத்தெளிவி) ன்றி மதியில்லை. மதியின் றிப் பாவனையில்லை. அதனையின்றிச் சமமில்லை. அதனையின்றிச் சுகம் எவ்வாறுண்டாம்? (எ-று)

பிரசாதத்திற்கு ஆத்மஞான விருப்பமாகிய மதியும், அதனல் அத்வைதபாவனையும், அதனல் உள்ளிந்திரிய வடக்கமாகிய சமமும், அதனல் செவ்வையா யறியப்படும் சுகமுமுண்டாம். அந்தச் சுகம் நவம் (புதியது), பக்குவம் (பக்குவப்பட்டது), பக்குவதாம், பக்கு வதமம் என்று நால்வகையினதாம். அச்சுக மடைபவருள் முதலா மவன் (நவசுகம் பெறுபவன்) சமமுடைய வித்துவான்; (பிரஹ்ம ஞானி) இரண்டாமவன் வித்துவத்வரன் (வித்வானைவிட (மேலா வன்), மூன்றுமவன் வித்துவத்வரீயான் (அவனின் மேலானவன்) நான்காமவன் வித்துவத்வரிஷ்டன் (வித்வான்க ளெல்லோரினும் மேலானவன்). (சுஉ)

इन्द्रियाश्वान्विचरतो विषयाननुवर्तते ।
यन्मनस्तन्मतिं हन्यादप्सु नावं मरुद्यथा ॥ ६३ ॥

[சுங] (அ-கை) இந்திரியங்கட்கு மனதைத்தோஷப்படுத்துந் தன்மையால் ஞானத்தினைக் கெடுக்குந்தன்மை சம்பாதிக்கப்பட்ட தனை முடிக்கின்றார்:—

(சு-ம்) விஷயங்களிற் செல்லும் எந்த இந்திரியங்களான குதிரைகளை மனது பின்பற்றுகின்றதோ, அவ்விந்திரியம் (இச்சாதக னது) மதியினை (உண்டாயிருக்கும் ஞானத்தினையும்) வாயு ஜலத் தில் கப்பலை யழிப்பதுபோல அழிக்கும். (ஆதலால் யோகியினல் சர்வேந்திரிய ஜயம் செய்யவேண்டியதாம்.) (எ-று) (சுங)

या रात्रिः सर्वजन्तूनां तस्यां निद्राति नैव सः ।
न स्वपन्तीह ते यत्र सा रात्रिस्तस्य भूमिप ॥ ६४ ॥

[கூச] (அ-கை) காக்கை ஆந்தைகளின் இரவினைப் போன்ற ஞானி யஞ்ஞானிகளின் அநுபவ வைஷம்மியத்தினை (வேற்றுமை யினை)க் கூறுகின்றார்:—

(க-ம்) சர்வஜந்துக்களுக்கும் எது பிரத்தியகாத்மவஸ்து (மூடர்கள் உறங்குவதால்) இரவோ, அதில் அவன் (ஞானி) உறங்குகிற தில்லை (விழித்திருப்பன்). எதில் (வெளிவிஷயத்தில்) அவர் (மூடர்)கள் உறங்குகிறதில்லையோ (விழித்திருக்கின்றனரோ) அது அரசனே! அவனு (ஞானி)க்கு இரவாம்; (அதில் அவன் விழிப் பின்றித் தூங்குதலால்). (எ-று)

சம்சாரத்தின் அத்தியந்தாபாவபரியந்தம் இந்திரிய ஜயம் அப்பியசிக்கத்தக்கதாம் என்பது கருத்து. (கூச)

सरितां पतिमायान्ति वनानि सर्वतो यथा ।
आयान्ति यं तथा कामाः स नाशान्ति कचिल्लभेत् ॥ ३५ ॥

[கூரு] (அ-கை) அபாவத்தில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின் றார்:—

(க-ம்) எப்படி ஜலங்களெல்லாம் எப்புறத்தானும் சமுத்திரத் தினை யடைகின்றனவோ, அப்படிக்காமங்களெல்லாம் (சத்திய காமனும் சத்திய சங்கற்பனுமான) எவனை அடைகின்றனவோ (சம்பிரஞ்ஞாதத்தில் அடையப்பட்டனவாகியே எவ் வசம்பிரஞ்ஞா தத்தில் சமுத்திரத்தில் மற்ற ஜலங்களைப்போல ஓடுகின்ற னவோ), அவன் ஒருகாலத்தும் சாந்தியின்மையை யடை யான். (எ-று) (கூரு)

अतस्तानीह संरुध्य सर्वतः खानि मानवः ।
स्वस्वार्थेभ्यः प्रधावन्ति बुद्धिरस्य स्थिरा तदा ॥ ६६ ॥

[கூசா] (அ-கை) சாதனங்களின் சர்வ சொத்தினையும் முடிக் கின்றார்:—

(சு-ம்) (எதனால் இந்திரிய ஜயமுள்ளவன் பொருட்டாமோ முக்கியமான கைவல்யம்) அதனால் இங்கு மானவன் தத்தம் விஷயங்களை நோக்கி விரைந்தொழுகுவன வாகிய அவ்விந்திரியங்களை எல்லாவிதத்தாலும் செவ்வையாயடக்கி எப்போதிருக்கின்றானோ, அப்போது இவனுடைய புத்தி ஸ்திரமுடைய தாகின்றது. (எ-று)

ममताहंकृती त्यक्त्वा सर्वान्कामांश्च यस्त्यजेत् ।
नित्यं ज्ञानरतो भूयाज्ज्ञानान्मुक्तिं स यास्यति ॥ ६७ ॥

[சுஎ] (அ-கை) முழு அத்தியாயத்தின் அர்த்தத்தினை முடிக்கின்றார் :—

(சு-ம்) எவன் மமதையினையும் அகங்கரிப்பினையும் விட்டுச் சர்வ காமங்களையும் விடுவனோ, நித்தியமும் ஞானரத (எப்போதும் நிர்பீஜ சமாதி பரத்தன்மையால் ஞப்திமாத்திர ஸ்வரூபபிரஹ்ம நிஷ்ட)னுவனோ, அவன் (அத்தன்மைய ஜீவன்முக்தன்) ஞானத்தினால் விதேக முக்தியினை யடைவன். ("விமுக்தனுயின்விடுபடுகின்றான்" என்னும் (கடம் ரு-க) சுருதியினால்). (எ-று)

இதனால் முக்தன் பிராரப்த கர்மத்தால் பந்தமின்றியவனுய்ச் சிறிதுகாலம் நிற்கின்றானென்பது காட்டப்பட்டது. எனதெனுந் தன்மைக்கு விஷயமாகும் ஸ்திரீ முதலிய பாகியவஸ்து மாத்திரத்தின் தியாகம் மமதையினை விடுதலாம். அதன் விகாரங்களாகிய தம்பம் தர்ப்பம் முதலியவற்றின் தியாகம் அகங்கரிப்பினை விடுதலாம். 'காமங்களை விடுவன்' என்பதனால் வித்தையின் பயன்வடிவதிவ் வியாதிவ்விய விஷயத்தியாகம் சொல்லப்பட்டதாம். (சுஎ)

एतां ब्रह्मधियं भूप यो विजानाति दैवतः ।
तुर्यामवस्थां प्राप्यापि शीलं मुक्तिं स ऋच्छति ॥ ६८ ॥

[சுஅ] (சு-ம்) அரசனே! இந்த (என்னாற் சொல்லப்பட்ட) பிரஹ்மவித்தையினைத் தவ(ஈசுவரானுக்கிரக)த்தால் யதார்த்தமாக அறிகின்றானோ, துரியாவஸ்தையினை (கடைசி வயதினை) அடைந்தும் ["எவர்கள் ஒருவனால்" (இவ்வத்தியாயம் கசு-வது

சுலோகம்) என்றல் முதலியவற்ருல் சூத்திரகிரந்தத்திஞற் சொல்லப்பட்ட] சித்தியையும் முக்தியினை (கைவல்யத்தினை) யும் அடைகின்றான். (சு-அ)

॥ ओंतत्सदिति श्रीमद्गणेशगीतासूपनिषदर्थगर्भासु योगामृतार्थशास्त्रे श्रीमन्महागणेशपु० उत्तरखण्डे बालचरिते गजाननवरेण्यसं०सांख्यसारार्थयोगो नाम प्रथमोऽध्यायः ॥

முதல் அத்தியாயம்

முடிந்தது.



## இரண்டாம் அத்தியாயம்.



वरेण्य उवाच ॥

ज्ञाननिष्ठा कर्मनिष्ठा द्वयं प्रोक्तं त्वया विभो ।
अवधार्य वदैकं मे निःश्रेयसकरं नु किम् ॥ १ ॥

[சுக] (அ-கை) கணேசகீதையின் இருதயத்தினைக் கணேசன் அறிவான்; வேறு புருஷன் அறியான் என்றாலும் அதன் சூத்திரமும் விருத்தியும் சொல்லப்பட்டன. ஒருவாறு அதன் எஞ்சியவார்த்திகம் விவரிக்கப்படுகின்றது. சங்கை இங்கு விருத்தியில் சக்திசூரியவிஷ்ணு சதாசிவகணேச சப்தங்களால் கிரமமாக அந்நம் பிராணன் மனம் விஞ்ஞானம் ஆநந்த மெனப்படும் ஐந்து பிரஹ்மங்களை யுபந்யசித்து, "பிரியனே! யானே மகாவிஷ்ணு; யானே சதாசிவன்; யானே மகாசக்தி; யானே சூரியன்." என்று ஐந்தினுக்கும் துரியாதிதமான ஆநந்தமாத்திர ஸ்வரூபத்துவம் சொல்லப்பட்டது. அவ்வாறு சூத்திரத்திலோ "சத்தியலோகத்தின் யோக மெதுவோ அது முக்கிய யோகமாக என்னல் கருதப்பட்டதன்று. சைவமாகிய பதத்தின் யோகமும் வைஷ்ணவமாகிய பதத்தின்

யோகமும் யோக மன்று. அரசனே! சூரியத்தன்மையும் யோக மன்று.'' என்று முதல் நான்கிற்கும் சிரேஷ்டத்துவம் நிஷேதிக்கப்பட்டது. சத்தியலோகமொன்றற்கே அங்கியமெனப்படும் விராட் ரூபமிராது. பலத்திற்குத் துச்சத்துவமும் ஆநர்த்தைகாஸத்தன்மையால் பரமார்த்த சத்தியத்துவமுமான பரஸ்பர விருத்தம் சம்பவிக்கின்றது. ஆதலால் முன்னுக்கு பின் விரோதமிருத்தலால் இவ்வார்த்திகம் வியாக்கியானஞ் செய்யத்தக்க தன்றுமெனின், இது தோஷமாகாது; மேகம் போலும் ஆலங்கட்டி போலும் ஸ்வாபாவிகமும் (இயற்கையும்) ஆகந்துகமு (செயற்கையு) மான திரவத்துவமும் (நெகிழ்ச்சியும்) கனத்துவமும் (இறுகலும்) போல ஒன்றற்கே வித்தையவித்தையவஸ்தாபேதத்தால் இருவடிவாதல் பொருந்துதலால் அவ்வாறே அங்கமுதலிய நான்கினையும் தனித்தனியாகிய தாய் உபாசிப்பவர்கள் அந்தகஜ நியாயத்தால் (யானை கண்ட குருடர்போல) ஒவ்வொன்றனை விட்டு முழுவதுமான பிரஹ்மமென்று தியானிப்பவர்களாய் முழுப்புருஷார்த்தத்தினையும் அடைபவராகிறதில்லை யென்று அவர்களது சிரேஷ்டத்தன்மை, 'சத்தியலோகத்தின் யோகம் எதுவோ' என்பதனல் நிஷேதிக்கப்பட்டது.

அவ்வாறே சமுச்சயமான பிரஹ்மசூத்திர இரண்டாவது பாதத்தின் முடிவில் பிராதேசமாத்திரனுன் வைசுவானரன் பரமாத்மாவென்பதுபெறப்பட்டது. அங்கு அதிமாத்திர (அளவுகடந்தவ)னுன பரமாத்மாவுக்குப் பிராதேசமாத்திரத்துவம் (ஓரிடவளவாதற்றன்மை) எவ்வாறு மென்னும் ஆசங்கையில் "*சம்பத்தியினுலென்று ஜைமினி கூறுகின்றார்" என்னும் (க.உ-௩க) பிரஹ்ம சூத்திரத்தால் உச்சிமுதல் மோவாய்க்கட்டை பரியந்தப் பிரதேசமான பிராதேசமாத்திரத்தில் மூவுலகவடிவ வைசுவானரனுக்குச் சம்பாதித் துபாஸிக்கப்படுந்தன்மையிருத்தலால் அவனுக்கும் பிராதேசமாத்திரத்துவமாம். இவ்வுபாசனைக்குத் திருஷ்டமான பலம்

* உச்சி முதல் மோவாய்க்கட்டை பரியந்தமான தேகாவயவங்களிற் சம்பாதித்த பிராதேசமாத்திர சம்பத்தியினை சுருதிகாட்டுகின்றது. ஆதலால் சம்பத்தியினுலாகியதாம் பிராதேசமாத்திரத்துவம் என்று ஜைமினி யாசாரியர் கூறுகின்றார் என்பது சூத்திரார்த்தமாம். (பிராதேசம்=சாண்)

† ஜைமினி 'நிர்விகற்பாமனனத்தால் பாவம் கொள்ளுகிறார்' என்னும் (௪-௪-௧௧) சூத்திரத்தால் காயவியூக முதலிய ஐசுவரியம் சொல்லப்பட்டதாம். தேகாந்தத்திலும் அர்ச்சிராதிமார்க்கத்தால் உச்சிநாடியால் காரிய பிரஹ்மலோகப் பிராப்தியாம். அதனையே நித்தியமான பரப்பிரஹ்மமென்று மோகத்தினால் சிலர் மதிக்கின்றனர். அது "‡ ஜைமினி முக்கியத்தன்மையால் பரம் என்கின்றனர்" (௪-௩-௧௨) என்று சூத்திரிக்கப்பட்டுள்ளது. அவ்வாறு பிராதேசமாத்திரமான இருதயக்கண்ணாடியில் வைசுவானரனது முக்காலத்தைய சகலவஸ்து வடிவத்தன்மை மிக வெளிப்படையாகக் கிரகிக்கப்படுகின்றது. "இவ்வெல்லாம் யாதொரு இவ்வாத்மாவாம் என்பதனால் இங்கு இதற்கு எது இருக்கிறதோ எது இல்லையோ அவ்வெல்லாம் இங்கு சென்றடைகின்றது." (பிருக ௨-௪-௫) என்னும் சுருதியினால் §' அபிவியக்தியி (வெளிப்படுதலி) னால் என்று ஆச்மரத்தியர் கூறுகின்றனர்' என்னும் (௧-௨-௨௯) சூத்திரத்தினால் பரமேசுவரனுக்கு உபாதியினாலாகிய பிராதேசமாத்திரத்துவம் சொல்லப்பட்டுளது. இதற்கும் திருஷ்ட பலம் சர்வஞ்ஞத்துவமாம்; அதிருஷ்ட பலம் அம்மூர்த்தியதனைப் போலவே சத்தியலோகப் பிராப்தியாம்.

அவ்வாறு, "|| நினைக்கப்படுதலால்' (௧-௨-௩௦) என்பதனால்

---

† மனோபேதத்தினாலேயே இந்திரியத்தோடு கூடிய சரீரத்தின் பாவத்தினை முக்தனுக்கு ஜைமினி கொள்ளுகின்றார் என்பது சூத்திரார்த்தம்.

‡ முக்கியமாதலால் பரமான பிரஹ்மத்தினை யதிவிக்கின்றது என்று ஜைமினி கொள்ளுகிறார் என்பது (௪-௩-௧௨) சூத்திரார்த்தம்.

§ உபாசகர்களது உபலப்தி ஸ்தானமாகிய ஹிருதயாதிப் பிரதேசங்களில் வெளிப்படுதலால் பிரதேசமாத்திரமென்றதாமென்பர் ஆச்மரத்தியர் என்பது (௧-௨-௨௯) சூத்திரார்த்தமாம்.

|| பிராதேச மாத்திரஹிருதயத்தில் நினைத்துள்ள இம்மனதினால் சிந்தித்தலால் பிராதேசமாத்திர மென்றது தென்பர் பாதரியாசாரியர் என்பது (௧-௨-௩௦) சூத்திரார்த்தம்.

வியாவகாரிகமாம் ¶ "அபாவம் பாதரி" என்னும் (சு-சு-கO) சூத்திரத்தினுல் பிராதேசமாத்திர ஹிருதயத்தினை அதிஷ்டித்த மனதினுல் ஸ்மரிக்கப்படுந் தன்மையால் பரமாத்மாவுக்குப் பிரா தேசமாத்திரத்துவம் சொல்லப்பட்டுளது. இதற்குத் திருஷ்ட பலம் மானசிகமே; ஐசுவரியத்தால் ஸித்தியமாம். அதிருஷ்ட பலமோ காரியப் பிராப்தியே; "§ இவனுக்குக் கதி பொருந்து தலால் கார்ய மென்பர் பாதரி" என்னும் (சு-ங-எ) சூத்திரத்தி னுல்.

அவ்வாறே 'இவனை இதில் வேதவாக்கியத்தால் கூறுகின்றனர்' என்பதனுல் பிராதேசமாத்திரமான புருவ நாசிகளின் சந்தியில் அநந்தமும் அவ்வியக்தமுமான ஆத்மாவின் உபாசனத்தினை ஜாபா லர் விதிக்கின்றனர்; "அந்த அவிமுக்தம் உபாஸிக்கத்தக்கதாம்" என்றும் "இதன் ஸ்தானம் எவ்வளவினது" என்றும் பிரசினபூர் வகமாக "புருவங்கட்கும் நாசிக்கும் எது சந்தியோ" என்றும் ஆத்யாத்மிக அவிமுக்தஸ்தானம் காட்டப்பட்டிருத்தலால், ஆத லால் பரமாத்மாவுக்கும் பிராதேசமாத்திரத்துவம் சொல்லப்பட் டது. இங்கு * "வெளிப்படுகிறவனுக்கு இவ்வாறு ஆகுதலால் என்று ஔடுலோமி கூறுகின்றார்." என்னும் (க-சு-உக) சூத்தி

---

¶ முக்தியில் பாதரியாசாரியர் மஹிமையுள்ள ஞானிக்குச் சரீரேந் திரியங்களின் அபாவத்தினைக் கொள்ளுகின்றனர். இவ்வாறே வேதம் கூறுகின்றது என்பது (சு-சு-கO) சூத்திரார்த்தம்.

§ அமானவபுருஷன் காரியமான சகுணவடிவ அபரப்பிரஹ்மத்தினை யடைவிக்கின்முன். இதற்கு (காரியப்பிரஹ்மத்திற்கு)க் கதி (போகுதல்) பொருந்துதலால் என்பர் பாதரியாசாரியர் என்பது (சு-ங-எ) சூத்தி ரார்த்தம்.

* விஞ்ஞான கனனும், தேகேந்திரிய மனே புத்தி சங்காத உபாதி சப்பந்தத்தால் கலங்கியவடிவினனும், ஞானத்தியானுதி சாதனுநுஷ்டா னத்தினுல் மிகப்பிரசன்னனுமாய்த் தேகாதி சங்காதத்தினின்று வெளிப் படுபவனுக்குப் பரமாத்மைக்கியம் பொருந்துதலால் இவ்வபேதமாக உபக்கிரமித்தலாம் என்று ஔடுலோமி ஆசாரியர் மதிக்கின்றனர் என்பது (க-சு-உக) சூத்திரார்த்தம்.

ரத்தால் எப்படி இந்தனங்களை விட்டு அக்நினிக்கு எரிக்குந் தன்மை பிரகாசிக்குந்தன்மை யிரண்டும் சத்தியமோ, அவ்வாறு அதனின்று வெளிப்பட்டவனுக்கு அநுபாக்கியத்துவமும் (காணக்கூடாத் தன்மையும்) சத்தியமா மென்று பேதாபேதவாதி மதிக்கின்றான். அந்த இந் நால்வரும் யானைகண்ட குருடர் போல் முழுவதுமான பிரஹ்மத்தினை அறியாத்தன்மையால் காரியப் பிரஹ்மத்தினையே அடைகின்றனர். அவ்வாறே இங்கும் ஜைமினியும் பாதரியும் அத்தியந்த மூடராவர்; துவைதபாதமும் அத்வைததரிசனமு மில்லாமையால். ஆதலால் அவ்விருவருள் முதலாமவர் கல்பாந்தர (வேறு கற்பத்தில்) வியஷ்டி தேவதா பாவத்தினையும் இரண்டாமவர் சமஷ்டிதேவதா பாவத்தினையும் அடைகின்றனர். மற்றிருவருமோ பாதி யுணர்ந்தவர்களாய்ச் சத்தியலோகத்தில் உண்டாகிய நல்ல தெரிசன முடையவர்களாய்க் காரிய முடிவில் பிரஹ்மாவோடு பரப்பிரஹ்ம பாவத்தினை அடைகின்றனர். ஆதலால் இவர்கட்கு முக்கியமான கைவல்யத்தினை யடையுந் தன்மையின்மையால் இது முக்கிய யோகமன்றென்று சூத்திரிக்கப்பட்டது.

எவர்கள் துவைதபாத (துவைதம் பொய் யென்னும் நிச்சய) பூர்வகமான அத்வைதமான ஆநந்தத்தில் பிரவேசித்தவர்களோ, அவர்கட்கு முழுவதுமான ஏகரஸமேயாம்; "அது எப்படி உப்புக் கட்டி உள்ளின்றியதும் வெளியின்றியதும் முழுவதும் இரஸ கனமுமாக விருக்கின்றதோ அதுபோல இவ்வாத்மா உள்ளின்றியதும் வெளியின்றியதும் முழுவதும் பிரஞ்ஞானகனமுமாம்." (பிருக. ச-ரு-கங) என்னும் சுருதியினால். ஆதலால் அந்தப் பிராண மனோ விஞ்ஞானங்களான நான்கற்கும் அவித்தையினா லாகிய பேதமிருக்கினும் பரமார்த்த திருஷ்டியினால் ஏகரஸத்தன்மை பொருந்துகின்றது என்பதனால் சூத்திரத்திற்கும் விருத்திக்கும் விரோதமில்லை. ஆதலால் அந்த வார்த்திக வடிவ உத்தரக் கிரந்தம் அவசியம் வியாக்கியானஞ் செய்யத்தக்கதா மென்பது சித்தித்தது. அவ்வாறாயினும், இது விஸ்தாரமாயிருத்தலின் அந்த வியாக்கியானத்தினால் இது நிகழ்ந்த அர்த்தமா மென்பதனால் பிஷ்டபேஷணமா (அரைத்ததனை

அரைப்பதா)கிய இதனு லென்ன பய னெனின், அவ்வா றன்று; போதிக்கப்படுபவர் பேதத்தாலும் நாநாசாகைகளிலுள்ள அக்னி ஹோத்திரத்தினைப் போல இதுவும் அவசியம் வியாக்கியானஞ் செய்யத்தக்கதா யிருத்தலாலும், அதிகார்த்த முடைமையாலும், பிஷ்டபேஷண நியாயமாகாது. ஆதலால் வியாக்கியானஞ் செய்யத்தக்கதேயா மிது. அங்கு முதலாவது (ஞானநிஷ்டை) துவைத முழுவதனையும் கெடுத்தலினாலேயே சித்திக்கின்றது. இரண்டாவதோ (கர்மநிஷ்டையோ) துவைதத்தினைப் பற்றுதலாற் சித்திக்கின்றது என்பதனால் இவ்விரண்டற்கும் விரோதமிருத்தலின் யான் ஞானாதிகாரியா? கர்மாதிகாரியா? வென்று தன்னிடத்துச் சந்தேகப்பட்டவனாய் வரேணியன் கேட்கலாயினன் :—

(சு-ம்) விபுவே (வியாபகரே! அதனாலேயே சர்வப்பிராணி ஹிருதயமு முணர்பவரே!) தம்மால் ஞானநிஷ்டை கர்மநிஷ்டை யிரண்டும் (மேலானவையாகச்) சொல்லப்பட்டன. என்றாலும் எனக்கு எது நிச்சயமாக சிரேயஸைச் செய்வதாமோ அவ்வொன்றனை (அதிகாரத்திற்கேற்ற தென) நிச்சயித்துத் திருவாய்மலர்ந் தருளுவீராக (எ-று).

**अस्मिंश्चराचरे स्थित्यौ पुरोक्ते द्वे मया प्रिय ।**

[எ௦] (அ-கை) இவ்வாறு பிரார்த்திக்கப்பட்டவரான ஸ்ரீ கஜானனர் சொல்லலாயினர்:—

(சு-ம்) இவ்வுலகத்தில் பிரியனே! (ஞானகர்மாதிகளான இருவகையினரை யுத்தேசித்து) சராசரங்களான இரண்டு ஸ்திதிகள் (வேதகர்த்தா வாகிய) என்னால் முன் (கற்பாதியில் ஜீவர்களது இதத்தின் பொருட்டு) சொல்லப்பட்டன. (எ-று)

**सांख्यानां बुद्धियोगेन वेधयोगेन कर्मिणाम् ॥ २ ॥**

(அ-கை) பிற்பாதியால் அவ்விரண்டு ஸ்திதிகளும் பிரிக்கப்படுகின்றன :—

(சு-ம்) சாங்கியர்களுக்குப் புத்தியோகத்தினால் ஞானநிஷ்டை

யும் கர்மிகட்கு வைதயோகத்தினல் கர்மநிஷ்டையும் சொல்லப்பட்டது. (எ-று)

அதிகார பேதத்தினல் நிற்கின்றனர் இதில் என்னும் விற்பத்தியினல் ஸ்திதி யென்னும் சப்தத்தாற் சொல்லப்படும் நிஷ்டாஸ்தானங்களான ஞானபூமி கர்மபூமிக ளிரண்டும் சராசரங்களாம்.

யோக்கியத்தன்மையால் கர்மஸ்திதியானது சரமாம்; ஜந்நியத்தன்மையால் கர்மபலத்திற்கு அநித்தியத்துவமிருத்தலின். அவ்வாறே சுருதியும் " இகத்தில் எப்படிக் கர்மத்தினல் ஜயிக்கப்பட்ட லோகம் நசிக்கின்றதோ அப்படியே பரத்தில் புண்ணியத்தினல் ஜயிக்கப்பட்ட லோகம் நசிக்கின்றது. " (சாந்-அ-க-சு) என்று கூறுகின்றது.

ஞான ஸ்திதியோ அசரமாம்; அஜந்நியமாயிருத்தலால், அதன் பயனுகிய கைவல்யத்திற்கு அஞ்ஞான நீக்கமாத்திரத்தால் சித்திக்குந் தன்மையினல் சரத்துவம் பொருந்தாமையால், **स्थिती** என்னுது **स्थित्यौ** என்றது ஆர்ஷமாம்.

"பிரியவே" என்பதனல் நீயோ ஞானஸ்திதிக் குரியவனுயிருக்கின்றுய் என்று சூசிக்கின்றுர். அது பகவானல் "ஞானிக்கு யான் மிகப் பிரியன் அவன் எனக்குப் பிரியன்" என்று சொல்லப்பட்டுளது. **सम्यक्ख्यायन्ते** செவ்வையாக அதாவது விஷய விஷயி விபாகத்தால் தத்துவங்கள் எவர்களாற் சொல்லப்படுகின்றனவோ, அவர்கள் சாங்கிய (பிரகிருதி புருஷ விபாக முணர்பவ) ராவர்.

ஞானயோகமாவது ஜீவப்பிரஹ்ம அபேத ஞானத்தினல் அகம் பிரஹ்மாஸ்மி என்றல் முதலிய சாஸ்திர சித்தமான தாதாத்மிய சம்பந்தமாகிய யோகமாம். ஞாநநிஷ்டையாவது எந்த ஞானமாகிய பிரத்தியக் சித்ரூபத்தில் மிகுதியாக நிற்கின்றுனே அதுவாம். அந்த ஞானமே கைவல்ய சாதன மென்பது பொருள். (சங்கை) சாங்கியர் குணபுருஷ வேற்றுமை ஞானத்தினல் கைவல்யம் என்பதனல் தத்துவ புருஷ வேற்றுமை யுணர்ச்சியே கைவல்ய சாதனமா மென்று மதித்துப் பிரஹ்மாத்ம ஐக்கிய ஞானத்தினை நோக்கார். அவ்வாருக "ஞானயோகத்தினல் சாங்கியர்களுக்கு ஞாநநிஷ்டை" யென்று கூறுவது எவ்வாறும் (உத்தரம்) இங்குக் கூறுவாம் :— எதுவரை

யில் பிரபஞ்சத்தில் பரமார்த்தத் தன்மைப் புத்தியும் புருஷபேத புத்தியும் இருக்கின்றதோ, அதுவரையில் பிரஹ்மத்திற்கும் கைவல்யமில்லை; பிரபஞ்ச சத்தியத்துவ வாசனையுடைமை நசியாமையால். இதனாலேயே எல்லாப் பெரியோரும் வாசனையோடு கூடியதான மித்தியா ஞானமே சம்சார மூலமாக விரும்புகிறார்கள். ஆதலால் அத்வைத நிஷ்டையே ஞானநிஷ்டையாம். சாங்கியர்களோ ஞானப்பிரபத்தி யுபாயத்துவமும் பதார்த்த சாக்ஷாத்காரத்தில் உபேயத்துவமும் உபசாரத்தாற் கூறுகின்றார். அவ்விது அசரமான நிஷ்டையாம்.

விதியின் இவர்கள் வைதர். இது இஷ்ட சாதனம் இது அநிஷ்ட சாதனம் என்று ஆறியப்படாத அர்த்தத்தினை அறிவிக்கு மியல்பினதாகிய சாஸ்திரம் விதியாம். அதன் கிங்கரர் (வேலைக்காரர்) வைதர்களாவர். அரசனாணையைக் கடத்தலில் பெரும் பயத்தைக் காண்பவரான இராஜதாஸரைப்போல விதித்ததனைச் செய்யாமையினாலும் விலக்கியதனைச் செய்தலாலும் தமக்குப் பயத்தினைக் காண்பவர் வைதர்கள். அவர்களது யோகம் **வைதயோக** (கர்மாநுஷ்டான)மாம். அதனால் "பிறந்த புத்திரனையுடைய கருத்த கேசமுடையவன் அக்கினியை ஆதானம் செய்க" என்னும் சாஸ்திராதிகாரமுடைய கர்மாதிகாரிகளான கர்மிகட்கு வைதயோகத்தினால் கர்மநிஷ்டை சொல்லப்பட்டதென்பது பொருள். கோச பஞ்சகங்களோடு கூடாத சோதிக்கப்படாத துவம் பதார்த்தம் ஆத்மாவென்று மதிப்பவன் கர்மாதிகாரி. சோதிக்கப்பட்ட துவம் பதார்த்தனோ சகல பேதபாவனையு மொழிந்தவனாய்ப் பிரஹ்மாத்மைக்கிய விசாரமான வேதாந்தார்த்த சிரவண மனன நிதித்தியாசனங்களில் அதிகரிக்கப்படுகின்றான் என்பது பொருள். (உ)

अनारम्भेण वैधानां निष्क्रियः पुरुषो भवेत् ।

[எக] (அ-கை) இவ்வாறாயின், ஞானநிஷ்டையே சாதிக்கத்தக்கதாம். விதிக்கப்பட்டனவாகிய கர்மங்களால் என்ன பயனென்றாசங்கித்துக் கூறுகின்றார் :—

(சு-ம்) வைதங்களின் அதாவது விதியினுற் பெறப்பட்டன வாகிய "சமம், தமம், தபசு, சௌசம், பொறுமை, நேர்மை, ஞானம் (பரோக்ஷம்) விஞ்ஞானம் (அபரோக்ஷம்) ஆஸ்திக்கியம் (தெய்வ முதலியவற்றி னுண்மையில் விசுவாசம்) என்பன ஸ்வபாவமாகப் பிறந்ததான பிராஹ்மணனது கர்மமாம்." என்றல் முதலிய சாஸ்திரத்தினுல் வர்ணுசிரம சம்பந்தி நியதங்களான கர்மங்களின் ஆரம்பமின்மையால் (அவற்றைச் செய்யாமையாகிய நிமித்தத்தினுல்) புருஷன் நிஷ்கிரிய (முக்த) னுகான் (எ-று)

பாதஞ்சலர் காயவாக்கு மனதுக்ளது சகல விருத்திகளின் நிரோதத்தினுலேயே கைவல்யத்தினை விரும்புகின்றனர்: அது இதனுல் நிஷேதிக்கப்படுகின்றது.

**न सिद्धिं याति संत्यागात्केवलात्कर्मणो नृप ॥ ३ ॥**

(அ-கை) இதனையே திடப்படுத்துகின்ருர் :—

(சு-ம்) நிருபனே கேவலமான (பிரஹ்மாத்மைக்கிய ஞானமின்றியதான) கர்மத்தின் சந்நியாசத்தால் (விடுதலால்) (சுழுத்தியிற் போல சர்வ வுணர்ச்சியும் கெடுதலின்) சித்தியினை (மோக்ஷத்தை) அடையான். (ஆதலால் சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட தர்மாநுஷ்டானத்தினை முன்னிட்டதேயாம் ஞானசித்தி) (எ-று)

இதுவும், "பெருத்த சித்த சுத்தியுமுண்டாகின்றது" (அத். க-சுலோக-கசு) என்னுமிடத்தில் விருத்திக் கிரந்தத்தில் சொல்லப்பட்டுளது. அதிலிருந்தே அநுசந்திக்கத் தக்கதாம். (௩)

**कदाचिदक्रियः कोऽपि क्षणं नैवावतिष्ठते ।**

[எஉ] (அ-கை) நிஷ்காமமான ஸ்வதர்மாநுஷ்டானத்தின் பயன்வடிவ சித்த சுத்தியில்லாதபோது, எல்லா வாக்குக் காயமனதுகளின் விருத்தி நிரோதமும் சம்பவியா தென்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்ருர் :—

(சு-ம்) (சுத்தீகரிக்கப்படாத சித்தமுள்ள புருஷன்) எவனும் எப்போதும் (முக்காலத்தும்) க்ஷணமாத்திரமும் அக்கிரியனுய் (சகல காய வாக்மனே வியாபார மில்லாதவனுய்) நிற்கமாட்டான் (எ-று)

अस्वतन्त्रः प्रकृतिजैर्गुणैः कर्म च कार्यते ॥ ४ ॥

(அ-கை) ஏன் எனக் கூறுகின்றார் :—

(சு-ம்) பிரகிருதி (முற்பிறப்புக்களின் புண்ணியா புண்ணிய வாசனரூப சம்ஸ்கார ராசி) யினின்று பிறந்த (இந்த ஜன்மத்தில் வெளிப்பட்ட) குணங் (மேல் கீழ்த்தன்மைகளை விஷயஞ் செய்வன வாகிய இராகத்துவேஷாதி) களால் அசுவதந்திரன் (அவற்றால் வசீ கரிக்கப்பட்டமையால் சுவதந்திர மிழந்த இப்புருஷன்) (பூர்வசம்ஸ் காரத்தின்படி) கர்மத்தினைச் செய்யவே செய்கின்றான். (எ-று)

வாசனையா லெழுந்த பிரவிருத்தி நீக்கற்கரியதா மென்பது கருத்து. (ச)

कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन् ।
इन्द्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥ ६ ॥

[எ௬] (அ-கை) சுவாதீனமேயான தமது காயவாக்கு மனது களினது வியாபாரத்தின் நிரோதம் எல்லோருக்கும் எளிதாமே யென் றாசங்கித்துக் கூறுகின்றார் :—

(சு-ம்) புருஷன் (வசனித்தல் ஏற்றல் முதலிய கர்மங்களைச் செய்விப்பது அதாவது பூர்வவாசனையால் அநுஷ்டிக்கச் செய்வது என்பதனால்) கர்மகாரி யென்னும் இந்திரிய கிராமத்தினை நியமித்து (ஒருவாறு எழுவதனைத் துஷ்டக் குதிரையினைப்போலடக்கி) உட் கார்ந்திருக் (ஏகாந்தத்தியான நிமித்தமாக நிச்சலனா) கின்றான். ஆனால் அவ் விந்திரியங்களின் விஷயங்களான சப்தாதிகளை மனதி னால் ஸ்மரித்துக்கொண்டிருக்கின்றான். மந்த சித்தனா (ஜட மதியா) கிய அவன் (சித்த நிக்கிரக சாமர்த்திய மில்லாதவன்) (மித்தியாத் தியானமான அபிப்ராயத்தினால் சத்துக்களால்) திக்கரிக்கப்பட்ட ஆசா ரமுடையவன் என்று சொல்லப்படுகின்றான். (பூனை விரதமுடைய வன் என்றும், கொக்குப்போல் தியானிக்கின்றான் என்றும் நிந்திக் கப்படுகின்றான் என்பது பொருள்).

கர்மங்களால் சோதிக்கப்பட்ட சித்தமுடையவனோ, எதனைத் தியானிக்கின்றானோ அத்தியானத்தின்பயன் முடிவுடையதாகின்றது.

ஆதலால் மித்தியாத் தியானத்தினை விட்டு விதிப்படி சித்தசுத்தியின் பொருட்டுக் கர்மங்களே செய்யத்தக்கனவா மென்பது கருத்து (௫)

संग्रामं संनियम्यादौ मनसा कर्म चारभेत् ।
इन्द्रियैः कर्मयोगं यो वितृष्णः स परो नृप ॥ ६ ॥

[௭௪] (அ-கை) எவ்விதத்தால் செய்யப்படும் கர்மம் சித்தத்தைச் சோதிப்பதா மென்று அறிய விரும்பியவிடத்துக் கூறுகின்றார்:-

(சு-ம்) அவற்றின் (ஞானேந்திரிய கர்மேந்திரியங்களின்) கிராம (சமூக) த்தினை மனதால் (விஷய வைராக்கியமுள்ள சித்தத்தால்) ஆதியில் (கர்மாரம்பத்திற்கு முன்பே) செவ்வையா யடக்கி, அதன் பின் (அக்கினிஹோத்திராதி) கர்மத்தினை (சித்த சுத்தியின் பொருட்டு) ஆரம்பிக்கவேண்டும். நிருபனே! விதிருஷ்ணா (மூவகைத் திருஷ்ணை அதாவது ஆசை இல்லாதவ)னாய் எந்தப்புருஷன் இந்திரியங்களால் கர்மயோகத்தினை அநுஷ்டிக்கின்றானோ, அவன் பரன் (மிக மேலானவன்) (எ-று)

"நிருபனே" யென்று விளித்து நரர்களைக் காக்குந்தன்மையாலும் பதித்தன்மையாலும் சிரேஷ்டனான நீ எதனைச் செய்கின்றாயோ, அதனையே மற்றவர்களும் செய்வார்கள் என்பதனைக் காட்டுவாராயினர்.

**वितृष्णैः** ஆசையில்லாதவர்களால் என்பது பாடமாயின் விதிருஷ்ணர்களாகிய கர்த்தாக்களால் இந்திரியங்களான கரணங்களால் எந்தக் கர்மயோகம் அநுஷ்டிக்கப்படுகின்றதோ அது மேலானதா மென்று பொருள் செய்க.

பலதிருஷ்ணை மூன்று விதமாம்:—

௧. யானே நிஷ்டையினால் கர்மங்களைச் செய்பவனாய் லோகத்தில் மதிக்கப்படுபவனாவேன் என்பது தாம்பிக (இடம்ப முள்ளவ) னது திருஷ்ணையாம். ௨. அக்கினிஹோத்திராதிகட்கும் காமியத்துவ மிருத்தலின், "யவாகூ (வாற்கோதுமைக் கஞ்சி), ஓதனம் (அன்னம்) தயிர், நெய், என்பன கிராமகாமன், அன்னாதிகாமன், இந்திரியகாமன்,

தேஜஸ்காமன் என்பவர்கட்காம்" என்று ஆசுவலாயனரால் கிராமாதி காமரான புருஷருக்குக் கிரமமாக யவாகூ முதலிய திரவியமுடைய கர்மங்கள் ஸ்மரிக்கப்படுகின்றன. அதுவோ இகலோக பலத்தின் மாத்திரமுள்ளதான சிலரது திருஷ்ணையாம். ௩. "ஸ்வர்க காமன் அக்னிஹோத்திரத்தினை யஜிக்க" என்று பரலோக சுகத்தின் பொருட்டும் அக்னிஹோத்திராதிகளை விதித்தலால் அவ்விஷயமான திருஷ்ணை மூன்றாவதாம். இவ்வாறு மூவித திருஷ்ணையுமில்லாத விதிருஷ்ணனான கர்த்தா கர்மங்களின் முக்கிய பயனான சித்தசுத்தியினை யடைகின்றான். ஆதலால் அவனே பரன்; பிறனல்லன் என்பது பொருள். (௬)

अकर्मणः श्रेष्ठतमं कर्मानिच्छाकृतं तु यत् ।
कर्मणः स्थितिरप्यस्याकर्मणो नैव सेत्स्यति ॥ ७ ॥

[௭௫] (அ-கை) இதுவுமது.

(சு-ம்) அநிச்சையினாற் செய்யப்பட்ட கர்மம் எதுவோ அது *அகர்மனுக்குச் சிரேஷ்டதமமாம். தேகத்தின் ஸ்திதியும் இந்த (அதிகாரியான) அகர்ம (எல்லாவிதத்தாலும் கர்ம சூநியனானவ)னுக்குச் சித்திக்கவே மாட்டாது. (எ-று)

இச்சையாவது பல்வகைப் பயன்களை விரும்புதலாம். அஃதின்றிய தன்மை அநிச்சையாம். அதனாற் செய்யப்படுதலாவது. எனக் குரியதான இத்தர்மம் எனக்கு ஆவசியகமாம்; இதனைச் செய்யாவிடின் யான்தோஷமுடையவனாவேன் என்னும் புத்தியாலாவது, இதனால் யான் தனது சித்தத்தினைச் சுத்திகரிப்பேன் என்னும் புத்தியினாலாவது, பரமேசுவரனது பிரீதியின் பொருட்டுச் செய்கிறேன் என்னும் புத்தியினாலாவது செய்தலாம்.

மூலத்துள்ள तु = ஒ என்னும் சொல், இச்சை யநிச்சைகளாற் செய்யப்பட்டனவாகிய கர்மங்க ளிரண்டிற்கும் அத்தியந்த விலக்ஷணத் தன்மையினைக் காட்டுவதற்காம்.

---

* இதற்குமுன் காமஞ்செய்யாதவனுக்கு.

முற்றும் தாம்பிகத்தாற் செய்யப்பட்டதான சிலாக்கிய மின்றி யதினும் ஐஹிக (இம்மைப்) பயனுடைய காமியம் பிரசஸ்தமாம் (சிலாக்கியமானதாம்). ஐகிக ஆமுஷ்மிக (இகபர) சுகப்பயனுடையது பிரசஸ்ததரமாம். ஆமுஷ்மிக (பாலோகத்திய) சுகப்பயனுடையது பிரசஸ்த தமமாம். நிஷ்காமங்களினும் இகத்தது சிரேஷ்டமாம். இகபரத்தது சிரேஷ்டதரமாம். பரத்தது சிரேஷ்டதமமாம்.

சங்காதஸ்வபாவத்தினல் அடையப்பட்ட கர்மத்திற்கு அத்தியந்தாபாவமுளபோது சங்காதத்திற்கு நாசம் வரும். அதுவும் (சங்காத நாசமும்) வாசனையுடையவனுக்குத் துர்மரண ரூபமாயிருத்தலால் நரகத்தின் பொருட்டே யாகின்றது என்பது **अपि** (உம்) என்னும் சொல்லால் சொல்லப்படுகின்றது. (எ)

**असमर्प्य निवध्यन्ते कर्म तेन जना अपि ।**

[எசு] (அ-கை) சிரேஷ்டதமமாகிய பக்ஷத்தினையே விபக்ஷத்தில் பாதகத்தினைக்காட்டுதல் பூர்வகமாக விளக்குகின்றார்:—

(சு-ம்) யஞ்ஞாதி கர்மத்தினை என்னிடத்திற் சமர்ப்பியாது அதனல் ஜனங்கள் கட்டுப்படுகின்றனர். (எ-று)

செய்யப்பட்ட சுபாசுபமான கர்மம் அவசியம் அநுபவிக்கத்தக்கதேயாம் என்னும் நியாயத்தால், கர்மத்தினல் ஜன்மத்தினை யடைந்து மறுபடி பூர்வ வாசனையால் கர்மத்தினையே செய்கின்றனர். அத்தன்மைய இக்கர்ம ஜன்மமிரண்டன் ஆவிருத்தி பரம்பரை பீஜாங்குர நியாயத்தாலாம் (வித்தும் முளையும் போலவாம்). அது பகவானல் "பிறந்தவனுக்கு நிச்சயமாக மரண முண்டு. மரித்தவனுக்கு நிச்சயமாக ஜன்ம முண்டு." என்று சொல்லப்பட்டிருக்கிறது.
**अपि** (உம்) என்னும் சொல் விசேஷார்த்தத்தினதாம்.

**कुर्वीत सततं कर्मानाशोऽसङ्गे मदर्पणम् ॥ ८ ॥**

(அ-கை) அதனையே கூறுகின்றார் :—

(சு-ம்) என தர்ப்பணமும், அசங்கமும், நாசமின்றியதுமான கர்மமே இடைவிடாது செய்யத்தக்கதாம்; ("இங்குக் கர்மங்களைச்

செய்துகொண்டே நூறுவருஷங்கள் ஜீவித்திருக்கக் கடவன்." (ஈசா-உ) என்னும் (சுருதியால்). (எ-று)

எதனுல் எனதர்ப்பணமும் அசங்கமும் நாசமின்றியதும் எனப் பட்டதோ அதனுல் முற்கூறிய அநவஸ்தையின் பிரசங்கமில்லை. எனது பிராப்தியி னுத்தேசமாகக் கர்மங்களைச் செய்தல் எதுவோ, அது என தர்ப்பணமாம் .அசங்க மென்பது பலத்தியாகமாம். இவ் விரண்டும் கர்மத்தினது நாசமின்மைக்கு நிமித்தமாம். விகிதமான கர்மம் யாவும் பயனைக்கொடுத்து நசிக்கின்றது. சங்கமாவது யான் செய்கின்றேன் என்னும் அபிமானமும் இதனை இதனு லடைவேன் என்னும் பயனுசையுமான இரண்டுமாம். அஃதின்றியது அசங்கம். நாசமின்றிய தென்பதற்கு என்னிடத் தர்ப்பிக்கப்பட்டகர்மம் எனது இலாபத்தினை (பேற்றினை)ச் செய்யாது ஒருபோதும் நசியாதென் பது பொருளாம். (அ)

मदर्थं यानि कर्माणि तानि बध्नन्ति न क्वचित् ।

[என] (அ-கை) இவ்விரண்டினையுமே விளக்குகின்ருர் :—

(சு-ம்) எனது பிராப்தியின் பொருட்டு எந்தக் கர்மங்கள் செய்யப்பட்டனவோ அவை எவ்விடத்தும் (ஓர் தேசத்திலாவது, காலத்திலாவது) கட்டுப்படுத்தா (என்னின் வேருன அநாத்மவடிவ, பயனைக்கொடுத்து ஜனன மரண தாரையில் வீழ்க்கா).

सवासनमिदं कर्म बध्नाति देहिनं बलात् ॥ ९ ॥

(அ-கை) அப்படியானுல் வீழ்த்துவிப்பவை எவை? எவனை வீழ்த்து விக்கின்றன? வெனக் கூறுகின்ருர் :—

(சு-ம்) வாசனையோடு (கர்த்திருத்துவாபிமான பலாபிலாஷைக ளின் சம்ஸ்காரத்தோடு) கூடிய இந்த (நித்தியமும் நைமித்திகமும் காமியமுமான) கர்மமே தேகியை (பிராஹ்மணன் யான் கர்மாதிகாரி யென் றபிமானிக்கின்ற புருஷனை) வலியக்கட்டுகின்றது. (எ-று)

இதனுற்முன் மந்திரம் பிராஹ்மணம் இரண்டினுலும் வாசனை யோடுகூடியதும் ஈசுவரனிடத்தி லர்ப்பிக்கப்படாததுமான கர்மம்

நாசமுடைமையாக நிந்திக்கப்படுகின்றது :— அவை எவற்றின் ஆசிர யமாகத் தாழ்ந்த (அழியும் பயனுடைய) கர்மம் சொல்லப்பட்டுளதோ அந்த அதிருடமான யஞ்ஞரூப உபாதியுடையனவாகிய || பதினெட்டும் அழிவனவாம். இதனை (கர்மத்தினை)ச் சிரேயசாக எவர்கள் களிக்கின்றனரோ அம்மூடர்கள் மறுபடியும் மறுபடியும் ஜரா (மூப்பினை முன்னிட்ட) மரணத்தினையே யடைகின்றனர். (முண். க-உ-எ) என்பதும் "கார்கியே! எவன் இந்த அக்ஷரமாகிய ஆத்மாவினை அறியாது இந்த லோகத்தில் அநேகமாயிர வருஷங்கள் யஜிக்கின்றானோ, கொடுக்கின்றானோ, தபசினைச் செய்கின்றானோ, அது அவனுக்கு அந்த (நாச) முடையதே யாகின்றது." (பிரு-ரு-அ-க0) என்பதுமாம். (கூ)

वर्णान्सृष्ट्वावदं चाहं सयज्ञांस्तान्पुरा प्रिय।
यज्ञेन ऋध्यतामेष कामदः कल्पवृक्षवत् ॥ १० ॥

(எ-அ) (அ-கை) சித்தசுத்தியின் பொருட்டோ கர்மங்கள் அவசியம் செய்யத்தக்கனவா மென்னும் அபிப்பிராயத்தால் ஆக்கியாயிகை (விருத்தாந்த) பூர்வமாக ஆறு சுலோகங்களாற் காட்டுகின்றார்:—

(கூ-ம்) பிரியனே! (பிரஜாபதிவடிவ) யான் முன் (கல்பாதியில்) யஞ்ஞங்களோடு கூடிய (பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களான) வர்ணங்களைப் படைத்து (பின்னர்) அவர்களை நோக்கி (பிராஹ்மணாதி வர்ணத்தினரே!) யஞ்ஞத்தினால் வளம்பெறுக. உங்கட்கு இது (யஞ்ஞம்) கற்ப விருக்ஷம்போல விரும்பியதை (இஷ்ட பலத்தை) த்தருவதாம் என்று சொன்னேன். (எ-று)

"பிரஜாபதி பிரஜைகளைச் சிருஷ்டித்தார்" என்பதும், "பிரஜாபதி யஞ்ஞங்களைச் சிருஷ்டித்தார்" என்பதுமான சுருதிகள் பிரஜைகட்கும் யஞ்ஞங்கட்கும் பிரஜாபதியினின்றுண்டாகிய தன்மையினைக் காட்டுவனவாம்.

|| ருத்துவிக்குகள் பதினாறுபேர், பத்னி, யஜமானன் ஆகபதினெட்டு.

முற்செய்யப்பட்ட யஞ்ஞாநுஷ்டான பலத்தி (வலியி) னாலேயே புருஷார்த்த விருப்புடைமையும் சாமர்த்தியமுடைமையும் வித்துவத்துவமும் சாஸ்திர நீக்கமின்மையுமாகிய யஞ்ஞாதிகார சம்பந்து எதுவோ அதனால் வளம் பெற்றவர்களாகிய உங்கட்கு இந்த யஞ்ஞமே அநுஷ்டிக்கப்பட்டதாய் ஐஹிகாமுஷ்மிக (இகபரலோகங்களின்) சகல காமங்களையும் பிரப்புவதா மென்பது பொருள். (௧0)

सुरांश्चानेन प्रीणध्वं सुरास्ते प्रीणयन्तु वः ।
लभध्वं परमं स्थानमन्योऽन्यप्रीणनात्स्थिरम् ॥ ११ ॥

[௭௧] (சு-ம்) (தேவதோத்தேசமான திரவியத் தியாகம் யாகமாம். அது தேவதைக்குப் பிரீதிகரமாம். ஆகலால்) இந்த யோகத்தினல் தேவர்களைப் பிரியப்படுத்துங்கள். அவர்கள் (அதனல் பிரியப்பட்ட தேவர்கள்) உங்களைப் பிரியப்படுத்துக (இஷ்ட காமங்களைக் கொடுத்தலால் சந்தோஷிக்கச்செய்க). ஒருவரையொருவர் திருப்தி செய்வித்தலால் (சுரர்களைப் பிரியப்படுத்தும் நீங்கள்) ஸ்திர (அக்ஷய) மான பரமஸ்தான (பூலோகத்தினைவிட சிரேஷ்டமானபத) த்தினை யடையுங்கள். (எ-று)

" சாதுர்மாஸ்ய யாகஞ் செய்வோரது சுகிருதம் அக்ஷய்யம் (அழிவின்றியது) ஆகின்றது " என்றும், " சோமத்தினைப் பருகினேம் அமிர்தரானேம் (அதர்வசி-௩) என்றும் கேட்கப்படுதலால் அழிவின்றியதாம் அப்பதம். "

இதனல் நித்தியங்களான கர்மங்கட்குப் பிரத்தியவாயத்தினை யுண்டுபண்ணுமையும், பின்பொருந்துவதான ஸ்வர்கப்பிராப்தியும் சித்தசுத்தியுமான பயன் மூன்றும் சொல்லப்பட்டதாகின்றது(௧௧)

इष्टा देवाः प्रदास्यन्ति भोगानिष्टान्सुतर्पिताः ।
तैर्दत्तांस्तान्नरस्तेभ्योऽदत्त्वा भुङ्क्ते स तस्करः ॥ १२ ॥

[௮0] (அ-கை) நித்தியத்தினைச் செய்யாததனல் பிரத்தியவாயமுண்டாதலைக் கூறுகிறார் ;—

(௯-ம்) இஷ்டர் (யாகத்தினால் வசிகரிக்கப்பட்டவர்) களான தேவர்கள் (இந்திராதியர்) (உங்களால் கொடுக்கப்பட்ட ஹவிசால்) திருப்தியினை யடைந்தவராய் இஷ்டமானபோகங் (விரும்பியபோக சாதனங்களான ஸ்திரீயக்ஷபான ஆரோக்கியாதி)களை உங்களுக்குக் கொடுப்பார்கள். அவ்வாறு அவர்களால் கொடுக்கப்பட்ட (அவை களை)போகங்களை,எந்த நரன் (போகப் பற்றுடையவன்) அத்தேவர் களுக்குக் கொடாது (காயவாக்கு மனதுகளால் செய்யப்பட்ட கர்மத்தினைச் சமர்ப்பியாது) புசிக்கின்றானோ அவன் திருட (செய்ந் நன்றி கொன்றவ) னாகிறான். (செய்ந் நன்றி மறந்த தன்மையால் தேவர்கட்குத் திருடனைப்போல் தண்டிக்தற்குரியவ னாகின் றான்) (எ-று)

பஞ்சயஞ்ஞாதிகளைச் செய்யாமையினாலேயே சமர்ப்பியாமை யாம். "காயத்தினாலாவது வாக்கினாலாவது மனதினாலாவது இந்தி ரியங்களாலாவது புத்தியினாலாவது அநுசரித்த சுபாவத்தால் எதெதனைச் செய்வேனோ, அவ்வெல்லாவற்றையும் பரனான நாரா யணனுக்குச் சமர்ப்பிப்பேனாக." "சம்புவே! ஆத்மா நீர், மதி பார்வதி, உடனிகழ்பவர் பிராணன்கள், சரீரம் வீடு, விஷய உப போகங்களைச்செய்தல் தமது பூஜை, நித்திரை சமாதிஸ்திதி, பாதமிரண்டன் சஞ்சாரம் வலம்வருதல், வார்த்தைகள் யாவும் ஸ்தோத்திரங்கள் எங்கெந்தக் கர்மத்தினைச்செய்கின்றேனோ அதது முழுதும் தமது ஆராதனமாம்." என்னும் சுலோக மிரண்டிற் சொல்லப்பட்ட பாவனையினைச்செய்யாமை இரண்டாவதான சமர்ப் பியாமையாம். யானே முதலாமவனான போக்தா வென்னும் இந்திரி யத்தமுந்துந் தன்மையால் அது மூன்றாவதான சமர்ப்பியாமையாம். இவைகளைச் செய்யாமையினால் இயமனுடைய தண்டம் அவசிய முண்டாமென்பது பொருள். புண்ணியம் செய்யப்பட்டதாயினும் தானொருவனாகப் புசிப்பவன் கெடுகின்றான். அதனாலும் புண்ணிய பாபங்க ளிரண்டன் சமத்துவ மின்மையால் மனிதப்பிறவியினை யடையான். மற்றோ, சாசுவதமான நரகத்தினை யடைகின்றான் என்பது பொருள். (கஉ)

हुतावशिष्टभोक्तारो मुक्ताः स्युः सर्वपातकैः ।
अदन्त्येनो महापापा आत्महेतोः पचन्ति ये ॥ १३ ॥

[அக] (அ-கை) அவற்றுள் முதலாவதான பஞ்சயஞ்ஞாதிகளைச் செய்தலில் குணத்தினையும் கடைசியான இந்திரியத்கழுந்துதற் றன்மையில் தோஷத்தினையும் கிரமமாகக் கூறுகின்றார்.

(சு-ம்) (சிரௌதமான அக்கினியில் செய்யும் யாகவிசேஷம் இடாதியாம். அதன்) ஹோமிக்கப்பட்ட மிச்சத்தினைப் புசிப்பவர் (சிரௌதஸ்மார்த்த யஞ்ஞபரர்) சர்வபாப (அநேக ஜன்ம சந்ததியின் துர்வாசனுவடிவ மல) ங்களினின்று முக்தராகின்றனர். (இதனால் யஞ்ஞத்திற்குச் சித்தத்தினைச் சுத்தப்படுத்துந் தன்மை சொல்லப்பட்டது.) எவர்கள் தன் பொருட்டாகவே சமையல் செய்கின்றனரோ (வைசுவதேவத்தின்) பொருட்டன்றோ, அந்த மகா பாபி (பிரஹ்மஹத்தி கட்குடித்தல் முதலிய மகாபாதகங்களையுடையவர்) களுக்குச் சமமானவர்கள் பாபத்தினைப் புசிக்கின்றனர். (எ-று)

அதனால் பாபவடிவினரே யாகின்றனர் என்பது பொருள். அவ்வாறே சுருதி "கேவலாகீ அதாவது பக்குவமான அந்நத்தினைப் பிறருக்குக்குக் கொடுக்காமல் கேவலனுக (தனியனுக) உண்ணுமியல்பினன் கேவலாகுக (கேவல பாபியா) கின்றான்." என்று கூறுகின்றது. (கங)

ऊर्जो भवन्ति भूतानि देवादन्नस्य संभवः ।
यज्ञाच्च देवसंभूतिस्तदुत्पत्तिश्च वैधतः ॥ १४ ॥

[அஉ] (அ-கை) அவ்வக் காரண பரம்பரை வாயிலாக யஞ்ஞத்திற்குச் சர்வகாரணத்துவம்கூறுகின்றார் :—

(சு-ம்) அந்நத்தினின்று பூதங் (ஜராயுஜ அண்டஜாதி)கள் உண்டாகின்றன (உற்பத்தியாய் வளர்கின்றன). ['அந்நத்தினின்று பூதங்களுண்டாகின்றன உண்டானவை அன்னத்திறல்

வளருகின்றன ". (தை-ஆ-சு-கஉ) என்பது சுருதி] மழையினின்று அந்நத்தின் சம்பவமாம் யஞ்ஞத்தினின்று மழையினுற்பத்தியாம் ["அக்கினியிற் போடப்பட்ட ஆகுதி செவ்வையாய் ஆதித்தனை யடைகிறது. ஆதித்தியனினின்று மழையுண்டாகின்றது. விருஷ்டியினின்று அன்னமுண்டாகிறது. அதனின்று பிரஜைகளுண்டாகிறார்கள்" என்பது சுருதி]. அதன் (மழைக்கேதுவான யஞ்ஞத்தின்) உற்பத்திவைதத்தினின்று (விதிப்பிரதானமான மந்திராதிக் கூட்டங்களால்) ஆகின்றது. (எ-று)

விதேயமான யஞ்ஞமானது மந்திரம் திரவியம் ரித்துவிக்கு முதலியவற்றாற் சாதிக்கப்படுகின்றதென்பது பொருள். (கச)

ब्रह्मणो वैधमुत्पन्नं मत्तो ब्रह्मसमुद्भवः ।
अतो यज्ञे च विश्वस्मिन् स्थितं मां विद्धि भूमिप ॥ १५ ॥

[அரு.] (சு-ம்) வைதம் (விதிக்கூட்டவடிவ கர்மம்) அதாவது அக்கினிஹோத்ரம் தர்ச பூர்ணமாசம் சாதுர்மாசியம் பசு சோமம் என்னும் வடிவினது வேதத்தினின்றுண்டாயிற்று. வேதம் (அக்ஷரஸ்வரூப பிரணவார்த்தமாகிய) என்னிடத்தினின்று முண்டாயிற்று. ["இந்த மகா பூதத்தின் மூச்சுக்காற்றும் இந்தயாதொரு இருக்குவேதம் யஜுர் வேதம் சாமவேதம்" (பிருக-உ-ச-க0) இவை முதலிய சுருதி.] ஆதலால் பூமிபாலகனே! (கர்மமயமும் அதன் பலவடிவமுமான) யஞ்ஞத்திலும் (கிரியாகாரக பலவடிவ) எல்லாவற்றிலும் (உம்மையால் அக்ஷரவடிமான வேதத்திலும்) இருக்கும் என்னை (சத்ரூபமாகவும் பிரகாச ரூபமாகவும்) அறி. (எ-று)

ஆநந்தரூபத்தினாலும் அநுசூதமாம் என்னை அறி என்றதாம். அஸ்தி பாதி பிரியம் நாமம் ரூப மென்பவற்றில் முதல் மூன்றும் பிரஹ்மரூபம், பின்னிரண்டும் ஜகத்ரூப மாதலின்.

"பூமிபாலகனே'! என்னும் விளியால் எப்படி பூமியே பீஜ சக்திவாயிலாக வேர்முளை மரம் கொம்பு இலை கிளை அடி முதலிய

வடிவத்தால் நிலேத்துளதாகக் காணப்படுகின்றதோ, அப்படி யானே மாயை அதன் காரியமான பிரஹ்மாண்டகோடி ரூபத்தால் நிலே த்துள்ளவ னுயிருக்கின்றேன். அந்தப் பூமிவடிவ என்னே ஆத்ம ரூபமாக இரக்ஷிக்கின்ருய்; எனது நிஷ்டையி னின்று நழுவிலே. என்று சூசிப்பித்ததாம். (கரு)

संसृतीनां महाचक्रं क्रामितव्यं विचक्षणैः।
स मुदा प्रीणते भूप

[அசு] (அ-கை) ஆக்கியாயிகை பூர்வமாகச் சொல்லப்பட்ட தான தர்மப் பிராதானியத்தின் பயனேக் கூறுகின்ருர்:—

(சு-ம்) புத்திமான்களால் (சங்க பலத்தியாக பூர்வமாக என் பிரீதியின் பொருட்டு அநுஷ்டிக்க மிக்க சாமர்த்தியமுள்ளவர் களாகிய புருஷ சிரேஷ்டர்களால்) சம்சாரங்களின் மகா சக்கிரம் (வித்தினின்று முளே முதலியனபோல மறுபடியும் மறுபடியும் உண்டாவதான முடிவில்லாத சுழற்சி) வித்துவடிவ அவித்தையின் தாகத்தினுல் தாண்டத்தக்கதாம். பூபனே! (எவன் இதனேச் செய்ய ச்சமர்த்தனே) அப்புருஷன் (ஆத்மலாபாதி வடிவ) களிப்பினுல் பிரியப்படுகின்ருன் (சுவாத்மாவினுல் ஸ்வயமே பிரீதியினே அடை கின்ருன்). (எ-று)

அவ்வாறே சுருதியும் "ஆத்மாவில் கிரீடிப்பவனும் ஆத்மா வில் இரமிப்பவனும் கிரியை யுடையவனுமான இவன் பிரஹ்மவித் துக்களின் வரிஷ்டனுவன்" (முண்-ங-க-ச) என்றும், "ஸ்திரீ களோடு புசிக்கின்றவனுய்க் கிரீடிப்பவனுய் இரமிப்பவனுய் வாக னங்களால்" (சாங்-அ-கஉ-ங) என்னும் பிரஹ்மவித்திற்கு விழித்த நிலேயிலும் களிப்போடு கிரீடித்தலேக் காட்டுகின்றது.

பூபனே! என்று விளித்து, எப்படிப் பூமி தன்னிடத்தினி ன்றே உண்டாயினவைகளான பீஜம் அங்குரம் விருக்ஷம் புஷ்பம் பழம் முதலியனவைகளேச் சிலகாலத்தால் பருகுகின்றதோ, அதா வது இலவணேதகமென்னும் நியாயத்தால் (உப்பும் நீரும்போல்)

தனது சாமியத்தினைப் பெறுவிக்கின்றதோ, அது போல் நிருவிகற்ப அவஸ்தையில் விஷயத்தோடு ஞானத்தினை நீயும் எனது கிருபையால் விழுங்குதற்குரியனாகின்றாய் என்பதனை சூசிப்பித்தார். भूपः என்பதற்கு **भुवं पिबति** பூமியினைப்போல பருகுகின்றான் என்பது அவயவார்த்தமாம். 'சம்சாரங்களின்' என்னும் பன்மை மொழி மூடர்களது சம்சாரத்தின் அநந்தத்தன்மையினைக் காட்டுகின்றது.

इन्द्रिय क्रीडोऽधमो जनः ॥ १६ ॥

(அ-கை) இதனானே அதனை அதிக்கிரமித்தலில் தோஷத்தினைக் கூறுகின்றார்:—

(சூ-ம்) இந்திரியக் கிரீடனான (எவன் கேவலம் இந்திரியக் கிரீடையின் பொருட்டே கிரீடிக்கின்றானோ, அநுஷ்டிக்கத்தக்கதும் அறியத்தக்கதுமான தர்மத்தினையும் பிரஹ்மத்தினையும் அறிகிறதில்லையோ, அதன்பொருட்டு எத்தனமும் செய்கிறதில்லையோ. அந்த) புருஷன் அதமன். (எ-று)

திரியக்கு ஸ்தாவராதிகளைப் போலக் கர்த்தவ்வியத்தினை (செய்யவேண்டியதனை) அறியாததினால் மிகத் தாழ்ந்தவன் என்பது பொருள். (௧௬)

अन्तरात्मनि यः प्रीत आत्मारामोऽखिलप्रियः ।
आत्मतृप्तो नरो यः स्यात्तस्यार्थो नैव विद्यते ॥ १७ ॥

[௮௫] (அ-கை) முற்பாதியால் சொல்லப்பட்ட சம்சார சக்கிரத்தினைக் கடந்தவனான ஜீவன்முக்தனை ஸ்துதிக்கின்றார்:—

(சூ-ம்) எவன் அந்தராத்மாவில் பிரீதியுள்ளவனோ, ஆத்மாராமனோ, சர்வஜனப்பிரியனோ, எந்தநரன் ஆத்ம திருப்தனோ, அவனுக்குக் கர்மத்தினால் பிரயோஜனமில்லை. (எ-று)

பாகிய ஆத்மா பாஞ்சபௌதிக சரீரமாம்; மூடர்களுக்கு அதிலேயே பிராஹ்மணன் யான், மனிதன் யான், எனக்கு யஞ்ஞமுத

லியன அவசியம் அநுஷ்டிக்கத்தக்கனவாம் என்று ஆத்மாபிமான மிருத்தலின் அதனையபேக்ஷித்து லிங்க சரீரம் அந்தராத்மாவாம். அதில் நின்று சவிகற்ப சமாதிகாலத்தில் எவன் என்னுல் அறிய வேண்டியது அறியப்பட்டது, அடையவேண்டியது அடையப் பட்டது, என்னின் வேறுன பொருதுவுமில்லை, நிருநிருத்நியன் யான் என்று ஆத்மாவில் பிரீதியினை அநுபவிக்கின்றுனே, அவன் அந்தராத்மாவில் பிரீதியுள்ளவனெனப் படுகின்றுன்.

எவன் நிர்விகற்ப சமாதியில் சர்வாத்மத்தன்மையினையும் சர்வஞ்ஞத்தன்மையினையும், சர்வகாமத்தன்மையினையும் துச்ச மாக்கி, அஸ்மி (இருக்கிறேன்) என்னும் அஸ்மிதையினையும செவ் வையாய்விட்டு, அகண்டைகரஸமும் ஞாதிரு ஞான ஞேயவுணர்ச்சி யின்றியதுமான ஆத்மாவிலேயே இரமிக்கின்றுனே அவன் ஆத் மாராம னெனப்படுவன்.

வேறுபட்ட எல்லாவுபாதிகளினபேக்ஷையால் எல்லாவற் றிற்கு முள்ளாயிருத்தலின் சர்வஜனப்பிரிய னெனப்படுவன். இதனு ற்றுன் இவனைத் தேவர்களும் அடக்கியாள முடியாதவ ராகின்றனர் அவர்களுக்கும் ஆத்மவடிவமா யிருத்தலின் அவ்வாறே சுருதியும் "அவனைத் தேவர்களும் அனைசுவரியத்தால் ஆளுகிறதில்லை. அவன் இவர்களது ஆத்மா வாகின்றுன்" (பிருக-௧-௪-௧0) என்று கூறுகின்றது. எப்படி எண்பத்துநான்கிலக்ஷம் யோனிகளும் பூமி யினுல் தரப்பட்டன வாதலின், பூமியே முக்கிய அந்தராத்மாவோ, அவ்வாறே இவனு மாவன் என்பது கருத்து. ஆத்மாவின் பிரியத துவமும் நிருபாதிப்பிரேமைக்கு விஷயமாந் தன்மையாகிய லிங்க த்தினுலும், "எந்த ஆத்மா அந்தரதரமா (மிகவுள்ளிருப்பதா) யிரு க்கின்றதோ அவ்விது புத்திரனினும் பிரியமானது; தனத்தினும் பிரியமானது; மற்றையவெல்லாவற்றினும் பிரியமானது" (௧-௪-அ) என்னும் சுருதியினுலும், சுழுத்தியின் கண்ணதாகிய நிரதிசயாநந் தாநுபவத்தினுலும் சித்தமாம். அதனை விருத்தர் (பெரியோர்) "துக்கமின்றிய நித்திய சுக விக்கிரகத்தன்மை யுணர்ச்சியினுல் பிரத்தியக்ஷலிங்க (அநுமான) வசன (சப்த) ஙகளைக் காட்டுகின்ற னர்" என்று கூறுவர்.

இவனே சமாதியினின்று விழித்தகாலத்தில் பூர்வசம்ஸ்காரத் தால் கர்மங்களைச் செய்தும், ஆத்மலாபத்தால் திருப்தனுயிருத்த லின், ஆத்மதிருப்த னெனப்படுகின்ருன்; இச்சையின்றிய தன்மை யாலும் அடையத்தக்கது வேறென்றில்லாமையினுலும்.

இத்தன்மைய லக்ஷணங்களை யுடையவனுக்கு முற்கூறிய விதமான சங்காதிகளைவிடுதல் பூர்வகமான கர்மத்தினுலும் பிரயோ ஜனமில்லை; அவனுக்குக் கிருதார்த்தத்துவ மிருத்தலின். அவ் வாறே தத்துவமுணர்ந்தவனுக்குக் கர்மங்களில் உதாசீனத்தன்மை (விருப்பவெறுப்பின்மை) சுருதியில் கேட்கப்படுகின்றது :—"அந்த வித்வான்களாகிய காவஷேயரான ரிஷிகள், எதன்பொருட்டு யாங் கள் அத்தியயனஞ் செய்வோம்? எதன் பொருட்டு யாகஞ் செய் வோம்? வாக்கில் பிராணனை ஹோமிப்போம். பிராணனில் வாக் கினை ஹோமிப்போம் (சுழுத்தியிலாவது சும்மாவிருக்கும் நிலை யிலாவது பிராணனில் வாக்காகிறது. எப்போது ஓதுகின்ருனே, அல்லது பேசுகின்ருனே, அப்போது வாக்கில் பிராணனுகின் றது.)" என்பதாம். அவ்வாறே "எந்த எங்கட்கு இந்த ஆத்மா வில்லையோ, இந்த லோகமில்லையோ அந்த யாங்கள் பிரஜையினுல் என்ன செய்வோம்?" என்று ஆத்மஞானிகட்கு ருணமி (கடனி) ன்மையைக் காட்டுகின்றது என்பது 'அந்தராத்மாவில்' என்றல் முதலியவற்ருல் செவ்வையாய்ச் சொல்லப்பட்டது. (௧எ)

कार्याकार्यकृतीनां स नैवाप्नोति शुभाशुभे ।
किंचिदस्य न साध्यं स्यात्सर्वजन्तुषु सर्वदा ॥१८॥

[அசு] (அ-கை) (அவனுக்குக் கர்மத்தினுல் பிரயோஜன மில்லை என்னும்) கடைசிப் பாதத்தினை விவரிக்கின்ருர்:—

(சு-ம்) அவன் காரியங் (அவசியம் செய்யத்தக்கனவாகிய அக்னிஹோத்திராதி)களும் அகாரியங் (செய்யத் தகாதனவாகிய சூதாடுதல் முதலியவை) களுமான கர்மங்களின் (பயனுகிய) சுபா

சுபச் (நன்மை தீமை) களான ஸ்வர்க நரகாதி வடிவங்களையடையான்; (கர்த்திருத்வாதி அந்தக் கரணத்திற்காம், ஆத்மாவின் வேறுபடுத்தப்பட்டதா யிருத்தலின்). இவனுக்கு (சகல கர்மங்களையும் பெற்ற வறிஞனுக்கு) ச் சாத்தியம் (ஐகிகம் அல்லது ஆமுஷ்மிகம்) எதுவுமில்லை; (எதனாலெனின்,) எப்போதும் எல்லா ஜந்துக்களிலு மிருப்பவனாதலால். (எ-று)

"எவன் இவ்வாறு யான் பிரஹ்மம் என்று அறிகின்றானோ அவன் இது (உலகம்) ஆகின்றான்" (பிருக-க-ச-க0) என்பது சுருதி.

சர்வாத்மத்தன்மை யடைந்த ஆத்மஞானிக்கு அடையத்தக்கது வேறின்மையால் சாத்திய மெதுவுமில்லை யென்பது கருத்து. (கஅ)

अतोऽसक्ततया भूप कर्तव्यं कर्म जन्तुभिः ।
सक्तो गतिमवाप्नोति मामवाप्नोति तादृशः ॥ १९ ॥

[அஎ] (அ-கை) சொல்லிய கர்மயோகத்தினை முடிக்கின்றார்:-

(சு-ம்) ஆதலால் (எதனால் கர்மமில்லாமலே) நைஷ்கர்மியம் (முத்தி)சித்திபாதோ, அக்காரணத்தால்) பூபனே! ஜந்து(முமுக்ஷுக்)க்களால் அசக்தத்தன்மையால் கர்மம் (நித்தியமும் நைமித்திகமும் நிஷித்தகாமியங்களின்மையை முன்னிட்டதாய்ச்) செய்ய வேண்டியதாம். சக்தனோ (அவ்வக் கர்மபல போகத்தின் பொருட்டு அந்தந்த தேசத்தினைக் குறித்த) கதியினை (செல்லுதலை) அடைகின்றான். அத்தன்மையன் (அசக்தன்) என்னை (சித்த சுத்திவாயிலாகத் தத்துவ ஞானத்தினையடைந்து பரகதியின்றியே இகத்திற்றானே நிஷ்கலாநந்தவடிவப் பிரஹ்மத்தினை) அடைகின்றான். (எ-று)

கர்த்திருத்துவாபிமானியும் பலாபிலாஷையுடையவனும் சக்தனவன். அவனின் விபரீதமானவன் அசக்தனவன். அவனது தன்மை அசக்தத்தன்மையாம்.

"பூபனே" என்று விளித்து லோகசிக்ஷையின் பொருட்டு உன்னாலும் கர்மம் செய்யவேண்டியதா மென்று காட்டுகின்றார். இல்லையாயின், சிக்ஷக னின்மையால் கர்ம சம்பிரதாயத்தின் நாசத்தால் உலகம் கெடு மென்பது கருத்து.

"இருதயத்தின் நாடிகள் நூறும் ஒன்றுமாம். அவற்றுள் ஒன்று உச்சியினைப் பொருந்தியதாம். அதன் வழியாய் மேலே வந்து அமிருதத்துவத்தினை யடைகின்றான். அதனைச்சுற்றிலுமுள்ளவை பிராணன் வெளிப்படுதலில் (மரணத்தில்) ஆகின்றன" (சாந்-அ-சு-சு) என்பது சுருதி. நூற்றியோராவது நாடியினால் அமிருதத்துவமாகிய பிரம முக்திஸ்தானத்தினை அடைகின்றான்; மற்றவைகளாற் சென்று மறுபடியும் திரும்புகிறான் என்பது பொருள்.

"இவ்வாறு எவன் விரும்புகின்றவனாய் அல்லது விரும்பாதவனாய், எவன் அகாமனும் நிஷ்காமனும் ஆப்தகாமனுமாகின்றானே, அவனுடைய பிராணன்கள் வெளிப்படுகிறதில்லை. இவ்விடத்திற்றானே செவ்வையாய் ஒடுங்குகின்றன. பிரஹ்மமாகவேயிருந்து பிரஹ்மத்தினை யடைகின்றான்' (பிருக-ங-உ-சு) என்னும் சுருதி நிஷ்காமத்தன்மையால் தத்துவஞானிகட்குப் பிராணன் வெளிப்படுதலின்மையினைக் காட்டுகின்றது.

परमां सिद्धिमापन्नाः पुरा राजर्षयो द्विजाः ।
संग्रहाय हि लोकानां तादृशं कर्म चारभेत् ॥ २० ॥

[அஅ] (அ-கை) எதனால் கர்மம் இத்தன்மைய பிரபாவமுடையதோ, அதனால் கிருதகிருத்தியனும் லோக சங்கிரகத்தின் (உலகங் கொள்ளுதற்) பொருட்டுக் கர்மங்களைச் செய்யவேண்டுமென்று கூறுகின்றார் :—

(சு-ம்) முன் (கிருதயுகாதிகளில்) பரமசித்தியை (இவ்விடத்திற்றானே ஜீவித்திருக்கும் பொழுதே கைவல்யத்தினை)ப் பெற்றவர்களாகிய இராஜரிஷிகளான (இராஜர்களும் ரிஷிகளுமான

ஜநகர் வசிஷ்டர் முதலிய) துவிஜர்களும் (தங்களுக்குப் பெறத்தக்க தொன்றில்லாதிருந்தும்) லோகங்களின் சங்கிரகத்தின் (சர்வசிரே யசுக்கும் மூலமான சதாசாரத்தில் பிரவிருத்தியின்) பொருட்டு அத்தன்மைய (முற்கூறிய விதமான) கர்மத்தினை அநுஷ்டித்தனர். (எ-று)

எப்படி ஜடனான புருஷன் ஆசக்தனாய் (பற்றுள்ளவனாய்) க் கர்மத்தினை அநுஷ்டிக்கின்றானோ, அவ்வாறு இவனும் லோக சிக்ஷையின் பொருட்டுக் கர்மத்தினை யநுஷ்டிக்கவே வேண்டு மென்பது பொருள்.

அன்றியும் ச காரத்தால் (உம்மையாற் பெறப்படும்) த்விஜ ரல்லாதவராகிய தர்மவியாதன் பதிவிரதை முதலியோரும் அலௌ கிக தரிசனத்தால் கிருத கிருத்தியராயினும், காஷ்டமௌனமாக ஜடபரதாதியரைப்போலக் கர்மத்தினை உபேக்ஷிக்கிறதில்லை. தமக்குசித தர்மமான மாதாபிதாக்களைச் சேவித்தல், கணவன் பணி விடை முதலியவற்றினைச் செய்கின்றனர். இதுவும் மகா பாரதத் திற் சொல்லப்பட்டுள்ளது. (உ0)

श्रेयान्यत्कुरुते कर्म तत्करोत्यखिलो जनः ।
मनुते यत्प्रमाणं स तदेवानुसरत्यसौ ॥ २१ ॥

[அகூ] (அ-கை) ஞானிகளது கர்மங்களின் லோக சிக்ஷை யின் பொருட்டாந் தன்மையினையே கூறுகின்றார்:—

(சு-ம்) மேலானவன் (மற்றவர்களினும் அதிக மேன்மை யினை யுடையவனாய் வேதத்திற் சொல்லப்பட்ட கர்மநிஷ்டை யுடையவன்) (குரு தேவதாக்னி பித்திராதியரின் பஜனமாகிய) எதனைச் செய்கின்றானோ, அதனை (அவ்வாறே) எல்லா ஜனங்க ளும் செய்கின்றனர். அவன் (மேலானவன்) எந்தப் பிரமாணத் தினை மதிக்கின்றானோ, அதனையே இத்தாழ்ந்தவரும் அநுசரிக் கின்றனர். (எ-று)

சிஷ்டர்களாற் காட்டப்பட்ட மார்க்கத்தினை யநுசரித்தன வாகிய தேசாசார விசேஷங்கள் அந்தந்த ஜனங்களால் அநுஷ்டிக் கப்படுவனவாய்ப் பிரமாண வடிவங்களாகின்றன என்பது பிரசித் தமாய்க் காணப்படுகின்றது. (உக)

विष्टपे मे न साध्योऽस्ति कश्चिदर्थो नराधिप ।
अनालब्धश्च लब्धव्यः कुर्वे कर्म तथाप्यहम् ॥ २२ ॥

[கூ0] (அ-கை) இவ்வர்த்தத்திலேயே தனது ஆசாரத்தினை யும் பிரமாணத்தன்மையாகக் காட்டுகின்றார் :—

(சு-ம்) நராதிபனே! (ஜநகயாஞ்ஞவல்கியாதி பிரஹ்மவித் வடிவமாக இருப்பவனும், பிரஹ்ம வித்துத் தன்மையால் எல்லாக் காமங்களையும் பெற்றவனுயிருப்பவனுமாகிய) எனக்கு இம்மூவுல கத்தும் சாத்தியமான (சாதனத்தில் பெறத்தக்கதான) ஒரு அர்த்த மும் (ஆப்தகாமனுயிருத்தலினுலேயே) இல்லை. (அவ்வாறே வித் தையின் பயன் "அவன் எல்லாக் காமங்களையும் அநுபவிக்கின் றுன்" (தை-உ-க-க) என்று கேட்கப்படுகின்றது.) முழுவது மாக பெறப்படாததும் பெறவேண்டியதாயில்லை. (முழுவதுமாகப் பிரஹ்மத்தினை யுணர்ந்தவனுகலின்) என்றுலும் (முழுவதுமுணர்ந் தவனுயிருக்கினும்) யான் கர்மத்தினை (உலகத்திற் குபதேசித்தற் பொருட்டு)ச் செய்கின்றேன் (எ-று)

"பார்த்தனே! மூன்றுலகத்திலும் எனக்குச் செய்யவேண் டியதொன்றில்லை. அடையப்படாததாய் அடையத்தக்கதுமில்லை. என்றுலும் கர்மத்தில் இருந்து கொண்டே யிருக்கின்றேன்" என் னும் பகவத்வாக்கியம் பிரமாணமாம். மானுட நாட்டியத்தினைக் காட்டுபவரான அவருக்குச் சர்வ கர்மங்களையும் ஆசரித்தல் பெற ப்பட்டதேயாம். அவ்வாசரிப்பும் உலக சங்கிரகத்தின் பொரு ட்டு யுக்தமேயாம். தேவதா ரூபமான கணபதிக்கு மானுட நாட் டியம் நடித்தல் பொருந்தாது. "அத்தேவர்கள் புசிக்கிறதில்லை, பருகுகிறதில்லை" என்று சாமானிய தேவதைகளுக்கும் உண்ணல் பருகல் முதலியவற்றின்றன்மையைப் போதிப்பதான சுருதியினுல்

கர்மாபாவம் அறிவிக்கப்படுகின்றது எனின், சர்வதேவதா மயரான கணபதிக்குக் கேட்பானேன்? கர்மாதிகாரமுள்ள சரீர மின்றியவருக்கு வர்ணாசிரமோசிதமான கர்மமின்றிய தன்மையுள தாம். ஆதலால் கணபதி கர்மத்தினை யான் செய்கின்றேனென் றல் எவ்வாறுமெனின், அது பொருந்துமாறு காண்க:- "புத்தி ரனைப் பெற்றவன் கிருஷ்ணகேச முள்ளவனாய் அக்கினியை ஆதா னஞ் செய்க" என்று கேட்கப்படுவனவாகிய கர்மாதிகாரி விசே ஷணங்களின் சம்பவமில்லையாயினும், "பிரஹ்மவித்து பிரஹ்ம மேயாகின்றான்" என்பதும், "ஞானி எனது ஆத்மாவாகவே கரு தப்படுவன்" என்பதுமான சுருதி ஸ்மிருதிகளால் ஜனக யாஞ்ஞ வல்கியாதி பிரஹ்ம வடிவினரைச் சுவாமித்தன்மையாகக் காண் பவரான ஹேரம்பருடைய வாக்கியமாம் இது. ஆதலாற் பொரு ந்துமென்க.

முழுவதுமான பிரஹ்மத்தினை யறியாதவனுக்கு அடையப்ப டாததொன்று எஞ்சியிருக்கும்; முழுவதுமாகப் பிரஹ்மத்தினை யுணர்ந்தவனுக்கு இல்லை. இங்குச் சாஸ்திரத்தில் முழுவதுமாகப் பிரஹ்மமுணர்ந்தவர் காசகிருத்ஸ்னரும் பாதராயணருமாவர். அவ்விருவரினும் முதலாமவர் அரீசுவரர்; மற்றையவர் சர்வேசு வரர். அவ்விருவரும் "திராபியே அந்தஸஸ்பதியே தரித்திரம் நீலலோஹித" என்று சதருத்ரீயத்தில் தாரகப் பிரஹ்மமந்திரங்க ளால் தரித்திர அந்தஸஸ்பதி சப்தங்களால் சொல்லப்படுகின்றனர். அவ்வாறே நான்கு பாதங்களையுடைய பிரஹ்மத்தின் ஒவ்வொரு பாதத்தினை யுணர்பவராகிய நால்வர் முழுவதுமாகாத பிரஹ்ம வித்துக்களுளர். அவர்களுள் அந்நமெனப் பெயரிய விராட்டின் உபாஸகர் நீலலோகிதரென்னும் வேறு பெயருடைய ஜைமினி. அவ்வாறே பிராணனெனப்பெயரிய சூத்திரத்தின் உபாஸகர் திராபி யென்னும் பெயருடைய ஆச்மரத்தியராவர். அவ்வாறே மனது எனப் பெயரிய ஈசுவரனது உபாஸகர் திராபி மந்திரத்தில் புருஷ சப்தத்தாற் சொல்லப்படும் பாதரி யென்பவராவர். இவ்வாறே அப்ரவிலாபி யென்பவர் "அந்த இச்சூர்யன் வைமௌதுரதன்"

என்னும் நிராபி மந்திரத்தில் பசு சப்தத்தினுல் சொல்லப்படுகின்றூர். இது மேல் யுக்தியோடு விஸ்தாரமாய் விரிக்கப்படும். (உஉ)

न कुर्वेऽहं यदा कर्म स्वतन्त्रोऽलसभावितः ।
करिष्यन्ति मम ध्यानं सर्वे वर्णा महामते ॥ २३ ॥

[௬௧] (அ-கை) விபக்ஷத்தில் பாதகத்தினை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றூர்:—

(சு-ம்) (பரமேசுவரனுன ஜகத்குருவாகிய) யான் சுவதந்திரனுய், உதாசீனனுய் எப்போது கர்மத்தினை (நித்தியமும் நைமித்திகமுமான அக்னிஹோத்ர ஜாதேஷ்டி முதலியவற்றினை) ச் செய்யேனே, அப்போது எல்லா வர்ணங்களும் (பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள்) மகாமதியே! (வசிஷ்டாதிவடிவ) எனது தியானத்தினை (சர்வ கர்மங்களையும் விட்டிருத்தலை) ச் செய்வார்கள். (எ-று)

ஜகத்குரு சும்மாவிருக்கும் பக்ஷத்தில் அற்ப ஜடனும் ஞானமில்லாமலும் அதன் நடிப்பை மாத்திரம்காட்டி, தனது பிரயோஜனத்தினின்றும் பிரஷ்டனுகின்றுன். நீயோ மகாமதியாதலின் பாலாசார மாத்திர நிஷ்டனுகாதே. அதனுல் தனது பிரயோஜனத்தினின்று நழுவினவனுகாய் என்றதாம். (உ௩)

भविष्यन्ति ततो लोका ह्युच्छिन्नासंप्रदायिनः ।

[௬௨] (அ-கை) லோகம் கெடுக. எனக்குத் தனது ஸ்வார்த்தத்தினின்று ஹானி யாது என்றுசங்கித்துக் கூறுகின்றூர்.—

(சு-ம்) அதனுல் (என்னை நினைத்து நடித்தலால்) உலகத்தினர் (மூடர்கள்) அழிந்தவரும் சம்பிரதாய மின்றியவரும் ஆவார்கள். (எ-று)

தியானசம்பிரதாய சூநியர்களாய்க் கேவலம் அதனைப்போலச் சும்மாவிருப்பவர்கள், தமது கர்மத்தினை விடுதலாலாம் தோஷத்

தினல் திரியக்கு ஸ்தாவர நாரக யோனிகளை யடைந்தவராய் அழிவுடையவ ராகின்றனர். அழிவின்கண் சம்பிரதாயமின்மை ஏதுவாம்.

हन्ता स्यामस्य लोकस्य विधाता संकरस्य च ॥ २४ ॥

(அ-கை) அதனாலும் என்னை யெனக் கூறுகின்றார்:—

(சு-ம்) இவ்வுலகத்தின் (மித்தியாத் தியானிகளின்) கொலைஞன் (ஹிம்ஸகன் யானே) ஆவேன். அவ்வாறே சங்கரத்தினை (தர்மாசார வியவஸ்தையி னின்மையினை) ச் செய்பவனுமாவேன். (எ-று)

அது லோக பரிபாலனத்தின் பொருட்டும் தர்மத்தினை ஸ்தாபிக்கும்பொருட்டும் வெகு அவதாரங்களைத் தரிப்பவனாகிய எனக்கு அத்தியந்த விருத்தமா மென்பது பொருள். (உச)

कामिनो हि सदा कामैरज्ञानात्कर्मकारिणः ।
लोकानां संग्रहायैतद्विद्वान्कुर्यादसक्तधीः ॥ २५ ॥

[கூரு] (அ-கை) இவ்வாறு ஞானி யஞ்ஞானிகட்கு சமமாகக் கர்மாநுஷ்டானம் வாய்க்குமாயின், அவ்விருவருள் விசேஷமானவன் யாவனென்னும் ஆகாங்க்ஷையில் கூறுகின்றார்:—

(சு-ம்) காமிகளே (சுவர்க்க புத்திராதி விருப்புடையோரே) எப்போதும் அஞ்ஞானத்தினல் (ஆத்மாவே சர்வகாமமயம்; அதனிலாபத்தால் யாவும் பெறப்பட்டதேயா மென்னும் ஞானமில்லாமையால்) காமங்களால் (விரும்பப் படுவனவாகிய திவ்விய ஸ்திரீ மாலை சந்தன வஸ்திராதி விஷயங்களான நிமித்தங்களால்) கர்மகாரிகள் (அவ்வவ் விஷயங்களைப் பெறுதற்பொருட்டு அவ்வவ் விஷயங்களைப் பெறுவிப்பனவாகிய கர்மங்களைச் செய்யு மியல்பினர்) ஆகின்றனர். அசக்த (கர்த்திருத்வாபிமானமும் பலத்தின்தின் ஆசக்தியுமில்லாத) புத்தியுடையவனான வித்வான் லோகங்களின் சங்கிரகத்தின் பொருட்டு இதனை (கர்மத்தினை) ச் செய்வான். (எ-று)

கேவலம் கர்மப் பிரயோக சதுரனுன வித்வான் இங்கு சொல்லக்கருதினவனல்ல னென்பார் "அசக்த புத்தியுடையவனுன வித்வான்" என்ருர்.

சக்தத் தன்மை யசக்தத் தன்மைகளாற்ருன் மந்தன் அறிஞ னிருவர் கர்மங்களுமுள; சொரூப பேதத்தால் இல்லை என்பது பொருள். (உரு)

विभिन्नत्वमतिं जह्यादज्ञानां कर्मचारिणाम् ।
योगयुक्तः सर्वकर्माण्यर्पयेन्मयि कर्मकृत् ॥ २६ ॥

[கூசு] (அ-கை) இவ்வாறு வித்துவானுக்கும் அவித்துவானுக்கும் கர்மபேத மிருக்கினும் அவித்வானது மதிபேதத்தினை வித்வான் செய்யலாகா தென்று கூறுகின்ருர் :—

(சு-ம்) அஞ்ஞ (மூட)ர்களான கர்மசாரி (சங்கபூர்வகமாகக் கர்மஞ் செய்யுமியல்பினர்) களது விபின்னத்துவ மதியினை (மூடர்களாகிய உங்கள் கர்மங்கள் வேறுவகையானவை ஞானிகளாகிய எங்கள் கர்மங்கள் வேறுவகையானவை யென்று செய்யப்படும் கர்மங்களில் பேதவுணர்ச்சியினை) நீக்கவேண்டும். (வித்துவான் அவித்துவான்களது பிரயோக பேதத்தினைத் தெரிவிக்கலாகாதென்பது பொருள்.) மற்ருே, யோகயுக்தனுய் ("சித்திய சித்திசளில் சமமானவனுய்க் கர்மத்தினைச்செய். சமத்துவம் யோகமெனப்படுகின்றது" என்று கூறிய லக்ஷணமுள்ள யோகத்தோடு கூடியவனுய்) சர்வ கர்மங்களையும் என்னிடத்தில் அர்ப்பிக்கவேண்டும். (அதனுல்) கர்மம் செய்பவனே யாவன். (கர்மத்தினை விடான் என்பது பொருள்.) (எ-று)

அசக்தன் (பற்றில்லாதவன்) சக்தர் (பற்றுள்ளவர்) களிடத்து அசக்தத்தன்மையினை (வைராக்கியத்தினை) வெளிப்படுத்தி அவர்கட்கு உபகாரஞ்செய்பவனுகின்ருன் என்பதனுல் விபின்னத்துவ மதியினை விடுவிக்க வேண்டுமென்று எவ்வாறு சொல்லப்படுகின்ற தென்னுமிடத்திற் கூறப்படுகின்றது :—

மூடன் ஸ்வாத்மாவின் அகர்த்திருத்துவத்தினையும் அறியான். நிஷ்களமான கர்மத்திலும் பிரவர்த்தியான். ஆதலால் ஸகாம கர்மத்தினைவிட கர்மம்செய்யாமையே சிரேயசென்றுமதித்து லோகமிரண்டினின்றும் நழுவுகிறான். அது மேலானதாம். ஸ்வர்க்கார்த்தமான கர்மம் செய்தலினும் இடையின்றிய சித்தசுத்தி யுண்டாகுமென்பதனால் காமிகளும் போகத்தினை அழியுமியல்பினதென்று காண்கின்றனர் சித்த சுத்தியநுசாரமாக வென்பது யுக்தமாம். ஆதலால் அவர்களது புத்தி பேதத்தினைச் செய்பலாகாது என்பது பொருள். (உசு)

अविद्यागुणसाचिव्यात्कुर्वन्कर्माण्यतन्द्रितः ।
अहंकारान्मन्दबुद्धिरहंकर्तेति योऽब्रवीत् ॥ २७ ॥

[கூடு] (அ-க) ஆனால் வித்வான்களும் பாரிவிராஜ்ய (சந்நியாச) த்தினை அநுஷ்டியாது ஏன் கர்மத்தினைச் செய்கின்றனரென்றுசங்கித்துக் கூறுகின்றனர் :—

(சு-ம்) அவித்தியா குணப் பிராதானியத்தால் (வித்வானும் அநாதி சம்ஸ்காரத்தால்) சோம்ப லின்றியவனாய் (சந்தியோபாசனாதி) கர்மங்களைச் செய்துகொண்டே யிருக்கின்றான். எவன் அகங்காரத்தால் (அநாத்மாவாகிய அகங்காரத்தினையும் ஆத்மாவினைப்போல அத்தியசித்து) யானே கர்த்தா வென்று சொல்லுவானோ, அவன் மந்த புத்தியாவன். (எ-று)

தேகாதி யநாத்மாக்களில் ஆத்ம புத்தி அதாவது யான் மனிதன் கர்த்தா போக்தா அதிகாரி யென்னும் புத்தி எதுவோ அது அவித்தையாம். அதன் குணம் போக்திருத்வாபிமானமாம். அது "ஸ்வபாமாய் வாசனா ரூபமாய் நிகழ்வதும் அவித்வானைப் போல் வித்வானுக்கும் ஏறியிருப்பதான பற்று அபிநிவேசம்." என்று சொல்லப்பட்ட லக்ஷணமுடைய அபிநிவேசமாம். அதனால் வித்வானும், கர்த்திருத்துவாபிமானம் ஆகாயநீலம் பிரதிபிம்பாதிகளின் பிரமமுடைமைபோலப் பரிகரிக்கக் கூடாததாயிருத்தலின் சோம்பலின்றிச் செய்கின்றான் என்பது பொருள்.

வித்வான்களுக்கும் இவ்வாறு பரிகரிக்க முடியாத கர்மம் அவித்தையினால் விழுங்கப்பட்டவரான அவித்வான்களுக்கு எவ்வாறு பரிகரிக்கக் கூடியதாமென்பது கருத்து. (உஎ)

यस्तु वेत्त्यात्मनस्तत्त्वं विभागाद्गुणकर्मणोः ।
करणं विषये वृत्तमिति मत्वा न सज्जते ॥ २८ ॥

[கூ௲] (அ-கை) இவ்வாறிருக்கினும், வித்வான்களின் விசேஷத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) எவன் ஆத்மாவின் தத்துவத்தினைக் குணம் (இந்திரியங்கள்) கர்மம் (அவை தத்தம் விஷயங்களைப் பிரகாசித்தல்) என்னும் இரண்டன் விபாகத்தால் (அவற்றினின்று ஆத்மாவினை வேறெனக் காண்டலால்) அறிகின்றானோ (உருவமின்றியதும் பஞ்சகோசாதிகமும் சத்திய ஞானாநந்தைக ரஸமும் பொய் துக்கமென்பவற்றின் ஸ்பரிச மின்றியதும் அகர்த்தாவும் அபோக்தாவுமா மென்று சுருதியநுபவங்களால் அபரோக்ஷீகரிக்கின்றானோ,) (தனது அவைதப் பிரதீதியிலும்) கரணம் (பதினான்குவகை யிந்திரியமும்) விஷயத்தில் (பதினான்குவகையான தத்தமர்த்தத்தில்) பொருந்தியிருக்கின்றது.) (அவற்றின் சாக்ஷியாகிய யான் பொருந்திலேன்) என்று நிச்சயித்துப் பற்றான் (யான் இக்கர்மத்தினைச் செய்கின்றேன். அதனாலாகிய ஹர்ஷவிஷாதங்களை யடைகின்றேனென்னும் சங்கமாகிய அபிமானத்தினைச் செய்யான்). (எ-று)

இவ்விடத்திலோ சக்ஷுவானது ரூபத்தினைக் காண்கின்றது. அதன் செய்கையினை அதனபிமானியாகிய சிதாபாசனே யடைகின்றான்; அவற்றின் பிரகாசகனான கூடஸ்த ஆத்மா அடைகிறதில்லை. அவ்வாறாகவே, பிரமாதாப் பிரமாணப் பிரமேய வியவகாரத்தினையும், அதனாலாகியனவாய்ப் பிரமாதாவிலிருக்கும் ஹர்ஷவிஷாதங்களையும் பிரகாசித்து, அச்சங்காதங்களின் வேறுபட்டவனான ஸ்வயஞ்சோதி யாத்மா பிரமாதாவினைப்போல ஹர்ஷவிஷாதங்களால் பற்றப்படாமல் இஃதிந்திரியச் செய்கை யென்றிருப்பான்.

அவித்தையின் குணப்பிராதானியத்தால் அபிநிவேசம் வித்துவானுக்கும் காணப்படுகின்றது. ஆதலால் அவன் பற்றுன் என்பது எவ்வாறுமெனின், ஆகாயத்தின் கருமைமுதலியன தோற்றிக்கொண்டிருக்கினும் துச்சத்துவநிச்சய மிருத்தலால் என்னும் இவ்வுத்தரம் கொடுக்கப்பட்டதாம். (உ-அ)

कुर्वन्ति सफलं कर्म गुणैस्त्रिभिर्विमोहिताः ।
अविश्वस्तः स्वात्मद्रुहो विश्वविन्नैव लङ्घयेत् ॥ २९ ॥

[௬௭] (அ-கை) அஞ்ஞர்கள் எவ்வாறு பற்றுகின்றனர் என்னும் அபேக்ஷையிற் கூறுகின்றார்.—

(சு-ம்) (மாயையின் தமசு இராஜசு சத்துவமென்னும்) மூன்று குணங்களால் விசேஷமாக மோகிக்கப்பட்டவர்கள் பயனோடு கூடியதான கர்மத்தினைச் செய்கின்றனர். விசுவாசமி (சாஸ்த்திரத்தில் சிரத்தை பக்தியின்மையினாலேயே நம்பிக்கையி) ல்லாதவர்களான தமது ஆத்மத் துரோகி (எண்பத்து நான்கிலக்ஷம் யோனிகளிற் செலுத்துதலால் தமதாத்மாவுக்குத்தாமே துரோகத்தினைச் செய்பவர்களாகிய மூடர்) களை எல்லாமுணர்ந்தவன் (ஆத்மாமாத்திரமாம் யாவும் என்று அறிபவனாய்) திரஸ்கரியான். (எ-று)

தமசினால் இரஜ்ஜுவினைப்போலப் பிரத்திபக்குத் தத்துவம் ஆவரி (மறை) க்கப்பட்டதான இராஜசினாலோ அவ்விடத்திற்றானே அகங்காராதி கடாந்தமான பிரபஞ்சம் சர்ப்பம்போல் விக்ஷேபப் படுகின்றது. அதுவும் மூன்று விதமாம். அவற்றுள், சொப்பனப் பிரபஞ்சம் பொய்யே யாம். சர்வப் பிராணிப் பிரத்தியக்ஷபாதமாம். இது நித்தியமேயாம். இதயத்ததோ(மனோராஜ்ஜியமோ) சத்தியமும் நித்தியமுமாம். இதனாற்றான் யோகிகள் இருதயாகாசத்திற் பிரவேசித்தவர்களாய் எல்லாவற்றையும் முக்காலத்தையும் சர்வாவஸ்தையினதையும் சங்கற்ப சமகாலத் தெழுந்ததனையும் கரதலாமலகம்போற் காண்கின்றனர் என்பது பூர்வஜன சித்தாந்தமாம். அந்த இம் மூவித ஜகத்தையும் சத்துவாம்சத்தினால் சத்தியமென்றே மதிக்கின்றனர். இவ்வாறு முக்குணங்களால் மோகிக்கப்பட்டவர்களாய் ஸபலமான கர்மத்தினைச் செய்கின்றனர் என்க.

இக்காரீரியாகாதி கர்மங்களால் என்றல் இம்மறைவடிவ பயன் உண்டுபண்ணப்பட்டது. அதனுல் தானிய சம்பத்தும் சுகமும் பெறப்பட்டது என்று மதிக்கின்றனர் மந்தர்கள். உப நிடதங்களில் விசுவாசமுடையவர்களோ முக்குணங்களாலாம் அம்மோகத்தினைச் சிரவணமனன நிதித்தியாசனங்களால் போக்கி, ஏகரஸமான வஸ்துவினைக் காண்பவர்களாய் அவற்றிற் பற்றுகிற தில்லை. அஃதாமாறு:— இராஜசு தமசுகளால் மலினமான சத்து வத்தினுல் நிச்சயிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் பரமார்த்த தத்துவம் (உண்மை) "மாயாமாத்திரமான இத்துவைதம் இந்திரஜாலம்போல நிலைத்துள்ளது" என்பதும், மித்யா தரிசனத்தால், நாநாவென் பது இங்கு எதுவுமில்லை" என்பதுமான இவை முதலியவற்றின் சிரவணத்தினுல் நீக்கப்படுகின்றது. அவ்வாறே 'அகங்காராதிகள் மித்தையாம்; திருசியமாதலால்' என்னும் சுருதியினு லநுக்கிரகிக் கப்பட்ட அநுமானத்தினுல் அதே விக்ஷேபாம்சத்தின் அந்தத் தன் மையினை நிச்சயிக்கின்றான். அதன்பின் ஐவகை யநாத்மாகாரப் பிரத்தியயத்தினை (விருத்திகளை)த் திரஸ்கரிப்பதனுல் அவ்வவ் வுபாதிவடிவத் தன்மையினை நீக்குதல் பூர்வகமான இராஜ்ஜு தத் துவம் போல நிர்பீஜசமாதி யப்பியாசத்தால் ஆத்ம தத்துவத்தினை நிச்சயிக்கின்றான் சாஸ்திரபலத்தால்.

திரஸ்கரியான் என்பதற்கு அம்மூடர்களது அநுக்கிரகத்தின் பொருட்டுத் தானும் கர்மங்களைச் செய்வன். அவர்களையும் செய் விப்பன் என்று முற்கூறியது மறக்கத்தக்கதன் றென்பது கருத் தாம். (உகூ)

नित्यं नैमित्तिकं तस्मान्मयि कर्मार्पयेद्बुधः ।
त्यक्त्वाहंममताबुद्धिं परां गतिमवाप्नुयात् ॥ ३० ॥

[கூஅ] (அ-கை) இதே அஞ்ஞன ஜிஞ்ஞாஸுவின் அவசிய மான கர்மங்களின் கர்த்தவ்வியத் தன்மையினைக் காட்டுகின்றார்:—

(சு-ம்) (எதனுல் கர்மங்கள் ஞானவிருப்பத்தினை உண்டு பண்ணுதல் வாயிலாக ஞானத்தினை உண்டாக்குகின்றனவோ) அத னுல் (அக்னிஹோத்திர சந்தியோபாசனுதி) நித்தியமும், (கிரகண

காலத்தில் ஸ்நானதானதியும் புத்திரஜன்மாதியில் ஜாதேஷ்டி யாதியுமான ) நைமித்திகமுமான கர்மத்தினைச் செய்து அமிஞன் (சர்வாந்தரியாமியான) என்னிடத்தில் அர்ப்பணஞ் செய்யக்கட வன். (அவ்வாறு அர்ப்பித்தலையும்) அகந்தைப் புத்தியி (இவ் வர்ப்பணஞ்செய்கிறவன் யானென்னும் கர்த்திருத்வ வாபிமா னத்தி) னையும் மமதைப் புத்தியினையும் (யான் இக்கர்மத்தின் பயனை விடுகின்றேன் என்று அதிலுண்டாம் தனதெனும் தன்மை யபிமானத்தினையும்)விட்டு (கேவலம் ஈசுவரப் பிரீதியின் பொரு ட்டாக)ச் செய்யக்கடவன். (அவ்வாறு செய்வதனல் )மேலான கதியினை அடைவான். (எ-று)

எனது அநுக்கிரகத்தினுலுண்டாகிய ஞானத்தினல் அவித் தை நீங்கியவனுய்க் கூடஸ்தாத்மத்தன்மையாக இருப்பனென்பது பொருள். (௩௦)

अनीर्ष्यन्तो भक्तिमन्तो ये मयोक्तमिदं शुभम् ।
अनुतिष्ठन्ति ये सर्वे मुक्तास्तेऽखिलकर्मभिः ॥ ३१ ॥

[கக] (அ-கை) இதனையே துதிக்கின்றார் :—

(சு-ம்) ஈரிஷையில்லாதவர்களும், பக்திமான்களுமான எவர் கள் எவர்கள் என்னுற் சொல்லப்பட்ட இதனை (எனதர்ப்பணத் தினை) ச் செய்கின்றனரோ, அவர்களெல்லோரும் சர்வ கர்மங்களி னின்றும் முக்தராகின்றனர். (எ-று)

வெகு திரவியச்செலவு பிரயாஸை யென்பவற்ருற் சாதிக்கப் படும் யஞ்ஞ முதலியவற்றிலும் தமது துக்கத்திற்கேதுவாந் தன்மையினுலும் என் துவேஷத்தினுலும் எல்லாவற்றையும்கொள் ளாதவராய் வேதமார்க்கத்தில் பக்தியின்மையால் ஆதரமின்றிய வர்கள் எவர்களோ அவர்கள் ஈரிஷையுடையவ ரெனப்படுவர். அவ ரின் விபரீதமானவர் ஈரிஷையில்லாதவ ராவர்.

செய்தல் இருவகையினதாம்:—ஒன்று பக்திமான்களின் மா னதமான யஞ்ஞாநுஷ்டானம், மற்றையவரதோ கிரியாமயமான அநுஷ்டானமாம். அதனல் எந்தப் பக்தியுடையவர் பக்திமய

யஞ்ஞத்தினைச் செய்கின்றனரோ, எந்தக் கிரியையுடையவர் கிரியாமய யஞ்ஞத்தினைச் செய்கின்றனரோ அவர்கள் எல்லோரும் என்பது தோன்ற 'எவர்கள் எவர்கள்' என்றார்.

யஞ்ஞஞ் செய்பவருக்கும் யாகபலம் சமானமாக "எவன் அசுவமேதத்தினால் யஜிக்கின்றானோ, எவன் இவ்வாறு இதனை அறி (உபாசிக்) கின்றானோ அவன் பாபத்தினைக் கடக்கின்றான்; பிரஹ்மஹத்தியினைக் கடக்கின்றான்" என்று பிருகதாரணியகத்தில் கேட்கப்படுகின்றது. அவ்வாறே மந்திரவர்ணமும் பிராதாவினால் கிணற்றில் தள்ளப்பட்ட திரிதனுக்கு மனோமய யஞ்ஞத்தினை "திரிதன் கிணற்றில் ஏகாக்கிரனாய் ஊதியின் (சோமபானாதி கர்மத்தின்) பொருட்டுத் தேவர்களை அழைத்தான்" (ருக். க-எ-உ௩) என்று காட்டுகின்றது. இது பாரதத்தில் வனபர்வதத்தில் திரிதகூப உபாக்கியானத்தில் விரித்துரைக்கப்பட்டுளது. (௩க)

ये चैव नानुतिष्ठन्ति त्वशुभा हतचेतसः ।
ईर्ष्यमाणान्महामूढान्नष्टांस्तान्विद्धि मे रिपून् ॥ ३२ ॥

[௧00] (அ-கை) அது செய்யாதவிடத்துத் தோஷத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) எவர்கள் அசுப (சுபமாகிய அதாவது கல்யாணத்தினைச் செய்வதாகிய புண்ணியமில்லாதவ)ர்களாய் எவர்கள் (பாப மிகுதியால்) நஷ்டமான சித்தமுடையவர்களாய் (இக்கூறிய விதமாகக் கர்மத்தினை) அநுஷ்டிக்கிறதில்லையோ, (அசுபராதலால்) ஈரிஷையுடைய (பூர்வம் சொல்லப்பட்ட துவேஷபுத்தியினைச் செய்ய)வர்களும், (நஷ்ட சித்தமுடையவராதலால்) மகாமூட (மந்த)ர்களுமான அவ்விரண்டு நஷ்டர் (அறிவழிந்கமையால் திரியக்கு ஸ்தாவராதி மூடயோனியை யடைந்த நஷ்டமானவர் போன்றவர்) களையும் (சாஸ்திரகர்த்தாவான) என்னுடைய சத்துருக்களென்று அறி. (எ-று)

மூலத்துள்ள च (உம்) என்பதனால் அசுபர் ஆலசியத்தினாற் பிரவிருத்தியார், நஷ்டசித்தர் பரலோகமில்லை யென்னும் புத்தி

யால் மறுமைப்பயனையுடைய கர்மத்தினை யநுஷ்டியார் என்பது சூசிக்கப்படுகின்றது.

அநுஷ்டியாதவன் விரோதியென்பது "சுருதி ஸ்மிருதிகள் என்னுடைய ஆணைகள். எவன் அவ்விரண்டனையும் கடந்து நடக்கின்றானோ, எனதாணையைச் சேதிப்பவனான அவன் என்னுடைய துவேஷியாய் நரகத்தினை யடைகின்றான்" என்று ஸ்மரிக்கப்பட்டுளது. (கூஉ)

तुल्यं प्रकृत्या कुरुते कर्म यज्ज्ञानवानपि ।
अनुयाति च तामेव ग्रहस्तत्र मुधा मतः ॥ ३३ ॥

[க0க] (அ-கை) சுவதந்திரத்தன்மையால் புருஷன் கர்மங்களைச் செய்தும் செய்யாமலும் குணதோஷமடைபவனாகின்றானெனின், அந்தரியாமிப் பிராஹ்மணம் பயனின்றியதாம். அதுவே பிரமாணமெனின், சுவதந்திரமின்றிய புருஷன் கர்மத்தினாலாம் குணதோஷமிரண்டனையும் அடையானென்றாசங்கித்து, அநீசுவர சாங்கிய மதத்தினை யவலம்பித்துப் பரிகரிக்கின்றார்:—

(சு-ம்) ஞானவானும் (தத்துவபுருஷாந்யதாக்கியாதியென்னும் வேறுபெயருடைய ஆத்மாநாத்ம விவேகத்தினையுடைய புருஷனும்) எதனால் பிரகிருதிக்குச் சமமான கர்மத்தினைச் செய்கின்றானோ, எதனால் அந்தப் பிரகிருதியினையே (நன்மை தீமையான கர்ம விஷயத்தில்) அநுசரிக்கின்றானோ, அதனால் அங்குக் கர்மத்தில் ஆக்கிரகம் (இக்கர்மத்தினையே செய்வேன் இதனைச் செய்யேன் என்னும் நிர்பந்தம்) வியர்த்தமாகக் கொள்ளப்படுவதாம். (அஞ்ஞானத்தினாலேயே மூடர்களால் கொள்ளப்படுவதா மென்பது பொருள்). (எ-று)

முன் முன் கர்மத்தினாலாகிய சம்ஸ்காரமான சாத்துவிக அல்லது இராஜஸதாமஸ ஸ்வபாவம் (இயற்கை) எதுவோ அது பிரகிருதி யெனப்பட்டது. அதனையொத்துக் கர்மத்தினைச்செய்கின்றானென்பதில் தர்மவியாதன் துலாதாரன் முதலியோர் ஞானவான்களாயினும், வேட்டை வாணிபமுதலிய உசிதகர்மத்தினையே

செய்தனர். இவ்வாறே கர்க்கடியென்னும் அரக்கி ஞானமுடையவ ளாயினும், தனது யோனிஸ்வபாவத்தால் (பிறப்பிடத்தி னியற்கை யால்) மனிதர்மாம்சங்களினாலேயே ஜீவனம் செய்துகொண்டிருந் தாள் என்று வாசிஷ்டத்தில் சொல்லப்பட்டுளது. எப்படி ஆல் அரசு முதலியவற்றின் வித்து சாதாரணங்களான (பொதுவான) தேஜோபலங்களாற் பூரிக்கப்பட்ட தாய்ப் பிரகிருதியின் ஸ்வபாவத் தினால் ஆலமுளையினையேயாவது அல்லது அரசமுளையினையே யா வது அவ்வவ் வித்தின் சக்திபேதத்தால் முளைக்கச்செய்கின்றதோ, இவ்வாறுதலை வேறுவிதமாக்கச் சிற்பிகள் நாற்றுவராலும் முடியா தோ, அதுபோல வென்றறிக. (௩௩)

कामश्चैव तथा क्रोधः स्वानामर्थेषु जायते ।
नैतयोर्वश्यतां यायादस्य विध्वंसकौ यतः ॥ ३४ ॥

(அகை) இவ்வாறு புருஷர்களுக்குப் பிரகிருதியினை யொட்டி யொழுகுந்தன்மை யிருத்தலால் விதிநிஷேத சாஸ்திரம் நீர்வார்த்து விடப்பட்டதாமே யென்றுசங்கித்து, மதாந்தரத்தினை (வேறு கொள்கையினை) க் கூறுகின்றார் :—

(சு-ம்) இந்திரியங்கட்கு அர்த்தங்களில் (இந்திரிய கோசரத் தன்மையடைந்தனவாகிய ஸ்திரீ யந்நபானாதி விஷயங்களில்) கா மம் (இது எனக்குண்டாகுக வென்னும் அபிலாஷை) பிறக்கின் றது. அவ்வாறே குரோதம் பிறக்கிறது. (யாதேனு மோர் நிமித் தத்தால் அக் காமமும் தடைபட்டபோது கோபவடிவமாகப் பரி ணமிக்கின்றது). எதனால் இப்புருஷனுக்குக் காமக்குரோதங்க ளிரண்டும் புருஷார்த்த நாசகங்களா யிருக்கின்றனவோ, அதனால் அவ்விரண்டன் வசமாதலை யடையலாகாது. (அவ்விரண்டும் ஜயிக்க வேண்டியனவே யாம் என்பது பொருள்). (எ-று)

காமக்குரோதங்கள் பிறத்தலால் இச்சாத்துவேஷாதி தர்ம முடைய ஆத்மா கர்த்தாவும் போக்தாவுமாகின்றா னென்பதனால் அவனை ஈசுவரனது ஆணைவடிவ விதிநிஷேதங்கள் எச்சரிப்பிக் கின்றன. அதனால் புருஷன் நன்மையான கர்மத்தினையே செய்

வேன் அசத்தினை விடுவேனென்று ஆக்கிரகம் செய்யவே கடவன் என்பது பொருள். (௩௪)

शस्तोऽगुणो निजो धर्मः साङ्गादन्यस्य धर्मतः ।

[௧0௩] (அ-கை) அதனுலென்னை யெனக் கூறுகின்றார்:—

(சு-ம்) பிறனது சாங்கமான (அங்கங்களோடு குறைவின்றிய) தர்மத்தினைவிட குணமின்றியதான தனது தர்மம் மேன்மையானதாம். (எ-று)

விருத்திவேண்டிய பிராஹ்மணனுக்குக் கிரகணகாலத்தில் தீர்த்தத்தில் ஏற்றலானது ஜீவனமாத்திர விருப்புள்ள அவனுக்கு சிலாக்கிய மானதாம்; ஸ்வதர்ம மாதலால் தர்மத்தோடு கூடியதாயினும் வாணிபம் சிலாக்கியமின்றியதாம்; பரதர்மமானதால்.

निजेतस्मिन्मृतिः श्रेयोऽपरत्र भयदः परः ॥ ३५ ॥

(அ-கை) இதனையே திடப்படுத்துகின்றார் :—

(சு-ம்) தன்னதாகிய அந்தத் தர்மத்தில் மரித்தல் சிரேயஸாம் (ஸ்வர்காதி மகாபலத்தைத் தருவதாம்). பரதர்மம் பரலோகத்தில் நரகாதி பயத்தினைத் தருவதாம். (எ-று)

பரதர்மாசரணமாகிய அதுவே பிராஹ்மணனுக்கு நரகத்தினைத் தருவதான துர்மரணமாகின்றது என்க. (௩௫)

पुमान्यत्कुरुते पापं स हि केन नियुज्यते ।
अकाङ्क्षन्नपि हेरम्ब प्रेरितः प्रबलादिव ॥ ३६ ॥

[௧0௪] (அ-கை) இங்கு, "இவனே எவனை நற்கருமம் செய்விக்கின்றானே அவனை இந்தலோகங்களினின்றும்மேலேகொண்டு செல்லுகின்றான் இவனே எவனைத் தீக்கருமம் செய்விக்கின்றானே அவனை கீழேகொண்டு செல்லுகின்றான்" (காடக-௩-அ); "அஞ்ஞனும் தனது சுக துக்கங்களில் சாமர்த்திய மில்லாதவனுமான இந்த ஜந்து ஈசுவரனுற் பிரேரிக்கப்பட்டவனுய் ஸ்வர்கத்தினையாவது நரகத்தினையாவது அடைகின்றான்." என்னும் ஈசுவரவாதத்தி

ஷம் பிரவிருத்திவாதத்திலும் சுவதந்திரத்துவ மில்லாதவனுக்கு விதிநிஷேதங்கள் அநர்த்தமுடையனவாம். ஸ்வதந்திர வாதத்தில் அவற்றின் சம்பவமாம். இவ்வாறு பரஸ்பரவிரோத மிருத்தலால் நிர்ணயத்தினை அறிய விரும்பும் வரேணியன் கேட்கலாயினன் :—

(௬-ம்) ஹேரம்பரே! புருஷன் விரும்பாதிருந்தும் பிரபலமாக (வாயுவாதியால் புல் இலை முதலியவற்றைப்போற்) செலுத்தப் பட்டவனாய் எந்த (பிறன்மனை நயத்தல் களவு ஹிம்ஸை முதலிய) பாபத்தினைச் செய்கின்றானோ, அங்கு அவன் (அசாதாரண நிமித்தமாகிய) எவனால் செலுத்தப்படுகின்றான்? (என்பது பிரசினம்) (எ-று)

ஈசுவரனால் என்னும் பக்ஷத்தில் ஈசுவரனுக்குப் பக்ஷபாதத் தன்மையும் இரக்க மின்மையும் நேரும். ஸ்வபாவத்தா லென்னும் பக்ஷத்தில் ஒன்றற்கு மற்றொன்றன் வடிவமாந்தன்மை சம்பவியாது. ஆலவித்திற்கு அரசமுளையினை யுண்டுபண்ணுந் தன்மை சம்பவியாது. ஆதலால் விசேஷஹேது சொல்லவேண்டியதாம்.

'ஹேரம்பரே! என்று விளித்ததனால் இது சூசிக்கப்பட்டதாம் :—हर्य गतिकान्त्योः க்ஷர்ய என்பது கதிகாந்தி யென்னும் இரண்டு அர்த்தங்களிலும் வரும் என்பதற்கு हर्यतेः कन्यन्हिर च என்பதனால் कन्यन् பிரத்தியயம் வரும்போது தாதுவிற்கு हिर (ஹிர) என்னும் ஆதேசம் (திரிபு) காணப்பட்டதாம். அதுவே மிகுதிப்பாட்டான் अम्बच् பிரத்தியயத்திலும் செய்யப் படுகின்றது. हर्यति என்பது பிறவினைப் பகுதிப்பொருளுடையதாம். हर्यति (ஹர்யதி)—இச்சையைப் பிறப்பிக்கின்றது என்பதனால் ஹேரம்பன் அதாவது புத்தியைப் பிரவிருத்திக்கச் செய்பவன் என்பது அர்த்தம். இதனால் அந்தர்யாமிபக்ஷத்தின் சிரேஷ்டத்துவம் சூசிக்கப்பட்டது. (௬௬)

कामक्रोधौ महापापौ गुणद्वयसमुद्भवौ ।
नयन्तौ वश्यतां लोकं विद्धचेतौ द्वेषिणौ वरौ ॥ ३७ ॥

[௧0௫] (அ-கை) இங்கு உத்தரம் ஸ்ரீ கஜானனர் சொல்லலாயினர் :—

(கூ-ம்) காமக்குரோத மிரண்டும் ஜயித்தற்கரியனவாய் (பரதாரகமன பரதுரோகாதிகட்குக் காரணமாதலால்) மகா பாபங்களும், (கிரமமாக) இராஜசுதமசென்னு மிரு குணங்களினால் உண்டாயினவும், உலகத்தினை (மனிதர் பசுவாதிகளை) ஸ்வாதீனமாக்குவனவுமாம். இவ்விரண்டனையும் மேலான சத்துருக்களாக அறி. (புருஷனைப் பாபத்தில் பிரவிருத்திக்கச் செய்யும் அழிவற்ற துக்க ஹேதுக்களா மென்பது பொருள்.)

காமமென்பது இரஜோ குணத்தி னுண்டாவதான இஃது எனக்கு உண்டாகவேண்டு மென்னும் இச்சையாம். குரோதமாவது காமத்தினாற் பிரவர்த்திக்தவனுக்கு யாதேனுமோர் நிமித்தத்தினால் தோற்றுகின்ற சித்தத்தின் கலக்கமெதுவோ அந்த அபிஜ்வலன (எரிதல்) வடிவ மோக ஹேதுவான தமோகுண விகாரமாம்.

அபிப்பிராயம் இதுவாம்:— மழையினைப்போல ஈசுவரன் சாதாரண (பொதுக்) காரணம். அசாதாரண (சிறப்புக்) காரணங்களோ அவ்வவ் வித்துக்களின் சக்தியினைப் போல ஒவ்வொரு புருஷனிடத்தும் வேறு வேறாம். அதனால் சிரேயசுள்ளவன் காமாதிகளை ஜயித்து சத் (நற்) கருமங்களைச் செய்கின்றான். இவ்வாறே பக்ஷாந்தரத்திலுமாம். அவ்வாறே பரமரிஷியின் சூத்திரம் "செய்யப்பட்ட பிரயத்தினபேக்ஷயோ விதிக்கப்பட்டனவும் விலக்கப்பட்டனவும் வியர்த்தமாகாமை முதலியவற்றானும்" என்று கூறுகின்றது. விதிநிஷேத சாஸ்திரம் பயனின்றியதாக லாகாதென்பதனால் புருஷர்களுக்குச் சுவதந்திரத்தன்மை அவசியம் சொல்ல வேண்டியதாம். அதனால் அவர்களால் பூர்வஜன்மத்தில் எந்தப் புண்ணிய பாபாதி செய்யப்பட்டிருக்கிறதோ அதனபேக்ஷயால் (அதனை முன்னிட்டு) ஈசுவரன் அவர்கட்கு நன்மையான அல்லது தீமையான கர்மங்களில் உருசியுண்டாக்கி, அதிற் பிரவிருத்திக்கச் செய்கின்றான். அது பாரதத்தில் "தேவர்கள் பசுபாலனைப்போலத் தண்டத்தினைக் கொண்டு இரக்ஷிக்கிறதில்லை. எவனை இரக்ஷிக்க விரும்புகின்றார்களோ அவனைப் புத்தியோடு செவ்வையாகப் பொருத்துகின்றனர். எப்புருஷனுக்குத் தேவர்கள் இழப்பினைத் தருகின்றனரோ, அவனுடைய புத்தியினைக் கீழ்ப்படுத்துகின்றனர்.

அவன் பிறனைவற்றைக் காண்கின்றான்" என்று கூறப்பட்டுளது. இதுவே ஈசுவரனது அந்தரியாமித்துவமாம் (உள்ளேயிருந்து நியமிக்குந் தன்மையாம்). அதாவது நன்மை தீமையான கர்மத்தில் புருஷர்களுக்கு உருசியை யுண்டுபண்ணுதலாம். பிரகிருதியினும் வேறுவிதமாதல் புருஷர்களின் சுவாதந்திரியத்தினாலேயே பொருந்துகின்றது. வேத்திரத்தின் காட்டுத்தீயால் தகிக்கப்பட்ட வித்துக்கள் கதலிகாண்ட (வாழைக்கட்டை) ரூபமாக முளைத்தல் கண்டதேயாம். ஆகலால் ஜீவர்கட்குப் பிராரப்த கர்மபோகாதிகளிற்றான் பாரதந்திரத்துவம், யஞ்ஞாதிகளில் ஸ்வதந்திரத் தன்மையாமென்பது கொள்ளத்தக்கதாம். (கூஎ)

आवृणोति यथा माया जगद्बाष्पो जलं यथा।
वर्षमेघो यथा भानुं तद्वत्कामोऽखिलांश्च रुट् ॥ ३८ ॥

[கoசு] (அ-கை) காமக்குரோத மிரண்டற்கும் பாபத்திற் கேதுவாந் தன்மை எவ்விதத்தினாலென்பதனைக் கூறுகின்றார்:—

(சு-ம்) எப்படி (ஐந்திரஜாலிகப் பிரயுக்தமான) மாயை ஜகத்தினை மறைக்கின்றதோ, எப்படிப் பாஷ்பம் (மலை நதி சமுத்திரங்களை மறைக்கும் நீர்ப்புகை பனி முதலியன ஜனங்களது திருஷ்டியினை மறைப்பனவாய் நதி முதலிய) ஜலத்தினை மறைக்கின்றதோ, எப்படி மழைகாலத்து மேகம் சூரியனை மறைக்கின்றதோ அதுபோலக் காமம் ஜனங்களின் திருஷ்டியை) மறைக்கின்றது. அவ்வாறே கோபமும் எல்லோரையும் மறைக்கின்றது. (எ-று)

சேதனாசேதனமான விசுவம் गच्छतीति जगत् = போகின்றது என்பதனால் ஜகத்தெனப்படுகின்றது.

இந்திரஜால வித்தை செய்வோர், பெரிய ஜலாசயத்தில் சதுரங்க சேனையோடு கூடிய பெரிய தலத்தினைச் சிருஷ்டிக்கின்றனர்; அவ்வாறே தரையிலேயே பெரிய சமுத்திரத்தினைப் பெருத்த அலைக்கூட்டங்களும் கப்பல்கள் நூறும் பொருந்தியதாகக் காட்டுகின்றனர் என்பது உலகத்திற் கண்டதேயாம். அங்கு அசேதனத்தின் மறைப்பும் சேதனத்தின் கண்கட்டும் எவ்வாறு காணப்படுகின்ற

தோ அதுபோலக் காமமானது ஸ்திரீயாதிகள் அனர்த்தகாரணமா தலை மறைத்துச் சுகத்தினைத் தருவனவாகக் காட்டுதலால் சகல ஜனங்களையும் மறைக்கின்றதென்பது பொருள். அவ்வாறே "துக்கம் ஜன்மம் பிரவிருத்தி தோஷம் மித்தியாஞான மென்பவற்றின் பிந்தியது பிந்தியது நஷ்டமாதலால் யாவும் இடையீடின்றிக் கெடுதல் அபவர்க்கமாம்' என்று பரமரிஷியான கௌதமரது நியாயசூத்திரம் (க-க-உ) கூறுகின்றது. மித்தியாஞானமே இராகாதிதோஷத்தினை யுண்டு பண்ணுதல் வாயிலாகப் புருஷனைப் புண்ணியத்திலாவது பாபத்திலாவது பிரவர்த்திக்கச் செய்கின்றது. அதன் பின் கர்மத்தினையொட்டிய துக்கபோகத்திற்கிடமான ஜன்மம் கிடைக்கின்றது. ஆதலால் மித்தியாஞானம் நஷ்டமாயின் தோஷமின்மையால் பிரவிருத்தியில்லையாம். பிரவிருத்தியில்லாதபோது ஜன்மமில்லையாம். ஜன்மமின்மையால் துக்கமின்மையாகிய மோக்ஷமுண்டாம். எல்லாவற்றிற்கும் மூலமான மித்தியாஞானமோ தத்துவஞானத்தினாலேயே நசிக்கின்றதென்பது சூத்திரார்த்தமாம்.

மூலத்திலுள்ள च காரத்திற்குப் பின் என்பது பொருளாம். அதனால் அவ்விரண்டன் (காமக்குரோதங்களின்)முன்மை பின்மை கூறப்பட்டதாம். (ரு-அ)

प्रतिपत्तिमतो ज्ञानं छादितं सततं द्विषा ।
इच्छात्मकेन तरसा दुष्पोष्येण च शुष्मिणा ॥ ३९ ॥

[கூஎ] (அ-கை) காமத்தின் அனர்த்த ஹேதுத்தன்மையினை விவரிக்கின்றார்:—

(சு-ம்) அறிவுடைய புருஷனது ஞானம் (ஆரோபித ஞானைகரஸ ஸ்வரூபம்)சததம் (அநாதிகாலந்தொட்டு) இச்சை (இஃதெனக்குண்டாகுக வென்னு மபிலாஷை)வடிவினதும், (க்ஷணத்தில் புருஷனை வசஞ் செய்யும்) வேகமுடையதும், (விஷயகோடிகளாலும் திருப்தி யடையாமையால்) துக்கத்தினாலும் போஷிக்கமுடியாததும், (விஷயத்தினைச் சம்பாதிக்கும் வலியாற் புருஷனைப் பிரவர்த்திக்கச் செய்வதனால்) வலியுடையதுமான காமவடிவவதுவேஷிபி (சத்துருவி) னால் மறைக்கப்பட்டுளது. (எ-று)

காமம் என்பதனை முன் சுலோகத்தி னின்றும் கூட்டுக. (௩௯)

आश्रित्य बुद्धिमनसी इन्द्रियाणि स तिष्ठति ।
तैरेवाच्छादितप्रज्ञो ज्ञानिनं मोहयत्यसौ ॥ ४० ॥

[௧௦௮] (அ-கை) காமம் ஞானத்தினை மறைத்து என்ன செய்கின்றதென்னும் அபேக்ஷையிற் கூறுகின்றார்:—

(சு-ம்) அக்காமமானது புத்தியையும் மனதினையும் இந்திரியங்களையும் ஆசிரயித்து நிற்கின்றது. அவற்றி (பகிர்முகங்களான புத்தியாதிகளி) னாலேயே பிரஞ்ஞையினை (தத்துவ ஞானத்தினை) மறைப்பதாய் இக்காமம் ஞானியை (பரோக்ஷப் பிரஞ்ஞையுடையவனை) மோகிப்பிக்கிறது (விஷயநோக்கமுள்ளவ னாக்குகின்றது.

ஞானியை மோகிக்கச் செய்யுமெனின், அஞ்ஞனைப் பற்றிக் கேட்பானேனென்பது பொருள். புத்தியாதிகள் அந்தர்முகமானபோது புருஷன் தமஸை நீக்கி ஸ்வாத்ம சுகத்தினை யநுபவிக்கின்றான். அவை பகிர்முகமானபோது பாகிய ஸ்பரிசாநுபவத்தினால் சுகதுக்கங்களை அநுபவிக்கின்றான். அது, "உனது ஸ்வரூபமே, நீ பகிர்முகனாய் அதனைக் காணாதபோது உனக்குத் துக்கத்தைத் தருவதாகின்றது, உனது ஸ்வரூபமே, நீ(அந்தர்முகனாய்) தமஸை நிவர்த்தித்து அதனைக்காணும்போது உனக்குத் திருப்தியினைத் தருவதாகின்றது." என்று கூறப்பட்டுளது. (௪௦)

तस्मान्नियम्य तान्यादौ स मनांसि नरो जयेत् ।
ज्ञानविज्ञानयोः शान्तिकरं पापं मनोभवम् ॥ ४१ ॥

[௧௦௯] (சு-ம்) (எதனால் புத்தியாதிகளால் முன்னர் காமம் புருஷனை மோகிக்கச் செய்கிறதோ) அதனால் நரன் மனதோடு அவற்றை (சர்வாநர்த்த மூலங்களான அப்புத்தியாதிகளை) ஆதியில் (மரணதிகட்கு முன்னரே) அடக்கி (தத்தம் விஷயங்களினின்றும் திருப்பி அதாவது இயம நியமாசனப் பிராணாயாம பூர்வகமான பிரத்தியாகாரத்தினைச் செய்து), மனத்தினின் றுண்டாகியதும், ஞானவிஞ்ஞானங்களைக் கெடுப்பதும், பாபமுமான காமத்தினை ஜயிக்கக்கடவன். (எ-று)

இந்திரியங்கள் பிறிதா லிழுக்கப்பட்டனவாயினும், யோகி மனதினாலேயே எல்லா விஷயங்களையும் ஸ்மரித்துப் பரிணமிக்கலாகாதென்று 'மனதோடு அவற்றை' என்றார்.

இங்குப் புத்திபாதிகளைத் தத்தம் விஷயங்களினின்று திருப்புதல் பிரத்தியாகாரமும், வஸ்துவில் நிறுத்துதல் ஜயமுமா மென்பது பேதம். மனத்திற்றோன்றிய காமத்தினையும் மனோஜயத்தினாலேயே ஜயிக்கவேண்டு மென்று கொள்க.

ஞானம் சாஸ்திராசாரிய உபதேசத்திற் றோன்றிய பிரஞ்ஞை. விஞ்ஞானம் அறியப்பட்டதான அர்த்தத்தின் அநுபவம்.

எல்லாவநர்த்தங்கட்கும் மூலமாதலால் கடத்தற் கரிய நரகாதிகளிற் சேர்ப்பிப்பதாகலின் காமம் பாப மெனப்பட்டது. (சக)

यतस्तानि पराण्याहुस्तेभ्यश्च परमं मनः ।
ततोऽपि हि परा बुद्धिरात्मा बुद्धेः परो मतः ॥ ४२ ॥

[கஉo](அ-கை) சர்வாநர்த்த காரணமான காமத்தினை ஜயித்தோர் கிருதகிருத்தியனாகின்றான் என்னும் அபிப்பிராயத்தினாற் கூறுகின்றார்:—

(சு-ம்) யத் என்பதினும் (பொருட் கூட்டத்தினும்) அவற்றினை (இந்திரியங்களை)ப் பர (சூக்ஷ்ம)ங்களாகவும், அவ்விந்திரியங்களினும் மனதினைப் பரமா (மேலானதா)கவும் கூறுவர். அம்மனதினும் பிரசித்தமான புத்தி மேலானதாகவும், புத்தியினை விட ஆத்மா (சோதிக்கப்பட்ட துவம்பதார்த்தம்) பரமாக (சூக்ஷ்மதமமாக)வும் மதிக்கப்பட்டுளது. (எ-று)

**एति गच्छति नश्यतीति यत्** செல்லுகின்றது அதாவது நசிக்கின்றது என்னும் விற்பத்தியால் யத் எனப்படுவது அநித்தியமான புத்திராகாராதி அர்த்தகணமாம். அதனை யடக்குவதினும் இந்திரியங்களை யடக்குதல் செய்தற்கரியதாம். அதனை யடக்குதலைவிட இது வெனுமர்த்தவடிவ அந்தக்கரண விருத்தியாகிய மனதினை யடக்குதல் பிரயாசையாம். அதனை (இது வெனும் வடிவ அர்த்தமான லோகத்தினை) விட அஹமாகார (யானெனும்

வடிவ) அந்தக்கரண விருத்தியினை யடக்கு (அகங்காரார்த்தத்தினை விடு)தல் கடினமாம். அகங்காரத்தினை விடுதலினும் நிர்விகற்பமும் யாதெனும் பிரத்தியயம் நீங்கியதுமான சிதேகரஸ வடிவமாக நிலைத்தல் அத்தியந்தம் துர்லபமா மென்பது பொருள். (௪௨)

बुद्ध्वैवमात्मनात्मानं संस्तभ्यात्मानमात्मना ।
हत्वा शत्रुं कामरूपं परं पदमवाप्नुयात् ॥ ४३ ॥

[௧௧௧] (அ-கை) அதனால் என்னை யெனக் கூறுகின்றார்:—

(௪-ம்) இவ்வாறு (கூறியவிதத்தால்) அந்தக்கரணத்தினால் (சிதேகரஸமாக) ஆத்மாவினை யநுபவித்து, மனதினைப் புத்தியினால் அடக்கி (நிறுத்தி)க் காமரூபமான சத்துருவினைக் கொன்று பரம பதத்தினை யடைக. (எ-று)

ஆத்மாவினையறிந்து புத்தியினாலேயே மனோவிருத்தியினை ஆத்மாவாக்கி அதாவது அர்த்தத்தினை விடுதலால் அஸ்மிதை மாத்திர வடிவாக நிறுத்தி அவ்வாத்மாவினும் இலவணோதக நியாயமாக (உப்பும் நீரும்போல) ஒடுங்கியபோது காமமூலங்களான விஷய வாசனைகள் நிர்விகற்ப சமாதியப்பியாச திடத்தன்மையால் களையப் படுகின்றன. அவ்வாசனை கெடவே அவற்றினை மூலமாகவுடைய காமத்திற்கு நாசமுண்டாகின்றது. பின் பரமபதத்தினை யடைகின்றா னென்பது அபிப்பிராயமாம். அவ்வாறே சுருதியும், "அதன்பின் மர்த்தியன்(மரணதர்ம முடையவன்) அமிருதனாகின்றான் (பிருக. ௪-௪-எ) இங்குப் பிரஹ்மத்தினை யடைகின்றான் என்று கூறுகின்றது. (௪௩)

ओंतत्सदिति श्रीमद्गणेशगीतासूपनिषदर्थगर्भासु योगामृतार्थशास्त्रे श्रीगणेशपुराणे उत्तरखण्डे गजाननवरेण्यसंवादे सांख्यसारार्थयोगो नाम द्वितीयोऽध्यायः ॥ २ ॥

ஸ்ரீ கணேசகீதையில் சாங்கியயோகமென்னும்
இரண்டாமத்தியாயம்
முடிந்தது.

## மூன்றும் அத்தியாயம்.

**श्रीगजानन उवाच ॥**

पुरा सर्गादिसमये त्रैगुण्यं त्रितनूरुहम् ।
निर्माय चैतमवदं विष्णवे योगमुत्तमम् ॥ १ ॥

[ககஉ] (அ-கை) முன் சஉ-வது சங-வது சுலோகங்களால் எந்த யோகம் சுருக்கமாகக் கூறப்பட்டதோ அதில் சிரத்தையினை யுண்டுபண்ணுதற்காக, அது வேதத்தின மூலமாகவுடைய தன்மையால் அநாதி பரம்பரையா லடையப்பட்ட தாதலை விவரித்து ஸ்ரீகஜானனர் சொல்லலாயினர்:—

(சு-ம்) முன் சிருஷ்டியினுதி காலத்தில் மும்மயிர்க் கயிறு போன்ற முக்குண சமூக வடிவ அவ்யக்தத்தினை நிர்மித்து இந்த (மூன்றுக்கப்பட்ட) உத்தமமான (முந்திய முந்தியதனைப் பிந்திய பிந்தியதில் ஒடுக்குதலாகிய யோகத்தினை (ஆதிகுருவாகிய) விஷ்ணுவிற்குச் சொன்னேன். (எ-று)

பூதாங்கியத்துவ வாதிகட்குப் பௌதிக சிருஷ்டியின் முன்மையிருக்கலாகாதென்பதும், ஆகாசாதி சிருஷ்டிவாதிகட்கு அச் சிருஷ்டியின் முன்மை யிருக்கலாகாதென்பதுமான இத்தன்மையின் பொருட்டு "முன்" என்றும், "சிருஷ்டியினுதிகாலத்தில்" என்றும் கூறியதாம். ஆகவே இரண்டு காலத்திற்கும் முன் என்பது பெறப்படுகின்றது. "நிர்மித்து" என்பதனுல் முக்குண சமூகத்தின் உற்பத்தி சொல்லப்படுகின்றது இதுவே பரமவியோம சப்தத்தினும் அவ்யக்தாதி சப்தங்களாலும் சொல்லப்படுகின்றது. அங்கு "பிராஹ்மணோத்தமனே! அதனின்றும் முக்குணமாகிய அவ்யக்த முண்டாயிற்று" என்றும், "நிஷ்களமான புருஷனிடத்தில் அவ்யக்தம் செவ்வையாய் ஒடுங்குகின்றது" என்றும் ஸ்மிருதியில் அதன் உற்பத்திலயமிரண்டும் கேட்

கப்படுகின்றன. இவ்வாறே வியோமாபரமெதுவோ வென்று பூத பௌதிக சிருஷ்டிக்கு முன்னும் பரவியோம மெனப்படும் அதன் அபாவம் கேட்கப்படுதலால் அதற் குற்பத்தி நாசங்களை யடையுந் தன்மை அறியப்படுகின்றது. கேசம்போன்ற பிரகாசம் பிரவிருத்தி நியமமென்னும் மூன்று காரியங்கள் எதற்கிருக்கின்றதோ அது 'மும்முயிர்க்கயிறுபோன்ற' தாம். ஆகாசாதி சர்வ வஸ்துக்களும் சத்வாம்சத்தினுல் பிரகாசிக்கின்றன; இரஜோம்சத்தினுல் வாயுவினைப் போற் பிரவர்த்திக்கின்றன; தமோம்சத்தினுல் பூமியாதிகளைப்போல ஜடமா (அறிவில்லாதனவா)கின்றன. ஆதலால் காரியத்தில் பிரகாசம் பிரவிருத்தி நியம மென்பவை காணப்படுதலின், காரணமும் வெளிப்படாத சத்துவரஜஸ்தமோமய மாமென்பது சித்திக்கின்றது.

இத்தன்மைய பந்தகாரணமான காரியத்தோடு கூடிய அவ்வஞ்ஞானத்தினை யுண்டுபண்ணி, அதனை நிவிருத்திக்கும் பொருட்டு வேதமுகத்தால் யோகத்தினை யுபதேசித்தனர் என்பது பொருளாம்.

அவ்வாறே சுருதி "அவன் சம்சாரமார்க்கத்தின் எல்லையினை யடைகின்முன் "அது விஷ்ணுவின் (வியாபகமான ஆத்மாவின்) பரம பதமாம்" (கட. ௩-௯) என்று வைஷ்ணவ பரமபதத்தின் அறிதற் கரிய தன்மையினைக்கூறி, அதனை யறிதற்பொருட்டு "பிராஞ்ஞன் (அறிஞன்) வாக்கினை மனதில் ஒடுக்குக. அதனை ஞானமாகிய ஆத்மாவில் ஒடுக்குக. ஞானத்தினை மகத்தாகிய ஆத்மாவில் ஒடுக்குக. அதனைச் சாந்தமாகிய ஆத்மாவில் ஒடுக்குக" (கட-௩-க௩) என்று யோகத்தினைக் காட்டுகின்றது. இதனுல் இது கூறியதாம்:— வாக்கு முதலிய வெளியிந்திரிய வியாபாரத்தினை விட்டு மனோமாத்திரமாக நிற்குக. விஷயவிகற்பத்திற் கெதிர்முகமாகும் மனத்தினையும் விஷய தோஷ தரிசனத்தால் ஞானசப்தத்தினுற் சொல்லப்படும் நிச்சய ஸ்வபாவமான புத்தியில் நிறுத்துக. அப்புத்தியினையும் அஸ்மிதை மாத்திரத்தினைக் காண்பதான போக்தாவாகிய மகத்தென்னு மாத்மாவில் நிறுத்துக. அந்தப் போக்தாவினையும் பரமும், காரணமின்றியதும், ஞாதிருஞான விபாக சூநியமும், பரகாஷ்டையு (எல்லாவற்றின் மேற்பட்ட வெல்லையு) மான சாந்தாத்மாவில் நிறுத்துக என்பதாம். (க)

अर्यम्णे सोऽब्रवीत्सोऽपि मनवे निजसूनवे ।
ततः परम्परायातं विदुरेतं महर्षयः ॥ २ ॥

[௧௧௩] (அ-கை) இவ்வித்தையின் பரம்பரையினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) அவரும் (விஷ்ணுவும்) சூரியனுக்கு இந்தயோகத்தினைச் சொன்னார். அச்சூரியனும் தனது புத்திரனான வைவஸ்வத மநுவுக்குச் சொன்னார். அம்மனுவினின்றும் சிஷ்யாசாரிய பரம்பரையாக வந்த இதனை (வசிஷ்டர் முதலிய) மகரிஷிகள் அறிவார்கள். (எ-று) (௨)

कालेन बहुना चायं नष्टः स्याच्चरमे युगे ।
अश्रद्धेयो ह्यविश्वास्यो विगीतश्चाश्च भूमिप ॥ ३ ॥

[௧௧௪] (சு-ம்) பூபனே! (அதன்பின்) வெகுகாலத்தால் (திரேதா துவாபரகலியுகங்களில் யுகத்திற் கொருபாதம் குறைதலால்) இது (யோகமெனப்படும் பரமதர்மமானது) கடைசியான கலியுக முடிவில் சிரத்தையோடு செய்யப்படாததாயும் விசுவசித்தற் குரியதாகாததாயும், நிந்திக்கப்படுவதாயும் முற்றுமழிந்ததாகின்றது. (எ-று)

சிரத்தையோடு செய்யப்படாமை முதலியன மூன்றும் அழிதற்குக் காரணமாம்.

சிரத்தையாவது குருவேதவாக்கியாதிகளில் பயன் அவசியமுண்டா மெனும் நிச்சயமாகிய நம்பிக்கையாம். சம்பிரதாய பிரவர்த்தகரான குருவிருக்கினும் சிஷ்யர்களுக்குச் சிரத்தையில்லாமையே நாசத்திற்குக் காரணமாம்.

திருஷ்ட பயன்களையுடைய காரீரியாகாதிகளில் ஒருவன் சிரத்தையோடு பிரவர்த்தித்தவனாயினும், பயன் இந்த ஜன்மத்தில் அவசியமுண்டாகு மென்னும் நிச்சயமின்மையால் "விசுவசித்தற்குரியதாகாததாயும்" என்றும், கொக்கைப்போல விருதாவாகவே பலரை வஞ்சித்தற்பொருட்டுத் தியானிக்கின்றான் என்று பழிக்கப்படுவதாதலின் "நிந்திக்கப்படுவதாயும்" என்றும் கூறப்பட்டது. (௩)

एतं पुराभवं योगं श्रुतवानसि मन्मुखात् ।
गुह्याद्गुह्यतमं वेदरहस्यं परमं शुभम् ॥ ४ ॥

[கக௬] (அ-கை) இவ்வாறு யோக நாசத்தில் காரண முன்றி னைக்கூறி; அதன் பிரவிருத்தியில் நீயே காரணமென்று கூறுகின் றார்:—

(சு-ம்) முன்னுள்ளதும் (வேதத்தினால் போதிக்கப்படுந்தன்மை யால் அநாதியும்,) குஹ்யத்தினும் குஹ்யதமமும் (அதனாலேயே) வேதாகசியமும் பரமமும் (மிகமேலானதும்) சுபமுமான இந்த (முற் கூறிய) யோகத்தினை எனது முகத்தினின்றும் கேட்டவனாகின்றாய். (எ-று)

இகலோகத்ததான இதம் (நலம்) குஹ்ய மாம் (மறைவானதாம்); பரலோகத்தது குஹ்யதர மாம். ஆத்தியந்திகமான இதம் குஹ்யதம மாம்.

திவ்வியமான ஔஷதாதிகள் இரகசியமானவைகளாயினும், அற்ப பயனுள்ளன வென்பது தோன்ற "பரமமும்" என்றும், பரம மானதற்கும் அழிவுடைமையாகிய அசுபத்துவமுளதா மாகலின் அஃதின்றிய தென்பது தோன்ற "சுபமும்" என்றும் அடைகொடு த்தார். ஆத்தியந்திக கல்யாண மென்பது சுபம் என்பதன் பொரு ளாம். (௪)

वरेण्य उवाच ॥

साम्प्रतं चावतीर्णोऽसि गर्भतस्त्वं गजानन ।
प्रोक्तवान्कथमेतं त्वं विष्णवे योगमुत्तमम् ॥ ५ ॥

[ககஎ] (அ-கை) கணபதி விக்கிரகத்தின் உதயாஸ்தமயங்கள் சூரியனது தரிசனமும் தரிசனமின்மையும் போலவாமென் றுணராத வனாய் வரேணியன் கேட்கலாயினான் :—

(சு-ம்) கஜானனரே! தாம் இப்பொழுதுதானே மாதாவின் கர்ப்பத்தினின்று அவதரித்திருக்கின்றீர். (அவ்வாறாகக் கற்பாதியி லவதரித்த சூர்யனுக்கும் முன் சித்தித்திருப்பவரான) விஷ்ணுவுக்கு நீர் எப்படி இந்த உத்தம (கல்யாண காரணமாம்) யோகத்தினைச் சொன்னவராவீர்? (இது எவ்வாறு சம்பத்தக்கதாம்.) (எ-று) (௫)

गणेश उवाच ॥

अनेकानि च ते जन्मान्यतीतानि ममापि च ।
संस्मरे तानि सर्वाणि न स्मृतिस्तव वर्तते ॥ ६ ॥

[கஙஎ] (அ-கை) தனது விக்கிரகத்தின் அநாதியநந்தத் தன்மையினைக் காட்டுபவராய் ஸ்ரீ கஜானனர் சொல்லலாயினர்:—

(சு-ம்) வரேணியனே! உனக்கும் எனக்கும் அநேக ஜன்ம (சரீரக்கிரகண) ங்கள் கழிந்தன. அவ்வெல்லாவற்றையும் (குன்றாத ஞானசக்தியினையுடையவனும் மாயா மிருகத்தினை யாட்டுகிறவனுமாகிய யான்) செவ்வையாய் நினைக்கின்றேன். (கர்மத்தினுலாம் தேகங்களால் முற்பிறப்புக்களின் ஞானம் கவரப்பட்டவனுகிய) உனக்கோ நினைவிராது. (எ-று)

இதனுல், கவரப்படாத ஞானமுடைய தனக்கு ஒரு சட்டையினின்றும் மற்ருேர் சட்டையில் நுழைவது போலவாம் வேறு சரீரத்திற் பிரவேசித்தல்; தேகத்தில் தாதாத்மியாத்தியாசம் எனக்கில்லையென்னுந்தன்மை காட்டப்பட்டது. இங்கு வாசிஷ்டத்தில், "வராததும்" சென்றதும், இமைப்பொழுது கற்பமென்பதும், அவ்வாறே தூரமும், சமீபமும், இனியாவதும், தூலமும், அணுவுமாகிய இவற்றைச் சிதாத்மாவினுள்ளனவாகவே காண்க; மாயையினுல் விரிந்ததாம், என்று சொல்லப்பட்டுளது. இதனுல் எப்போது எல்லாமும் எல்லா வவத்தையும், எப்போதும் மாயையிற் காணப்படுகின்றதோ அப்போது மாயையினைச் செலுத்தும் விக்கிரகத்திற்கு நித்தியத்துவம் * கைமுதிக நியாயத்தால் பெறப்பட்டதேயாம். இதனுற்ருன் மார்க்கண்டேய புராணத்தில் "அவள் தேவர்களினது காரியசித்தியின் பொருட்டு எப்போது ஆவிர்பவிக்கின்ருளோ, அப்போது அவள் நித்தியமானவளாயிருந்தும், உற்பத்தியானவளாகச் சொல்லப்படுகின்ருள்" என்று கூறப்பட்டிருக்கின்றது. எனக்குச் சூரியனைப்போல ஆவிர்பாவ திரோபவங்களாம்; உனக்கோ கடாதிகளைப்போலவாம். இதுவே நம்மிருவரின் விசேஷமாம் (பேதமாம்).

मत्त एव महाबाहो जाता विष्णवादयः सुराः ।
मय्येव च लयं यान्तिप्रलयेषु युगे युगे ॥ ७ ॥

[கக௯] (சு-ம்) மகாபாகுவே! (யான்விஷ்ணுவாதியருக்குமுன்னரே சித்தித்திருத்தலால் மாயையினைச் சிருஷ்டிக்கும் அநாதி விக்கிரகமான) என்னிடத்தினின்றே (மாயாம்ச வுபாதியினாகிய) விஷ்ணுவாதி தேவர்கள் உண்டானார்கள் அவ்வாறே பிரளயகாலங்களில் யுகந்தோறும் (மாயாசங்கார கர்த்தாவாகிய) என்னிடத்திலேயே (மாயையின் இலயத்தால்) இலயத்தினை யடைகின்றனர். (எ-று)

தேவர்கள் என்னிடத்தினின்று பிறந்தனர் என்றதன் அபிப்பிராயம் இதுவாம்:— எனது மாயை சத்துவாம்சத்தினால் பாலன கர்த்தாவான விஷ்ணுவினையும், இரஜோம்சத்தினால் சிருஷ்டிகர்த்தாவான பிரஹ்மாவையும், தமோம்சத்தினால் சங்காரகர்த்தாவான ருத்திரனையும் சிருஷ்டிக்கின்றது. மூன்றன் முழு அம்சங்களாலும் துரியமூர்த்தியினைப் படைக்கின்றது. இம்மூர்த்தியினைச் சைவர் சிவனென்றும், வைஷ்ணவர் விஷ்ணுவென்றும், காணேசர் கணபதியென்றும், சாக்தர் சக்தியென்றும், சௌரர் சூர்யனென்றும் கூறுகின்றனர் என்பதாம்.

இங்கு யுக சப்தத்தினால் ஆகாயாதிப் பிரரம்பிக்கப் பட்டவற்றினது பிரளயத்தின் இடைப்பட்டகாலம் சொல்லப்படுகின்றது. எப்போது யுகசப்தத்தினால் கிருத திரேதா துவாபர கலிகள் சொல்லப்படுகின்றனவோ, அப்போது புருஷனே யுக சப்தவாச்சியனாவான். அவ்வாறே 'தூங்குகிறவன்கலி, விழிப்பவன் துவாபரன், எழுந்திருப்பவன் திரேதா, நடப்பவன் கிருதத்தினைப் பொருந்துகின்றான்' (ஐத-பிரா-௩௩-௩) என்று கேட்கப்படுகின்றது. இதன் பொருளிதுவாம்:—

காரியாகாரிய விவேக சூனியனாய் மோகாந்தகாரத்தில் மூழ்கித் தூங்குகிற புருஷன் கலி, சிறிது விவேகமுள்ளவனாய் விழித்திருப்பவன் துவாபரன். எழுந்து கர்த்தவ்வியா கர்த்தவ்விய விசாரபூர்வகமாக எவன் எத்தனஞ் செய்கின்றானோ, அவன் திரேதா. அவனே எழுந்து நடப்பவனாய் அதாவது அதனதன் விஞ்ஞான பூர்வகமாகக் கர்மயோகத்தினையாவது தியானயோகத்தினையாவது அநுஷ்டிக்கும் புருஷனாய்க் கிருதனாகின்றான். இவ்வாறு எல்லா யுகங்களி

லும் நால்வகைப் புருஷர்களிருக்கின்றனர். ஆதலால் எல்லா யுகங்களிலும் ஞானமார்க்கம் உள்ளதேயாம். அதனுல் யோகத்தின் ஆத்தியந்திக நாசம் ஒருபோது மில்லை. தாழ்ந்த புருஷாபிப்பிராயத்தினுலோ எப்போதுமே யுளதாமென்னுங் கருத்தால் "இது கடைசி யுகத்தில் நஷ்டமானதாம்" என்றதற்கு உரைசெய்து கொள்ளவேண்டும். (எ-று)

अहमेवापरो ब्रह्मा महारुद्रोऽहमेव च ।
अहमेव जगत्सर्वं स्थावरं जङ्गमं च यत् ॥ ८ ॥

[ககக] (அ-கை) விஷ்ணுவாதியருக்குத் தன்னிடத்தினின்று தோன்றிய தன்மையால் தன்னின் வேருதற்றன்மை யின்மையினையே கூறுகின்றார்:—

(சு-ம்) (சதுர் முகனைவிட மேலான) வேறு பிரஹ்மா (இரணிய கர்ப்பன்) யானே. மகாருத்திரனும் (மகாப்பிரளயத்தினையடைந்த அவ்வியாகிருதமான சமஷ்டி யாநந்தமயனும்) யானே. யாதொரு ஸ்தாவர ஜங்கமமான ஜகத்துளதோ அது முழுவதும் யானே. (எ-று)

"அவ்யாகிருத மிருந்தது" என்றல் முதலிய சுருதிப் பிரசித்தமான அவ்யாகிருதம் மகாருத்ர னெனப்பட்டது. (அ)

अजोऽव्ययोऽहं भूतात्माऽनादिरीश्वर एव च ।
आस्थाय त्रिगुणां मायां भवामि बहुयोनिषु ॥ ९ ॥

[கஉ0] (அ-கை) இவ்வாறு சாமானியமாகத் தனது சர்வாத்மத்தன்மையினைக்கூறி, மச்சிய கூர்மாதி தனது விசேஷாவதாரங்களையும் கூறுகின்றார்:—

(சு-ம்) அஜ (உற்பத்தி யில்லாதவ) னும், அவ்யய (நாசமில்லாதவ) னும், (நித்த சத்திய சித்தஸ்வரூபத்தினுல்) பூதாத்மாவும் (முன்னரே யிருப்பவனும்), அநாதியும் (காரண சூநியனும்), ஈசுவரனு (அந்தரியாமியு) மான யான் முக்குணவடிவ (சத்துவ ரஜஸ் தமோ வடிவ) மாயை (அவித்தியாசக்தி) யினைக்கொண்டு (மச்சிய கூர்மாதி)வெகு யோனிகளில் ஆவிர்பவிக்கின்றேன். (எ-று)

அநாதியாகக் கொள்ளாவிடின் அதற்கு வேறு காரணம் அதற்கு வேறு காரணமென்று அநவஸ்தை வருதலின் 'அநாதி' யென்றதாம். (௯)

अधर्मोपचयो धर्मापचयो हि यदा भवेत् ।
साधून्संरक्षितुं दुष्टांस्तानत्तुं संभवाम्यहम् ॥ १० ॥

[௧௨௧] (அ-கை) எப்போது ஆவிர்பவிக்கின்றீர் என்னும் அபேக்ஷையில் கூறுகின்றார்.

(சு-ம்) பாபத்தின் வளர்ச்சியும் புண்ணியத்தின் குறைவும் எப்போதுண்டாகின்றதோ அப்போது யான் (தர்மாநுஷ்டானஞ் செய்யும்) சாதுக்களைச் செவ்வையாய் இரக்ஷிக்கவும், (அதர்மபரான) துஷ்டர்களை விழுங்கவும் அவதரிக்கின்றேன் (எ-று)

அதர்மநாசமும் தர்மஸ்தாபனமும் எனது அவதாரப்பிரயோஜனமாமென்பது பொருள். (௧௦)

उच्छिद्याधर्मनिचयं धर्मं संस्थापयामि च ।

[௧௨௨] (அ-கை) இதனையே விளக்குகின்றார் :—

(சு-ம்) (பரதாரகமன பரதிரவியாபகரண பரத்துரோகாதி வழுவ) அதர்மத்தினைச் செய்பவர்களாகிய கீழ்மக்களது சமூகத்தினைக் களைந்து, (சமதமாதிகளோடு கூடியதான யஞ்ஞ தானாதி யநுஷ்டான மார்க்கமாகிய) தர்மத்தினைச் செவ்வையாக நிலைக்கச் செய்கின்றேன். (எ-று)

हन्मि दुष्टांश्च दैत्यांश्च नानालीलाकरो मुदा ॥ ११ ॥

(அ-கை) தர்மத்தினை நிறுத்துதற் கேதுத் தன்மையாகக் கீழ்மக்களின் நாசம் முன்னர் அநுஷ்டிக்கத்தக்கதாமென்று கூறுகின்றார் :—

(சு-ம்) களிப்போடு நாநா லீலைகளை (தர்ம மார்க்கத்தினை ருசிப்பிக்கும் சரிதங்களான குருதேவதாக்னி பஜனங்களை)ச் செய்பவனாய்த் துஷ்டர் (நற்குலத்திற் பிறந்தவர்களாய் அதர்மத்தினைச்

செய்பவர்) களையும், தைத்தியர் (வேதத்தினைத் துவேஷிப்பவர்களான மிலேச்சபாஷண்டர் முதலியோர்) களையும், கொல்லுகின்றேன். (எ-று)

எப்படி ஔசீநரனென்னும் சிபி சக்கிரவர்த்தி சரணடைந்த புருவினை இரக்ஷித்தற் பொருட்டு, அதனைத் துரத்திவந்த ராஜாளிக்குத் தனது மாமிசத்தினை யறுத்துக் கிலேசமின்றிச் சந்தோஷத்தோடு கொடுத்தானோ அதுபோலச் செய்கின்றேன் என்றதாம். (கக)

वर्णाश्रमान्मुनीन्साधून्पालये बहुरूपधृत् ।
एवं यो वेत्ति संभूतीर्मम दिव्या युगे युगे ॥ १२ ॥

तत्तत्कर्म च वीर्यं च मम रूपं समासतः ।
त्यक्त्वाहंममताबुद्धिं न पुनर्भूः स जायते ॥ १३ ॥

[கஉ-கங] (அ-கை) அவதாரப் பிரயோஜனத்தினை அரைச்சுலோகத்தினால் முடித்து அதனையறிதலின் பயனை ஒன்றரைச் சுலோகத்தினால் முடிக்கின்றார்;—

(சு-ம்) (பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரரான) வர்ணத்தவர்களையும், (பிரஹ்மசாரி முதலிய) ஆசிரமத்தினர்களையும், ("இவ்வாறு வேதாந்தங்களால் எவனறிகின்றானோ, அவன் அதிவர்ணாசிரமி யாவன்" என்னும் சாஸ்த்திரப் பிரசித்தரும் வர்ணாசிரமங்களைக் கடந்தவரும் ஜடபரதாதியரை யொத்தவருமான) முநிகளையும், (வர்ணாதிகளிலேயே உபகாரத்தினை எதிர்பாராது பிறர்காரியங்களைச் சாதிப்பவர்களான பரோபகாரிகளாகிய) சாதுக்களையும், (ரிஷப தேவ தத்தாத்திரேய ஸநக வசிஷ்டாதி) வெகு வடிவம் தரித்தவனாய் இரக்ஷிக்கின்றேன். இவ்வாறு யுகத்திற்கு யுகமுண்டாகும் எனது திவ்வியமான அவதாரங்களையும், அவ்வக் கருமங்களையும், வீரியத்தினையும், எனது ரூபத்தினையும் தொகுத்து எவன் அறிகின்றானோ அவன் அகங்கார மமகார புத்தியினை விட்டு (அகங்காரமின்றிய தன்மையால் இங்குதானே முக்தனாய்) மறுஜன்ம மில்லாதவனாய் பிறக்கிறதில்லை. (எ-று)

" வர்ணத்தவர்களையும் " என்பது மற்றவர்கட்கும் உபலக்ஷணமாம். (௧௨-௧௩)

निरीहा निर्भयारोषा मत्परा मद्व्यपाश्रयाः ।
विज्ञानतपसा शुद्धा अनेके मामुपागताः ॥ १४ ॥

[௧௨-டு] (அ-கை) " அவன் மறுஜன்மமில்லாதவனுய்ப் பிறக்கிறதில்லை " என்று சொல்லப்பட்டது. அங்கு எத்தன்மையர் பிறவாரெனக் கூறுகின்றார்:—

(சு-ம்) நிரீஹரும் (கர்மேந்திரிய வியாபாரமான சேஷ்டையில்லாதவரும் அதாவது நிராஹாரரும்) (சேஷ்டையின்மைக்குக் காரணமான) பயரோஷங்களில்லாதவரும், எனது பரரும், என்னையே யாசிரயமாக வுடையவரும், (அதனாலேயே) விஞ்ஞானமாகிய (செவ்வையாய் ஆத்மத்துவ முணர்தலாகிய) தபசினுல் சுத்த (சர்வோபாதிகளும் நீங்கியதனுல் நிர்மல) ருமான அநேகர் என்னை அடைந்தவராவர். (எ-று)

எவன் ரோஷ (கோப) த்தினுல் பிறரை ஹிம்ஸிக்கின்றானோ அவன் அவசியம் பயத்தினை யடைகின்றான். இதனையே விபதிரேக (எதிர்மறை) முகத்தாற் பிரகலாதர் பிதாவினை நோக்கி 'எவன் பிறனுடைய பாபங்களைத் தன்னுடையவற்றைச் சிந்தியாததுபோலச் சிந்தியானோ, ஐயனே! அவனுக்குப் பாபங்களினீக்க மிருப்பதில்லை' (பாபமாகிய) ஹேதுவில்லாமையால் என்று கூறியிருக்கின்றார்.

ரோஷமின்மை எதனாலெனின், எனது பரராதலால் என்றார். காமத்தினுல் ஆக்கிரமிக்கப்பட்டவனே காமத்தினுலாவதான தாபத்தினுல் ஆகுலனுக்கப்படுகின்றான்; எனது பரனோ காமாதிகளால் அமிழ்த்தப்படான் என்பது பொருள். சிலரோ ஸ்திரீயாதி பரரும் இராஜா முதலியோரை ஆசிரயமாக வுடையவருமாவர். இவர்களோ எனது பரரும் என்னை முக்கிய ஆசிரயமாக வுடையவருமாவர்.

விஞ்ஞானமே தபசு என்பதற்கு " எவனுக்கு ஞானமயமான தபசு உளதோ " (முண் ௧-௧-௯) என்னும் சுருதிப்பிரமாணமாம்.

சுத்தர்கள் தன்மாத்திரமும் சோதித தத்பதார்த்தமுமான என்னை யடைகின்றனர். அஞ்ஞான நீங்குதல் மாத்திரத்தால் என்னோடு கூட ஐக்கியத்தினை யடைந்தவராவர் என்பது பொருள். அது விஷ்ணு புராணத்தில் "விசேஷ பேதத்தினை யுண்டு பண்ணும் அஞ்ஞானம் ஆத்தியந்திகமான நாசத்தினை யடைந்தபோது, ஆத்மாவுக்குப் பிரஹ்மத்தினோடு இல்லாததான பேதத்தினை எவன் செய்வான் ?" (ஒருவனும் செய்யமாட்டான்) என்று கூறப்பட்டிருக்கின்றது. (கச)

येन येन हि भावेन संसेवन्ते नरोत्तमाः ।
तथा तथा फलं तेभ्यः प्रयच्छाम्यव्ययः स्फुटम् ॥ १५ ॥

[கஉ௬] (அ-கை) அஞ்ஞானம் நஷ்டமாகாதவர் எவரோ அவர்கட்கும் யானே கதியென்று கூறுகின்றார். :—

(சு-ம்) நரோத்தமர்கள் எந்தெந்த பாவனையால் என்னைச் செவ்வையாய்ப் பஜிக்கின்றார்களோ அவ்வவ்வாறே (அந்தந்த பாவத்தை யநுசரித்தே) அவர்களுக்கு அவ்யய (அவிக்கிரிய)னாய் அதாவது மழையினைப்போல எல்லாப் பாவனைக்கும் அநுக்கிரகிக்குந் தன்மையால் கீழ்மேற் கர்மங்களைச் செய்யும் அவர்களிடத்தில் இராகத்து வேஷமில்லாதவனாய்ப் பயனைத் தருகின்றேன். இது வெளிப் படை (லோகப் பிரசித்தம்). (எ-று)

'எந்தெந்த பாவனையால்' என்பதற்கு, எந்தச் சாத்விக பாவனையால் ஸ்வர்க காமிகள் யஞ்ஞாதியினாலும், இராஜஸபாவனையால் இகபோக விருப்பமுள்ளவர் காமிய கர்மத்தினாலும், தாமஸபாவனை யால் சத்துரு வதாதி விருப்பமுடையோர் ஆபிசாரிக (மாரண) கர்மத்தினாலும் என்னைப் பஜிக்கின்றனரோ! என்பது பொருளாம். (கரு)

जनाः स्युरितरे राजन्मम मार्गानुयायिनः ।
तथैव व्यवहारं ते स्वेषु चान्येषु कुर्वते ॥ १६ ॥

[கஉ௭] (அ-கை) இவ்வாறு சம்சாரிகட்கு முக்குணத்தன்மையினைக் கூறி முக்குண மின்மையாகிய வழியினைக் கூறுகின்றார்:—

(கு-ம்) அரசனே ! மற்றைய (முமிக்ஷு காமினியின்றிய) ஜனங்கள் (முக்குண மின்றிய தன்மையினனுகிய) எனது (சமதமாதி யநுஷ்டானவடிவ) மார்க்கத்தினை யநுசரித்து நடப்பவராகின்றனர். அவ்வாறே (நிவிருத்தியினை யநுசரித்தே) தம்மவர் (பக்தஜனங்) களிடத்தில் (தத்துவோபதேசாதி) வியவகாரத்தினையும் அந்நியர் (அபக்தர்) களிடத்தில் (உபேக்ஷை முதலிய) வியவகாரத்தினையும் செய்வர். (எ-று) (கசு)

कुर्वन्ति देवताप्रीतिं वाञ्छन्तः कर्मणां फलम् ।
प्राप्नुवन्तीह ते लोके शीघ्रं सिद्धिं हि कर्मजाम् ॥ १७ ॥

[கஉஅ] (அ-கை) மறுபடியும் காமிகளின் மதத்தினை அநுவதிக்கின்றார்:—

(கு-ம்) கர்மங்களின் பயனை விரும்பியவர்களாய்த் தேவதாப்பிரீதியினைச் செய்கின்றனர். அவர்கள் இவ்வுலகத்தில் கர்மத்தினுலாம் சித்தியினை நிச்சயமாகவே சீக்கிரத்தில் பெறுகின்றனர். (எ-று)

தியானத்தினுலாகும் சித்தி நெடுங்காலத்தாற் சாதிக்கப்படுவதாமென்று, அதனையுபேக்ஷித்து, சீக்கிரத்திற் பயன் றருவதான கர்மத்தினுலாம் சித்தியினைக் காமிகள் விரும்புகின்றனர் என்பது கருத்தாம். (கஎ)

चत्वारो हि मया वर्णा रजःसत्त्वतमोंऽशतः ।
कर्मांशतश्च संसृष्टा मृत्युलोके मया नृप ॥ १८ ॥

[கஉகூ] (அ-கை) அக்கர்மம் முமுக்ஷுவினுல் விடத்தக்கதேயாகுமோ வென் ருசங்கித்துக் கூறுகின்றார்:—

(கு-ம்) நிருபனே ! என்னுல் (பிராஹ்மணுதி) நான்குவர்ணங்கள் இராஜஸ் சத்துவ தமோம்சத்தினுலும் கர்மாம்சத்தினுலும் மிருத்தியுலோகத்தில் என்னுல் செவ்வையாய்ச் சிருஷ்டிக்கப்பட்டனவாம். (எ-று)

'கர்மாம்சத்தினல்' என்பதனுல் முற்பிறப்பினவாகிய அவ்வவ் வர்ணங்களிலுள்ள கர்மபீஜாநுசாரமாகவும் அவ்வவ் வர்ணங்களிலுள்ள குணஸ்வபாவாநுசாரமாகவும் சிருஷ்டிக்கப்பட்டன என்றதாம். அஃதெங்ஙனமெனின், பிராஹ்மணன் சத்துவப்பிரதானனுய் சமம் தமம் தபஃ சௌசமுதலிய ஸ்வாபாவிகமான கர்மத்தினேடு கூடியவனுய்ச் சிருஷ்டிக்கப்பட்டான். அவ்வாறே க்ஷத்திரியன் சத்துவ அப்பிரதானமான இரஜோகுணப் பிரதானனுய், சௌரியம் தேஜஃ (பராக்கிரமம்), தைரியம், சாமர்த்திய முதலிய ஸ்வாபாவிக கர்மத்தினேடு கூடியவனுய்ச் சிருஷ்டிக்கப்பட்டான். அவ்வாறே வைசியன் சத்துவமின்மைபால் இரஜோகுணப்பிரதானமான தமோகுண அப்பிரதானனுய்க் கிருஷி பசுக்காத்தல் வாணிய முதலிய ஸ்வாபாவிகமான கர்மத்தினேடு கூடியவனுய்ச் சிருஷ்டிக்கப்பட்டான். சூத்திரன் இரஜோகுணசம்பர்கமான பரிசரித்தற் கர்மத்தினேடு கூடியவனுய்ச் சிருஷ்டிக்கப்பட்டான். ஆதலால் அவர்களது உற்பத்தியோடு கூடிய கர்மம் விடக்கூடியதாகாதென்பது கருத்தாம். மூலத்தில் மறுபடியும் 'என்னுல்' என்று கூறியது அந்தரியாமித்துவம் சர்வேசுவரத்துவ மென்னும் அந்த ரூபபேதத்தினை யறிவித்தற் பொருட்டாம்; அவ்வாறே '.இவன் சர்வேசுவரன்; இவன் சர்வஞ்ஞன்; இவன் அந்தர்யாமி; இவன் எல்லாவற்றின் யோனி; பூதங்களின் உற்பத்தி நாசம்' (மாண்-ஃ) என்று சுருதியில் சர்வேசுவரத்துவ சர்வாந்தரியாமித்துவமிரண்டற்கும் வேற்றுமைகேட்கப்படுதலால். அவ்வாருகவே, அந்தரியாமித்துவாம்சத்தினுல் அவ்வப்பிராணிகளிடத்துள்ள கர்மபீஜாநுசாரமாக மழைபோல் காரியத்தினைப் படைக்கின்றேன்; சர்வேசுவரத்துவரூபத்தால் அவ்வக் குணும்சாநுசாரித்தன்மையம்சத்தால் நிக்கிரகாநுக்கிரகங்களைச் செய்கின்றேன் என்பது பொருளாகின்றது. அவ்வாறே "எவன் எல்லாப் பூதங்களையும் உள்ளே இயக்குகின்ருனே" (பிரு-௩-எ-கரு) என்றும், "இவனிடத்தினின்று பயத்தால் வாயு வீசுகின்றது" (நா-உ-அ-க) என்றும் சுருதிகள் கூறுகின்றன. (௧௩)

कर्त्तारमपि तेषां मामकर्त्तारं विदुर्बुधाः ।

[கசுO] (அ-கை) இவ்விரண்டு தர்மங்களும் எனக்கு மாயையினாலாகியனவாம்; ஸ்வாபாவிகமன் றென்று கூறுகின்றார்:—

(சு-ம்) (அயக்காந்தம் தனதரிய சக்தியினால் இரும்பினை வலிக்கும் கர்த்தாவாயினும், நிர்வியாபாரத்தன்மையால் அகர்த்தாவேயாவதுபோல்) என்னை அவ்வர்ணாதிகளின் (அவ்வர்ணாதிகளைச் செலுத்தும்) கர்த்தாவாகவும் (ஸ்வரூபமாக) அகர்த்தாவாகவும் பண்டிதர்கள் அறிவர். (எ-று)

अनादिमीश्वरं नित्यमलिप्तं कर्मजैर्गुणैः ॥ १९ ॥

(அ-கை) இதில் ஏதுவினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) அநாதியும் (பிறப்பில்லாதவனும்) ஈசுவர (கிரியின்றிய வைபவமுடையவ)னும், நித்தியனும் (நாசமின்றியவனும்), கர்மத்தினாலாம் குணங்களாற் பற்றப்படாதவனுமாயிருத்தலால். (எ-று)

ஆதியுடையவர்களான ஜீவர்கள் முற்பிறப்பின் கர்மத்தினாற் கட்டப்பட்டமையால் அநீசுவரரான மரணதர்மமுடையவர்களாய், மரித்தும் செய்தகர்மத்தினால் சுவர்க்கத்தினையும் நரகத்தினையுமடைந்து, மழையின் வாயிலாக அந்நவடிவத்தன்மை யடைந்து, மறுபடியும் சுக்கிலசோணிதசம்பந்தத்தினால் ஜன்மத்தினைப் பெறுகின்றனர். மறுபடியும் கர்மத்தினைச் செய்கின்றனர். இவ்வாறு சம்சார சக்கரத்தில் இடைவிடாது சுழலுகின்றனர். யானோ அவர்களின் விபரீதத்தன்மையால் சம்சாரியல்லனென்பார் 'அநாதியும்' என்றார்.

கர்மத்தினாலாம் ஐசுவரியத்தினாற்றான் ஜீவன் பந்தப்படுகின்றான்; ஈசுவரனது ஐசுவரியமோ கர்மத்தினாலாகாததாய் மாயிகமாதலின் பந்தஹேதுவாகாது. அது வார்த்திகத்தில் முக்தனை யெடுத்துக்கொண்டு, "பிரஹ்மத்தன்மையினாலேயே ஜீவனுக்குப் பிராந்தியினாலாகிய ஜீவததன்மை நீங்குதலால் வசித்துவமுதலிய பிரஹ்ம தர்மங்கள் மிஞ்சுகின்றன. அதனால் இவன் ஈசுவரன். நீங்கிய தன்மையால் ஜீவதர்மங்கள் எவனுக்கும் தோற்றுகிறதில்லை. அதிக்கிர

மித்திருப்பனவாகிய ஈசகர்மங்கள் அகர்மத்திஞற் சம்பாதிக்கப்பட்ட தன்மையால் ஈசுவரனுக்கும் ஞானிகட்கும் தமது புத்தியிஞல் அவை தோற்றுகின்றன. ஆதலால் ஈசுவரனுடைய தர்மங்கள் இருக்குக. இதில் ஆச்சரியமில்லை. ஈசன் தர்மங்கள் இருப்பனவாயினும், தர்மங்கட்கு மாயிகத்துவமிருத்தலின் ஈசன் தர்மமின்றிபவனென்று விமுக்தியின் பொருட்டு முமுக்ஷுக்களால் அறியத்தக்கவனுவன்" என்று சொல்லப்பட்டிருக்கிறது (கசு)

निरीहं योऽभिजानाति कर्म बध्नाति नैव तम् ।
चक्रुः कर्माणि बुद्ध्वैवं पूर्वं पूर्वं मुमुक्षवः ॥ २० ॥

[கஎக] (அ-கை) இதனை யறிதலின் பயனைக் கூறுகின்றார்:—

(சு-ம்) எவன் நிரீஹனை [சலிப்பின்றிய முக்த ஸ்வரூப ஈசுவரனை எல்லோருடைய பிரத்தியக் (ஆத்ம) ஸ்வரூபனுகிய என்னை]ச் சாக்ஷாத்கரிக்கின்றானே, அவனை (சுக்கிலம் கிருஷ்ணம் மிசிரம் என்னும் மூவகைக்) கர்மம் கட்டுப்படுத்தாது; (கர்மத்துவாதிகளையுடைய அந்தக்கரணம் வேறு படுத்தப்பட்டமையால்) இவ்வாறு (ஞானத்தின் பயனை) அறிந்து முமுக்ஷுக்கள் (சித்த சுத்தி வாயிலாக ஞானப்பிராப்தியின் பொருட்டு) முந்திய (அநாதிவேதத்திஞ லறிவிக்கப்பட்டுள்ள) கர்மங் (நித்தியநைமித்திகாதி)களை முன் (முக்திவிருப்பமுண்டாவதற்கு முன்) செய்வர். (எ-று)

மோக்ஷவிருப்பமுண்டாகியபோது சிரவணுதிகளையே செய்வர் என்பது மேல் அறிவிக்கப்படும். (உ०)

वासनासहितादाद्यात्संसारकारणाद्दृढात् ।
अज्ञानबन्धनाज्जन्तुर्बुद्ध्वा यं मुच्यतेऽखिलात् ॥ २१ ॥

[கஎஉ] (அ-கை) முமுக்ஷுக்கள் கர்மங்களை எவ்வாறு செய்வரென்னும் அபேக்ஷையில் அதன் விபாகத்தி (பகுப்பி) னைச் சொல்லக் கருதியவராய், உருசி யுண்டாதற் பொருட்டு விபாகத்தின் பயனை முதலிற் கூறுகின்றார்:—

(சு-ம்) எதனை (கர்மாகர்ம விகர்மங்களின் விபாகத்தினை)ச் செவ்வைபா யறிந்துஜந்து (அதிகாரி புருஷன்) வாசனையோடு கூடி

யதும், ஆகியும், ஜனனமரண தாராவடிவ அநாதி சம்சாரத்தின் காரணமும், திடமு (சேதிக்கற்கரியது) மான அஞ்ஞானபந்தமு முவதி னின்றும் விடுபடுவனே, (எ-று)

வாசனையே பந்தமென்பது "வாசனுபந்தமே பந்தமாம், வாசனுக்ஷயமே மோக்ஷமாம்" என்பதனுற் சொல்லப்பட்டிருத்தல் காண்க. (உக)

तदकर्म च कर्मापिकथयाम्यधुना तव ।

[கருரு] (சு-ம்) அவ்வகர்மத்தி (விகிதஞ் செய்யாமையி)னையும் (உம்மையால் நிஷித்தாசரணமான விகர்மத்தையும்) கர்மத்தினையும் (ஸ்வதர்மாநுஷ்டானத்தையும்) இப்போது உனக்குச் சொல்லுகிறேன். (எ-று)

यत्र मौनं गता मोहादृषयो बुद्धिशालिनः ॥ २२ ॥

(அ-கை) இந்த விபாகம் மிக வாழமுடையதென்று கூறுகின்றூர்:—

(சு-ம்) எதில் புத்திசாலிகளான ரிஷிகளும் மோக (அஞ்ஞான)த்தினுல் மௌனமடைந்தனரோ, (அதனை விளக்குகின்றேன், (கேள்). (எ-று) (உஉ)

तत्त्वं मुमुक्षुणा ज्ञेयं कर्माकर्मविकर्मणाम् ।

[கருச] (சு-ம்) கர்மாகர்மவிகர்மங்களின் தத்துவம் (உண்மை) முமுக்ஷுவினுல் அறியத்தக்கதாம். (எ-று)

त्रिविधानीह कर्माणि मुनिस्तेषां गतिः प्रिय ॥ २३ ॥

(அ-கை) விபாகஞானம் ஆவசியகமும் ஆழமுடையதுமாமென்று கூறுகின்றூர்:—

(சு-ம்) இவ்வுலகத்தில் கர்மங்கள் (கர்மா கர்ம விகர்மங்களோவ்வொன்றும்) மூன்று விதமாம் (கர்மத்தில் விகர்மாக கர்மங்களும், அகர்மத்தில் கர்மவிகர்மங்களும், விகர்மத்தில் கர்மாகர்மங்களும் காணப்படுதலால்) கேள் பிரியனே! இவற்றின் கதி (ஞானம்) மிக வாழமுடையதாம். (எ-று)

'பிரியனே' என்றவிளியால், என்பக்தனுதற்றன்மையால் உன்னுலும் உன்னைப்போன்றவர்களாலும் இஃதறியக் கூடியதாமென்பது சூசிக்கப்பட்டது. (உங

क्रियायामक्रियाज्ञानमक्रियायां क्रियामतिः ।
यस्य स्यात्स हि मर्त्योऽस्मिँल्लोके मुक्तोऽखिलार्थकृत् ॥ २४ ॥

[கஙுடு] (அ-கை) அவ்வுண்மையினையே கூறுகின்றார்:—

(சு-ம்) (யஞ்ஞ தான ஜபாதி வடிவ) கிரியையில் அக்கிரியைகளின் (சாஸ்திரம் விதித்ததைச் செய்யாமை விலக்கியதைச் செய்தலெனு மிரண்டன்) ஞானமும், அக்கிரியையில் (விகிதத்தினையநுஷ்டியாமை நிஷித்தத்தினை யாசரித்தல்களில்) கிரியையின் (நற்செய்கை யெனும்) புத்தியும், (ஞானமும்) எந்த மனிதனுக் கிருக்கின்றதோ, அந்த மனிதன் இந்த லோகத்தில் முக்தனுய், எல்லாவர்த்தமுஞ் செய்ப (சம்பூர்ணமான புருஷார்த்த நான்கினையும் சாதிப்ப)வனுகின்றான். (எ-று)

கிரியையில் அக்கிரியைகளையறியுமாறு:- "அசிரத்தையோடு ஓமிக்கப்பட்டதும், கொடுக்கப்பட்டதும், தபிக்கப்பட்ட தபமும், செய்யப்பட்டதும் எதுவோ அது பார்த்தனே! அசத்தெனப்படுகின்றது. அது இகத்தும் பயன் தராது மறுமையிலும் பயன் தராது." என்னும் பகவத் வசனத்தினல் அசிரத்தையினுல் செய்யப்பட்டது செய்யப்படாததேயாம். அவ்வாறே அபயத்தினைச் செய்யும் நான்கு கர்மங்களும் உள்ளவாறு செய்யப்படாதனவாய்ப் பயத்தினைத் தருகின்றன. மானுக்னிஹோத்ரம், மானமௌனம், மானத்தினுல் அத்தியயனம் செய்யப்பட்டது, மானயஞ்ஞம் என்பனவாகிய அக்னிஹோத்திராதிகள் அபயத்தினைச் செய்வனவாயினும், நிஷித்தாசரணத்தினுல் பயத்தைத் தருவனவாக ஸ்மரிக்கப்படுகின்றன. அவ்வாறு இவ்விரண்டும் சத்கிரியையினு மிருக்கின்றன வென்றுணர்ந்து பரிகரித்துக் கிரியையினைச் செய்பவன் எல்லாக் கர்மங்களையும் செய்பவனுகின்றா னென்பது பொருள்.

அக்கிரியைகளில் கிரியையினை பறியுமாறு:- "சத்தியமே பேசவேண்டும் பொய் பேசலாகாது" என்று சத்தியவசனம் விதிக்கப்பட்டுளது. அதுவும் திருடனுக்கு வழிப்போக்கனது மார்க்கத்தை யுபதேசித்த சத்திய வாதிக்கு வழிப்போக்கனது ஹிம்ஸை நிமித்தக்காலம்நரகத்தினடைவு ஸ்மரிக்கப்படுகின்றது. இவ்வாறே பொய்யானது இயல்பாகத் தோஷத்தினைச் செய்வதாயிருப்பதனல் நிஷித்தமாயினும், பிராணிகளை இரக்ஷித்தற் பொருட்டதாயின், மாறுக ஸ்வர்க்கத்தினைத் தருவதாம். இவ்வாறே உதாசீனத்தன்மை (சும்மாவிருத்தல்) எங்கும் இதத்தினைச் செய்வதாயினும், கோப்பிராஹ்மண ரக்ஷணையின்பொருட்டு ஆயுதந்தரித்துள்ள க்ஷத்திரியனுக்குப் பெரு நஷ்டத்தின் பொருட்டாகின்றது. இவ்வாறே, "திருடன், விடப்படுவானாயின் இராஜாவினிடத்துத் தோஷமாம்" என்னும் சுருதியினல் கொல்லுவதற்குரிய திருடனை விடுதலும் அரசனுக்குப் பாபத்தின் பொருட்டாகின்றது. இதனல் அகர்த்தவ்வியமான ஹிம்ஸை கர்த்தவ்வியத்தன்மையாய் விதிக்கப்படுகின்றது.

ஆதலால் இவ்வாறு பயனல் பலாபலத்தினை (வலிவலியின்மைகளை) நிச்சயித்து, எவன் சிரேயஸின் சாதனங்களான கர்மங்களையாவது அகர்மங்களையாவது விகர்மங்களையாவது செய்கின்றானே, அவன் அக்கிரியையில் கிரியை மதியுள்ளவனவன். (௨௪)

कामाङ्कुरवियोगेन यः कर्माण्यारभेन्नरः ।
तत्त्वदर्शननिर्दग्धक्रियमाहुर्बुधा बुधम् ॥ २५ ॥

[௧௩௬] (அ-கை) இவ்வாறு செய்பவனது பலிதத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) (கூறிய விதங்களான) கர்மங்களைக் காமமாகிய மூளையில்லாதனவாக எந்த நரன் செய்வானே, அந்தத் தத்துவ தரிசனத்தால் (மூவகைக் கர்மங்களின் உண்மை யுணர்ச்சியினலும் காமமின்மிய தன்மையாலும்) தகி (பீஜமின்றியதா) க்கப்பட்ட கிரியைகளுடையவனை அறிஞனென்று அறிஞர் கூறுவர். (௭-று)

விவேகமுடையவனுக்குக் கர்மாகர்ம விகர்மங்கள் சிரேயசின் சாதனங்களாயினும் காமத்தோடு செய்யப்பட்டனவாயின், அவையே சம்சார விருக்ஷத்திற்கு முளையாகின்றன. ஆதலால் 'காமமாகிய முளையில்லாதனவாக' என்று கூறினர். (உ௫)

फलतृष्णां विहाय स्यात्सदा तृप्तो विसाधनः ।
उद्युक्तोऽपि क्रियां कर्तुं किंचिन्नैव करोति सः ॥ १६ ॥

[கஉஎ] (அ-கை) காம முளையின் வியோகத்தினையே ஐந்து சுலோகங்களால் துதிக்கின்றார்:—

(சு-ம்) எவன் பயன் விருப்பத்தினை விட்டு, எப்போதும் திருப்தனுய் (மாலை சந்தனம் ஸ்திரீ முதலிய போக) சாதனமின்றியவனுவனே, அவன் (சாஸ்திரத்தினுற் பெறப்பட்ட நித்திய நைமித்திகக்)கிரியையினைச் செய்ய முயன்றவனுயினும் எதனையும் செய்கிறவனுகான் (கர்மத்தினுற் பற்றப்படாமையின்).

ஆசையினை விடுதலே திருப்தி சாதனமாம்; போகமன்றென்பது பொருள். அது "உலகத்தில் காமசுகம் எதுவோ, திவ்வியமான பெருஞ் சுகமெதுவோ, அது முழுவதும் ஆசையொழிந்த சுகத்தின் பதினுறுவது அம்சத்திற்கு இணை யாகாது" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

செய்தும் செய்யாதவனுவனென்று கோபாலதாபநீயத்தில் கதையாகச் சொல்லப்பட்டுளது:- யமுனையின் அக்கரையிலுள்ள துர்வாசரைத் திருப்தி செய்விக்க மதுரான்ன பாத்திரங்களைக் கையிற்றுங்கியவர்களான கிருஷ்ணபாரிஷைக ளெல்லோரும் யமுனையை எப்படிக் கடப்போமென்று கிருஷ்ணனைக் கேட்க, அவர் அகண்டித பிரஹ்மசரியமுடையவன் கிருஷ்ணனென்னிற் கடக்கலாமென்றார். அவ்வாறே துர்வாசரைக் கேட்க, துர்வாசர் நிராஹாரமுள்ளவராயின் எங்களுக்கு வழிவிடுக என்று சொல்லிக் கடவுங்க ளென்றார். அவரை நமஸ்கரித்து, அவர்கள் அவ்வாறே செய்தனர். இவ் வுவமையால் நித்திய திருப்தனுக்கு அபோக்திருத்துவம் அறிவிக்கப்பட்டதாம். (உசு)

निरीहो निगृहीतात्मा परित्यक्तपरिग्रहः ।
केवलं वै ग्रहं कर्माचरन्नायाति पातकम् ॥ २७ ॥

[கஙகூ] (அ-கை) உத்தமமான வைராக்கியத்தினைக் கூறி, அதனிற்றாழ்ந்ததனைக் கூறுகின்றார்:—

(சு-ம்) (வைராக்கியத்தினாலேயே) நிரீஹனும் (பாகியேந்திரிய சேஷ்டையில்லாதவனும்), சித்தஜயமுள்ளவனும், (ஸ்திரீயாதி பரிக்கிரக சூந்யனு (சந்நியாசியு) மானவன் விக்கிரகமான சரீரஸ்திதிமாத்திர சாதனமான பிக்ஷாடனாதியும், (கைவல்ப சாதனமான வேதாந்த சிரவண மனனாதிகளான) கேவலமுமான கர்மத்தினைச் செய்பவனுய்ப் பாதக (சம்சார) த்தினை அடையான்.

(எ-று) (உஎ)

अद्वन्द्वोऽमत्सरो भूत्वा सिद्ध्यसिद्ध्योः समश्च यः ।
यथाप्राप्त्येह संतुष्टः कुर्वन्कर्म न बध्यते ॥ २८ ॥

[கச0] (அ-கை) அதனினும் தாழ்ந்ததனைக் கூறுகின்றார்:—

(சு-ம்) எவன் துவந்துவமின்றியவனும் மற்சரமி (பிறர்மேன்மையைச் சகியாமையி) ல்லாதவனும், சித்தியசித்தி (இஷ்டப்பிராப்தி அதன் அப்ராப்தி)களில் சமமான (ஹர்ஷவிஷாத மில்லாத) வனும், (அதனாலேயே) இங்கு எதிர்பாராது கிடைத்ததில் சந்தோஷமுடையவனு மாகின்றானே, அவன். (தேக நிர்வாக மாத்திரமாக) கர்மத்தினை (கந்தை கௌபீனாதி கொள்ளுதலை)ச் செய்தும் (அதனாலாம் தோஷங்களால்) கட்டப்படுகிறதில்லை. (எ-று)

சித்த விக்ஷேபத்தினைச் செய்வனவாகிய சீதோஷ்ணம் சுக துக்கம் மானாபமானம் இலாபாலாப முதலியன துவந்துவங்களாம். (உஅ)

अखिलैर्विषयैर्मुक्तो ज्ञानविज्ञानवानपि ।

[கசக] (அ-கை) இவ்வாறு வைராக்கியமுள்ள யோகியாய் யோக மநுஷ்டிப்பவனுக்குப் கர்மப் பற்றின்மையினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) (திவ்வியா திவ்வியங்களான) எல்லா விஷயங்களினின்றும் விடுபட்டவன் ஞான விஞ்ஞானமு (பரோக்ஷா பரோக்ஷ ஞான மிரண்டையு) முடையவ னுவன். (எ-று)

இங்கு 'எல்லா விஷயங்களி னின்று விடுபட்டவன்' என்றது "திருஷ்ட (ஐஹிக) மும் ஆநுசிராவிகமு (வேதத்தினுலறிவிக்கப்படுவது) மான விஷயங்களில் ஆசையில்லாதவனுக் குண்டாவது வசீகார மென்னும் பெயருள்ள வைராக்கியமாம்" என்னும் யோகசூத்திரத்திற் கூறப்பட்ட வைராக்கியத்தோடு கூடியவனே யாம்.

வைராக்கியமோ விஷயதோஷ தரிசனத்தால் அவற்றினின்று மனதினை விடுவிக்க முயலுதல் வடிவினது யதமான மென்னும் பெயருள்ளதாம். விட்ட விஷயங்களில் எப்போதாவது அதன் ஸ்மரண முண்டாகிறது எதுவோ அது ஏகேந்திரிய மென்னும் பெயருள்ளதாம். மதுமதி யெனும் யோகபூமியில் இயல்பாக நிலைத்தவனுக்கு இகலோக பரலோக விஷயங்களில் எவ்விதத்தாலும் ஆசையில்லாமை வசீகார மென்னும் பெயருடையதாம். அதனை யுடைவன் இருவித ஞானமு முடையவனுவன் என்றதாம். தீவிர வைராக்கிய பூர்வகமாக ஞான விஞ்ஞான மிரண்டையும் சம்பாதிக்கவேண்டு மென்பது பொருள்.

यज्ञार्थं तस्य सकलं कृतं कर्म विलीयते ॥ २९ ॥

(அ-கை) அதில் சாதனத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) அவனுக்கு (முற்கூறியபடி ஆத்மலாபத்தினை விரும்பியவனுக்கு) யஞ்ஞத்தின் பொருட்டு ("யஞ்ஞம் விஷ்ணு" என்னும் சுருதியினுல் யஞ்ஞமாகிய பரமேசுவரனது பிரீதியர்த்தமாக) செய்யப்பட்ட (புண்ணிய பாப) கர்மங்கள் யாவும் (சர்வ கர்ம வைராக்கியத்தினை யுண்டுபண்ணுதற் கிரமத்தால்) கெடுகின்றன.

நிஷ்காம கர்மம் போதத்தின் சாதனமும், போதத்தின் பயன் சர்வ கர்மங்க ளின்மையுமா மென்பது பொருள். அவ்வாறே அந்த பராவரத்தினை (பிரஹ்மாத்மாவினை) க் கண்டபோது இவனுடைய இருதய முடிச் சறுகின்றது. சர்வ சம்சயங்களும் சிதைகின்றன

கர்மங்கள் நசிக்கின்றன” என்று சுருதியும், “அர்ஜுன! எப்படிக் கொளுத்தப்பட்ட அக்னி விறகுகளை பஸ்மமாக்குகின்றதோ, அது போல ஞானக்கினி சர்வ கர்மங்களேயும் பஸ்பமாக்குகின்றது.” என்று ஸ்மிருதியும் கூறுகின்றன. (உகூ)

अहमग्निर्हविर्होता हुतं यन्मयि चार्पितम् ।

[கஈஉ] (அ-கை) யஞ்ஞத்தின் பொருட்டுக் கர்மத்தினை ஆசரிக்கும் விதத்தினைக் கூறுகின்றார்:-

[சம்சாரத்தில் ஞானம் ஞேயமென்று இரண்டு பதார்த்தங்களுள. அவற்றுள், ஞேயம் மண்ணின் பரிணாமமான குடம் சட்டி சால் முதலியவற்றைப்போல ஞானத்தின் பரிணாமமாம். ஆகவே ஞானே ஆத்மாவே இவ்வெல்லாம், பிரஹ்மமே இவ்வெல்லாம் என்னும் உபாதான உபாதேய பாவத்தால் பிரஹ்மப் பிரபஞ்சங்களின் அபேதம் சுருதிப்பிரசித்தமாம். அதனால் எல்லாக் கிரியா காரக பலவடிவினது பிரஹ்மமே யென்றநுசந்தானித்துக் கர்மங்கள் செய்யத்தக்கனவா மென்று கூறுகின்றார்:-]

(க-ம்) (கர்த்தாவாகிய) யான் (ஹோமாதிகரணமான) அக்னி; யானே ஹவிசு (அக்கினியில் போடப்படும் திரவியம்); யானே ஹோதா (ஓமம் செய்பவன்;) ஹுதம் (ஓமம் செய்தலாகிய கிரியை) யானே. என்னிடத்தில் அர்ப்பிக்க (எனது உத்தேசமாக அக்கினியிற் போட)ப்பட்டதும் யானே. அதனால் (கர்மத்தால்) அடையப்படுவதும் (சுகாதிபயனும்) (பரமாநந்த வடிவப் பிரத்தியகபின்ன) பிரஹ்மமாகிய யானே பின் (இத்தன்மைய ஞானத்திற்குப் பிறகு) கிருத கிருத்தியனாகின்றான். (எ-று)

ब्रह्माप्तव्यं च तेनाथ ब्रह्मण्येव यतो रतः ॥ ३० ॥

(அ-கை) அதில் எதுவினைக் கூறுகின்றார்:-

(க-ம்) எதனால் (முழுவதும் மத்வைதாகாரமாகப் பிரகாசிக்கின்ற) பிரஹ்மத்திலேயே இரதன (வைதிக கர்மத்திலும் லௌகிக கர்மாசரணத்திலும் நிஷ்டையுடையவன) யிருக்கின்றானே, அதனால் (எ-று)

கேவலம் யஞ்ஞாதி கர்மகாலத்தில் மாத்திரம் பிரஹ்மாத்வைதம் பாவிக்கவேண்டு மென்பதில்லை. மற்றோ எல்லா வியவகாரமும் அத்வைத பாவனையினாலேயே செய்யவேண்டியதா மென்பது கருத்து.

योगिनः केचिदपरे दिष्ट यज्ञं वदन्ति च ।

[கஊரு] (அ-கை) எவர்கள் இப்பாவனையைத் துவைத தரிசன வலியால் செய்ய முடியாதவர்களோ அவர்களது மதத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) * (தௌஷ்டிகர்களான) யோகிகளாகிய வேறு சிலர் திஷ்டத்தினையே யஞ்ஞமென்று கூறுகின்றனர் (எ-று)

இது ஒன்பது தௌஷ்டிகர்களின் உபலக்ஷணார்த்தமாம். அவர் சாங்கிய சப்ததியிற் சொல்லப்பட்டுளர்:— "ஆத்தியாத்மிகர்கள் பிரகிருதி உபாதானம் காலம் பாக்கிய மெனப்படும் நால்வர். விஷயோபரமத்தால் பாகியர் ஐவர். இவ்வாறு துஷ்டிகள் சொல்லப்பட்டனர்" என்பதாம். இதன் பொருளிதுவாம்:— சிலர் சிரவணாதியினால் தத்துவமுணர்ந்தவராயினும் வஸ்து வபரோக்ஷத் தன்மையின் பொருட்டுத் தியானத்தினால் முயலுகின்றனர். பிரகிருதி பரிணாமமே சத்துவ புருஷாந்நியதாக்கியாதியாய்ப் பரிணாமக் கிரமத்தினால் சுவயமே யாகும், சத்தையினால் என்ன பயனென்பர் சிலர். வேறு சில சத்தியர் உபாதானத்தோடு கூடியதனாலேயே சுவயம் கிருதகிருத்தியராவோம், தியானத்தினாலென்ன பயனென்று கூறுவர். வேறுசிலர் பல பரிபாகம்போல ஞானபரிபாகம் காலத்தினாலேயே யுண்டாகும், தியானத்தினா லென்ன பயனென்பர். வேறு சிலர் பாக்கிய (அதிருஷ்ட) பலத்தினாலேயே புத்திர தாராதி சம்யோக வியோகம்போல ஞானஞ்ஞான சம்யோக வியோகங்களுமாகும், தியானத்தினா லென்ன பயனென்பர். அத்தன்மைய விந்தப் பாக்கிய தௌஷ்டிகர்களே இங்கு திஷ்டத்தினையே யஞ்ஞமென்ப ரென்பதனால் காட்டப்பட்டவராவர். இந்நால்வரும் ஆத்யாத்மிக ரெனப்படுகின்றனர். வேறு சிலர் சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தங்களுள் ஒவ்வொன்றன் ஜயத்தினால் ஒவ்வொருவரும் தமது கிருதகிருத்தியத்தன்மையினை மதிக்கின்றனர்.

இப்பாகிய துஷ்டி ஐந்தும் ஞானப்பிரதிபந்தங்களாம். இவ் வொன்பது தௌஷ்டிகர்களும் திஷ்டம் என்னும் சொல்லால் உப லக்ஷிக்கப்படுகின்றனர்.

ब्रह्माग्निरेव यज्ञो वा इति केचन मेनिरे ॥ ३१ ॥

(அ-கை) இதனின் மேலாவர்களைக் கூறுகின்றார்:—

(சு-ம்) பிரஹ்மாக்கினியே யஞ்ஞம் என்று சிலர் மதிக்கின்றனர். (எ-று)

இங்குப் பிரஹ்ம பதத்தினால் சிரௌதமான அல்லது ஸ்மார்த்த மான அக்கினி சாத்யமான கர்மம் சொல்லப்படுகின்றது. அதுவே அக்னிபோல சகல மலங்களையு மெரிக்குந் தன்மையால் சுத்திசெய்வ தாதலால் அக்னி யெனப்படும். அந்தப் பிரஹ்மாக்கினியே தேவ பூஜா ரூபமான யஞ்ஞமாம். அதனின் வேறானதோர் யஞ்ஞமில்லை யென்பர். மூலத்தில் உள்ள (வை) என்னும் பதம், "மகா யஞ் ஞங்களாலும் யஞ்ஞங்களால் சரீரம் பிரஹ்ம மயமாக்கப்படுகின்றது" என்பதும், "அக்கினிஹோத்திர ஓமஞ் செய்கிறவன் உலோபத் தினைப் பேதிக்கிறான். அதனால் நன்மோகத்தினைச் சேதித்து" (மை-சு-கூ-அ) என்பதுமான இவை முதலிய சுருதி ஸ்மிருதிப் பிர சித்தியினை விளக்குகின்றது. அது பகவானால் ஜநகர் முதலியோர் கர்மத்தினாலேயே நற்சித்தியினைப் பெற்றவரானார்" என்று கூறப் பட்டுளது. (௩க)

संयमाग्नौ परे भूप इन्द्रियाण्युपजुह्वति ।

[கசச] (அ-கை) இதனினும் விசேஷமானவர்களைக் கூறுகின் றார்:—

(சு-ம்) பூபனே! பிறர் (ஒவ்வொரு இந்திரியத்திற்கும் ஒவ் வொரு விஷயத்தில் பரிசமாப்தியாகிய) சம்யம மென்னும் அக்கினி யில் இந்திரியங்களை யொடுக்குதலாகிய ஹோமத்தினைச் செய்கின் றனர்.

ஒமிக்குமாறு இதுவாம்:— அநாஹத த்வனியில் சம்யமஞ்செய்யப்பட்ட சுரோத்திரேந்திரியத்திற்கு முதலில் வேறு சப்தத்தினைக் கேளாமையே யுண்டாகின்றது. அதுவே ஸ்பரிசாதியுணர்ச்சி யின்றியதாய்ப் பெரியதாகின்றது. அதுவே அத்தியந்தாப்பியாசத்தில் சுரோத்திராதிகளினின்று இழுக்கப்பட்ட மனதோடு கூடாததாய் ஸ்புரிக்கிறதில்லை. அத்தன்மைய இது சப்தசம்யமாக்னியில் சுரோத்திரத்தின் ஹோமமாம். இவ்வாறே ஸ்பரிசாதி சம்யமாக்னிகளில் துவக்குமுதலியவற்றின் ஹோமம் அறியத்தக்கதாம்.

खाग्निष्वन्ये तद्विषयाञ्छब्दादीनुपजुह्वति ॥ २२ ॥

(அ-கை) இதனினும் விசேஷமானவர்களைக் கூறுகின்றார் :—

(சு-ம்) பிறர் இந்திரியங்களாகிய அக்னிகளில் அவற்றின் விஷயங்களான சப்தாதிகளைச் செலுத்தி ஹோமிக்கின்றனர். (எ-று)

முற்பாதி சுலோகத்தாற் கூறப்பட்டவர்களான சம்யமிகள் அந்தந்தச் சம்யம விஷயங்களில் அழுந்தவே செய்கின்றனர். இவர்களோ அவ்வவ்விந்திரிய வைபவாநுபவத்தால் அதனதன் மறைபட்டதும் தூரத்ததும் முக்காலத்ததுமான விஷயத்தினைக் கிரகிக்கின்றனர். ஆதலால் அவர்களினும் விசேஷமுடையவராவர். வாயுபுராணத்தில் "இங்கு (பிரஹ்மலோகத்தில்) இந்திரியோபாஸகர் பத்து மநுவந்திரங்க ளிருக்கின்றனர்.

பௌதி (தன்மாத்திரையுபாசு)கரோ பூர்ணமாக நூறு மங்வந்தரமி ருக்கின்றனர். அகங்காரோபாஸகர் ஆயிரமும், பௌத்தர் (புத்தியினை யானென்றுபாசிப்பவர்) பதினாயிரமும் ஜ்வரமின்றியவர்களாயிருக்கின்றனர். உத்தமோ (அவ்யக்தோ) பாசகர் பூர்ணமாக நூறாயிரம் மங்வந்தர மிருக்கின்றனர். நிர்குணமான புருஷனையடைந்தவர்கட்குக் கால சங்கையில்லை" என்று இந்திரிய தாரணைக்குப் பூததாரணையைவிட அற்பகாலத்துப் பிரஹ்மலோக வாசமாகிய பயன் ஸ்மரிக்கப்படுகின்றது. என்றாலும் அங்குத் தூரதரிசன சிரவணாதிபரியந்தமான ஐந்திரியதாரணை அப்பியசிக்கப்பட்டதாம், இங்கோ, முக்கால

த்தைய சப்தாதி கிரகணமான பலோதய பரியந்தத்தினதாக அத்தா ரணை சொல்லக் கருதிபதாம். ஆதலால் எத்தோஷமு மில்லை. (கூஉ)

प्राणानामिन्द्रियाणां च परे कर्माणि कृत्स्नशः ।
निजात्मरतिरूपेऽग्नौ ज्ञानदीप्ते प्रजुह्वति ॥ ३३ ॥

[கஙடு] (அ-கை) முன் விஷயேந்திரிய தாரணை சொல்லப்பட் டது, இவ்விடத்திலோ அகங்கார தாரணை சொல்லப்படுகின்றது:—

(சு-ம்) வேறு சில ஆசாரியார் (சுவாசப் பிரசுவாசாதி) பஞ்சப் பிராணன்களது கர்மங்களும், (தரிசன சிரவணாதி) இந்திரிய கர்மங்க ளுமான எல்லாவற்றையும் ஞானத்தினல் கொளுத்தப்பட்ட (முழு சரீராபிமானியான) தனது அகங்காரத்தில் இரமித்தல் (பிரத்திய காத்மா இது வென்னும் பாவனு) வடிவ அக்னியில் நன்ருய் ஹோமி க்கின்றனர் (ஆத்ம மாத்திரமாம் இத்திருசியமென்று நிச்சயிக்கின்ற னர்.) .(எ-று)

ஞானமாவது சாஸ்திராசாரிய உபதேசத்தினலாவது அதனுற் கொளுத்தப்படுதலாவது இவ்வெல்லாம் தேகேந்திரிய சங்காதாபி மானி விக்ரக அர்த்தத்தில் அடங்கியதா மென்னும் வடிவினதாகிய நிச்சயத்தால் பிரகாசிக்கப்படுதலாம்.

இவ்வடிவினதாகிய உபாசனம் உத்தம மத்தியமாதமயோகி பேதத்தால் மூன்று வகையினதாம், இவ்வவஸ்தையில், "அவன் பிதி ருலோக காம ஞவா ஞயின், சங்கற்பத்தினலேயே இவனுடைய பிதிரர் செவ்வையாய் எழுகின்றனர். அதனல் அவன் பிதிருலோகத்திஞேடு சம்பன்னனுய் விளங்குகின்முன்." (சாங்-அ-உ-க) என்றல் முதலிய சுருதியினல் எவன் சங்கற்பத்தின லெழுந்த கந்தம் மாலை முதலிய வற்றினல் இரதியினை யடைகின்முனே; அந்த யோகி அபிமானிக (அகங்காரோபாஸக) னுய் ஆயிரம் மங்வந்தாம் சத்தியலோகத்தில் வசிக்கின்முன். இந்தயோகியே, புத்திமாத்திரமாம் இவ்விஷயங்கள், ஸ்வப்னேபமங்களான இவற்ருல் ஒரு புருஷார்த்தமு மில்லையென்று நிச்சயித்து, இவ்வெல்லாம் ஆத்மாவே யென்று மதித்து இருப்பான்.

அந்தப் பௌத்தன் (புத்தி தத்துவோபாசகன்) பதினாயிரம் மந்வந்தரம் சத்தியலோகத்தில் தங்குவான். எவன் புத்திமாத்திரமாம் இது நீர்க்குமிழிபோல் எழுகின்றது என்று தனக்கே எல்லாப் பிரகிருதத்தன்மையினையும் மதிக்கின்றானோ, அந்த அவ்வியக்த சிந்தகன் இலக்ஷம் மந்வந்தரம் சத்தியலோகத்தில் தங்குகிறான். இவ்வாறு ஓரே உபாசனத்திற்குப் பாவனோத்கர்ஷ ஹேதுவினையுடைய பலோத்கர்ஷ தாரதம்மியம் சொல்லப்பட்டது. (௩௩)

द्रव्येण तपसा वापि स्वाध्यायेनापि केचन ।
तीव्रव्रतेन यतिनो ज्ञानेनापि यजन्ति माम् ॥ ३४ ॥

[கஈசு] (அ-கை) இவ்வாறு முக்கியமான ஆத்மப்பிரதிபத்தியுபாயம் சொல்லப்பட்டது. இதில் சக்தியில்லாதவர்கட்கு வேறு விதங்களைக் கூறுகின்றார்:—

(சு-ம்) சிலர் திரவிய (தான)த்தினாலும், தபசினாலும், சுவாத்தியாய(பரத்துவாஜர் முதலியோர்போல வேதாத்தியயன)த்தினாலும், தீவிர விரதத்தினாலும், யதிகள்(யத்னசீலர்களான சமதமாதியநுஷ்டானபரர்) ஞான (அகம்பிரஹ்மாஸ்மி யென்னும் சாஸ்திர ஜந்திய பிரத்தியகபின்ன பிரஹ்மபோத) த்தினாலும், (எல்லாவற்றின் அந்தராத்மாவான) என்னை யஜிக்கின்றனர் (கடாகாச மடாகாச நியாயமாக என்னோடு ஐக்கியத்தினைப் பெறுகின்றனர்.) (எ-று)

திரவியத்தினாலடைதல் வேதத்தில் ஜாநசுருதி யென்பவர் ஏராளமான அந்நதானத்தினால் சந்துஷ்டரான தேவர்களால் நன்கறிவிக்கப்பட்டவராய் ஞானத்தின் பொருட்டு அவர்களால் உபதேசிக்கப்பட்டவரென்னும் குருவினை அநேக ரதாதிகளோடு சரணடைந்தார் என்று கூறியிருப்பதாற் காண்க.

கிருச்சிர சாந்திராயணாதி தபசினால் சித்தம் சுத்தமாக்கப்படுதலால் ஞானத்தில் அதிகாரத்தினைப் பெறுவர்.

இங்குக் கூறிய தீவிரவிரதமென்பது "ஜாதி தேசம் காலம் சமயமென்பவற்றால் வரையப்படாதனவாகிய சார்வபௌமங்கள் (எல்லா

அவஸ்தைகளிலும் செவ்வையநுஷ்டிக்கப்படுபனவகள்) மகா விரத மாம்" என்னும் சூத்திரத்திற் கூறப்பட்ட ஜாதியாதி வரையின்றிய அஹிம்ஸாதிகளாம். அஹிம்ஸாதிகளின் வரையாவது:—யஜ்ஞத்தற் குரிய மிருகங்களை மாத்திரம் ஹிம்ஸிப்பேன்; மற்றவற்றை ஹிம்ஸி யேன் என்பது ஜாதியினுலாம் வரைவு. அவற்றையும் வேறிடத்திற் முன் கொல்வேன் தீர்த்தாதிகளிற் கொல்லேன் என்பது தேசத்தா லாம் வரைவு. அங்கும் வேறுகாலங்களிற்முன் கொல்லுவேன் அமா வாசியை ஏகாதசி முதலியவற்றிற் கொல்லே னென்பது காலத்தினு லாம் வரைவு. அதிலும் சிராத்தத்தின்பொருட்டே கொல்லுவேன் தன்பொருட்டாகக் கொல்லேன் என்பது சமயத்தினுலாம் வரைவு. சிராத்தத்தில் கொல்லேன் என்பது வரைவின்றியதாம். இத்தன்மைய வரைவின்றிய விரதமே ஞான சாதனமாம். (௩௪)

प्राणेऽपानं तथा प्राणमपाने प्रक्षिपन्ति ये ।
रुद्ध्वा गतीश्चोभयोस्ते प्राणायामरता नराः ॥ ३५ ॥

[கசள] (அ-கை) சர்வமனோநிக்கிரக பூர்வகமான பிராணுதி களின் நிக்கிரகம் உத்தமாதிகாரிகளின் பொருட்டுச் சொல்லப்பட்டது. இப்போது பிராண நிக்ரக பூர்வகமான மனோநிக்ரகம் சொல்லுதற் பொருட்டுப் பிராணநிக்ரகத்தினை முதலிற் கூறுகின்றார்:—

(சு-ம்) பிராணனில் (மேற்சொல்லுவதாய் முக நாசிகையிலிருப்ப தான வாயுவில்) அபானனையும் (கீழ்ச்செல்லும் வாயுவினையும்), அவ் வாறே அபானனில் பிராணனையும், எவர்கள் செவ்வையாய்ச் செலுத்துகின்றனரோ, அவர்கள் (இவ்விரண்டி லோருபாயத்தினுல்) அவ்விரண்டன் (மேற் கீழ்ச்செல்லுதல் வடிவ) கதிகளைத் தடுத்து (கும்பகம் செய்து), பிராணுயாமரதர் (பிராணன்களின் ஆயாம மான விஸ்தாரத்தில் தற்பரர்) ஆகின்றனர். (எ-று)

காற்பரட்டால் குதத்தினைப் பிடித்து அபானனை மேல்முக மாக்கல் அபானனைப் பிராணனில் செலுத்தலாம். பூரக பூர்வகமாக முக நாசிகளை மூடிப் பிராணு பானன்களை ஒன்றுபடுத்தல் பிரா ணனை அபானனிற் செலுத்தலாம்:—

பிராணன்களை விஸ்தாரமாக்குதல் என்பதன் பொருள் இதுவாம்:— எப்படிப் பஞ்சானது விரிக்கப்பட்டதாய் விஸ்திருதமும் விஸ்திருததரமும் விஸ்திருத தமமுமாகின்றதோ, அப்படியே கும்பக பலத்தி (வலிமி) ஞல் சூக்ஷ்மமாக்கப்பட்ட பிராணவாயு, தேகத்திற்கு வெளியில் அறுபத்துநான் கங்குல பரியந்தமான இடத்தில் நாசி வாயிலாகச் சென்று, அங்குள்ள சூக்ஷ்மமான பஞ்சினம் சத்தினையசைக்குமாயின், அப்போது சூக்ஷ்மவடிவினதாக அறியத்தக்கதாம். அவ்வா றில்லையாயின், ஸ்தூலரூபமாயிருந்து நிக்கிரகிக்கப்படும் மனத்தினை விக்ஷேபப்படுத்தும். சூக்ஷ்மமாகியதோ மனதின் விக்ஷேபத்தினைச் செய்யக்கூடியதாகாது. அவ்வாறே "இங்கு ஒடுக்கிய சேஷ்டையினனுய்ப் பிராணன்களைச் செவ்வையாய்ப் பிடித்துப் பிராணன் க்ஷீணமாகியபோது நாசிகையால் உச்வசிக்க. அறிஞன் அப்பிரமத்தனுய்த் துஷ்டக்குதிரைபூட்டிய வாகனத்தினைப்போல மனதினை நிறுத்துக" (உ-கூ) என்று சுவேதாசுவதரம் கூறுகின்றது. பகவத்கீதையிலும், "பிராணுபானன்களை நாசியினுள் சரிப்பனவாய்ச் சமமாக்கி" என்று இதுவே சொல்லப்பட்டுளது. (உ௫)

जित्वा प्राणान्प्राणगतीरुपजुह्वति तेषु च ।
एवं नानायज्ञरता यज्ञध्वंसितपातकाः ॥ २६ ॥

[க௱அ] (அ-கை) அவர்கள் இவ்வாறு பிராணுயாமரதராயிருந்து கொண்டு என்னசெய்வார்களென்னும் அபேக்ஷையில் கூறுகின்ருர்:—

(சு-ம்) (கூறியபடி) பிராணன்களை ஜயித்து (சூக்ஷ்மமாக்கி) பிராணகதிகளை (பிராணுதீனமான கதிகளை யுடையனவாகிய இந்திரிய விருத்திகளையும் மனே விருத்திகளையும்) அவற்றில் (இந்திரியமனதுகளில்) ஹோமிக்கின்றனர். இவ்வாறு (அதிகாரத்திற்கேற்றபடி) நாநாவித யஞ்ஞங்களில் நிஷ்டையுடையவர்களான அந்த யஞ்ஞங்களினுலேயே பாதகங்கள் நசிக்கப்பெற்றவர்கள் முக்கியமான யஞ்ஞத்தில் அதிகரிக்கப்படுகின்றனர்.

ஓமித்தற் கிரமம் இதுவாம்:— இந்திரியார்த்தங்களை இந்திரியங்களிலும் இந்திரியங்களை மனதிலும், மனதினை ஜீவனிலும், ஜீவனைப்

பிரஹ்மத்திலும் ஒடுக்குதலாம். அவ்வாறே அக்கினியாதி விஷயங்களை வாக்காதி இந்திரியங்களிலும், அவற்றை மனதிலும், மனதினை ஜீவனிலும், ஜீவனை ஈசுவரனிலும், ஈசுவரனை பிரஹ்மத்திலும் ஒமிக்கிறுன் என்று சுருதியில் கேட்கப்படுகின்றது. “அக்கினி என் வாக்கிலும் வாக்கு இருதயத்திலும், இருதயம் என்னிடத்திலும், யான் அமிருதத்திலும், அமிருதம் பிரஹ்மத்திலும், ஆசிரிதமாம். வாயு எனது பிராணனிலும், பிராணன் இருதயத்திலும், ..... ஆசிரிதமாம்.” என்றும் இவை முதலியன சுருதி. (தை-பிரா-௩-கC-அ)

பிராணுயாமாதிபரர் அதிகாரிகளாவர் என்பது “பிராணுயாமங்களால் பாபங்களையும் தாரணைகளால் தோஷங்களையும் பிரத்தியாகாரத்தினுல் சம்ஸர்க (சம்பந்த) ங்களையும், தியானத்தினுல் ஈசுவரத் தன்மையல்லாத குணங்களையும் கெடுக்குக.” என்னும் ஸ்மிருதியினுற் கூறப்பட்டிருத்தல் காண்க. (௩சு)

**नित्यं ब्रह्म प्रयान्त्येते यज्ञशिष्टामृताशिनः ।**

[கசுக] (அ-கை) எஞ்சியதான திரவியத்தினுலும் தபசினுலுமென்னு மிடத்துச் சொல்லப்பட்ட திரவிய யஞ்ஞத்தினது பயனைக் கூறுகின்ருர்:—

(சு-ம்) இவர்கள் (ஜநகஜானசுருதி முதலியோர்) யஞ்ஞத்தின் (திரவியசாத்தியமான அக்நிதானுதிகளின்) சேஷமாகிய (அமிருதசாதனமாதலால்) அமிருதத்தினைப் புசிப்பவர்களாய் (மேன்மையுள்ள குருதேவதைகளின் அநுக்கிரகக் கிரமத்தால்) நித்தியமான பிரஹ்மத்தினை (சுத்த சிதாத்மாவினை) அடைகின்றனர். (எ-று)

**अयज्ञकारिणो लोको नायमन्यः कुतो भवेत् ॥ ३७ ॥**

(அ-கை) எவர்கள் இதனை யநுஷ்டிக்கிறதில்லையோ அவர்கள் உலக மிரண்டனையுமிழந்தவராகின்றனர் என்று கூறுகின்றனர்:—

(சு-ம்) யஞ்ஞஞ் செய்யாதவர்களுக்கு இந்த லோகமில்லையெனின், மற்றையது (பரலோகம்) எங்கிருந் துண்டாம்? (எ-று)

कायिकादि त्रिधाभूतानन्यज्ञान्वेदे प्रतिष्ठितान् ।
ज्ञात्वा तानखिलान्भूप मोक्ष्यसेऽखिलबन्धनात् ॥ २८ ॥

[கஉக] (அ-கை) இனி ஆத்தியாத்மிகமான யஞ்ஞம் மூன்றும் மோக்ஷசாதனமா மென்று கூறுகின்றார்:—

(சு-ம்) காயிகாதி பேதத்தால் மூவித வடிவமான யஞ்ஞங்கள் வேதத்தில் பிரதிஷ்டிதங்களாம் (வேதகர்த்தாவான என்னாலறிவிக்கப் பட்டனவாம்). அதனால் அவை அகிலங்களாம் என்று அறிந்து, பூபனே! (ஞானோற்பத்தியாதிக் கிரமத்தால்) அகிலபந்த (மூலத்தோடு கூடிய அவித்தியா காரிய) த்தினின்றும் முக்தனாவாய். (எ-று)

காயிக யஞ்ஞம், தீர்த்தாடன சூரியநமஸ்காராதி கேவலஸ்வல்பமாம். அதுவே மந்திரபாடத்தோடுகூடியதாய் மத்தியமமாம். அதுவே அர்த்தாநுசந்தான பூர்வக மந்திரபாடத்தோடு கூடியதாய் உத்தமமாம். வாசிகம், சரீராயாசமின்றிய மந்திரோச்சாரண மாத்திரவடிவினது அல்பமாம். அர்த்தாநுசந்தானத்தோடு கூடியதான மந்திரோச்சாரண மாத்திர வடிவினது மத்தியமமாம். அதுவே உபாம்சு (தன்காதுக்கு மாத்திரம் கேட்டும்) வர்ணோச்சாரத்தோடு கூடியதாய் உத்தமமாம். இவ்வாறே மானஸமும், சப்தாநுஸ்மிருதி பூர்வகமான தேவதா சிந்தனம் அற்பமாம். சப்தவிஸ்மிருதி பூர்வகமானது மத்தியமமாம். காய வாக்கு விஸ்மிருதி பூர்வகமாகிய மனோமாத்திரமான தேவதாமயத்துவம் உத்தமமாம். இவ்வாறு காயிகாதி மூன்றும் தனித்தனி மூன்று விதமாம்.

இந்த ஒவ்வொன்றன் மூவகையினும் முந்திய விரண்டும் கிலங்களாம் (சித்திரமு (குறைவு) ள்ளனவாம்). பிந்திய (கடைசியான) வைகளோ ஒவ்வொன்றும் அகிலங்களாம் (கிலமின்றியனவாம்) என்னும் கிரமமாக அறியவேண்டு மென்பார் 'அகிலங்களா மென்றறிந்து' என்றார்.

இந்த யஞ்ஞத்தில் ஸ்திரீ சூத்திரரும் வைதிக ஜபத்தினைவிட்டு அதிகரிக்கப்படுகின்றனர். (௬அ)

सर्वेषां भूप यज्ञानां ज्ञानयज्ञः परो मतः ।
अखिलं लीयते कर्म ज्ञाने मोक्षस्य साधने ॥ ३९ ॥

[கநி௦] (அ-கை) சர்வயஞ்ஞ சேஷி (அங்கி) வடிவஞான யஞ்ஞத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) பூபனே! ஞான யஞ்ஞம் எல்லா யஞ்ஞங்களினும் மேலானதாக நிர்சயிக்கப்பட்டதாம் (மற்ற யஞ்ஞங்கள் அவ்வளவு மாத்திர பயனுடையனவாதலால்.) எல்லா (முற்கூறிய மூவகைக் கரணங்களாற் செய்யப்படும் மூவித) கர்மமும் மோக்ஷத்தின் சாதனமான ஞானத்திற் (கானற் சலம்போல்) ஒடுங்குகின்றன (அடியோடு களையப்படுகின்றன). (எ-று)

எல்லா வாக்கு மனது காயங்களின் பிரவிருத்திகளது உபரம வடிவ பிரஹ்மநிஷ்டை இங்கு வேதாந்தங்களால் புருஷனடைகின்றானென்று சொல்லப்படும் லக்ஷணமுடைய தத்துவமஸியாதி வாக்கிய ஜந்ய பிரஹ்மநிஷ்டையானது ஞான யஞ்ஞமாம். (௩௯)

तज्ज्ञेयं पुरुषव्याघ्र प्रश्नेन नतितः सताम् ।
शुश्रूया वदिष्यन्ति सन्तस्तत्त्वविशारदाः ॥ ४० ॥

[கநிக] (அ-கை) 'அதன் சாக்ஷாத்காரத்தின்பொருட்டு அவன் குருவினை அடையவேண்டும்' (முண்-க-௨-கஉ) என்னும் சுருதியின்படி ஆசாரியனாகிய குருவினைச் சரணம்புகுதல் பூர்வகமாகவே ஞான லாபமுண்டாகிற தென்று கூறுகின்றார்:—

(சு-ம்) புருஷ சிரேஷ்டனே! அது (ஞானம்) சத்துக்களின் சுசுருஷை (பணிவிடை) யினாலும் மிக்க வணக்கத்தினாலும், பிரசினத்தி ("பகவானே! ஓதுவிப்பீராக" (சாந்-எ-க-க) என்ற சாஸ்திரத்திற் கூறிய பிரார்த்தனையி) னாலும் அறியத்தக்கதாம். (எவ்வாறெனின்,) தத்துவ விசாரதரான சாதுக்கள் (சேவிக்கப்பட்டவர்களாய்) உபதேசிப்பார்:— (எ-று)

தத்துவத்தில் அதாவது வஸ்து பதார்த்தத்தன்மை விஷயத்தில், விசாரதர் அதாவது சாரதையாகிய சரஸ்வதி எவர்களினின்று

நீங்கியவளாவளோ அத்தகையினர் அதாவது சாஸ்திரமின்றியவமான அநுபவமுடையவர் தத்துவவிசாரதரெனப்படுவர். தத்துவத்தினை யுண்டுபண்ணுதலில் நிபுணர் தத்துவ விசாரதரென்றுமாம்; "ஞானிகளான தத்துவதரிசிகள்" என்றும்; "சமித்தினைக்கையிற்கொண்டவனாய் சுரோத்திரியரும் பிரஹ்மநிஷ்டருமான குருவினை" யென்றும் ஸ்மிருதியினும் சுருதியினும் விசேஷண மிரண்டிருத்தலால் இவ்வாறு கற்பிக்கப்படுகின்றது. (சo)

नानासङ्गोऽजनः कुर्वन्नैकं साधुसमागमम् ।
करोति तेन संसारे बन्धनं समुपैति सः ॥ ४१ ॥

[கடுஉ] (அ-கை) குரவனைச் சரணடைதலையே மூன்று சுலோகங்களால் பெருமைப்படுத்துகின்றார்:—

(சு-ம்) இப்புருடன் நாநாசங்கங் (நாநாவித புத்திர தார தனாதி விஷயமான ஆசக்தி)களைச் செய்துகொண்டு அக்காரணத்தினாலேயே ஒரு (முக்கிய) சாதுசமாகமத்தினைச் செய்கிறதில்லை. ஆதலால் அவன் சம்சாரத்தில் பந்தனத்தினைச் செவ்வையாய்ப் பெறுகின்றான் (எ-று)

அவ்வாறே "எதுவரையில் புருடன் மனதுக்குப் பிரியமான சம்பந்தங்களைச் செய்கின்றானோ, அதுவரையில் இவனுடைய இருதயத்தில் சோகமாகிய முளை (ஆணி)கள் அறையப்படுகின்றன" என்று பாரதத்தில் சொல்லப்பட்டுளது. (சக)

सत्सङ्गाद्गुणसंभूतिरापदां लय एव च ।
स्वहितं प्राप्यते सर्वैरिह लोके परत्र च ॥ ४२ ॥

[கடுங] (அ-கை) சற்சங்கஞ் செய்யாமையில் குற்றங்கூறி அதனைச் செய்தலிற் குணத்தினைக்கூறுகின்றார்:—

(சு-ம்) சத் சங்கத்தினால் (சாராசார விவேகபூர்ணமான) குணங்களின் உற்பத்தியும், (சோகமோகாதி) ஆபத்துக்களின் நாசமுமுண்டாகின்றன. அதனால் (அதிகாரிகள்) எல்லோராலும் தமது க்ஷேமரகமானது இகலோகத்தும் பரத்தும் அடையப்படுகின்றது. (எ-று)

இகத்ததும் பரத்ததுமான ஜீவன்முக்திசுகமும் விதேகமுக்தி சுகமும் பெறப்படும் என்பது பொருள். (சஉ)

इतरत्सुलभं राजसत्सङ्गोऽतीव दुर्लभः ।
यज्ज्ञात्वा न पुनर्बन्धमेति ज्ञेयं च तत्त्वतः ॥ ४३ ॥

[கடுச] (அ-கை) கூறிய அர்த்தத்தினையே சுருக்கிக் கூறுகின்ருர்:—

(க-ம்) அரசனே! (அடைதற் சௌகரியத்தினைக் குறித்து) மற்றவை சுலபமாம். எதனுல் ஞேயத்தினை (ஆத்மாவினை) உண்மையாக அறிந்து புருடன் மறுபடியும் பந்தத்தினை யடையானே, அத்தன்மைய சத்ஸங்கம் மிகவும் அடைகற்கரிதாம். (எ-று)

சத்ஸங்கமோ மனுஷ்யயோனியிலும் ஜந்துக்கட்கு அத்தியந்த வைராக்கிய தரிசனத்தால் சிலருக்கே யுண்டாகின்றது. அநேக ஜன்மங்களிற் செய்யப்பட்ட புண்ணியபலத்தன்மையால் மிகவுமே துர்பலமாம் சத்ஸங்கம். ஆதலால் அவசியம் செய்யவேண்டியதா மென்பது பொருள். (சரு)

ततः सर्वाणि भूतानि स्वात्मन्येवाभिपश्यति ।
अतिपापरतो जन्तुस्ततस्तस्मात्प्रमुच्यते ॥ ४४ ॥

[கடுடு] (அ-கை) ஞானத்தின் பயனையும் கூறுகின்ருர்:—

(க-ம்) அதனுல் (சத்துக்களால் கொடுக்கப்பட்ட ஞானத்தினுல் குரவனுற் சொல்லப்பட்ட யுக்தியினுல் பிரத்தியக் முகமாகத் திரும்பிய சித்தமுடையவனுய்) சர்வ (சென்றனவு மிருப்பனவும் வருவனவுமான) பூதங் (ஜராயு ஜாதி) களையும் ஸ்வாத்மாவில் (தனதுள்ளமாகிய ஆடியில்) முற்றுமாக (குறைவின்றி) க் காண்கின்ருன். (தடையின்றிய சர்வஞ்ஞத்வம் பெறுகின்ருன். அவ்வாறே ஆத்மவிஞ்ஞானத்தினுல் சர்வவிஞ்ஞானத்தினையும் பெறுகின்ருனென்பது பொருள்.) அவ்வாத்மஞானத்தினுல் அதிபாபரதனுன ஜந்துவும் (மிக்க பாபச் செய்கையினனும்) ("இவ்வுலகங்களை அவன் கொன்றும் கொல்லுகிற

இல்லை; கட்டப்படுகிறதுமில்லை." என்னும் கீதாவசனத்தால்) அப் பாபத்தினின்றும் விடுபடுகின்றான். ("எப்படி நாணற்பஞ்சு அக்னி யில் போடப்பட்டதாய் பஸ்பமாகின்றதோ, அதுபோல இவனுடைய எல்லாப் பாபங்களும் பஸ்பமாகின்றன" (சாந்-டு-உடு-ங) என்று ஞானத்திற்குப் பாபத்தினை யெரிக்குந்தன்மை கேட்கப்படுதலால்). (சச)

द्विविधान्यपि कर्माणि ज्ञानाग्निर्दहति क्षणात् ।
प्रसिद्धोऽग्निर्यथा सर्वं भस्मतां नयति क्षणात् ॥ ४५ ॥

[கடுக] (அ-கை) இதனையே திருஷ்டாந்தத்தினோடு கூறுகின் றார்:—

(சு-ம்) பிரசித்தமான அக்னி எப்படி எல்லாவற்றையும் க்ஷணத் தில் பஸ்ப மாக்குகின்றதோ அவ்வாறு ஞானக்கினி புண்ணியமும் பாபமுமான இருவகைக் கர்மங்களையும் க்ஷணத்தில் எரிக்கின்றது. (எ-று)

" வித்வான் புண்ணிய பாபங்களிரண்டனையும் கழுவுகின்றான் " " அவர்கள் புண்ணிய பாப மிரண்டனையும் கழுவுவர் " " பாப புண் ணிய மிரண்டு மொழிந்தபோது " என்றல் முதலிய சுருதிஸ்மிருகளால் பாபம்போல் புண்ணியநாசமும் முக்தியில் இஷ்டமாதலின் " இரு வகைக் கர்மங்களையும் " என்று கூறியதாம். (சடு)

न ज्ञानसमतामेति पवित्रमितरन्नृप ।
आत्मन्येवावगच्छन्ति योगात्कालेन योगिनः ॥ ४६ ॥

[கடுஎ] (சு-ம்) நிருபனே! (ஞானம் புண்ணியபாபங்களைப் பஸ்பமாக்குதலால்) மற்ற (" அக்னி பவித்திரம் சோமன் பவித்திரம் அப்பு பவித்திரம் என்றல் முதலிய சுருதிப்பிரசித்தமான.) பவித்திர மானவை ஞானத்தினோடு சமத்தன்மையினை யடைய. (ஞானத்தி னுல் உடனே சர்வகர்மக்ஷயமாவது போல அக்கினியாதிகளா லாகா தென்பது பொருள்.) அந்த ஞானத்தினை யோகாப்பியாசத்

திறல் காலத்தால் (காலத்தினாலாகிய யோக பரிபாகத்தினால்) யோகாப்பியாச ரதர்கள் ஆத்மாவி (இந்நேகத்தி) லேயே அடைகின்றனர். (அவ்வவ்வுபாதியாகாரத்தினை விஷேதித்தலால் பெறுகின்றனர்). அது, "எதனால் * நியமமாவது பரிசங்கியையாவது விதியர்த்தமே யாகின்றதோ அதனால் அநாத்ம அதரிசனத்தினாலேயே பரமாத்மாவினை யுபாசிக்கின்றேன்" என்பதனாற் சொல்லப் பட்டுளது.

भक्तिमानिन्द्रियजयी तत्परो ज्ञानमाप्नुयात् ।
लब्ध्वा तत्परमं मोक्षं स्वल्पकालेन यात्यसौ ॥ ४७ ॥

[கடுஅ] (௪-ம்) பக்திமானும் இந்திரிய ஜயமுடையவனுமான தற்பரன் (யோகபரன்) ஞானத்தினை (தத்துவமஸியாதி வாக்யஜந்ய போதத்தினை) யடைவான். அந்த ஞானத்தினை (இவ்வுலகத்தில்) அடைந்து (சிறிதுகாலம் பிராரப்த கர்மத்தினால் ஸ்தாபிக்கப்பட்ட தேகேந்திரிய சங்காதத்தில் ஜீவித்துக்கொண்டே முக்தனாயிருந்து) இந்த யோகி பரமமோக்ஷமான விதேககைவல்யத்தினை ஸ்வல்ப காலத்தினால் (பிராரப்த காம போகத்தின் முடிவில்) அடைகின்றான். (எ-று)

அவ்வாறே 'அந்தப்பிரஹ்மம் குமரிஸ்திரி சுகமறிவதுபோலத் தன்னாலேயே அறியத்தக்கதாம். பிறவிக்குருடன் குடத்தினை யறியாததுபோல அயோகி அறியவேமாட்டான்.' என்றும், "யோகத்தினாலேயே ஞானத்தினை யடைகின்றான்" என்றும் * தக்ஷஸ்மிருதியில் கூறப்பட்டிருத்தல் காண்க.

யோகத்திலும் பிரவிருத்தி பக்தியாதியுடையவனாலேயே யநுஷ்டிக்கத்தக்கதாமென்பது ஞானம். இது குருதேவவாக்கியாதிகளில்பயன் அவசியமுண்டாகுமென்னும் நிச்சயவடிவ சிரத்தைக்

* நியமபரிசங்கியைகளின் லக்ஷணத்தினை ஸ்ரீ விசாரசந்திரோதயம் ௧௬-வது கலையிலும், மீமாம்சாஅர்த்த சங்கிரக மொழிப்பெயர்ப்பிலும் காண்க.

* மற்றும் இதில் விசேஷப்பிரமாணங்களையறிய விரும்புவோர் ஹட யோகதீபிகை யுரையிற் காண்க.

கும் உபலக்ஷணமாம். இவ்விரண்டையுமுடையவனை இங்குப் 'பக்தியுடையவனும்' என்றார். (சஎ)

भक्तिहीनोऽश्रद्दधानः सर्वत्र संशयी तु यः ।
तस्य शं नापि विज्ञानमिह लोकोऽथ वा परः ॥ ४८ ॥

[கருக] (அ-கை) பக்தியாதியில்லாவிடத்துத் தோஷத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) பக்தியில்லாதவனும் சிரத்தையில்லாதவனுமாய், எவன் எல்லாவற்றிலும் சம்சயமுடையவனாகின்றானோ, அவனுக்கு இங்குச் சுகமுமில்லை, (உம்மையால்) பரலோகவிஷயத்தில் விஞ்ஞானமுமில்லை. இதனாலேயே இகலோகமும் பரலோகமுமில்லை. (எ-று)

இதனாற்றான் பகவானால் "சம்சயாத்மாவுக்கு இந்தலோகமுமில்லை பரலோகமுமில்லை சுகமுமில்லை" என்று கூறப்பட்டுளது. (சஅ)

आत्मज्ञानरतं ज्ञाननाशिताखिलसंशयम् ।
योगास्ताखिलकर्माणं बध्नन्ति नृप तानि न ॥ ४९ ॥

[ககூ௦] (அ-கை) ஞானமடைந்தவனுக்குச் சம்சயாதிகள் நசிக்கின்றனவென்று கூறுகின்றார்:—

(சு-ம்) ஆத்மஞானரதனும் (ஆத்மஞானத்திலும் அதனுபாயமான யோகத்திலும் நிஷ்டையுடையவனும்), ஆத்மசாக்ஷாத்காரமாகிய ஞானத்தினால் நசித்த சர்வசமுசயமுடையவனும் யோகத்தினால் நசித்த சகல கர்மங்களையுமுடையவனுமான அவனை நிருபனே! அவை (பக்திஹீனத்வ முதலியனவாவது கர்மங்களாவது) கட்டுப்படுத்தா. (எ-று)

ஆத்மா தேகாதிசங்காதமா? அதனின் வேறா? அதனின் வேறாயினும் கர்த்தாவா? அகர்த்தாவா? அகர்த்தாவாயினும் போக்தாவா? அபோக்தாவா? அபோக்தாவாயினும் அணுவா? விபுவா? விபுவாயினும், தயையுடையவனா? தயையில்லாதவனா? இவை முதலியன சம்சயங்களாம்.

ஞானி பிராரப்தத்தின் வேறான கர்மங்களைக் கெடுக்கின்றான். யோகியோ சமாதியப்பியாச பலத்தினால் பிராரப்தத்தினையும் கெடுக்கின்றான் என்பதனால் 'யோகத்தினால் நசித்த சகலகர்மங்களையு முடையவனும்' என்று கூறினார். (சகூ)

ज्ञानखड्गप्रहारेण संभूतामज्ञतां बलात् ।
छित्वान्तःसंशयं तस्माद्योगयुक्तो भवेन्नरः ॥ ५० ॥

[கஅக] (அ-கை) யோகத்திற்கு ஞானத்தினும் அதிகமாதற் றன்மையினைப் பிரஹ்மார்ப்பண யோகத்தினுக்குக் காட்டிப் பிரஹ்மார்ப்பண யோகத்தினை முடிக்கின்றார்:—

(சு-ம்) அதனால் (சம்சயாத்மா இரண்டுலோக சுகத்தினையு மிழக்கின்றான் என்றதனால்) அஞ்ஞத்தன்மை வலியாற் பிறந்த (முற்கூறிய) சம்சயத்தினை ஞானமாகிய வாள்வீச்சினாற் சேதித்து, நரன் யோகத்தோடுகூடியவனாகக் கடவன். (எ-று) (ருo)

ॐ तत्सदिति श्रीमद्गणेशगीतासूपनिषदर्थगर्भासु योगामृतार्थशास्त्रे श्रीगणेशपुराणे उ० श्रीगजाननवरेण्यसंवादे ब्रह्मार्पणयोगो नाम तृतोयोऽध्यायः ॥ ३ ॥

பிரஹ்மார்ப்பணயோகமென்னும்
மூன்றாமத்தியாயம்
முடிந்தது.

## நான்காமத்தியாயம்.

### த்வைத சந்நியாச யோகம்.

वरेण्य उवाच ॥

संन्यस्तिश्चैव योगश्च कर्मणां वर्ण्यते त्वया ।
उभयोर्निश्चितं त्वेकं श्रेयो यद्वद मे प्रभो ॥ १ ॥

[கசுஉ] (அ-கை) முந்திய அத்தியாயத்தில் சம்யமாக்னியில் என்றல் முதலியவற்றால் காயிக வாசிக மானஸிகங்களான எல்லாக் கர்மங்களின் விடுபாடான சந்நியாசம் சொல்லப்பட்டது. 'காம மாகிய முளையில்லாதனவாக' என்றல் (ங-உரு-வது சுலோகம்) முதலியவற்றால் அதே நிஷ்காமகர்மங்களின் அநுஷ்டானம் சொல் லப் பட்டது. பரஸ்பர விரோதமுள்ள இவ்விரண்டு பக்ஷங்களில் எனக்குச் சிரேயசுடையது எது என்று அறியவிரும்பினவனாய் வரேணியன் கேட்கலாயினன்:—

(சு-ம்) கர்மங்களின் சந்நியாசமும் யோகமும் (நிஷ்காமங்க ளான அவற்றின் அநுஷ்டானமும்) தம்மால் (கர்த்தவ்வியத் தன்மையாக) வர்ணிக்கப்படுகின்றன. பிரபுவே! இரண்டனுள் எவ்வொன்று நிச்சயிக்கப்பட்ட சிரேயசுள்ளதோ அதனை எனக் குச் செல்லியருள்வீராக. (எ-று)

மூலத்திலுள்ள एव (ஏ) காரம் கர்மங்களின் பிரிப்பால் சந்நியா சத்திற்கே அங்கீகரிக்கப்பட்ட தன்மையை யறிவித்தற்பொருட் டாம். तु (ஓ) வென்னும் சப்தம் துவைதத்தினைக் கெடுப்பதும் துவைதோபஜீவியுமான அவ்விரண்டன் அத்தியந்த விலக்ஷணத் தன்மையின் பொருட்டதாம். பிரபுவே என்றது ஆளவல்லோனே என்றதாம். (க)

**श्री गजानन उवाच ॥**

क्रियायोगो वियोगश्चाप्युभौ मोक्षस्य साधने ।
तयोर्मध्ये क्रियायोगस्त्यागात्तस्य विशिष्यते ॥ २ ॥

[கசுங] (அ-கை) இதனுத்தரம் ஸ்ரீ கஜானனர் சொல்லலாயி னர்:—

(சு-ம்) கிரியாயோக (நிஷ்காமகர்மாநுஷ்டான) மும் வியோக மும் (காயிகவாசிகமானஸிக கர்மங்களின் விடுபாடு) மான இரண் டும் (கிரமமாகச் சித்தத்தினைச் சுத்திசெய்தலாலும் தத்துவஞானத் திற் கேதுவாதலாலும்) மோக்ஷத்தின் சாதனங்களாகின்றன. அவ் விரண்டனுள் அதன் விடுபாட்டைவிடக் கிரியா (கர்ம) யோகம் விசேஷமாகின்றது. (எ-று)

விரக்தியில்லாதவனால் செய்யப்பட்ட கர்மத்தியாகம் (சந்நியாசம்) எறிவிழுதற்பொருட்டாகின்றது. கர்மியோ படுத்திருப்பவன் விழெவிழான் என்னும் நியாயப்படி விழ்ச்சியடையானென்பது கருத்து. (உ)

द्वन्द्वदुःखसहोऽद्वेष्टा यो न काङ्क्षति किंचन ।
मुच्यते बन्धनात्सद्यो नित्यं संन्यासवान्सुखम् ॥ ३ ॥

[கஎ௩] (அ-கை) எத்தன்மைய கர்மயோகம் தியாகத்தினும் விசேஷமானதா மெனக் கூறுகின்றார்:—

(சு-ம்) எவன் (சீதோஷ்ணாதி) த்வந்த்வங்களையும், அவற்றாலாம் துக்கங்களையும் சகிக்கின்றானோ (அவற்றால் கலங்காதவனாகின்றானோ), (அதனாலேயே) த்வேஷமில்லாதவனாகின்றானோ, (சத்ருக்களுக்கும் நாசத்தினை விரும்புகிறதில்லையோ), (சுகப்ராப்தி அல்லது துக்கநிவிருத்தியென்னும்) எதனையும் விரும்புகிறதில்லையோ (உதாசினனைப்போ லிருக்கின்றானோ), அவன் சித்தசுத்தி பலத்தினால் நித்யம் சந்நியாசியாகவே யிருந்துகொண்டு சுக (அநாயாச) மாக வாக்கிய சிரவணமாத்திரத்தினாலுண்டாகிய தத்துவஞானமுடையவனாய்ப் பந்த (யானென தென்னு மபிமானவடிவ பாச) த்தினின்றும் உடனே விடுபடுகின்றான். (எ-று) (௩)

वदन्ति भिन्नफलकौ कर्मणस्त्यागसंग्रहौ ।
मूढाल्पज्ञास्तयोरेकं संयुञ्जीत विचक्षणः ॥ ॥ ४ ॥

[கஎ௫] (சு-ம்) (முற்கூறியவிதமான கர்மயோகம் சந்நியாசத்தினும் விசேஷப்படுகின்றதென்பதனை யறியாதவர்களாகிய) மூடர்களான அற்பவறிவினர் கர்மத்தினைவிடுதலும் கொள்ளுதலுமான இரண்டும் வெவ்வேறு பயனுடையனவாம். (ஆத்மஞான விருப்பமாகிய பயனையுடையன கர்மங்கள், ஆத்மஞானமாகிய பயனையுடையது சந்நியாசம்) என்று கூறுகின்றனர். (அது அசத்தாம்; முற்கூறியவிதமான கர்மநிஷ்டையில் சந்நியாசம் அடங்கியிருத்தலால்). விரக்தனானவன் (இதனையறிந்து) அந்த (கர்மம் தியாகம்) இரண்டனுள் ஒன்றனைச் சாரக்கடவன். (எ-று)

இதன் பொருள் இதுவாம்:— செய்யப்படாத கர்மமுடையவனும் சம்யமபலத்தினுலேயே சித்தசுத்தியும் ஞானமுமாகிய இரண்டனையும் சம்பாதிக்கின்ருன். இவ்வாறே கர்மடனுக்கும் கூறியபடி சித்திக்கின்றதென்பதனுல் அவ்விரண்டனுள் ஒன்றே செவ்வையாய் அப்பியசிக்கப்படின், மற்றையது தானேசித்திக்கும் என்பது பொருளாம். (ச)

यदेव प्राप्यते त्यागात्तदेव योगतः फलम् ।
संग्रहं कर्मणो योगं यो विन्दति स विन्दति ॥ ५ ॥

[கசுசு] (அ-கை) கர்மம் யோகமென்னு மிரண்டனுள் ஒன்று செவ்வையா யநுஷ்டிக்கத்தக்கதா மென்று கருதிக் கர்மத்தில் யோகத்தின் அந்தர்பாவம் (அடக்கம்) சொல்லப்பட்டது. இப்போது யோகத்தில் கர்மத்தின் அந்தர்பாவம் சொல்லக்கருதி அவ்விரண்டற்கும் பயனுற் பேதமில்லையென்று கூறுகின்ருர்:—

(சு-ம்) எந்தப்பயனே தியாக (மூவிதகர்ம சந்நியாச) த்தினுல் பெறப்படுகின்றதோ அப்பயனே (இவ்வத்தியாயத்தின் உ-வது சுலோகத்திற் சொல்லப்பட்ட) கர்ம யோகத்தினுலும் அடையப்படுகின்றது. எவன் (இவ்வாறு) கர்மத்தின் சங்கிரகம் (சங்கிரிக்கப் படுகின்றது அதாவது கர்மத்தின் பயன் தன் அந்தர்பூதமாக்கப் படுகின்றது இதனுல் என்பதனுல் சங்கிரகமாம்.) யோகமென்று அறிகின்ருனே, அவன் ஆத்மாவினைச் சொன்னபடி அடைகின்ருன். (எ-று)

“பிரமாதத்தினுல் யோகிக்கு யாதேனுமோர் மகாபாதகம் நேருமாயின், அதற்கு வேறு பிராயச்சித்தமில்லை; யோகத்தினையே யப்பியசிக்கவேண்டும்” என்னும் ஸ்மிருதியினுல் யோகத்திற்கே சர்வ பாபக்ஷயகாரணத்துவ மிருத்தலால், அநுஷ்டிக்கப்படாத ஆசிரம மூன்றன் கர்மமும் சதாசாரியனது பிரசாதத்தினுல் பெறப்பட்ட யுக்தியினுல் யோகத்தினையே யப்பியசித்து, எல்லாப் பிரதிபந்தகநிவிருத்தி பூர்வகமாக ஆத்மாவினைப் பெறுகின்ருனென்பது பொருள். (ரு)

केवलं कर्मणां न्यासं संन्यासं न विदुर्बुधाः ।
कुर्वन्ननिच्छया कर्म योगी ब्रह्मैव जायते ॥ ६ ॥

[கசுஎ] (அ-கை) வைராக்கியமில்லாமல் கேவலம் கர்மங்களை விடுதலை விசேஷமாய் நிந்திக்கின்றார்:—

(சு-ம்) கேவலமான கர்மங்களின் நியாசத்தினை சந்நியாச மென்று அறிஞர் அறியார். (அவிரக்தனது சந்நியாசம் பய னின்றியதாய் மாறாகப் பிரத்தியவாயப் பயனுடையதா மென்பது பொருள்.) இச்சையில்லாமல் கர்மத்தினைச்செய்து யோகி பிரஹ்ம மே யாகின்றான். (எ-று)

ஆசையில்லாதவனான கர்மடனும் சித்தசுத்திக் கிரமத்தா லுண்டாகிய ஞானமுடையவனாய்ப் பிரஹ்மமே யாகின்றா னென் பது பொருள். (சு)

निर्मलो यतचित्तात्मा जितखो योगतत्परः ।
आत्मानं सर्वभूतस्थं पश्यन्कुर्वन्न लिप्यते ॥ ७ ॥

[கசுஅ] (அ-கை) இதனாலேயே கிரமத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) நிர்மலனும், (நிஷ்காமகர்மாநுஷ்டானத்தினால் சித்த சுத்தி யுண்டாய் இராகத்துவேஷாதி மல நீங்கியவனும்), யதசித்த னும் (பிரவர்த்திக்கச்செய்வனவாகிய இராகத்துவேஷ மிரண்டு மின்மையால் இஃதெனக் குண்டாகுக, இஃதெனக் குண்டாகலாகா தென்னு மிச்சையின்றிய தன்மையால் உபரதியடைந்த சித்த முள்ளவனும்), யதாத்மாவும் (யதசித்தத்தன்மையால் கர்மேந்திரிய வியாபாரமின்றியவனும்), ஜிதேந்திரியனும் (இத்தன்மைய அந்தர் முகனாய் ஈசுவரனிடத்தில் செலுத்தப்பட்ட திருஷ்டியுடையவ னாய்த் தத்தம் விஷயங்களினின்று இழுக்கப்பட்ட சர்வகரண முடையவனாய்ச் சிறிதுகாலத்தால் இந்திரியங்களை ஜயித்தவனும்), யோகதற்பரனும் (சித்தவிருத்தி நிரோதமாகிய அதனையே மேலாங் காரியமா யுடையவனும்), சர்வபூதங்களினு மிருப்பதான ஆத்மா வைக் கண்டு புண்ணிய பாவங்களைச் செய்பினும் பற்றப்படான். (எ-று)

இதன் அபிப்பிராயம் இதுவாம்:— பாகியவிஷயங்களை விட்டு உள்ளே இருதயத்தில் மனோமாத்திரமாக நிலைத்துள்ள யோகி முக்காலத்தைய துவைதம் முழுவதும் தனது சங்கற்பமாத்திரத்தால் அத்தியசிக்கப்பட்டதாகலின் பிரத்தியக்கினும் வேறாகாததாமென்னும் யுக்தியால் "இவ்வெல்லாம் யாதொரு இவ்வாத்மா" வென்னும் சாஸ்திரத்தாற் காண்கின்றான். எதனால் சங்கற்பமாத்திரத்தால் எழுந்ததாமோ ஜடா ஜட முழுவதும், அங்கு இரஜ்ஜு சர்ப்பம் போன்றன வாகிய ஜட பூதங்களில் உட்கலந்துள்ள அதிஷ்டான சத்தாமாத்திரமான ஆத்மாவினை எவன் காண்கின்றானோ, அந்த ஜடா ஜட விவேகதர்சியானவன் புண்ணியங்களையும் பாபங்களையும் செய்தும் அவற்றின் பயன்களான சுகதுக்கங்களாலாவது ஸ்வர்க்க நரகங்களாலாவது பற்றப்படான் என்றதாம். அவ்வாறே சுருதியும், யோகியினைப் புண்ணியபாவங்கள் பற்றாமையினை "எப்படித் தாமரையிலையினை நீர் பற்றுகிறதில்லையோ, அவ்வாறே இவ்வாறுணர்பவனிடத்திற் பாபகர்மம் பற்றுகிறதில்லை" (சாந்-௪-௧௪-௩) என்று காட்டுகின்றது. இதில் பாப மென்றது புண்ணியத்திற்கு உபலக்ஷணமாம்.

இவ்வாறாயின் "செய்யப்பட்ட புண்ணியபாபகர்மம் கற்ப கோடிகள் நூறுகளாலும் புசிக்கப்படாமல் நசியாது" என்னும் வசனத்தினால் யோகியினாற் செய்யப்பட்ட புண்ணியபாவங்கட்குச் சிறிது காலம் பிரதிபந்த மிருக்கினும், காலாந்தரத்தில் அவசிய முண்டாவதாம் போகமென்பது வருகின்றதே யெனின் வராது; "அவனுடைய புத்திரர்கள் தாயகமான சொத்தைப் பெறுகின்றனர். எல்லா சுகிருத்துக்களும் புண்ணியத்தினையும் துவேஷிப்பவர் பாபத்தினையும் பெறுகின்றனர்" என்பதனால் யோகிகள் மித்திரா மித்திரர்களிடத்திலேயே அப்பயனைப் போட்டுவிடுதலால் செய்தும் பற்றுகிறதில்லை யென்று கூறியது பொருத்தமுடையதேயாம்.

(எ-று) (எ)

तत्त्वाविद्योगयुक्तामा करोमीति न मन्यते ।

[௧௬௧] (அ-கை) கேவலம் ஆத்மயதார்த்தத் தன்மையினை யபரோக்ஷீகரித்தவனே கர்மங்களாற் பற்றப்படான் என்பதில்லை.

மற்றொ, பரோக்ஷ ஞானமுடையவனும் சங்கல்பத்தியாகத்தினால் கர்மபலன்களாற் பற்றப்படுகிறதில்லையென்று முற்கூறியதனையே நினைப்பூட்டுகின்றார்:—

(சு-ம்) தத்துவவித்தான யோகயுக்தாத்மா (பரோக்ஷமாக ஆத்மதத்துவத்தினை யுணர்ந்து அதனைப் பெறுதற்பொருட்டுக் கர்மயோகத்தோடு கூடிய தேகேந்திரியாதி சங்காதமான ஆத்மாவினை யுடையவன்) யான் இதனைச் செய்கிறேனென்று ஆத்மாவில் கர்த்திருத்துவத்தினைக் கொள்ளான். (எ-று)

एकादशानीन्द्रियाणि कुर्वन्ति कर्म संख्यया ॥ ८ ॥

(அ-கை) எவன்றான் செய்கின்றானெனக் கூறுகின்றார்:—

(சு-ம்) சங்கையினால் பதினோரிந்திரியங்கள் கர்மம் செய்கின்றன. (எ-று)

ஐந்து ஞானேந்திரியங்களும் ஐந்து கர்மேந்திரியங்களும் மனதொன்றுமான பதினோரிந்திரியங்களும் விகாரமுடைமையால் கர்மங்களைச் செய்கின்றன. அவிகாரமான ஆத்மா செய்கிறதில்லை. எப்படித் தூங்கும்புருஷனது பிராணாதிகள் அந்நத்தினைச் சமிக்கச் செய்தல் முதலியவற்றைச் செய்வனவாகவே யிருக்கின்றனவோ, அங்குப் புருஷன் யான் செய்கிறேனென்று மதிக்கிறதில்லையோ, அதுபோல ஜாக்கிரத்தும் கர்த்திருத்துவாபிமான மில்லாதனவாகச் செய்தும் அவற்றாற் பற்றப்படுகிறதில்லையென்பது பொருள். அது பகவானால் "எவன் பிரஹ்மத்தில் அர்ப்பித்து கர்மங்களைச் சங்கம் விட்டுச் செய்கின்றானோ, அவன் தாமரையிலை ஜலத்தினாற் பற்றப் படாததுபோலப் பாபத்தினாற் பற்றப்படான்" என்று கூறப்பட்டுளது. (அ)

तत्सर्वमर्पयेद्ब्रह्मण्यपि कर्म करोति यः ।
न लिप्यते पुण्यपापैर्भानोर्भानुर्यथार्थगः ॥ ९ ॥

[கஎ௦] (அ-கை) இதனையே விளக்குகின்றார்:—

(சு-ம்) எவன் (சங்கத்தினைவிட்டுக்) கர்மத்தினைச் செய்கின்றானோ, அவன் அவ்வெல்லாவற்றினையும் பிரஹ்மத்தில் அர்ப்பணம்

செய்க. அதனால் அவன் சூரியனது கிரணம் சுத்தா சுத்த வஸ்துக்களிற் பொருந்துவதாயினும் அவற்றின் சுத்தா சுத்தத்துவங்களாற் பற்றப்படாததுபோல (ஈசுவரார்ப்பிதமான) புண்ணியபாபங்களாலும் (அவற்றின் பயனான சுகதுக்கங்களாலும்) பற்றப்படான். (எ-று) (கூ)

कायिकं वाचिकं वौद्धमैन्द्रियं मानसं तथा ।
त्यक्त्वाशां कर्म कुर्वन्ति योगज्ञाश्चित्तशुद्धये ॥ १० ॥

[கஎக] (அ-கை) பலிதத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) யோக (கர்த்திருத்வாபிமானத் தியாக பூர்வகமான கர்மாநுஷ்டான) த்தினை யுணர்ந்தவர்கள் காயிகமும் (தீர்த்தஸ்நான குருதேவதா நமஸ்காராதியும்),வாசிகமும் (ஸ்தோத்திர ஜபாதியும்) பௌத்தமும் (புத்தியினால் செய்யப்படும் தேவதா தியானாதியும்), ஐந்திரியமும் (ருதுகாலத்தில் மனைவியிடம் செல்லுதல் முதலியனவும்) அப்படியே மானஸமு (இராகத்துவேஷங்களின்றி ஜகத்தின் கல்யாணத்தினைச் சிந்தித்தலு) மான (நித்தியநைமித்திக) கர்மத்தினைச் சித்தசுத்தியின் பொருட்டுப் பலத்தினாசையைவிட்டுச் செய்கின்றார்கள். (எ-று)

இங்குச் சித்தசுத்தியின்பொருட்டு என்னும் வசனத்தினால் நிஷித்தங்களும் காமியங்களும் சங்கபலத்தியாக பூர்வகமாக அநுஷ்டிக்கப் பட்டனவாயினும், சித்தசுத்தியின் பொருட்டாவனவாகா; ஆதலால் எவற்றிற்கு அச்சித்தசுத்தியின் பொருட்டாதற்றன்மை சம்பவிக்கின்றதோ, அக்கர்மங்களே இங்குச் செய்யத்தக்கனவாமென்று விதிக்கப்படுகின்றது. (க0)

योगहीनो नरः कर्म फलेहया करोत्यलम् ।
बध्यते कर्मबीजैः स ततो दुखं समश्नुते ॥ ११ ॥

[கஎஉ] (அ-கை) விபக்ஷத்தில் பாதகத்தினைக் கூறுகின்றார்:-

(சு-ம்) எந்த (கர்த்திருத்வாபிமானத் தியாகமாகிய) யோகமின்றிய நரன் (தேகாபிமானி (இலௌகிகமும் வைதிகமுமான)

கர்மத்தினைப் பயன் விருப்போடு ஏராளமாய்ச் செய்கின்றானோ, (அல்லது இது என்னால் செவ்வையாய்ச் செய்யப்பட்டதென்று பூஜிக்கின்றானோ), அவன் கர்மபீஜங் (கர்மப்பிரவிருத்தி ஹேதுக்களான வாசனை) களால் கட்டுப்படுகின்றான். அதாவது தேகத்தினை விட்டவனாயினும் வாசனையாகிய பாசத்தின்வலியால் வேறுதேகத்தோடு பந்தப்படுகின்றான். அதனால் (பிறப்பினை யடைந்தவன் அடையத்தக்க கர்மாநுசாரமாகத்)துக்கத்தினைச் செவ்வையா யநுபவிக்கின்றான். (கர்மமும் அதன்வாசனைத் தொடர்ச்சியும் ஒருபோதும் சேதிக்கப்படா வென்பது பொருள். (கக)

मनसा सकलं कर्म त्यक्त्वा योगी सुखं वसेत् ।
न कुर्वन्कारयन्वापि नन्दन्ध्भ्रे सुपत्तने ॥ १२ ॥

[கஎரு] (அ-கை) அதன் நாசம் எவ்வாறாமெனக் கூறுகின்றார்:—

(சு-ம்) யோகி (இயமாதி யஷ்டாங்கங்களோடு கூடிய யோகமுடையவன்)மனதோடுகூட சகலகர்ம (அகம் பிரஹ்மாஸ்மியென்னும் வாக்கியார்த்தாநுசந்தான) த்தினையும் விட்டு (நிர்பீஜசமாதிநிஷ்டனாய்)ச் சுகமாக(அகண்டாநந்தத்தினை யநுபவித்துக்கொண்டு) இருப்பன். அதனால் (நிர்விகற்பத் தன்மையினாலேயே) செய்யாதவனு மாகின்றான், செய்வியாதவனு மாகின்றான். அதனால் பெரும் சிறைச்சாலையான குழியிலிருக்கினும், நல்லபட்டணத்தில் இராஜ்யம் செய்யினும் மனதின்றிய தன்மையால் ஆநந்தரூபமாய் இருந்துகொண்டிருப்பன். (எ-று)

நிர்விகற்பனான யோகிக்குப் பாகியமான ஸ்பரிசதுக்கம் இல்லையென்பதனைச் சுருதியும் "புருஷன் ஆத்மாவினை இது யானென்று அறிவானாயின், எதனை விரும்புவான், எவனுடைய காமத்தின் பொருட்டுச் சரீரத்தைப் பின்பற்றி மிகத் தபிப்பன்" (பிருக-ச-ச-கஉ) என்று கூறுகின்றது. (கஉ)

न क्रिया न च कर्तृत्वं कस्यचित्सृज्यते मया ।
न क्रियाबीजसंपर्कः शक्त्या तत्क्रियतेऽखिलम् ॥ १३ ॥

[கஎச] (அ-கை) ஆத்மா நிர்விகற்பனாயின் பிரமாதிருத்வ முதலிய விகற்பம் எங்கிருந்து எழுகின்றதென்றாசங்கித்துக் கூறுகின்றார்:—

(சு-ம்) (நிர்விகற்பனான) என்னால் எவனுக்கும் கிரியை (பிரவிருத்தி) யும், கர்த்திருத்துவமும் (செய்கின்றேனென்னும் அபிமானமும்), கிரியாபீஜ சம்பர்க்கமும் பலக்கிரியையிற் பிரவிருத்திக்கச் செய்வனவாகிய பலப்பிராப்திவாசனைகளோடுண்டாம் சம்பந்தமும்) ஆக்கப்படுகிறதில்லை. அவ்வெல்லாம் (கிரியாகர்த்திருத்துவமும் அவ்வாசனையுமாகிய இவைமுதலிய கிரியாகாரகபலம் யாவும்,) சக்தியினாற் செய்யப்படுகின்றது. (எ-று)

“தனது குணங்களால் மறைத்துவைக்கப்பட்டுள்ள தேவாத்ம சக்தியினை” (சுவே-க-௩) என்னும் சுருதிப் பிரசித்தமானதும் (பிரமாண கோசரத்தன்மையால்) குண (இரஜ்ஜு சர்ப்பபிரம முதலிய தமோரஜஸ் ஸத்துவகாரிய) ங்களால் மறைந்துள்ளதுமான மூலாஞ்ஞான மாகிய சக்தியினாலேயே அயஸ்காந்தம் இரும்பினைச் சேட்டிப்பதுபோலச் செய்யப்படுகின்றதென்பது பொருள். (க௩)

कस्यचित्पुण्यपापानि न स्पृशामि विभुर्नृप ।
ज्ञानमूढा विमुह्यन्ति

[கஎரு] (அ-கை) அதனால் கர்த்திருத்துவாதி சங்காதத்தினின்று விடுபட்டவனும் சர்வப்பிராணிகளின் பிரத்தியகாத்மாவுமாகிய யான் சங்காதத்தினால் செய்யப்பட்டனவாகிய புண்ணிய பாபங்களைப் பற்றேனென்று கூறுகின்றார்:—

(சு-ம்) யான் விபுவா (வியாபகனாய் ஆகாயம்போல் அசங்கனா) தலால் எவனுடைய புண்ணிய பாபங்களையும் பற்றேன் (இவ்வாறிருந்தும்) நிருபனே! ஞானமூடர்கள் (ஞானமாகிய பிரஹ்ம விஷயத்தில் அசங்கமான ஆத்மாவினை அறியாதவர்கள்) விசேஷமாக (கர்த்திருத்வாபிமானத்தினால் * யாதாயாத நரகதுக்காதியால்) மோகிக்கின்றனர். (எ-று)

---

* யாதாயாதம்=போக்குவரத்துடையது.

मोहेनावृतबुद्धयः ॥ १४ ॥

(அ-கை) ஞானமூடத்துவ காரணம் கூறுகின்றார்:—

(சு-ம்) மோகத்தினால் மறைக்கப்பட்ட புத்தியினையுடையவர்களா யிருத்தலால். (எ-று)

ஆத்மதரிசனத்தில் சாஸ்திராசாரி யோபதேச சமதமாதிகளால் சம்ஸ்கரிக்கப்பட்ட புத்தியாகிய கரணம் எப்போது மோகத்தினால் மறைக்கப்பட்டதோ, அப்போது ஆத்ம தரிசனமின்மையால் அநாத்ம சுக விருப்பினராய் மோகிக்கின்றன ரென்பது பொருள். (கச)

विवेकेनात्मनोऽज्ञानं येषां नाशितमात्मना ।
तेषां विकासमायाति ज्ञानमादित्यवत्परम् ॥ १५ ॥

[கஎகூ] (அ-கை) ஞானத்தினால் அஞ்ஞானம் நசிக்கிலோ மோகியார் என்று கூறுகின்றார்:—

(சு-ம்) விவேகத்தினால் (சமாதி யப்பியாசத் தேர்ச்சியால் ஜடாஜடங்களை வேறுபடுத்தலினால்) எவர்களது ஆத்மாவின் சம்பந்தியான (ஆத்மாவினை யாசிரயித்து ஆத்மாவினை விஷயஞ்செய்வதான) அஞ்ஞானம் ஆத்மாவினால் (அகம் பிரஹ்மாஸ்மி யென்னும் வாக்கிய ஜந்யமான புத்தி விருத்தியினால்) நாசமாயிற்றோ (காரியத்தோடு பாதிக்கப்பட்டதோ) அவர்களது ஞானம் ஆதித்தனைப் போல மேலாக விகாசத்தினை யடைகின்றது. (எ-று)

இது பொருளாம்:— பிருகதாரணியகத்தில் 'பதியினது காமத்தின் பொருட்டுப் பதி பிரியனாகிறதில்லை. தனது காமத்தின் பொருட்டுப் பதி பிரியனாகிறான்' என்று சம்சாரியின் ஆத்மாவினைப் பிரஸ்தாபித்து, "ஆத்மா காணத்தக்கது" (பிருக-உ-ச-ரு) என்று அதன் காணத் தக்கதன்மையினைக் கூறி "ஆத்மாவின் தரிசனத்தினால்" என்பதனை முதலாகவுடையதும், "இவ்வெல்லாம் அறியப்பட்டதாம்" என்பதனை அந்தமாகவுடையதுமான வாக்கியத்தால் ஆத்ம விஞ்ஞானத்தினால் சர்வவிஞ்ஞானமாகிய பயன் சொல்லப்

பட்டது. அது ஆத்மாவிற்குச் சர்வாத்மத்தன்மையின்றிச் சம்ப வியாது என்பதனால் "யாதொரு இவ்வாத்மாவோ அதனுடைய தாம் இவ்வெல்லாம்" என்று சர்வாத்மத்தன்மை சமர்ப்பிக்கப் பட்டுளது. ஆதலால் ஞானிகட்கு ஞானம் ஆதித்தனைப்போல விகா சத்தினை யடைகின்றது என்று கூறியது பொருத்தமுடையதாம். (கரு)

मन्निष्ठा मद्धियोऽत्यन्तं मच्चित्ता मयि तत्पराः ।
अपुनर्भवमायान्ति विज्ञानन्नाशितैनसः ॥ १६ ॥

(அ-கை) இதே விஞ்ஞானத்தின் பயனைக் கூறுகின்றார்:—

(சூ-ம்) பரமாத்மாவாகிய என்னிடத்தில் நிஷ்டையுடையவர் களும், (அத்தன்மையராயினும் பரதர் மானிடத்துப்பற்றிய புத்தி யினராய் மான்றன்மையடைந்தமையால்) அத்தியந்தம் என்னிடத் துப் புத்தியினை யுடையவர்களும், [அவ்விரு தன்மையுமுடையவ ராயினும் சௌபரி யென்பவர் க்ஷணமாத்திரம் குடும்பியான மீனின் செய்கையினைப்பார்த்து அதிற் கொடுக்கப்பட்ட சித்தத்தினராய் ஐம்பது மாந்தாதாவின் கன்னிகைகளோடுகூட காயவியூகத்தினால் அத்துணை மாளிகை யுத்தியானபரிவாரங்களை யோகபலத்தாற் சிருஷ்டித்து இரமித்தினர். அதனால் புண்ணியங்குறைந்துபோகப் பிரஷ்டரானார். ஆதலால்] என்னிடம் வைத்த சித்தத்தினர்களும், [இம் மூவகையான தபோநிஷ்டனாயினும் இராவணன் ஐசுவரிய பரனானன்; பரமார்த்த பரனாகவில்லை ஆதலால்] தற் (பரமார்த்த வஸ்து) பரர்களுமான யோகிகள் விஞ்ஞான (ஆத்ம சாக்ஷாத்கார)த் தினால் பஸ்மமாகிய புண்ணிய பாபத்தினராய் மறுபடியும் பிறவா மையை (கைவல்யத்தினை) முழுவதுமாகப் பெறுகின்றனர். (எ-று) (கசா)

ज्ञानविज्ञानसंपन्ने द्विजे गवि गजादिषु ।
समेक्षणा महात्मानः पण्डिताः श्वपचे शुनि ॥ १७ ॥

[கஎஎ] (அ-கை) விஞ்ஞானத்தின் பயனும் சர்வ பூதங்களி லும் சமத்துவ தரிசனமா மென்று கூறுகின்றார்:—

(சு-ம்) ஞான (சாஸ்திராசாரியோபதேசத்தினுலாம் போத)த்தினையும், விஞ்ஞான (யோகத்தினுலாம் அதனநுபவ) த் தினையுமடைந்த துவிஜ (மூவர்ணத்த) விடத்திலும், (அதனிற்றாழ்ந்த) கோவிலும் யானை முதலிய பசுக்களிடத்தும் (அவற்றினும் தாழ்ந்த) நாய்மாம்சம் புசிக்கும் சண்டாளனிடத்திலும், நாயினிடத்திலும் பண்டிதர்கள் விற்பன்ன சித்தரான அறிவுடையோர்) சமதிருஷ்டியின (சமமாகிய பிரஹ்மத்தினையே காண்பவ) ராவர். (எங்கும் பிரஹ்ம புத்தியுடையவராவ ரென்பது பொருள்.)

महात्मानः

[கஎஅ] (அ-கை) இதுதான் எதனுலெனக் கூறுகின்றுர்:—

(சு-ம்) மகாத்மாக்களாதலின். (எ-று)

மகான் (பெரிய) அதாவது மூவகைப்பரிச்சேத மின்றிய தான, ஆத்மாவினை யுடையோர் மகாத்மாக்களாவர். ஆத்மாவின் சர்வாத்மத்தன்மையினை (எல்லாவற்றின் ஸ்வரூபமாதற்றன்மையினை) ச் சாக்ஷாத்கரித்தவர்கள், அதாவது எல்லாவற்றினையும் ஆத்மாவாகக் காண்பவர்கள் ஓரிடத்தும் தாரதம்மியத்தினைக் காணு ரென்பது பொருள். (கஎ)

वश्यः स्वर्गो जगत्तेषां जीवन्मुक्ताः समेक्षणाः ।
यतोऽदोषं ब्रह्म समं तस्माच्चर्विषयी कृतम् ॥ १८ ॥

[கஎகூ] (அ-கை) இத்தன்மைய சமதரிசனம் தாம்பிக (இடம்பமுள்ளவ) னுக்கும் சம்பவிக்கின்றதாகலின், அதனை நீக்குதற் பொருட்டு ஞானத்தினது திருஷ்டபலனைக் கூறுகின்றுர்:—

(சு-ம்) அவர் (பிரஹ்மதரிசிகளான யோகி) கட்கு ஸ்வர்கம் (ஸ்வர்க்கத்துள்ள தேவகணமும்) வசத்ததாம். அவ்வாறே ஜகத்தும் (பூதபௌதிகமும்) வசத்ததாம். ஜீவன் முக்தரும் (ஜீவிப்பவர்களாய் அதாவது பிராணனைத் தரிப்பவர்களாகவே நிர்விகற்ப சமாதியில் எல்லாவுபாதிகளான் விடுபட்டவரும்), (அதனுலேயே சமாதியினின்று விழித்தகாலத்திலும் கானலின் அவயவமே மகா

மடுவாகப் பிரகாசிப்பதுபோலப் பிரஹ்மமே ஜகத்ரூபமாக விளங்குகின்றது என்னும்) சமமான காட்சியுடையோருமாகின்றனர். (பிரஹ்மமே இவ்வெல்லாம் ஆத்மாவே இவ்வெல்லாம் யானே இவ்வெல்லாம் என்று காண்பவருமாவரென்பது பொருள்.) எதனால் தோஷ (மாயாசம்பந்த) மின்றிய பிரஹ்மம் சம (சத்தான ஒரு வடிவ) மாமோ அதனால் அவர்களால் (சாஸ்திரமுணர்ந்தோரால்) அந்தப் பிரஹ்மம் விஷயீ (சாக்ஷாத்) கரிக்கப்பட்டாதும். (எ-று)

அவ்வாறே யோகசூத்திரமும் "சத்துவம் புருஷன் என்னும் இரண்டன் வேற்றுமையுணர்ச்சி மாத்திரமுள்ளவருக்குச் சர்வபாவாதிஷ்டாதிருத்துவமும் (எல்லாப் பொருள்களையும் ஆளுதற்றன்மையும்) சர்வஞாத்ருத்துவமும் (எல்லாவற்றினையும் அறியுந்தன்மையும்) உண்டாம்" என்று சித்த சித்துகளின் விவேக பலத்தினைக் கூறுகின்றது.

ஸ்வர்கம் வசத்ததாதல் திருதராஷ்டிரனுக்குத் தத்துவமுபதேசித்தற்பொருட்டு விதுரரால் பிரஹ்மலோகத்திருக்கும் சநத்குமாரர் அழைத்துப் பொருக்தப்பட்டார் என்பதனாலும், ஜகத்து வசத்ததாதல் அநந்தயோஜனை அகல நீளவாழமுள்ள சமுத்திரம் கும்பசம்பவரான அகத்தியரால் சாணளவுள்ள தமது வயிற்றிற்செலுத்தப்பட்டது என்பதனாலும் கண்டதேயாம். (கஅ)

प्रियाप्रिये प्राप्य हर्षद्वेषौ ये प्राप्नुवन्ति न ।
ब्रह्माश्रिता असंमूढा ब्रह्मज्ञाः समबुद्धयः ॥ १९ ॥

[கஅ0] (அ-கை) தன்னாலறியத்தக்கதான ஞானபலத்தினையும் கூறுகின்றார் :—

(சு-ம்) எவர்கள் பிரஹ்மாசிரிதராய் (பிரஹ்மஞானக் கப்பலினாலேயே சம்சார சமுத்திரத்தினைக் கடப்போமென்னும் புத்தியினால் பிரஹ்மத்தினையே ஆசிரயித்தவராய்) (இதனாலேயே) நன்மூடராகாத (தமது ஹிதத்தி னுபாயத்தினைக் காண்ப) வராய், பிரஹ்ம ஞானிய (பரோக்ஷத் தன்மையால் ஆத்மதத்துவமுணர்ந்தவ) ராய், (அதனாலேயே) சம (விக்ஷேபப்படாத) புத்தியினராய்,

பிரியத்தினையும் அப்பிரியத்தினையு மடைந்து சந்தோஷத்தினையும் துவேஷத்தினையும் அடைகிறதில்லையோ, (அவர்கள் பிரஹ்மத்தின் விஷயீகரிக்கின்றனர்) என்று முந்தியதனோடு கூட்டுக. (கக)

वरेण्य उवाच ॥

किं सुखं त्रिपु लोकेपु देवगन्धर्वयोनिपु ।
भगवन्कृपया तन्मे वद विद्याविशारद ॥ २० ॥

[கஅக] (அ-கை) ஞானத்திற்கும் பயன் சர்வஞ்ஞத்துவத்திலும் அதிகமாகச் சொல்லப்பட்டது. இவ்வாறு யோகத்திற்கும் அப்பயனே கூறப்பட்டது. ஆதலால் இவ்விரு வழிகளில் எதுமேலான தென்னும் அபிப்பிராய முடையவனாய் வரேணிய ராஜன் கேட்கலாயினன் :—

(க-ம்) பகவானே (சம்பூர்ண ஞானைசுவரிய முடையவரே)! மூன்றுலகங்களிலும் (உபலக்ஷணத்தினாற் கொள்ளப்படும் பதினன்கு லோகங்களிலும் அதாவது பிரம்மாண்ட கோளக முழுவதிலும்) தேவ கந்தர்வ யோனிகளில் சுகம் (சுகிப்பிக்கின்றது என்பதனால் சுகசாதனம் அதாவது நிரதிசய சுகத்தின் சாதனம்) யாது? (ஞானமா? யோகமா)? வித்தையிற் றேர்ந்தவரே! அதனை எனக்குக் கிருபையினாற் சொல்லியருள்வீராக. (எ-று)

'வித்தையிற்றேர்ந்தவரே' என்னும் விளியால் வித்தியா சம்பிரதாயப் பிரவர்த்தகராதற் றன்மையால் தாமே இதனைச்சொல்லுதற் குரியவராகின்றீ ரென்பது சூசிப்பிக்கப்படுகின்றது. (உ0)

श्री गजानन उवाच ॥

आनन्दमश्नुतेऽसक्तः स्वात्मारामो निजात्मनि ।
अविनाश्यं सुखं तद्धि न सुखं विषयादिषु ॥ २१ ॥

[கஅஉ] (அ-கை) கூறியவிதமானவழியில் மனதோடு கூடியனவாகிய இந்திரியங்கட்கு ஏகாக்கிரத்தன்மை அத்தியந்தம் செய்தற்கரியதா மென்பதனால் வரேணியராஜனுக் கதிகாரமின்மையை மதித்து, யோகமார்க்கத்தினையே உபதேசிக்க விரும்பியவராய் ஸ்ரீ கஜானனர் சொல்லலாயினர்:—

(சு-ம்) அசக்தன் (பஞ்சகோசவடிவஸ்தூலஸூக்ஷ்மகாரணசரீரங்களினின்று வேறுபட்ட ஆத்மாவினைச் சாஸ்திரத்தினுலுணர்ந்து, அவற்றில் தனதாத்மத்தன்மை யபிமானமில்லாதிருப்பவன்) நிஜாத்மாவில் (இதே தேகத்தில்) ஸ்வாத்மாராமனுய் (அவ்வக்கோசாத்மத்தன்மையினை விட்டு உபாதியின்றிய தானுகிய ஆத்மாவில் இரமிப்பவனுய்) ஆநந்தத்தினை (கோசபஞ்சகத்திற் கப்பாற்பட்ட வஸ்துவினை) வியாபிக்கிருன் (தன்மாத்திர மாகின்ருன்). விநாசமின்றிய சுகம் அதுவே. விஷயாதிகளில் சுகமில்லை. (எ-று). (உக)

विषयोत्थानि सौख्यानि दुःखानां तानि हेतवः ।
उत्पत्तिनाशयुक्तानि तत्रासक्तो न तत्ववित् ॥ २२ ॥

[கஅங] (அ-கை) விஷயாதிகளிற் சுகமில்லை யென்பதனையே விரிக்கின்ருர்:—

(சு-ம்) விஷயத்தினின் றெழுந்தனவும் உற்பத்தி நாசமுடையனவுமான அச்சுகங்கள் துக்கங்கட்குக் காரணங்களாம். அதில் (விஷய சுகத்தில்) ஆசக்தியு (பற்று) டையவன் தத்துவஞானியாகான். (எ-று)

விஷயத்தினின் றெழுந்த சுகமே சம்ஸ்காரவடிவமாக ஆத்மாவில் தங்கிக் காலாந்தரத்தில் அதில் இச்சையினை யுண்டுபண்ணுகிறது. இச்சையுடையவன் அதனையடையு முபாயத்தில் பிரவர்த்திக்கின்ருன். பிரவர்த்தித்தவன் யாதேனுமோர் நிமித்தத்தால் தடுக்கப்பட்டவனுய்க் கோபத்தினுல் பிரதிபந்திப்பவர்களைக் கொல்லுகிருன். அதனுல் அவர்களால் பந்திக்கப்படுகின்ருன். இவ்விதத்தால் அவை துக்கஹேதுக்களாம். அதனுல் போக்குவரத்துள்ள விஷய சுகத்திற் பற்றுள்ளவன் தத்வஞானியாகா னென்று கூறியதாம். (உஉ)

कारणे सति कामस्य क्रोधस्य सहते च यः ।
तौ जेतुं वर्ष्मविरहात्स सुखं चिरमश्नुते ॥ २३ ॥

[கஅச] (அ-கை) இவ்வாறு அப்பியாசத்தில் இரதியினை யுண்டுபண்ணுதற் பொருட்டதான ஞானப்பிரசம்ஸையும், தீவிர

வைராக்கியத்தினை யுண்டுபண்ணுதற்பொருட்டதான விஷயநிந்தை யும் செய்யப்பட்டன. இப்போது காமக்குரோத மிரண்டனையும் ஜயித்தலே அவசியம் செய்யத்தக்கதா மென்று கூறுகின்றார்:—

(சு-ம்) காமத்தின் காரணம் (திவ்விய ஸ்திரீயாதி லாப) முள்ள போதும், கோபத்தின் காரணம் (துஷ்டர்களால் அவமானதி செய்யப் படுதல்) நேர்ந்தபோதும் எவன் அவ்விரண்டனையும் சரீரம் நீங்கு மளவும் ஜயிக்க உற்சாகப்படுகின்றானோ, அவன் நீண்ட சுகத்தினை அநுபவிக்கின்றான். (எ-று)

தேகநீங்கும் வரையில் செய்யவேண்டும். மூலத்துள்ள **वर्ष्म** (சரீர) பதத்தின் முன் **आ** (ஆ) என்பதனைச் சேர்க்கவேண்டும். "**आशरीरविमोक्षणात्**" சரீர நீங்கும் வரையில், என்று பகவத் வசன மிருத்தலால். அல்லது **वर्ष्मविरहात्** என்பதற்கு **ल्यब्लोपे पञ्चमी** என்ற வியாகரணவிதிப்படி வர்ஷ்ம (சரீர) விரகத்தினை அபிவியா பித்து என்று பொருள்கொள்க. (உங)

अन्तर्निष्ठोऽन्तःप्रकाशोऽन्तःसुखोऽन्तारतिर्लभेत् ।
असांदिग्धोऽक्षयं ब्रह्म सर्वभूतहितार्थकृत् ॥ २४ ॥

[கசுரு] (அ-கை) காமக்குரோதங்களை ஜயித்தவன் எதனைப் பெறுவானெனக் கூறுகின்றார்:—

(சு-ம்) (காமக்குரோதங்களை ஜயித்தவனுக்குப் பகிர்முகத் துவம் இயல்பாகவே நீக்கப்பட்ட தாதலால்) அந்தர்நிஷ்டனும் (குரவ னுபதேசித்த யுக்தியால் இருதயபுண்டரீகத்தினை விரியச் செய்தலில் நிஷ்டையுடையவனும்); அதனாலேயே உட்பிரகாசனும் (இருதயாகாசத்துள்ள சர்வபாவங் (கருத்துக்) களையும் பிரகாசிப்ப வனும்), அதனாலேயே உட்சுகனும் (கிருதகிருத்தியன் யான் என்று உள்ளேயே சுகத்தினைப் பெறுபவனும்), அதனாலேயே அந்தர்ரதியு (உள்ளேயே எல்லாச் சம்சயமு மொழிந்த பிரீதியுடையவனு) மாய் அழிவற்ற பிரஹ்மத்தினை யடைகின்றான். அதனால் இதில் சந்தேக மற்றவ னாகின்றான்.

(அ-கை) இவ்வாறு பிரஹ்மத்தினை யடைபவன் யாவன் எனக் கூறுகின்றார்:—

(சு-ம்) சர்வபூதங்கட்கும் இதமான அர்த்தத்தினைச் செய்பவன் அதாவது சர்வபூதங்களின் சுகிருத்தான சந்நியாசி. (எ று) (௨௪)

जेतारः षडरीणां ये शमिनो दमिनस्तथा ।
तेषां समन्ततो ब्रह्म स्वात्मज्ञानां विभात्यहो ॥ २५ ॥

[௧அ௬] (அ-கை) கேவல சந்நியாசத்தினாலேயே இஃதாகிறதில்லை யென்று கூறுகின்றார்:—

(சு-ம்) எவர்கள் (காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மற்சர மென்னும்) ஆறு பகைவரையும் ஜயித்தவர்களோ, சம (மனோநிக்கிரக) முடையவரோ, அவ்வாறே தம (புறவிந்திரிய நிக்கிரக) முடையவராகின்றனரோ, அந்த ஸ்வாத்மஞ்ஞருக்கு (யாதொரு இவ்வாத்மா வுளதோ அதனதாம் இவ்வெல்லா மென்பதனால் ஆத்மாவில் சர்வாத்மத்தன்மையைச் சமாதியில் செவ்வையாய் அறிபவர்கட்கு) (விசேஷ பாவஸ்தையினும்) எவ்விடத்தும் பிரஹ்மமே விளங்குகின்றது. அகோ (ஆச்சரியம்). (எ-று)

அவ்வாறே "யான் அந்நம்" என்றல் முதலியனவாக முன் உதாகரிக்கப்பட்டுள்ள சுருதியும் "இது அமிருதமான பிரஹ்மமே முன்னும் (கிழக்கிலும்) ம் பிரஹ்மம்; பின்னு (மேற்கிலு) ம் பிரஹ்மம்; தெற்கிலும் பிரஹ்மம், வடக்கிலும் பிரஹ்மம், கீழும் பிரஹ்மம்; மேலும் பிரஹ்மம்; விரிந்துள்ள இது பிரஹ்மமாம்". இவ்வெல்லாம் மேலான பிரஹ்மமாம். (முண்-௨-௨-௧௧) என்னும் வேறு சுருதியும் கூறுகின்றன. (௨௫)

आसनेषु समासीनस्त्यक्त्वेमान्विषयान्बहिः ।
संस्तभ्य भ्रुकुटीमास्ते प्राणायामपरायणः ॥ २६ ॥

[௧அ௭] (அ-கை) இனிச் சித்தத்தினை அடக்கச் சாமர்த்தியமில்லாதவனுக்கு ஹடயோகத்தினை ஆசனங்களில் என்பதனை (இச்சுலோகத்தினை) ஆதியாகவுடைய அத்தியாயசேஷத்தாற் கூறுகின்றார்:—

(சு-ம்) (பதும ஸ்வஸ்திகாதி) ஆசனங்களில் செவ்வையாய் ('ஸ்திரமாய்ச் சுகமுண்டாக இருத்தல் ஆசனம்' என்னும் சூத்திரப் படி. சுகமுண்டாகுமாறு) இருப்பவனாய் இந்த (ரூபாதி) விஷயங்களை வெளியில்விட்டு புருவநடுவில் திருஷ்டியினை (பார்வையை)ச் செவ்வை யாய் நிறுத்தி, பிராணாயாம பராயணனாய் (பிராணன்களை யடக்கு தலில் தற்பரனாய்) இருக்கக்கடவன். (எ-று)

சுகமுண்டாமாறு என்றதனால் அசுகத்தினைத்தரும் குக்கு டாதியாசனங்களின் நிவிருத்தியாம்.

வெளியில் விட்டு என்பதற்கு உள்ளிலும் வெளியிலும் விட்டு, மனதினாலும் உள்ளே நினைக்கலாகாதென்று பொருள் கொள்க. (உசு)

प्राणायामं तु संरोधं प्राणापानसमुद्भवम् ।
वदन्ति मुनयस्तं च त्रिधाभूतं विपश्चितः ॥ २७ ॥

[கஅஅ] (அ-கை) பிராணாயாமலக்ஷணத்தினைக் கூறுகின்றார்:-

(சு-ம்) பிராணாயாமமோ பிராணாபானன்களால் செவ்வையா யுண்டாவதான சம்ரோதமாம். அதனை அறிஞராகிய முனிகள் (பிராணாயாமத் தேர்ச்சியுடையோர்) (காலப்பிரமாண பேதத்தால் உத்தம மத்திம அதமத்தன்மையால்) மூவகை வடிவினதாகக் கூறுவர். (எ-று)

இது அபிப்பிராயம்:— பிராணாபானனிரண்டற்கும் நாபிதேசத் தில் முடிச்சிருக்கின்றது. அதிலிருந்து மேல்நாடியினால் முக நாசித் துவாரங்களால் வெளியிற்செல்லுகின்ற வாயு பிராணனும். அந்நாபிதேசத்தினின்றே கீழ்நாடிவழிகளால் கீழே விரிந்து பாயு மார்க்கத்தால் வெளியிற்செல்லும் வாயு அபானனும். அங்குப் பாயுத்துவாரத்தினைப் பார்ஷ்ணியால் (குதிமேற்புறத்தால்) நிரோ தித்து, அபானனை மேன்முகமாக்கி, பிராணனையும், பூரகத்தால் வெளி வாயுவினை உட்கொண்டு கீழ்ச்செல்லுதற் கதியினைத்தடுத்த லால் ஒன்றனோடொன்று எதிர்முகமாவனவாக்கி, ஒருமைப்படுத்தப் பட்ட அவ்விரண்டன் நிரோதம் எதுவோ அது சம்ரோதமாம். (உஎ)

प्रमाणभेदतो विद्धि लघुमध्यममुत्तमम् ।
दशभिर्द्वयधिकैर्वर्णैः प्राणायामो लघुः स्मृतः ॥ २८ ॥

[கஅக] (அ-கை) அதனையே இரண்டு சுலோகங்களாற் கூறு கின்றார்:—

(சு-ம்) பிரமாண (அளவின்) பேதத்தால் அது இலகுவும் மத்தியமமும் உத்தமமு மாமென்றறி. பன்னிரண்டு வர்ண(எழுத்தின்) அளவுகளால் பிராணயாமம் இலகுவென்று கருதப்படுகின்றது. (எ-று)

இருதயத்தில் தொடர்பான ஓங்காரம் கண்டாநாதம் பிசோர்ணம் போல் (தாமரைத்தண்டு நூல்போற் றொடர்ச்சியானது) என்று வேறிடத்திற் காண்டலால் மூன்றரை மாத்திரை வடிவினதாகிய பிரணவத்தின் அளபெடுத்தலால் (அளபெடையால்) மிகவும் ஸ்பஷ்டமாக உச்சரிக்கப்படுதல் எதுவோ அதில் எழுத்தின் பிரமாணகாலம் விநாடி யறுபதின் பாகமானமாத்திரை இரண்டி னளவினதாம். தீர்க்கமாக (நீட்ட) ப்பட்ட பிரணவமோ நான்குமாத்திரா காலத்தினதாகின்றது. அந்தப்பிரணவத்தின் பன்னிரண்டுமுறையுச்சரிப்பு எப்போது ஒரு சம்ரோத்ததி லுண்டாகின்றதோ, அப்போது அது இலகுப் பிராணயாமமாம். (உஅ)

चतुर्विंशत्यक्षरो यो मध्यमः स उदाहृतः ।
षट्त्रिंशल्लघुवर्णो य उत्तमः सोऽभिधीयते ॥ २९ ॥

[ககூ0] (சு-ம்) இருபத்துநான்கு முறை பிரணவோச்சாரணவளவினது எதுவோ அது மத்தியம மெனப்படுகின்றது. முப்பத்தாறு முறை பிரணவோச்சாரண காலத்தது எதுவோ அது உத்தம மெனப் படுகின்றது. (எ-று)

மூலத்திலுள்ள "**लघुवर्णैः** = இலகுவர்ணங்களால்" என்பதனால், அசக்தர்களுக்கு இரண்டு மூன்று மாத்திரைப் பிரணவங்களினாலேயே எல்லாப் பிராணயாமங்களு மாகின்றன; சக்தர் சக்ததரார் சக்ததமர்களுக்குத் தாரம் தாரதரம் தாரதமம் என்பவற்றால் அவையாகின்றன என்பது சூசிக்கப்பட்டதாம். (உகூ)

सिंहं शार्दूलकं वापि मत्तेभं मृदुतां यथा ।
नयन्ति प्राणिनस्तद्वत्प्राणापानौ सुसाधयेत् ॥ ३० ॥

[ககக] (அ-கை) இம்முறையாகப் பிராணுபானன்கள் வசமாக்கத்தக்கனவா மென்று திருஷ்டாந்தத்தோடு கூறுகின்ருர். :—

(சு-ம்) பிராணிகள் எப்படிச் சிங்கத்தினை யாவது கொடும்புலியினை யாவது மதர்த்த எருதினை யாவது மெதுவாக வசப்படுத்துகிறார்களோ, அதுபோல விவேகியானவன் பிராணுபானன்களையும் சுகமாகச் சாதிக்கவேண்டும் (அடமாகச் சாதிக்கலாகாது என்பது பொருள்). (௩௰)

पीडयन्ति मृगांस्तेन लोकान्वश्यंगतान्नृप ।

[ககஉ] (அ-கை) பிராணஜயத்தில் குணங்களைக் கூறுகின்ருர். :—

(சு-ம்) அவர்கள் (பிராணஜய முடையவர்கள்) (எல்லாப் பூதங்களினும் ஒரு பிராண தேவதையினை மதித்து தனதாத்மாவினைப் போல) காட்டுமிருகங்களைப் பீடியார் [எல்லாவிதத்தாலும் பிராண ஹிம்ஸையினைச் செய்யார். அதாவது தேவயஞ்ஞ பிதிருயஞ்ஞங்கட்குரியவைகளில் பாடீனம் ரோகிதம் (இரண்டுவிதமான * பிராணிகள்) என்னும் முதலாவதான இரண்டும் சிலாக்கியமானவைகளா மென்னும் சாஸ்திரத்தால் சிராத்தமுதலிய நிமித்தத்தில் பிராணிவதம் செய்யவேண்டியதாக நேர்ந்தாலும் செய்யார். அஹிம்ஸையினையே அதனினும் அதிகமானதாக மதிப்பார் என்பது பொருள்.] அரசனே! (அவ்வாறே பிராணவித்தையின் வலியினாலேயே) வசப்பட்ட (ஸ்வாதீனமாயுள்ள) லோகங்களையும் (போக்கிய பதார்த்தங்களான திவ்ய ஸ்திரீயாதிகளையும்) பீடியார். [அதாவது பூதங்களைக் கொல்லாமல் போகம் சம்பவியாதென்னும் நியாயத்தால் அத்தன்மைய போகத்திலும் ஹிம்ஸா தோஷத்தினைக் காண்பவராய்ச் சும்மா விருப்ப ரென்பது பொருள்.]

* இருவகை மீன் என்பர்.

दहत्येनस्तथा वायुः

(அ-கை) அதில் ஏதுவைக் கூறுகின்றார்:—

(சு-ம்) பாபத்தினை (பாபத்தின்பயன் விருப்புடைமையா மென்னும் ஸ்மிருதியினால் விருப்புடைமை யாவும் பாபத்தின்பயனே யாம். அத்தன்மைய பாவத்தினை) பிராணவாயு (செவ்வையா யாராதிக்கப் பட்டதாய்) அவ்வாறு (விருப்புடைமை எப்போதும் உதியாதபடி) எரிக்கின்றது. (எ-று)

பாபத்தினைப் பிராணாயாமத்தினால் தகிக்குக என்னும் சாஸ்திரத்தால் தகிக்கப்பட்ட பாபமுடைய பிராணிகட்குப் போகேச்சை யுண்டாகா தென்பது பொருள்.

संस्तब्धा न च तत्तनुम् ॥ २१ ॥

(அ-கை) யோகிகட்கு ஸ்மிருதிக்கேடு முதலிய தோஷங்களும் ஸ்மிருதிகளிற் சொல்லப்படுகின்றன. அவ்வாறாகப் பிராணாயாமத்திற்குத் தீவிர வைராக்கியத்தினை யுண்டுபண்ணுந்தன்மை எவ்வாறு வர்ணிக்கப்படுகின்ற தெனக் கூறுகின்றார்:—

(சு-ம்) அந்தப் பிராணாயாமபரனது மனதோடுகூடிய சரீரத்தினை ஸ்தம்பிக்கச்செய்யாது. (எ-று)

செவ்வையா யாராதிக்கப்பட்ட பிராணன் யோகியின் சித்தத்தினையாவது சரீரத்தினையாவது ஸ்தம்பியாது; ஸ்மிருதிக்கேடு முதலியனவோ பிரமாதமுடைய யோகிக்கே யுண்டாகின்றன, அத்தியந்தம் எச்சரிக்கை யுள்ளவனுக் குண்டாகா வென்பது கருத்து. (உக)

यथा यथा नरः कश्चित्सोपानावलिमाक्रमेत् ।
तथा तथा वशीकुर्यात्प्राणापानौ हि योगवित् ॥ २२ ॥

[கசுரு] (அ-கை) இவ்வாறு பிராணாயாமத்தின் அவாந்தர பலத்தினைக் கூறித் திருஷ்டாந்தத்தோடு அதன் விருத்தியினை (பெருக்கத்தினை) விதிக்கின்றார்:—

(சு-ம்) ஒரு புருஷன் சோபானவலியினை (படிவரிசைகளை) எப்படி யெப்படிக் கடப்பானே, அப்படி யப்படியே யோகமுணர்ந்தவன் பிராணுபானன்களை வசமாக்கவேண்டும். (எ-று)

படியேறுதல் போலவே பிராணஜய கக்ஷியினையும் பின்பின் கிரமமாகவே விருத்தி செய்யவேண்டும். கீழ்வரிசையி லிருப்பவனுன பிராணுயாமஞ் செய்வோன் அகஸ்மாத்தாக மேல்வரிசையினிலேறுதற் குரியவனுகான். அவ்வாறு ஏற முயல்பவன் அவசியம் வியாதியாதிகளால் பாதிக்கப்படுகின்ருன் என்பது பொருள். (கூஉ)

पूरकं कुम्भकं चैव रेचकं च ततोऽभ्यसेत् ।
अतीतानागतज्ञानी ततः स्याज्जगतीतले ॥ २३ ॥

[ககூச] (அ-கை) இதன் விசேஷத்தினையும் அதன் பயனையும் கூறுகின்ருர்:—

(சு-ம்) பூரகத்தினையும் கும்பகத்தினையும் அதன் பின் இரேசகத்தினையும் அப்பியசிக்கக்கடவன். அதனுல் (இவ்வாறு அப்பியசிப்பதனுல்) உலகத்தில் சென்றது வருவது முணர்பவனுகின்ருன். (எ-று)

"பதினுறுமாத்திரைகளால் வாயுவினை இடைகலையால் உட்கொள்ளுக" என்று கூறியிருத்தலால் நாசித்துவாரத்தினுல் வாயுவினைப் பருகுதல் பூரகமாம். பருகிய வாயுவினை (அறுபத்துநான்கு மாத்திரையளவு) உள்ளே அடக்குதல் கும்பகமாம். "முப்பத்திரண்டு மாத்திரையளவு மெல்ல மெல்ல பிங்கலையால் விடுக" என்பதனுல் அடக்கிய வாயுவை வெளியில் விடுதல் இரேசகமாம். (கூங)

प्राणायामैर्द्वादशभिरुत्तमैर्धारणा मता ।
योगस्तु धारणे द्वे स्याद्योगी शश्वत् सदाऽभ्यसेत् ॥ २४ ॥

[ககூடு] (அ-கை) இதன் விருத்திக்கிரமத்தினைக் கூறுகின்ருர்:-

(சு-ம்) உத்தமங்களான (முப்பத்தாறு பிரணவோச்சாரகாலவளவினவாகிய) பன்னிரண்டு பிராணுயாமங்களால் வாயுவின் ஒரு தாரணை கருதப்படுகின்றது. (இவ்வளவினதாகிய பிராணுயாமப்

பியாசத்தினுல் யோகி மூலாதாராதி ஸ்தானங்களில் எதிலெதில் வாயுவினை நிறுத்த விரும்புகின்ருனே அதிலதில் அதனை நிறுத்தக்கூடியவனுகின்ருன் என்பது பொருள். இத்தாரணையே இருமடங்காயின் யோகமாகின்றது, அதாவது யோகி அத்தியந்தம் சுவதந்திர னுகின்ருன். அதனுல் அதனை யோகிசன் எப்போதும் அப்பியசிக்கவேண்டும். (எ-று)

அதனுல் (அவ்வாறு சுதந்திர னுதலால்) பக்ஷத்திலாவது மாசத்திலாவது அதிகத்திலாவது எல்லா வாயுவினையும் நிரோதிக்கக் கூடியவ னுகின்ருன் என்பது பொருள். (கூச)

एवं यः कुरुते राजंस्त्रिकालज्ञः स जायते ।
अनायासेन तस्य स्याद्वश्यं लोकत्रयं नृप ॥ ३५ ॥

[ககூரு] (அ-கை) இதன் பயனைக் கூறுகின்ருர்:—

(சு-ம்) அரசனே! இவ்வாறு எவன் செய்கின்ருனே, அவன் முக்கால முணர்பவ னுகின்ருன். நிருபனே! அவனுக்கு உலக மூன்றும் அநாயாஸமாக வசமுடையதாம். (எ-று)

கேவலப் பிராணுயாம ஜயத்தினுலாவது தாரணைகளினுலாவது, திரிகாலவுணர்ச்சியாவது சர்வபூத வசியத்துவமாது உண்டாகாது; "பிராணுயாமங்களால் பாபத்தினையும் தாரணைகளால் தோஷங்களையும் கெடுக்கின்ருன்" என்பதனுல் அவ்விரண்டற்கும் தோஷத்தினைக் கெடுக்குந்தன்மையே ஸ்மரிக்கப்படுதலா லெனின், அவ்வாறன்று; சர்வஞ்ஞத்துவம் ஆதிகாரிகம் (அதிகாரமுடைமையாம்) என்னும் நியாயத்தால் அவ்விரண்டற்கும் அப்பயனுடைமை பொருந்துதலின், எப்படி உத்தர கிரதுவாற் சாதிக்கப்படுவன வாகிய சர்வ கர்மங்களினும் விருப்புடைய புருஷர்களை மிக உற்சாகப்படுத்துதற் பொருட்டு உத்தரகிரதுவின் சாதனவடிவ அக்கினி சித்திஹேதுவான ஆதானங்கமான பூர்ணுஹுதியில் உபசாரமாகப் பூர்ணுஹுதியினுல் சர்வகர்மங்களையும் அடைகின்ருன் என்று சர்வகாமாப்திக்குக் காரணமாந்தன்மை ஸ்துதியின்பொருட்டுச் சொல்லப்படுகின்றதோ, அவ்வாறே இங்கும் தியானசாதன அதிகாரத்தால் அஹேது

வான பிராணுயாமத்தில் தியானத்தின் பயனுன திரிகாலஞ்ஞத்துவமும் ஜகத்வசியத்துவமும் ஸ்மரிக்கப்படுதல் ஆநிகாரிகமாம் (அதிகார முடைமையினதாம்) என்று அறியவேண்டும்; "தியானத்தினுல் ஐசுவரங்களான குணங்களைப் பெறுகின்முன்" என்னும் ஸ்மிருதியால். (கரு)

ब्रह्मरूपं जगत्सर्वं पश्यन्ति स्वान्तरात्मनि ।

[ககஎ] (அ-கை) முற்சுலோகத்தின் பிற்பாதியால் யோகபலத்தினைக் கூறி, சந்நியாச சப்தத்தினுற் சொல்லப்படுவதும் அதன் பயனுமான ஞானத்தின் பயனை அரைச் சுலோகத்தினுற் கூறுகின்முர். :—

(சு-ம்) சந்நியாசிகளோ, தமது அந்தராத்மாவில் (இருதய புண்டரீகத்துள் ளிருப்பதான இருதயாகாச மெனப்படும் பிரஹ்மத்தில்) பிரஹ்மரூப (பிரத்தியக்கின் வேருகாத ஸ்வரூப) மாகச் சகல ஜகத்தினையும் காண்கின்றனர். (எ-று)

एवं योगश्च संन्यासः समानफलदायिनौ ॥ ३६ ॥

(அ-கை) அத்தன்மைய இந்த ஞானபலம் சொல்லப்பட்டது. இவ்வாறு சொல்லப்பட்ட யோகஞானபயன்க ளிரண்டற்கும் அபேதமிருத்தலால் அவ்விரண்டற்கும், அபின்னத்துவமா மென்று கூறுகின்முர்:—

(சு-ம்) இவ்வாறு யோகமும் சந்நியாசமும் சமான பயனைத் தருவனவாம்.

இங்கு ஞானம் சந்நியாசபதத்தினுல் உபசாரமாகச் சொல்லப் படுகின்றது. "சந்நியாசிகள் இந்த லோக (பிரஹ்ம) த்தினையே விரும்பியவர்களாய்ச் சந்நியசிக்கின்முர்கள்" என்பதனுல் விவிதிஷா சந்நியாசம் ஆத்மஞானத்தின் பொருட்ட தாதலும், "இந்த அவ்வாத்மாவினை யறிந்து பிராஹ்மணர் (பிரஹ்மஞானிகள்) புத்திரேஷணையி னின்றும் வித்தேஷணையி னின்றும் நீங்கிப் பிக்ஷாசரியத்தினைச் சரிக்கின்றனர் (சந்நியாசிகளாகின்றனர்)" என்பத

னால் வித்துவத் சந்நியாசம் பிரஹ்மஞானத்தின் பரிபாகத்தின் பொருட்டதாதலாலும், இருவிதத்தாலும் சந்நியாசத்தினால் கொள்ளப்படுந் தன்மையிருத்தலின் ஞானம் சந்நியாசபதத்தினால் சொல்லப்படுகின்றது. (கூசா)

जन्तूनां हितकर्तारं कर्मणां फलदायिनम् ।
मां ज्ञात्वा मुक्तिमाप्नोति त्रैलोक्यस्येश्वरंविभुम् ॥ ३७ ॥

[ககூஅ] (அ-கை) யோகஞான மிரண்டனுள் ஒரு வழியினால் என்னை யறிந்து முக்தனாகின்றானென்று கூறுகின்றார்:—

(சு-ம்) (தற்காலம் பாபத்தைக்கெடுப்பனவாகிய தீர்த்தாதிகளைப் படைத்தவனெனின், அன்று) சர்வ ஜீவர்களுக்கும் ஹிதத்தினைச் செய்பவனும், யஞ்ஞாதி கர்மங்களின் பயனைத் தருபவனும் (கேவல ஜடமானகர்மத்தினின்று பயனுண்டாகாது; மற்றோ அதனால் திருப்தி செய்விக்கப்பட்ட என்னிடத்தினின்றே யுண்டாகின்றது) மூவுலகத்தி னீசுவரனும் (அந்தரியாமித் தன்மையால் ஆளுவோனும்) (அரசனைப்போலாளுந் தன்மையால்) விபுவுமான (கணேசனான) என்னை அறிந்து மோக்ஷமடைகின்றான்.

இரண்டி லொருவழியால் தத்துவஞான முண்டாவதனை வசிஷ்டர் "இராகவனே! சித்தநாசத்திற்கு யோகமென்றும் ஞானமென்றும் இரண்டு கிரமங்களுள. யோகமாவது சித்திவிருத்திகளின் நிரோதமாம். ஞானம் செவ்வையாய் ஆத்மாவினைக் காண்டலாம். ஒருவனுக்கு யோகமும், ஒருவனுக்கு தத்துவ நிச்சயமான ஞானமும் அசாத்தியமாம். ஆதலால் இவ்விரண்டு பிரகாரங்களையும் தேவனான பரமசிவன் திருவாய்மலர்ந்தருளினர்." என்று கூறியிருக்கின்றனர். அமிர்த பிந்தூபநிஷதமான சுருதியும் (ரு) 'க்ஷயத்தினை யடையும்வரையில் மனது இருதயத்திலடக்கத் தக்கதாம் இது ஞானமும் தியானமுமாம். எஞ்சிய மற்றது கிரந்த விஸ்தாரமாம்." என்று ஞானத்தினாலாவது தியானத்தினாலாவது சித்த

க்ஷயத்திற்கே புருஷார்த்தத்துவம் கூறுதலால் சித்த நாசத்திற்கு இரண்டு கிரமங்களுள வென்று கூறியது பொருத்தமுடையதாம். (௩௭)

ॐ तत्सदिति श्रीमद्गणेशगीतासूपनिषदर्थगर्भासु योगामृतार्थ-शास्त्रे श्रीगणेशपुराणे उ० श्रीगजाननवरेण्यसंवादे द्वैधसंन्यासयोगो नाम चतुर्थोऽध्यायः ॥ ४ ॥

த்வைத சந்நியாச யோகமென்னும்

நான்காமத்தியாயம்

முடிந்தது.



## ஐந்தாமத்தியாயம்

### யோகங் கூறுதல்.



श्री गजानन उवाच ॥

श्रौतस्मार्तानि कर्माणि फलं नेच्छन्समाचरेत् ।
शस्तः स योगी राजेन्द्र अक्रियाद्योगमाश्रितात् ॥ १ ॥

[௧௧௯] (அ-கை) யோகஞான மிரண்டற்கும் சமான பயனுடைமை சொல்லப்பட்டதாயினும், யோகத்தினால் தோஷமீங்கிய சித்தத்தில் ஞானமுண்டாகின்றது என்பதனால் யோகத்திற்கே முதன்மை யிருத்தலின் ஏறும் வழியினைக் கேட்க விரும்பியவனான வரேணியனை உபலக்ஷித்து, தாமே முற்கூறப்பட்ட யோகத்தினோடு கூடிய யோகத்தினைச் சொல்லக்கருதியவராய் ஸ்ரீ கஜானனர் கூறலாயினர்:—

(௧-ம்) இராஜேந்திரனே! யோகாப்பியாசத்தில் பிரவிருத்தித்தவனுப் கர்மத்தினை விட்டவனை (சந்நியாசியை) விட சிரௌதங் (திரேதாக்கினி சாத்தியங்களான அக்கினிஹோத்திராதி)

களும், ஸ்மார்த்தங் (கிருஹியாக்கினி சாத்தியங்களான ஔபாசனாதி) களுமான கர்மங்களை (மற்ற ஜப தபாதிகளையும்) பலத்தை (ஸ்வர்க்கம் பிரதிஷ்டை முதலிய * ஆமுஷ்மிகமும் ஐஹிகமுமான பயனை) விரும்பாது, எவன் செவ்வையாய் ஆசரி (இதனால் யான் பவித்திரனுவேன் என்னும் சிரத்தையோடு அநுஷ்டி) ப்பானே, அக்கர்மயோகி மேன்மையுடையவனுவன். (எ-று)

தியானத்தில் திடாதிகார சித்தியின் பொருட்டதாய்க் கர்மயோகம் தியான யோகத்தினும் மேலானதாகத் துதிக்கப்படுகின்றது. (க)

योगप्राप्त्यै महाबाहो हेतुः कर्मैव मे मतम् ।
सिद्धयोगस्य संसिद्ध्यै हेतू शमदमौ मतौ ॥ २ ॥

[உ00] (அ-கை) நிஷ்காமகர்மத்தின் அவதியினைக் கூறுகின்றார்:—

(அ-ம்) மகாபாகுவே! சித்தைகாக்கிரத் தன்மையாகிய யோகப் பிராப்தியின் பொருட்டுக் காரணமாவது (சிரௌதங்களான) கர்மமென்பதே (சர்வஞ்ஞனை) எனதபிப்பிராயம். (குருவினுற் சொல்லப்பட்ட யுக்தியினுல் இருதயத்தில் செவ்வையாய் நிறுத்தப்படும் சித்தம் எதுவரையில் ஏகாக்கிரத் தன்மையினை யடையவில்லையோ அதுவரையில் கர்மங்கள் செய்யத்தக்கனவா மென்பது பொருள்.) சித்தயோக (சித்த ஏகாக்கிரத் தன்மை சித்தித்தவ) னுக்கு நற்சித்தியின் (முக்கிய சமாதிலாபத்தின்) பொருட்டுக் காரணங்களாகச் சமதம மிரண்டும் (என்னுல்) கருதப்பட்டனவாம். (எ-று)

இஃதபிப்பிராயமாம்:- எது ஏகாக்கிரமான சித்தத்தில் செவ்வையா யெழுந்த அர்த்தத்தினை மிகப் பிரகாசிக்கின்றதோ, கிலேசங்களைக் குறைக்கின்றதோ, கர்மபந்தங்களை மிகத் தளர்த்துகின்றதோ; நிரோதத்திற்கு எதிர்முகமாக்குகின்றதோ அந்த ஸம்பிரஞ்ஞாத சமாதி இங்கு யோகமாகச் சொல்லப்பட்டதாம். யோக பாஷியகர்த்தாவாகிய பகவானுன பாதராயண (வியாஸ)

* ஆமுஷ்மிகம்=பரலோகத்தது. ஐஹிகம்=இகலோகத்தது.

ரால், "சம்பிரஞ்ஞாத யோகத்தின் பயன் வடிவங்களான சித்திகளில் பற்றுள்ள யோகி விழவே செய்வன். ஆகலால் அங்கு பகிறுநிக்ரகமான சமம் அபேக்ஷிக்கப்பட்டதாம். நிக்கிரகிக்கப்பட்ட மனதின் தத்துவ வுணர்ச்சிக்குத் தகுதியாதற்றன்மை தமமாம். அவ்விரண்டும் அசம்பிரஞ்ஞாத சமாதிலாபத்தின்பொருட்டு அவசியம் ஆசிரயிக்கத்தக்கனவாம்." என்பதனுல். இங்குச் சமதம சப்தங்களால் விதிப்படி கர்மத்தினை விடுதல் வடிவ பாரிவிராஜ்ய (சந்நியாச) மெனப்படும் உபரதியும் கொள்ளப்படும். (உ.)

इन्द्रियार्थांश्च संकल्प्य कुर्वन्स्वस्य रिपुर्भवेत् ।
एतानानिच्छन्यः कुर्वन्सिद्धिं योगी स सिध्यति ॥ ३ ॥

[உ0க] (அ-கை) இங்குச் சமதம மிரண்டு மில்லாவிடத்துத் தோஷத்தினைக் கூறுகின்றார்:—

(க-ம்) [இருதயாகாசத்திற் பிரவேசித்த போகியினையெடுத்துக்கொண்டு கூறும் "அவன் பிதிருலோக காமனுயின், சங்கற்பத்தினுலேயே இவன் பிதிரர் செவ்வையாய் எழுகின்றனர். அதனுல் பிதிருலோகத்தோடு சம்பன்னனுய் விளங்குகின்றான்." (சா்-அ-உ-க) என்றல் முதலிய சுருதியினுல் சங்கற்ப மாத்திரத்திலுலேயே அவ்விஷயங்களால் யோகி புஷ்களமான போகத்தினைச் செய்கின்றான் என்பது அறியப்படுகின்றது. அத்தன்மைய இதுவே கூறப்படுகின்றது :-] இந்திரியார்த்தங்களைச் சங்கற்பித்துச்செய்து (சங்கற்ப பூர்வகமாக இந்திரிய சாத்தியபோக ரூபங்களான விஷயங்களை யுண்டுபண்ணி யோகசித்தியினு லுண்டாகும் சுகத்தினையே புருஷார்த்தத்தன்மையாக அறிந்து **ச** என்பதனுல் அச்சுகத்தினைப் பரிகரித்தலா லடையத்தக்க பதத்தினை யறியாது) குயோகியானவன் தனக்குத்தானே பகைவனுகின்றான். (ஆத்மாவினைத் தமோவலையில் வீழ்த்துகின்றான் என்பது பொருள்.) எந்த யோகி (சங்கற்பத்தினுலாம் இந்திரியார்த்தங்களான) இவற்றினை விரும்பாது சமாதி சித்தியினைச் செய்கின்றானே, அதனுல் அவன் சித்திக்கின்றான். அதாவது சம்பிரஞ்ஞாத சமாதியிலாம் சித்திகளைத் துச்சமாக்கி அசம்பிரஞ்ஞாதத்தினைச் சாதிக்கின்றான். (எ-று)

அங்கும் சமதம மிரண்டும் அபேக்ஷிக்கப்பட்டனவேயா மென்பது பொருள். (௩)

सुहृत्त्वे च रिपुत्वे च उद्धारे चैव बन्धने ।
आत्मनैवात्मनो ह्यात्माऽनात्मा भवति कश्चन ॥ ४ ॥

[உ0உ] (அ-கை) இதனையே மூன்று சுலோகங்களாற் கூறுகின்றார்:—

(சு-ம்) ஆத்மா (மனது) ஆத்மாவின் (ஜீவாத்மாவின்) சுகிருத் தன்மையி (நட்பி) லும், பகைமையிலும், மீட்சியிலும், கட்டிலும் ஆத்மாவின (தனது ஸ்வரூபத்தின) லேயே ஓர் அநாத்மாவாகின்றது. (எ-று)

இது பொருளாம்:— பாலன் தனது மனதினுற் கற்பிக்கப்பட்ட இயக்கனுன மனோமாத்திரத்தினல் பயத்தினை யடைகின்முன். அவ்வாறே சர்வஜந்துவும் தன் மனதாற் கற்பிக்கப்பட்ட சத்துருவினாலும் மித்திரனாலும் துக்கத்தினையும் சுகத்தினையுமடைகின்றது. அவ்வாறே தனது மீட்சியினைச் செய்யவேண்டிய போது மனதே குரு முதலிய வடிவமாக ஆகின்றது. அவ்வாறே பந்தனத்தில் மனதே ஸ்திரீமுதலிய வடிவமாக ஆகின்றது. அந்த மனதும் ஜீவனது அநாத்மாவாம். அதாவது ஆத்மாவின் விரோதியாம். அதாவது அநாத்மா ஆத்மாவினை, சுக துக்க ஹேதுக்களான விஷயங்களையும் சத்துரு மித்திரன் முதலியவற்றையுமுண்டு பண்ணிச் சம்ஸரிக்கச்செய்கின்றது (ஜனனமரணங்கட்காளாக்குகின்றது). ஆதலால் மனோநாசம் செய்யவேண்டியதாம் என்பது கருத்து. (௪)

मानेऽपमाने दुःखे च सुखे सुहृदि साधुषु ।
मित्रेऽमित्रेऽप्युदासीने द्वेष्ये लोष्टे च काञ्चने ॥ ५ ॥

[உ0௩] (அ-கை) மனோநாசோபாயத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) மானத்தி (மரியாதையி) லும், அபமானத்தி (அவமரியாதையி) லும், துக்கத்திலும், சுகத்திலும், சுகிருத்தி (உபகாரஞ்

கருதாது உபகாரஞ்செய்பவ) னிடத்திலும், சாதுவி (எல்லா ஜீவர்களிடத்து மிரக்கமுடையவ) னிடத்தும், மித்திர (உபகாரத்தை யெதிர்பார்த்து இதஞ்செய்பவ) னிடத்தும், அமித்திர (மித்திரத்துவேஷியி) னிடத்தும, உதாசின (சும்மாவிருப்பவ) னிடத்தும், துவேஷ்ய (துவேஷிக்கப்படுபவனான அபகாரியி) னிடத்தும், மண்ணாங்கட்டியிலும், பொன்னிலும், (இப்பன்னிரண்டிலும் எப்போது விஷமத்தன்மை யின்றிச் சம முள்ளவனாகின்றானோ அப்போது யோக சிரேஷ்டனாகின்றானென்று உத்தர (மேற்) சுலோகத்தோடு அந்வயமாம்). (எ-று) (௫)

समो जितात्मा विज्ञानी ज्ञानीन्द्रियजयावहः ।
अभ्यसेत्सततं योगं सदा युक्ततमो हि सः ॥ ६ ॥

[உ0௪] (சு-ம்) சமமானவனாய், ஆத்ம ஜயமுள்ள (இந்திரியத்தோடு கூடிய மனதின் வெளிமுகப்படுந் தன்மையாகிய ஸ்வபாவத்தினை உள்நோக்கு வழியால் நீக்கிய) வனும், விஞ்ஞானியும், (உண்ணோக்கின் பயனான ஆத்மாநுபவமாகிய விஞ்ஞானத்தினையுடையவனும்), ஞானியும் (அஃதுண்டாவதற் கேதுவான சாஸ்திராப்பியாச முடையவனும்), இந்திரிய ஜயமுடையவனுமாய் (தத்துவ ஞானத்தின் பொருட்டு) எப்போதும் இடைவிடாது யோகத்தினை எவன் அப்பியசிக்கின்றானோ, அவன் யோகசிரேஷ்டனென (மகாயோகியெ) ன்று சத்துக்களால் மதிக்கப்படுகின்றான், இது பிரசித்தம். (எ-று) (சு)

तप्तः श्रान्तो व्याकुलो वा क्षुधितो व्यग्रचित्तकः ।
कालेऽतिशीतेऽत्युष्णे वानिलाग्न्यम्बुसमाकुले ॥ ७ ॥

[உ0௫] (அ-கை) மனோநாசத்திற்குப் பிரதிகூலங்களான அவஸ்தை காலம் தேசமுதலியவற்றினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) (உஷ்ணாதியால்) தாபமடைந்தவனாவது, (வழி நடத்தலாதியால்) களைத்தவனாவது, (சோகமோகாதியால்) வியாகுலமுடையவனாவது, பசித்தவனாவது, (தீவிர ரோகாதி

களால்) கலங்கிய சித்தமுடையவனாயாவது, அதி சீதகாலத்திலாவது, அதி யுஷ்ணகாலத்திலாவது, காற்று அக்கினி ஜலங்கூடிய விடத்திலாவது, (எ-று)

பசித்தவனாயாவது என்றதனால் தாகமுடையவனாகவாவது என்பதும் அறியத்தக்கதாம்.

மிக்க சீதோஷ்ணகாலங்களில் என்பதனால் மனதின் பிரதிகூலத்துவ மாத்திரம் இலக்ஷிபிக்கப்படுகின்றது; பனிக்காலத்தும் கோடையிலும் போகாப்பியாசம் விலக்கப்பட்டதன்று. அதிக சீத முதலியன சித்த விக்ஷேபத்தினைச் செய்யுந் தன்மையால் யோகப்பிரதிகூலங்களா மென்பது பிரசித்தமாதலால் 'காற்று அக்கினி ஜலங் கூடியவிடம்' விலக்கப்பட்டது.

அவ்வாறே சுவேதா சுவதரர், "சமமும், சுசியுள்ளதும், பருக்கைக் கற்கள் தீ மணலில்லாததும், சப்தம் ஜலாசய முதலியவற்றி னீங்கியதும் மனதிற்கநுகூலமானதும் கண்ணிற்கு வருத்தமுண்டு பண்ணாததுமான குகை முதலிய காற்றின்றிய விடத்தில் அப்பியசிக்கவேண்டும்." (சுவேதாசுவதரம்-அத்-உ-கO) என்று கூறுகின்றனர். இவற்றிற்கு மனதிற் கநுகூலமானதும் என்பது முக்கிய விசேஷணமாம். (எ)

सध्वनावतिजीर्णे गोः स्थाने साग्नौ जलान्तिके ।
कूपकूले श्मशाने च नद्यां भित्तौ च मर्मरे ॥ ८ ॥

[உOகூ] (சு-ம்) சப்தமுள்ளவிடத்திலாவது மிகவும் ஜீரணமான விடத்திலாவது (விழும் பயத்தால் சித்தம் சமாதானப் படாமையின்) அல்லது அதி ஜீரணமான பசுக்கொட்டத்திலாவது (கொசுக்கடி முதலிய உபத்திரவ மதிகமாக வுண்டாமென்று நிஷேதிக்கப் படுகின்றது), நெருப்புள்ளவிடத்திலாவது ஜல சமீபத்திலாவது கூப கூலத்திலாவது (கிணற்றருகிலாவது அல்லது கு= குற்சிதமான உப கூலத்திலாவது கூலமானகரை விழுதற்பயத்தால்), ஸ்மசானத்திலாவது ஆற்றிலாவது சுவருகிலாவது (ஜீர்ண சுவர் விழுதற்பயத்தால்), ஓலை சருகு என்பனவைகளின் இரைச்சலுள்ள விடத்திலாவது, (அ

चैत्ये सवल्मिके देशे पिशाचादिसमावृते ।
नाभ्यसेद्योगविद्योगं योगध्यानपरायणः ॥ ९ ॥

[உ0எ] (சு-ம்) சைத்தியத்திலாவது (அக்னிகாரியம் செய்து நீக்கிய விடமாகிய பலிஸ்தானத்திலாவது அல்லது பௌத்த தேவாலயத்திலாவது அந்த இடம் அபவித்திர மாதலால்), புற்றுள்ள விடத்திலாவது பிசாசு முதலியன சூழ்ந்துள்ள விடத்திலாவது (முதலியனவென்பதனால் இயக்க விராக்ஷஸ வேதாளாதிகள் கொள்ளப்படும்.) யோகவித்து (யோகசாஸ்திரமரியாதை யுணர்ந்தவன்) ஆகிய யோகத்தியான பராயணன் (சாஸ்திரத்திற் கூறியவழியால் தியான நிஷ்டையுடையவன்) யோகத்தினை அப்பியசிக்கலாகாது. (எ-று)

திருஷ்டா திருஷ்ட துவாரமுடைய விக்கினம் சம்பவித்தலின் இவ்விடங்களில் அப்பியசிக்கலாகாதென்றதாம். (கூ)

स्मृतिलोपश्च मूकत्वं बाधिर्यं मन्दता ज्वरः ।
जडता जायते सद्यो दोषाज्ञानाद्धि योगिनः ॥ १० ॥

[உ0அ] (அ-கை) திருஷ்ட விக்கினங்கள் பிரசித்தங்களேயாம். பிசாசாதிகளால் செய்யப்படும் அதிருஷ்ட விக்கினங்களைக் கண்டத்தினாலேயே கூறுகின்றார்:—

(சு-ம்) யோகிக்குத் தோஷங்களை யறியாததினால் ஸ்மிருதிலோபமும் (வாதத்தின் ஆதிக்கியத்தால் அநுஷ்டிக்கத்தக்க யோகாங்க விஷயத்தினதாகிய நினைவின் கேடும்), (அதிவாதத்தால்) ஊமைத் தன்மையும், (அதிகவாதம் மோதுதலால்) செவிடும், (பிசாசு முதலியவற்றின் சேஷ்டையைக் காணுதலால்), மந்தத்துவமும், (மிகுந்த உஷ்ணத்தினால்) ஜ்வரமும், (ஆமவாத முதலியவற்றால்) ஜடத்துவமும் உடனே பிறக்கின்றன. (எ-று)(க0)

एते दोषाः परित्याज्या योगाभ्यसनशालिना ।
अनादरे हि चैतेषां स्मृतिलोपादयो ध्रुवम् ॥ ११ ॥

[உ0கூ] (அ-கை) விபக்ஷத்தில் பாதகத்தினைக் கூறுகின்றார்:-

(சு-ம்) யோகமப்பியசிக்கு மியல்பினனால் இத்தோஷங்கள்

நீக்கத்தக்கனவாம். இவற்றின் நீக்கத்தினை அநாதரஞ் செய்யின், இவற்றின் ஸ்மிருதிலோபாதி தோஷங்கள் நிச்சயமா யுண்டாம். (எ-று) (௧௧)

नातिभुञ्जन्सदा योगी नाभुञ्जन्नातिनिद्रितः ।
नातिजाग्रत्सिद्धिमेति भूप योगं सदाभ्यसन् ॥ १२ ॥

[௨௧௦] (அ-கை) யோகியின் ஆகாராதி நியமித்தினைக் கூறு கின்றார் :—

(சு-ம்) பூபனே! எப்போதும் அதிகமாகப் புசிப்பவனுன அல்லது அத்தியந்தம் புசியாதவனுன அல்லது அதிகமா யுறங்கு வோனுன அல்லது உறக்கமின்றிபவனுன யோகி யோகத்தினை எப்போதும் அப்பியசிக்கப்பெற மாட்டான். (எ-று)

இதனுல் ஆகாரம் நித்திரை முதலியன யோகியினுல் அளவு பட்டனவாகவே செய்யத்தக்கனவா மென்பது விதிக்கப்படுகின் றது. (௧௨)

संकल्पजांस्त्यजेत्कामान्नियताहारजागरः ।
नियम्य खगणं बुद्ध्या विरमेत शनैः शनैः ॥ १३ ॥

[௨௧௧] (அ-கை) இவ்வாறு தேசசுத்தியும் காலசுத்தியும் ஆகார நித்திரைகளில் நியமமும் ஆசனசித்தியின் பொருட்டுச் சொல்லப்பட்டன. அவ்வாசனமும் பிராணுயாமமுமான இரண் டும் முன்னமே சொல்லப்பட்டன. சுவேதாசுவதரர்களாலும் ஆசன ஜய பூர்வகமான யோகம் விதிக்கப்படுகின்றது. "காயமும் கண்டமும் சிரசுமான மூன்றும் நிமிர்ந்த (வளையாது நேரான) தாகச் சரீரத்தினைச் சமமாக நிறுத்தி, இருதயத்தில் இந்திரியங்களை மனதோடு செவ்வையாய் நுழைவித்து, அறிஞன் பயத்தைத் தரு வனவாகிய சுரோதசுகள் (நாடி யாறுகள்) எல்லாவற்றினையும் பிரஹ்ம மென்னும் தெப்பத்தினுல் தாண்டக்கடவன்" (௨-அ) என்றல் முதலிய சுருதியின் அர்த்தத்தினைச் சங்கிரகிக்கின்றார் :—

(சு-ம்) நியதமான ஆகாரமும் விழிப்புமுடையவனுப் சங் கற்பமாகிய மனோராஜ்யத்தினு லுண்டாகும் கர்மங்களை விடுக.

விட்டு (குருவினுற் சொல்லப்பட்ட யுக்தியாகிய) புக்தியினுல் இந்திரியக் கூட்டங்களை அடக்கி (தத்தம் விஷயங்களினின்று மிழுத்து) மெல்ல மெல்ல (பூமிகையின் ஜயக்கிரமமாக) ஒழி வடைக (நியேய தியான தியாதிருவிபாகத்தினை ஒழிக்குக) (எ-று)

அதில், மூன்றும் நிமிர்ந்ததாக என்பதனர்த்தம் பகவானுல் "சமமான காயசிரசு கழுத்துகளைத் தரித்து அசைவின்றி ஸ்திர மான வனுய்" என்று சங்கிரஹிக்கப்பட்டுளது. ஆசனமும், "சுசி யான இடத்தில் தனது ஸ்திரமான ஆசனத்தினை நிறுத்தி" என் றல் முதலியவற்றுல் சொல்லப்பட்டுளது. பதஞ்சலி பகவானு லும் "ஸ்திரமும் சுகமுமுண்டாக இருப்பது ஆசனம்" என்று சூத்திரம் செய்யப்பட்டுளது. எவ்வாசனத்தில் நெடுநேரம் சுக மாக இருக்கக்கூடுமோ அது ஸ்திரசுகமாம் என்பது பொருள். அது பாதராயணரால் "இருப்பவனுக்குச் சம்பவித்தலால்" (ச-௧-எ) என்று சூத்திரிக்கப்பட்டுளது. நிற்பவனுக்கு உடலைத் தாங்குதலில் வேதனையுண்டாகிறது. படுத்திருப்பவனுக்கு நித் திரை வருகின்றது. ஆதலால் உட்கார்ந்திருப்பவனுக்கே வெகு தோஷ பரிகாரம் சம்பவித்தலால் தியானஞ் செய்தற்றன்மையா மென்பது சூத்திரார்த்தமாம்.

அங்கு 'நியதமான ஆகாரமும் விழிப்பு முடையவனுய்' என்ற தனுல் "ஆகாரசுத்தியினுல் சத்துவ (அந்தக்கரண) சுத்தியாம். சத்துவ சுத்தியில் நிலையான ஸ்மிருதியு (ஞானமு) ண்டாம். ஸ்மிருதி லாபத்தில் சர்வகிரந்திகளின் நீக்கமாம்" (சாந்-எ-உசு-உ) என்னும் சுருதியினுல் ஆகாரத்திற்கு கிரந்திமோக்ஷ ஹேதுத் துவத்தினைக் காணுதலாலும், கள் முதலிய விஷமாகாரத்திற்குச் சித்தத்தினை மயக்குந்தன்மையினைக் காணுதலாலும், எது சாஸ் திரத்தில் விலக்கப்பட்டுளதோ, அவ்வர்ஜனாதிகளை எல்லாவிதத்தி னுலும் பரிகரிக்கவேண்டும். எது விதிக்கப்பட்டுளதோ அதுவே நியமமாகக் கொள்ளவேண்டியதாம். இவ்வாறே நியதமான விழிப்பு முடையவனுய் என்பதனுல் நியதமான நடை வார்த்தைமுதலியன வும அறிபத்தக்கனவாம். இவ்வாறு ஹிதமும் மிதமும் சுசியுமான உணவு கொள்ளு மியல்பினனுன யோகி ஸ்வஸ்திகாதி யாசனங்களி

ஆட்கார்ந்த மனோராஜ்யத்தினை விட்டு மெல்லமெல்ல ஒழிவடைய வேண்டும் என்பது பொருள். அது பகவானால், "தைரியத்தினால் கொள்ளப்பட்ட புத்தியினால் மெல்ல மெல்ல உபரதியடைக. (உபரதியடைந்து) மனதினை ஆத்ம ஸம்ஸ்தமாக்கி எதனையும் சிந்திக்கலாகாது" என்று (கூ-உறில்) கூறப்பட்டுளது. ஆத்மாவாகிய சின்மாத்திரத்தில் ஸம்ஸ்தா அதாவது ஆலங்கட்டி நீர்போன்ற சமாப்தி (செவ்வையான அடைவு) எதுவோ அது ஆத்மஸம்ஸ்தமாம்; सं ஸம் என்பதனைப் பூர்வத்திலுடைய तिष्ठति திஷ்டதி என்பதற்கு ஸமாப்திவசனத்துவ மிருத்தலாலும், "பிரஹ்ம ஸம்ஸ்தன் அமிருதத்துவத்தினை அடைகின்றான்" என்னும் பிரயோகமிருத்தலாலும் என்க.

அபிப்பிராயம் இதுவாம்:— "க்ஷீணவிருத்தி யுண்டான சித்தமுடையவனுக்கு ஸ்படிகமணிபோல கிரகிப்பவன் (ஆத்மா) கிரகணம் (இந்திரியம்) கிராகியம் (விஷயம்) என்பவற்றில் தத்ஸ்ததா (அதில் நிற்றற்றன்மை) ததஞ்சனதா (அதிற் பற்றுதற்றன்மை) என்னும் சமாபத்தி (தன்மய மாதல்) உண்டாகின்றது" என்னும் சூத்திரத்தில் கிரகிப்பவன் முதலிய கிரமமாகச் சொல்லப்பட்டிருக்கினும், பிரதிபத்தி (உணர்ச்சி)க் கிரமத்தால் முதலாவது கிராகிய சமாபத்தியாம். இரண்டாவது கிரகண சமாபத்தியாம். மூன்றாவது கிரகிப்பவன் சமாபத்தியாம். ஒவ்வொன்றும் தத்ஸ்ததா, ததஞ்சனதா, தத்பாவ்யம் (அதின்றன்மையாதல்) என்னும் பேதத்தால் மூவகையாம். இவ்வாறு க்ஷீணவிருத்தியுடைய அதாவது இரஜஸ்தமோ மலமின்றிய ஸ்படிகமணியினைப்போல் மிகவும் சொச்சமான சித்தத்தினனுக்குக் கிரமமாக ஒன்பது விதங்களான இச்சமாப்திகள் அடையப்பட்டு, சுத்தமான சித்தாகிய தன்மாத்திரத்தில் சித்தம் ஸ்படிகம்போலும் ஆலங்கட்டிபோலும் தாத்பாவத்தினை (அதன் றன்மையாதலை) யடைகின்றது. அதில் இது கிரமமாம்:— முதலாவது கிராகியமான கணபதி விக்கிரகமாகிய ஸ்தூலப் பிரதிமைவடிவத்தில் திருஷ்டியினை வைப்பவனுக்கு எப்போது மூன்று விதமான திருக்கு ஏகாக்கிரத்தன்மை பொருந்துகின்றதோ, அப்போது

மனஸ்தம் (மனத்தில் நிற்பது) என்று சொல்லப்படுகின்றது. அங்கு முதலாவது அர்ஜுனனுக்குப் பாஸகட சப்தாதிகளின் நிரகிப்போடு கூடிய திருக்கின் (கண்ணின்) ஏகாக்கிரத்தன்மை பாரதத்தில் காணப்படுகின்றது. இவ்வாறு பாணஞ்செய்பவனுக்குச் சப்தாதி நிரகிப்பின்றிய திருக்கின் ஏகாக்கிரத்தன்மை ஸ்மிருதியில் கேட்கப்படுகின்றது. இவ்வாறு கணபதிப் பிரதிமையாகிய ஸ்தூலத்தில் தேகப்பற்றின்றிச் சித்தம் எப்போது ஸ்திரமாகின்றதோ, அப்போது ததஸ்தம் (அதில் நிற்பது) என்று சொல்லப்படுகின்றது. இவ்வவஸ்தையில் மூர்த்தியின் ஜடத்துவம் மறைகின்றது. இதனாற்றான் பலி பாணன் முதலிய பக்தர்கள் தம்மாலாராதிக்கப்படுபவரோடு உடையானடிமைத்தன்மையாக வியவகரித்தனர் என்று சொல்லப்படுகின்றது. இங்குச் சித்தாகிய தன்மாத்திர ஸ்வரூபத்தில் ஆக்மாவினையும் அதன் பிரதிபிம்பத்தினையும் தன்னுட்பெற்றிருப்பதான அந்தக்கரணம் எந்த வுபாதியில் பிரவேசிக்கின்றதோ, அதனையே ஆத்மாவென்று மதித்து, அதன்வாயிலாகச் சுகாதிகளை அநுபவிக்கின்றது. இது ஜாக்கிர சொப்பன சரீரங்களிரண்டில் ஸ்பஷ்டம். பிசாசிற்குப் பிறசரீராவேசத்தில் அறியப்படுகின்றது. அங்கு மனதிற்கு முதலிரண்டன் தாத்பாவ்யம் ஸ்பஷ்டமாம். பிசாசிற்கோ பிறசரீரத்தில் பேதத்தினைக் கொள்ளுதலிருக்கினும், போகமாத்திர முணர்தலால் தஞ்ஙிதத்துவமே(அதனைப்பற்றிய தன்மையே) யாம்; தாத்பாவியமில்லை. இவ்வாறு கணபதி விக்கிரகத்தில் எப்போது பாவனைமிகுதியாற் சித்தம் பிரவேசிக்கின்றதோ அப்போது யோகி கீடபிருங்க நியாயத்தால் (புழுவும் குளவியும்போலக்) கணபதியின் சாரூபத்தினையும், பராநுக்கிரக முதலியவற்றில் ஐசுவரியத்தினையும் அடைகின்றான். அது, சிவமூர்த்தியினைப் பாவிப்பவராகிய நந்திகேசுவாருக்கு அதனினும் நிரதிசயபாவனையால் கணபதி தாத்பாவ்யத்தினை எப்போது அநுபவிக்கின்றாரோ, அப்போது அதே தேகத்தின் கிரகணபாவத்தினை அபரோக்ஷமாக்குகின்றார். கிருகிக்கப்படுகின்றது இதனால் என்னும் விற்பத்தியால் கிரகணபதத்தால் கரண சமுதாயம் சொல்லப்படுகின்றது. அங்குச்

சுருதியில் "பிராணன்களி (சக்ஷு முதலிய பத்தி) னின்று (ஆதித்தியாதி) தேவர்களும், தேவர்களினின்று (அவற்றால் பிரகாசிக்கப் படும் எல்லா) லோகங்களு முண்டாகின்றன" என்றும், அதன் பின் "அக்கினி வாக்காகி முகத்திற் பிரவேசித்தது. ஆதித்தன் சக்ஷுவாகிக் கண்களிற் பிரவேசித்தது" (ஐத்-உ-ச) என்றும் தத்தம் விஷயங்களோடு கூடியனவாகிய அக்கினியாதி தேவதைகட்கு வாக்கு சக்ஷு முதலிய தன்மை கேட்கப்படுகின்றது. அதனால விராட் கிரகண சப்தத்தினற் சொல்லப்படும் இந்திரியகண முழுவதும் சூத்திர மென்னும் வேறுபெயருடையதிற் பிரவேசிக்கின்றது. இதனாற்றான் சாங்கியர்கள் கரணங்கட்கு விபுத்துவத்தினைக் கொண்டு சரீரதேசத்தில் விருத்திலாபத்தினைக் கூறுகின்றனர். கடையுமிடத்தில் அக்கினியினைப்போல இவ்வவஸ்தையில் சித்தமானது கரணஸ்தம் (கரணத்திருப்பது) என்று சொல்லப் படுகின்றது. அது எப்போது எல்லா விஷயங்களையும் ஒருங்கே விளக்குகின்றதோ அப்போது ததஞ்சிதம் (அதனைப்பற்றியது) என்று சொல்லப்படுகின்றது. எப்போது யானே இவ்வெல்லாம் என்று மதிக்கின்றானோ அப்போது யோகி கிரகண தாத்பாவியத்தினை யடைந்தவன் என்று சொல்லப்படுகின்றான். இந்திரியங்கட்கும் கூடு (தங்குமிடம்) இருதயம், "வாக்கு இருதயத்திலும், இருதயம் என்னிடத்திலும்", "சக்ஷு இருதயத்திலும் மனது இருதயத்திலும்" என்றல் முதலிய மந்திரலிங்கத்தால். எப்போது கரணங்கள் இருதயத்திற் பிரவேசிக்கின்றனவோ, அப்போது மனது இருதயஸ்தம் (இருதயத் திருப்பது) ஆகின்றது. எப்போது அக்காமங்களையும் துச்சமாக்கி ஆத்மாவைக்காண்கின்றானோ, அப்போது ஆத்மாவில் சூத்திரங்கள் நூறுகளைக் காண்கின்றான். அவ்வவஸ்தையில் அந்தக்கரணம் பகிர்முகத் தன்மையால் அகம் (யான்) என்னும் சப்தத்தினற்சொல்லப்படுகின்றது; யானே பிரஹ்மாண்ட நூற்றினைக் காண்பவன் என்னும் அனுபவ மிருத்தலால். இதுவே கிரகீதிருத்து (அஞ்சிதத்து)வ மாம். எப்போது அதுவே அந்தர்முகமாய்சத்தாய் இருக்கிறேன் என்று இவ்வளவுமாத்திரம் அநுபவிக்கின்றதோ, அவ்வித கிரகீதிரு பாவ (கிரகிப்பதன் றன்மை)

அநுபவமாம். இதுவே யான் பிரஹ்மம் என்று சுருதியினல் சொல்லப்படுகின்றது. இதுவே சாங்கியர்களின் சத்துவ புரு ஷாங்யதாக்கியாதி யென்னும் வேறு பரியாயமுள்ள குண புருஷர் களின் வேற்றுமை யுணர்ச்சியாம். இது ஒடுங்கியபோது மனது ஆத்ம ஸம்ஸ்தம் (ஆத்மாவிலிருப்பது) ஆகின்றது. அத்தனமைய இது "எதனையும் சிந்திக்கலாகாது" என்பதனல் சொல்லப் பட்டது. இங்கும் (இச்சுலோகத்தும்) 'ஒழிவடைக' என்பத ளுற் சொல்லப்பட்டதாம். இவ்வாற்ருல் 'மெல்ல மெல்ல ஒழி வடைக' என்பது விரித்துரைக்கப்பட்டது.

சூத்திரத்தில் கிருக்ய முதலியவற்றில் தத்ஸ்ததா, ததஞ்சன தா என்று இரண்டு சமாபத்திகளே சொல்லப்பட்டுள்ளன. அவ்வா ருக, தாத்பாவ்யமென்னும் மூன்ருவது சமாபத்தி எவ்வாறு சொல் லப்படுகின்றதென்னு மிடத்துக் கூறுவாம். :— யோகிகள் பேத தரிசிகளே; அவர்கட்கு "யாதொரு இவ்வாத்மா வுளதோ அதன தா மிவ்வெல்லாம்" என்னும் சுருதி சித்தமான எல்லாவற்றின் ஆத்ம மாத்திரத் தன்மையானது அங்கீகரிக்கப்பட்ட தன்று; அதனல் இரண்டே சமாபத்தியாம். அதனை யுணர்ந்த எமக்கோ இம் மூன்ருவதான சமாபத்தியு முளது. இதனற்ருன் யாஸ்கர் ஆத லால் ஆகமம் எந்தத்தேவதையினைக் கூறுகின்றதோ அதனதன் தாத்பாவியத்தினை அநுபவிக்கின்ருன் என்று ஸ்பஷ்டமாக அவ் வத் தாத்பாவியத்தினையே கூறியிருக்கின்ருர். சுருதியும், "அவன் எதன் சங்கற்பமுடையவ ஞகின்ருனே, அதனை யடைகின்ருன்" என்று கூறுகின்றது. ஆகலினுனே புருஷன் கிராகிய கிரகண கிரகிதிரு தாத்பாவியங்களைக் கிரமமாக அநுபவித்து, ஆத்மாவா கிய சித்தில் தன்மாத்திரத்துவத்தினையும் அநுபவிக்கின்ருன் அசம்பிரஞ்ஞாதத்தில். (கரு)

ततस्ततः कृषेदेतद्यत्र यत्रानुगच्छति ।
धृत्यात्मवशगं कुर्याच्चित्तं चञ्चलमादृतः॥ १४ ॥

[உகஉ] (அ-கை) மெல்ல மெல்ல ஒழிவடைக என்னு மித னையே விரித்துரைக்கின்ருர் :—

(சு-ம்) இந்தச் சஞ்சலமான சித்தம் எங்கெங்கு (ஸ்திரீயாதி சத்துருவாதி விஷயத்தில்) தொடர்ந்து செல்லு (இராகத்துவேஷங்களின் பிரபலத்தன்மையை யடை) கின்றதோ, அவ்வவ் விஷயத்தினின்றும் இதனை இழுக்கவேண்டும். இழுத்து, சாத்துவிகமான தைரியத்தினுல் ஆதரவோடு ஆத்ம வசத்திருப்பதாக (ஸ்வேச்சாதீனமாக) ச் செய்யவேண்டும். (எ-று)

உள்முகமாதலைவிட்டு வெளிமுகமாகாதபடி செய்யவேண்டுமென்பது பொருள். சாத்துவிகமான தைரியம் பகவானுல் "யோகத்தினுல் மனப்பிராணேந்திரியக் கிரியைகள் எந்த அவ்வியபிசாரியான தைரியத்தினுல் தரிக்கப்படுகின்றனவோ, பார்த்தனே! அது சாத்துவிகமான திருதியாம்" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

மனதிற்கு ஸ்திரீயாதி சம்பந்தம் துக்கஹேதுவாம்; அதன் நிவிருத்தியினுல் துக்க நிவிருத்தியாம் என்பது "எதுவரையில் மனதிற்குப் பிரியமானவைகளான சம்பந்தங்களைச் செய்கின்றுனே அதுவரையில் இவனுடைய ஹிருதயத்தில் சோக முளைகள் துளைக்கின்றன. எதனின்றும் எதனின்றும் நீங்குகின்றுனே அதனின்றும் அதனின்றும் விடுபடுகின்றுன் எல்லாவற்றினின்றும் நீங்குதலினுலேயே அணுவளவும் துக்கத்தினை யறிகிறதில்லை." என்று ஸ்மரிக்கப்படுகின்றது. ஆதரவோடு என்பதனுல் தீர்க்ககாலமும் நிரந்தரத்தன்மையும் கிரகிக்கப்படுகின்றன. அவ்வாறே யோகசூத்திரத்தும் "அது (யோகம்) தீர்க்ககாலம் நிரந்தரத்தன்மை சத்கார மென்பவற்றுல் சேவிக்கப்பட்டதாய்த் திடபூமியினதாகின்றது" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. முந்திய பூமியினை ஜயித்துப் பிந்திய பூமியினை ஜயிக்க சமர்த்தனுகின்றுன் என்பது சூத்திரார்த்தம். (௧௬)

एवं कुर्वन्सदा योगी परां निर्वृतिमृच्छति ।

[உ௧௬] (அ-கை) இவ்வாறு அநுஷ்டிக்கப்பட்டதான யோகத்தின் பயனைக் கூறுகின்றுர்:—

(சு-ம்) இவ்வாறு (கூறியவிதமான ஆதரவோடு) நித்தியம் யோகத்தினை அநுஷ்டித்து (அசம்பிரஞ்ஞாதாவஸ்தையின னாகிய) யோகி மேலான (நிரதிசய) நிர்விருதியினை (சுகசம்பத்தினை) அடைகின்றான். (எ-று)

இச்சுகம் "இது இவனது மேலான சம்பத்து: இது இவனது மேலான லோகம்; இது இவனது பரமாநந்தம்." என்னும் சாஸ்திரப் பிரசித்தமானதாம்.

विश्वस्मिन्निजमात्मानं विश्वं च स्वात्मनीक्षते ॥ १५ ॥

(அ-கை) இவ்வாறு முக்கியமான யோகபலத்தினைக் கூறி, விசேஷப சம்பிரஞ்ஞாதாவஸ்தைக ளிரண்டினும் அதன் அவாந்தர பயனைக் காட்டுகின்றார் :—

(சு-ம்) எல்லாவற்றினும் தனதாத்மாவினையும் தனதாத்மாவில் எல்லாவற்றினையும் காண்கின்றான். (எ-று)

எல்லாவற்றினும் தனதாத்மாவினைக் காண்டல் சாமகானத்தில், "யான் அந்நம், யான் அந்நமுண்பவன் (ங) யான் சுலோகஞ் புகழைச்) செய்பவன்" என்று உதாகரிக்கப்பட்டுளது. யாவும் என்னால் வியாபிக்கப்பட்ட தென்று காண்கின்றா னென்பது கருத்து.

தனதாத்வாமாவில் எல்லாவற்றினையும் காண்டல் என்னும் கிரகனத்தினைத் தாத்பாவியாபிப்பிராயத்தினா லாவது அல்லது கிரகிதிரு சமமென்னும் அபிப்பிராயத்தினாலாவது மெல்ல மெல்ல என்னும் பகவத் கீதா (சு-உரு-வது) சுலோகத்தின் வியாக்கியானப் பிரகாரத்தினால் அறியத்தக்கதாம் (கரு)

योगेन यो मामुपैति

[உகசு] (அ-கை) இவ்விதமான யோகத்தின் அவிநாசியான பயனுடைமையைக் காட்டுகின்றார் :—

(சு-ம்) [துவைதவாதிகளான சாங்கியர்களும், யோகிகளும் அத்தியந்த நிபுணர்களாயினும் துவம்பதார்த்த மாத்திரத்தினை யறிஇன்றவர்களாய்க் கிரமமுத்தி மாத்திரத்தினை யடைகின்றனர். பிரஹ்

மாத்ம அபேதஞானத்தினுல் வெளிப்படுவதான சத்தியோ முக்தியான கைவல்யத்தினை யடைகிறதில்லை யென்னும் அது 'யோகத்தினுல் எவன் என்னை யடைகின்ருனே, அவனை யான் ஆதரவோடு அடைகின்றேன்' என்பதனுல் சொல்லப்படுகின்றது.] எவன் (யோகி) யோக (சிரௌத) த்தினுல் ["ஸ்தூலத்தினைக் கரணத்திலும், கரணத்தினைக் காரணத்திலும், அக்காரணத்தினைக் கரணகாரணமின்றியதிலுமாக இவ்வாறு பிரவேசிக்கச் செய்து, யதிகள் எவனை இங்கு அடைகின்றனரோ," என்னும் புராணத்திற் கூறியதிசையால்] என்னை (சத்திய ஞானநந்த வடிவத்தினை) அடைகின்ருனே. (எ-று)

तमुपैतिम्यहमादरात् ।

(அ-கை) அவ்வடைவு நதி சமுத்திரம்போல் சொல்லப்படுகிறதா? அவ்வாறே, "எப்படி ஒழுகுகின்ற ஆறுகள் நாமரூப மிரண்டனையும் விட்டுச் சமுத்திரத்தில் அஸ்தமடைகின்றனவோ, அப்படியே வித்வான் புண்ணியபாபங்களினின்று விடுபட்டவனுய்ப் பராத்பரனுன திவ்யபுருஷனை யடைகின்ருன்" (முண்-ங-உ-அ) என்று ஸ்மிருயில் கேட்கப்படுகின்றதே யென, அன்றென்று கூறுகின்ருர்:—

(சு-ம்) அவனை யான் ஆதரவோடு அடைகின்றேன். (எ-று)

எப்படித் துவமர்த்தம் ததர்த்தத்திற் பிரவேசிக்கின்றதோ, அவ்வாறே ததர்த்தமும் துவமர்த்தத்திற் பிரவேசிக்கின்றது. இதனுற்ருன் மேலும் யானே கீழும் யானே என்றல் முதலிய வித்வானது அநுபவம் ஆத்மாவின் சர்வாத்மத்தன்மையினைக் கிரகிப்பதாகின்றது. எப்படி ஒருமுறை ஜலத்தன்மையாகக் கண்ட ஆலங்கட்டியினை மறுபடியும் ஆலங்கட்டியாகக் கிரகித்தும் இது ஜலமே யென்று மதிக்கின்ருனே அதுபோலவாம். அச்சுருதியோ துவம்பதார்த்த சுத்திமாத்திர பரத்தினதாம், பேதபரமானதன்று தத்துவமஸி யென்பதுபோல்.

मोचयामि न मुञ्चामि तमहं

(அ-கை) இவ்வத்தியந்தா பேத ஞானத்தினுல் என்ன பயனெனக் கூறுகின்ருர்:—

(சு-ம்) அவனை (துவமர்த்தனுன யோகியினை) (ததர்த்தனுன யான் (பிரத்தியக்கின் அபேதமாகக் கிரகிக்கப்பட்டவனுய்) விடுவிக் கின்றேன் சம்சாரபந்தத்தினின்றும் விடுவிக்கின்றேன். (எ-று)

(அ-கை) அசம்பிரஞ்ஞாத முடைய சமாதி யவஸ்தையிற்ருன் விடுவிப்பீரோ வென இல்லையென்று கூறுகின்ருர் :—

(சு-ம்) விடேன் (எ-று) ஒருபோதும் அவனது பிரிவுண்டா காது. ஒரு முறை தகிக்கப்பட்ட பேத ஜனகமான அஞ்ஞானம் மறுபடியும் உதியாமையின்.

मां स न त्यजेत् ॥ १६ ॥

(அ-கை) துவமர்த்தமே பூர்வபோக வாசனையால் ததர்த்தத் தினை விடுகவெனின், விடாதெனக் கூறுகின்ருர் :—

(சு-ம்) அவன் என்னை விடான். (எ-று)

ஞானமடைந்தயோகி மறுபடியும் பிராந்தியினை யடையான். தத்துவ பக்ஷபாதமும் புத்திகட்கு ஸ்வபாவமாம். அதனைப் பாகியர் களும், “ நிருபத்திரவ வடிவ அர்த்த ஸ்வபாவமான புத்திக்கு விபரி யயங்களால் வலியுடைமை யுளதாயினும், அதன் பக்ஷபாதத்தினுல் பாதமுண்டாகிறதில்லை.” என்று கூறுவர்.

அநாதியாயினும்பிராந்தி ஒரு முறை யுண்டாகிய ஞானத்தினுல் அடியோடு களையப்படுகின்றது. அவ்வாறே சுருதியும் “ இந்தப் பிரஹ்மலோகம் ஒருமுறை விளக்கப்பட்டதேயாம்” (சாந்-அ-௬-உ) என்று கூறுகின்றது. (கசு)

सखे दुःखेतरे द्वेषे क्षुधि तोषे समस्तृषि ।
आत्मसाम्येन भूतानि सर्वगं मां च वेत्ति यः ॥ १७ ॥

[உகரு] (அ-கை) இத்தன்மையனுன யோகியின் இலக்ஷணங் கள் ஸ்வபர சாக்ஷிகங்களா மென்று கூறுகின்ருர் :—

(சு-ம்) சுகத் (அநுகூலமா யறியத்தக்க)திலும், துக்கத் (பிரதி கூலமா யறியத்தக்க) திலும், மற்ற (இரண்டுவிதமா யறியத்தகாத) திலும் சமமானவனுய் (மற்றதிற்போலச் சுகத்திலும் துக்கத்திலும்

பெறும் விருப்பமும் விலக்கும் விருப்பமு மின்றியவனுய்), தன்) னிடத்துப் பிறராற் செய்யப்பட்ட) துவேஷத்திலும், பசியிலும், (பிறர்செய்யும்) சந்தோஷத்திலும், தாகத்திலும், சமமான (சித்த விகார ஹேதுக்களான இவற்றில் விகாரமில்லாத) வனுய், (இதனு லேயே ஜராயு ஜாண்டஜ ஸ்வேதஜோத்பிஜ்ஜங்களான) பூதங்களைத் தன்னெப்பாக (எனக்குத் துக்கமுண்டாக லாகாதென்று தனது துக்காபாவத்தினை விரும்புவதுபோலச் சர்வபூதங்களிலும் ஹிம்ஸிக் கப் படாதிருக்குந் தன்மையை) எவன் அறிகின்ருனே, (அதற்குக் காரணமாக) (சர்வாத்மாவாகிய) என்னைச் சர்வபூதங்களிலு மிருப்பவ னுக (பிரத்தியக்கின் வேறின்றிய சித்தத்தினனுய்) (தானே) அறி கின்ருனே (அவன் ஜீவன் முக்தன் என்று பிந்தியதோடு அந் வயம்) (கஎ)

जीवन्मुक्तः स योगीन्द्रः

[உகசு] (சு-ம்) அந்த யோகீந்திரன் (சர்வசாம்யதரிசித் தன்மை யால்யோகிகட்கெல்லாஞ் சிரேஷ்டனுன அவன்) ஜீவன் முக்தனுவன் (தேகமுடையவனுயினும் தேகமில்லாதவனுவன்). அவ்வாறே சுருதி யும், “எப்படிப் பாம்பின் சட்டை புற்றில் மரித்ததாய் (கழன்றதாய்) எறியப்பட்டதாய்க் கிடக்குமோ, அதுபோலவே ஞானியின் இச் சரீரமும் அபிமானம் விட்டு உபேக்ஷிக்கப்பட்டதாய்க் கிடக்கும்” என்றும் (பிரு-ச-ச-எ), சக்ஷுவுடையவனுயினும் சக்ஷு வில்லாத வன் போலும், பிராண னுள்ளவனுயினும் பிராணனில்லாதவன் போலும், வாக்குடையவனுயினும் வாக்கின்றியவன்போலும், மன முடையவனுயினும் மனமில்லாதவன்போலும்” என்று கூறுகின் றது. ஸ்ரீமத் பாகவதத்திலும், “எதனுல் தன் ஸ்வரூபத்தினை அறிந்தானே, அதனுல் சித்தன் அழியு மியல்பினதாகிய தேகத்தினை இருப்பதாகவாவது எழுந்ததாகவாவது விதிவசத்தால் நீங்கியதாக வாவது விதிவசத்தால் கூடியிருப்பதாகவாவது கள் வெறியால் அறிவிழந்தவன் வஸ்திரம் நழுவியதை யறியாததுபோல அறியான்” என்று கூறப்பட்டுளது.

केवलं मयि संस्थितः ।
ब्रह्मादीनां च देवानां स वन्द्यः स्याज्जगत्त्रये ॥ १८ ॥

(அ-கை) இதில் எதுவினைக் கூறுகின்றார் :—

(சு-ம்) கேவலம் (வேறு விருத்தியின்றிய தன்மையுண்டாகுமாறு) (அகண்டைகாரஸனென) என்னிடத்தில் ஸம்ஸ்தித (சமாப்தியடைந்தவ) னுய், (இதனலேயே) அவன் உலக மூன்றிலும் பிரஹ்மாதி தேவர்கட்கும் (உம்மையால் மற்றைச் சுக ஸநக வசிஷ்ட வாமதேவ ராதியர்க்கும்) வணங்குவதற் குரியவன்(துதித்தற்குரியவனும்) ஆகின்றான். (எ-று)

இங்கு யோகவாசிட்டத்தில் "சுபேச்சை யெனப்படுவது முதலாவது ஞானபூமியாக உதாகரிக்கப்பட்டதாம். விசாரணை இரண்டாவது. தநுமானஸை மூன்றாவது. சத்துவாபத்தி நான்காவது. அதன்பின் அசம்சக்தியென்னும் பெயருள்ளதாம். பதார்த்தாபாவனி ஆறாவது. துரியகா வென்பது ஏழாவதாகக் கருதப்படுகின்றது." என்று ஞான ஸப்த பூமிகள் சொல்லப்பட் டிருக்கின்றன.

அவற்றுள், சுபேச்சை விவேக வைராக்கியத்தினை முன்னிட்டதாம். விசாரணை தீவிரமோக்ஷ விச்சையாம். தநுமானஸை வேதாந்த சிரவணமனன வடிவினதாம். நிதித்தியாசனமும் சத்துவாபத்தியான அகம் பிரஹ்மாஸ்மியென்னும் வித்தியா விருத்திலாபமுமான நான்காவது யோகபல பூமியாம். இதில் யோகி பிரஹ்ம வித்து (பிரஹ்மஞானி) எனப்படுகின்றான். அசம்சக்தி முதலியன நிர்விகற்ப சமாதியின் அவாந்தர பேதங்களேயாம். எதிலிருந்து யோகி தானே விழிக்கின்றானே அந்த யோகபூமி அசம்சக்திப்பெயருள்ள ஐந்தாவதாம். இதில் யோகி பிரஹ்ம வித்துவரன் (பிரஹ்மஞானியின் மேலானவன்) என்று சொல்லப்படுகின்றான். எதில் பிறரால் எழுப்பப் பட்டவனாகவே விழிக்கின்றானே அது பதார்த்தாபாவனி யென்னும் ஆறாவதாம். இதில் யோகி பிரஹ்மவித்து வரியான் (வரனின் மேலானவன்) எனப்படுகின்றான். எதிலிருந்து தன்னாலாவது பிறராலாவது விழிக்கிறதில்லையோ அது துரியகா வென்

னும் ஏழாவது யோகபூமியாம். இதில் யோகி "ஆத்மக் கிரீடை யுள்ளவன், ஆத்மாவில் இரமிப்பவன், கிரியையுடையவனுன இவன் பிரஹ்மவித்துக்களுள் வரிஷ்டன்" என்னும் (முண்டகம்-௩-க-௪) சுருதியினுல் பிரஹ்மவித்து வரிஷ்டன் (பிரஹ்ம வித்துக்கள் எல்லோரினும் மேலானவன்) என்று சொல்லப்படுகின்றுன். இவனே இங்கு யோகிந்திரன் என்னும் பதத்தால் கொள்ளப்படுகின்றுன். (க௮)

**वरेण्य उवाच ॥**

द्विविधोऽपि हि योगोऽयमसंभाव्यो हि मे मतः
यतोऽन्तःकरणं दुष्टं चञ्चलं दुर्ग्रहं विभो ॥ १९ ॥

[உகள] (அ-கை) 'பூரகமும் கும்பகமும்' (௪-௩௩) என்றல் முதலியவற்றுல் பிராண நிக்கிரக பூர்வகமான யோகம் சொல்லப் பட்டது: "நியதமான ஆகாரமும் விழிப்புமுடையவனுய்" (௩-க௩-வது சுலோகம்) என்றல் முதலியவற்றுல் மனோநிக்கிரக பூர்வகமான யோகம் சொல்லப்பட்டது. இவ்விரண்டும் அரிதிற் செய்யத் தக்கனவா மென்று மதித்து வரேண்யன் கேட்கலாயினுன் :—

(௬-ம்) விபுவே! (நீர் வியாபகத்தன்மையால் எல்லோருடைய அந்தக்கரணங்களின் தோஷ முடைமை யறிவீர் ஆதலால்) எதனுல் பிராணிகளின் அந்தக்கரணம் துஷ்டமும் (இராகத்துவேஷாதி தோஷமுடையதும்), (அதனுலேயே) சஞ்சலமும் (கணமும் நிலைப் பின்றியதும்), (அதனுலேயே) துர்கிரகமும் (துக்கத்தினுலும் கிரகிக்க அதாவது அடக்கக்கூடாதது) மாயிருக்கின்றதோ, அதனுல் இந்த (தம்மாற் சொல்லப்பட்ட) இருவகையான (பிராணஜய பூர்வகமான அல்லது கேவலமான) (சர்வசித்த விருத்தி நிரோதவடிவமான) பிரசித்த யோகமும் அசம்பாவ்யமாம் (சம்பவிப்பதாகக் கூடியதன்றும்.) என்பது (சஞ்சல சித்தனுன) எனது அபிமதமாம். (எ-று)

ஆதலால் இதனினும் சிறிது சுககரமான உபாயத்தினைச் சொல்லி யருள்க வென்பது கருத்து. (க௯)

श्री गजानन उवाच ॥

योगी ग्रहं दुर्ग्रहस्य मनसः संप्रकल्पयेत् ।
घटीयन्त्रसमादस्मान्मुक्तः संसृतिचक्रकात् ॥ २० ॥

[உ௧அ] (அ-கை) குருப்பிரசாத முதலிய சித்த ஜய வுபாயங் களைச் சொல்லக்கருதி, மனதின் தோஷமுடைமையினையே விஸ்தார மாக அநுவதிப்பவராய் ஸ்ரீ கஜானனர் சொல்லலாயினர்:—

(சு-ம்) இந்தக் கடீயந்திர சமமான சம்சார சக்கரத்தினின்றும் முக்தனான (முக்தனைக விரும்பும்) யோகி நிக்கிரகித்தற் கரிதான மனதின் நிக்கிரகத்தினைச் சங்கற்பிக்கக் கடவன் (செவ்வையாய்க் கற்பிக்குக; கிலேச பயத்தினால் சும்மாவிருக்க லாகா தென்பது பொருள்).

இங்கு முக்தனைக விரும்புவோனை முக்த னென்றது "அக்கினி விரும்பினான்" என்று அக்கினித்தன்மையை விரும்பிய யஜமான னாகிய அநக்கினியில் அக்கினி யென்னும் பதம் பிரயோகிக்கப்பட் டிருப்பது போல இனி யுண்டாவதான விருத்தியினை ஆசிரயித்து முக்த பதத்தால் கூறியதாம்.

சம்ஸரித்தலான ஜனன மரணப் பிரவாகம் இரதசக்கரம்போல் மேற் கீழ்த் தன்மை விபரியாசத்தினால் இடைவிடாது சுழன்று கொண்டிருத்தற் றன்மையினாலும் கிலேசத்தினைச் செய்யுந் தன்மை யால் குற்சிதமாயிருத்தலாலும் சம்ஸார சக்கரமெனப்பட்டது. இத னாலே கடீயந்திர சமமாகவும் கூறப்பட்டது. கடீயந்திரமாவது பல கலசங்கள் கட்டி நீரிறைக்கும் ஏற்றமாம். அதிலுள்ள கலசங்கள் எப்படி மேற் செல்லுவனவும் கீழ் இறங்குவனவுமாக இடைவிடாது சுழலுகின்றனவோ, அதுபோலவே இங்கு ஜீவர்கள் தேவர் முதல் ஸ்தாவர பரியந்தமான மேற் கீழ்த் தன்மைகளில் இடைவிடாது செல்லுகின்றனர். அதனால் சம்சாரம் கடீயந்திர சமமாம். (உ०)

विषयैः क्रकचैरेतत्संसृष्टं चक्रकं दृढम् ।
जनश्छेत्तुं न शक्नोति कर्मकीलैः सुसंवृतम् ॥ २१ ॥

[உ௧௯] (அ-கை) சங்கற்பித்தல் மிக்கமுயற்சியினுற் சாதிக்கத் தக்க தாதலைச் சொல்லுதற்காக அதன் தோஷமுடைமையை விரிக்கின்றார் :—

(சு-ம்) விஷயங்களான வாட்பற்களாற் செவ்வையாய்ப் பற்றப் பட்டதும் கர்மமாகிய ஆணிகளால் செவ்வையாய் அறையப்பட்டதும் திடமுமான இச் சக்கரத்தினை ஜனங்கள் சேதிக்கச் சமர்த்த ராகார். (எ-று)

எப்படி இரும்புச்சக்கிரம் பற்களையுடையனவாய் உள்ளும் வெளியும் மரம் பிளக்கும் யந்திரத்தினை (வாளினை) யொத்தன வாகிய நாபி நேமி யெனு மிரண்டினுலும் சூழப்பட்டுத் திடமான ஆணிகளாற் றைக்கப்பட்ட தன்மையால் சேதிக்கத்தகாத சுற்றுப் பக்கத்தின யுடையதாமோ, அதுபோல் இச் சம்சார சக்கிரம் ஜாக்கிரகாலத்தில் பாகிய் விஷயங்களான வாட் பற்களால் ஜீவர் களைத் துளைக்கின்றது. உள்ளினும் காமக்குரோதாதிகளால் துளைக் கின்றது. வெளியுட் பற்களின் திடத்தன்மைக் கேதுவாகக் கர்ம வாணிகளால் செவ்வையாய்ச் சூழப்பட்டுளது. (உ௧)

अतिदुःखं च वैराग्यं भोगाद्वैतृष्ण्यमेव च ।
गुरुप्रसादः सत्संङ्ग उपायास्तज्जये अमी ॥ २२ ॥

[உஉ0] (அ-கை) இவ்வாறு இச்சம்சாரத்தின் சேதித்தற் கரிய தன்மையினைச் சக்கர திருஷ்டாந்தத்தினுற் கூறி, அதனைச் சேதிக்கு முபாயங்களைக் கூறுகின்றார் :—

(சு-ம்) மிகத் துக்கத்தினைத் தருவதாதலின், அச்சம்ஸார சக்கரத்தினை ஜயித்தலில் (இகலோக பரலோக) போகங்களில் ஆசையில்லாமையாகிய வைராக்கியமும், குருப்பிரசாதமும் (யோக கலாப் பிராப்தியும்), சத்சங்கமும் ஆகிய இவை உபாயங்களாம். (எ-று)

மூலத்துள்ள முதல் **च** காரம் ஹேதுப் பொருளதாம். ஐஹிக ஆமுஷ்மிகமான் போகசாதனத்தினைப் பெற்றும் அதில் ஆசையின் மையே வைராக்கிய லக்ஷணமாகப் பதஞ்சலி பகவானுல் "திருஷ்ட

(மாலை சந்தனம் ஸ்திரீ முதலிய ஐகிக)ங்களும், ஆநுசிரவிக (வேதத்தினால் போதிக்கப்பட்டுள்ள திவ்விய ஸ்திரீ முதலிய ஆமுஷ்மிக)ங்களுமான போகசாதன (விஷய)ங்கள் கிடைத்தபோதும், அவற்றில் ஆசையில்லாத புருஷனுக்கு வசிகாரமென்னும் பெயருள்ள வைராக்கியம் சித்திக்கின்றது" என்று சூத்திரிக்கப்பட்டுளது.

"பிறரோடு அதனை (ஆத்மாவை)ச் சிந்தித்தலும் அதனைப் பேசுதலும் ஒருவருக்கொருவர் அதனைப் போதித்தலுமான இதனை ஏகபரத்துவ ஞானப்பியாச மென்று அறிஞர் அறிவர்." என்று சொல்லப்பட்ட விதமான பிரத்திய காத்ம மீமாம்ஸையாகிய ஞானப்பியாசத்திற்கு ஏதுவான சத்துக்களின் சங்கம் முக்கியமான ஜயோபாயமாம். (உஉ)

अभ्यासाद्वा वशीकुर्यान्मनो योगस्य सिद्धये ।
वरेण्य दुर्लभो योगो विनास्य मनसो जयात् ॥ २३ ॥

[உஉக] (அ-கை) வைராக்கியம் சத்சங்க மிரண்டற்கும் ஜயோபாயத்துவம் கூறி அப்பியாசத்திற்கும் அதனைக் கூறுகின்றார் :—

(சு-ம்) யோகத்தினது சித்தியின் பொருட்டு அப்பியாசத்தினாலும் மனதை வசமுடையதாக்க வேண்டும். (எ-று)

"அப்பியாசம் வைராக்கிய மிரண்டினாலும் அதன் நிரோதமாம்." என்று சமுச்சித வடிவ அவ்விரண்டற்குமே சித்த நிரோதத்திற் கேதுவாந் தன்மை சூத்திரிக்கப்பட் டிருத்தலின் வசிகரித்தலின் பயன் 'யோகத்தினது சித்தியின் பொருட்டு' என்பதனாற் சொல்லப் பட்டது.

(அ-கை) விபக்ஷத்தில் தோஷத்தினைக் கூறுகின்றார் :—

(சு-ம்) வரேணியனே! இந்த மனதின் ஜயத்தினைவிட்டு யோகம் பெறுதற் கரியதாம். (எ-று) (உ௩)

वरेण्य उवाच ॥

योगभ्रष्टस्य को लोकः का गतिः किं फलं भवेत् ।
विभो सर्वज्ञ मे छिन्द्धि संशयं बुद्धिचक्रभृत् ॥ २४ ॥

[உஉஉ.] (அ-கை) மனோநிக்கிரகம் அநேக ஜன்மங்களாற் சாதிக்கப்படுவதா யிருத்தலின் போகங்களை விட்டவனும் மனோஜயம் சித்தியாதவனுமான போகத்தினின்றும் யோகத்தினின்றும் நழுவிய வனுக்கு இடையில் நாசமுண்டாகலாகாதே யென்று சந்தேகப்பட்ட வனாய் வரேணியன் கேட்கலாயினன்.

(சு-ம்) யோகப்பிரஷ்டனது லோகம் யாது? கதி யாது? பயன் என்னை? விபுவே! (வியாபகரே!) புத்தி சக்கிர (சர்வப்பிராணி களின் புத்தி சமூக) த்தினைத் தரித்தவரே அல்லது போஷிப்பவரே! சர்வஞ்ஞரே! தாம் எனது மூவகைச் சம்சயத்தினைக் கெடுத்தருள்வீ ராக. (எ-று)

எப்படித் தொடங்கிய யஞ்ஞம் குறைவுபட்டதானால் அதனின் றும் யஞ்ஞத்தின் பயனை யடையானோ, மாறுகத்தோஷத்தினால் கீழ்ச் செல்லுகின்றானோ, அதுபோல யோகப்பிரஷ்டனுக்கு மேலுலகப் பிராப்தியின்மையால் அதோகதியினை யடைவானா? அல்லது அத னின்று மேலேறுதலுண்டா? இல்லையா வென்பது ஒரு பிரசினம். அல்லது அற்பமாகிய சுகிருதத்திற்கு (நல்வினைக்கு) அற்பமாகிய பயனே உண்டாகின்றது. அதுவும் பலதானத்தினால் அதனாலாகிய சுகிருதம் போகத்தினாற் கெடுகின்றது என்பது இரண்டாவது பிரசினம். அது நசிக்கினும் பூர்வ சம்ஸ்காரத்தால் மறுபடியும் யோகாப்பியாசத்தில் பிரவர்த்திக்கின்றானா? இல்லையா? என்பது மூன்றாவது பிரசினம். (உச)

श्री गजानन उवाच ॥

दिव्यदेहधरो योगाद्भ्रष्टः स्वर्भोगमुत्तमम् ।
भुक्त्वा योगिकुले जन्म लभेच्छुद्धिमतां कुले ॥ २५ ॥

[உஉ௩] (அ-கை) இவ்வாறு பிரார்த்திக்கப் பட்டவரான ஸ்ரீ கஜானனர் சொல்லலாயினார்:—

(சு-ம்) யோகத்தினின்று நழுவியவன் திவ்விய தேகந்தரித்த வனாய் உத்தமமான ஸ்வர்க போகத்தினைப் புசித்து, யோகியின் குலத்திலாவது புனிதமுடையவர் குலத்திலாவது ஜன்மத்தினைப் பெறுகின்றான். (எ-று)

முற்றுப் பெறாத யாகமுடையவனைப் போல போகப் பிரஷ்டன் அதோகதியினை யடையான். மற்றொரு திவ்விய தேகந்தரித்தவனாய் உத்தமமான ஸ்வர்க்க போகத்தினைப் புசிக்கின்றான் என்பது முதலாவது பிரசினத்தின் உத்தரமாம். இரண்டாவது பிரசினத்தின் உத்தரமோ யோகியின் குலத்திலாவது புனிதமுடையோர் குலத்திலாவது ஜன்மம் பெறுகின்றானென்பதாம். (உரு)

पुनर्योगी भवत्येष संस्कारात्पूर्वकर्मजात् ।
न हि पुण्यकृतां कश्चिन्नरकं प्रतिपद्यते ॥ २६ ॥

[உஉசு] (அ-கை) மூன்றாவது பிரசினத்தின் உத்தரத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) (யோகப்பிரஷ்டனான) இவன் (யோகியின் குலத்திலாவது பெருங்குலத்திலாவது பிறப்பினைப்பெற்று) முற்பிறப்பிற் பழகிய யோகத்தினாலாகிய சம்ஸ்காரத்தினால் மறுபடியும் போகியாகின்றான் புண்ணியம் செய்தவர்களுள் எவனும் நரகத்தினை யடையான். (எ-று)

அவ்வாறே ஸ்மிருதியும், "தானம் அத்தியயனம் தபசு என்பது ஜன்ம ஜன்மாந்தரங்களில் அப்பியசிக்கப்பட்டதாம். அதே அப்பியாச சம்பந்தத்தினால் மறுபடியும் அதனையே அப்பியசிக்கிறான் என்று கூறுகின்றது. (உசு)

ज्ञाननिष्ठात्तपोनिष्ठात्कर्मनिष्ठान्नराधिप ।
श्रेष्ठो योगी श्रेष्ठतमो भक्तिमान्मयि तेषु यः ॥ २७ ॥

[உஉரு] (அ-கை) இனி யோகியினைத் துதித்துத் துவம் பதார்த்த சுத்தியினை உபசங்கரிக்கின்றார்:—

(சு-ம்) நராதிபனே! ஞானநிஷ்டனினும் (கேவலம் வேதாந்த சிரவணதிபரரான பாரத்துவாஜாதியரினும்), அவ்வாறே தபோநிஷ்டனினும் (விசுவாமித்திராதியோரினும்), அவ்வாறே கர்மநிஷ்டனினும் (வசிஷ்டாதியரினும்) யோகி (ஸநகாதியர்) சிரேஷ்

டன். அவர்களுள் (யோகிகளுள்) எவன் (பிரஹ்லாதாதியர் நாரதாதியர் போன்றவன்) என்னிடத்தில் பக்தியுடையவனோ அவன் சிரேஷ்டதம னாகின்றான். (எ-று)

ஆதலால் நீயும் அத்தன்மை யோகியாகுக என்பது கருத்தாம்.

இவ்வாறு சோதித்துவம் பதார்த்தமாம். இதற்குமேல் தத்பதார்த்த சுத்தியாகின்றது. (உஎ)

ॐ तत्सदिति श्रीमद्गणेशगीतासूपनिषदर्थगर्भासु योगामृतार्थशास्त्रे श्रीगणेशपुराणे उ० श्रीगजाननवरेण्यसंवादे योगकथनं नाम पञ्चमोऽध्यायः ॥ ५ ॥

யோகங் கூறுதலென்னும்
ஐந்தாமத்தியாயம்
முடிந்தது.



## ஆறாமத்தியாயம்
### பத்தியோகம்.



श्री गजानग उवाच ॥

ईदृशं विद्धि मे तत्त्वं मद्गतेनान्तरात्मना ।
यज्ज्ञात्वा मामसंदिग्धं वेत्सि मोक्ष्यसि सर्वगम् ॥ १ ॥

[௧உகூ] (அ-கை) முந்திய அத்தியாயத்தில் யோகி சர்வ சிரேஷ்டனாயினும், என்னிடத்தில் பக்தியுடையவன் சிரேஷ்டதம னாகின்றான் என்று கேட்டமையால் பக்தியோகத்தினைக் கேட்க விரும்பிய வரேணியனைக் குறித்துத் தாமே அதனை யறிவிப்பவராய் ஸ்ரீ கஜானனர் சொல்லலாயினர் :—

(சு-ம்) இத்தன்மைய எனது தத்துவத்தினை (எனது ஆரோபித மின்றிய ரூபத்தினை அதாவது ஜீவர்களின் பிரஹ்மாநந்யத் தன்மையினையும் பிரஹ்மத்தின் ஜீவதத்துவாநந்யத் துவத்தினையும்) என்னிடத்திற் பொருந்திய அந்தராத்மாவினால் (ஆலங்கட்டி நீர்போல என்னிடத்தில் நன்று யொடுக்கப்பட்ட மனதினால்) அறி. இத்தன்மையாக சந்தேகமின்றிய (பிரத்தியக பின்னத்துவத்தில் சம்சயாதிகளில்லாத) எல்லாவற்றினு மிருக்கும் என்னை அறிந்து நேரே அடைகிறாய்) ஆதலால் முக்தனாவாய். (ஆதலால் நீ) எல்லாவற்றினு மிருப்பவனாவாய். (முக்தனுக்கே சர்வாத்மத் தன்மை யான் எல்லாவற்றினு மிருக்கற்றன்மை பிரசித்தமாம். "எவன் இவ்வாறு யான் பிரஹ்மம் என்று அறிகின்றானோ அவன் இவ்வெல்லா மாகின்றான்" என்றும், "யாதொரு இவ்வாத்மா வுளதோ அதனுடையதாம் இவ்வெல்லாம்" என்றும் முக்தனான பிரஹ்மவித்துக்குச் சர்வாத்மத்தன்மை சுருதியிற் கேட்கப்படுதலால்). 'இத்தன்மைய எனது' என்றது முந்திய அத்தியாயத்தில் சொன்னபடி யென்றதாம். அங்கு 'மேலான நிர்விருதியினை' என்பதனால் துவமர்த்தத்தின் பரமாநந்த ரூபத்துவம் சொல்லப்பட்டது. 'எல்லாவற்றினும் தனதாத்மாவினையும், எல்லாவற்றினையும் தனதாத்மாவினும் காண்கின்றான்.' என்று அந்தத் துவம் அர்த்தத்தினுக்கே எல்லாவற்றினு மிருக்கற்றன்மை முதலியன சொல்லப்பட்டுளது. 'எல்லாவற்றினும் இருக்கும் என்னை எவன் அறிகின்றானோ' என்பதனால் தத்பதார்த்தமாகிய தனது எல்லாவற்றினு மிருக்கற்றன்மை சொல்லப்பட்டது. இருவர் எல்லாவற்றினு மிருப்பவராதல் சம்பவிபாது என்றாசங்கித்து, "யோகத்தினால் யோகி" என்னும் (ரு-கசு) சுலோகத்தினால் துவமர்த்தம் என்னிடத்திற் பிரவேசிக்கின்றது, யானும் துவமர்த்தத்திற் பிரவேசிக்கின்றேன் என்று அவ்விரண்டன் அபேதம் சொல்லப் பட்டது. அவ்விது இத்தன்மைய என்னும் பதத்தாற் சொல்லப்பட்டதாம். (க)

तत्तेऽहं शृणु वक्ष्यामि लोकानां हितकाम्यया ।
अस्ति ज्ञेयं यतो नान्यन्मुक्तेश्च साधनं नृप ॥ २ ॥

[உஉஎ] (அ-கை) இவ்வாறு ஞானத்தின் பயனைக் காட்டுதலால் ஜிஞ்ஞாசுவினை அபிமுகப்படுத்தி, ஞானசாதனமாகிய தத்பதார்த்தத்தின் உபாசனத்தினைச் சொல்லப் பிரதிஞ்ஞைசெய்கின்றார் :—

(சு-ம்) நிருபனே! எதனின் (எவ்வாத்மாவினும் ஞான சாதனத்தினும்) வேறான ஞேயமும் முக்தியின் சாதனமுமில்லையோ, அதனை ஞேயமான (வஸ்துவினையும் ஞான சாதனத்தினையும்) (சர்வஞ்ஞ ஈசுவரனான) யான் உனக்கு (நீ எனது தரிசனத்தினால் கிருத கிருத்தியனாயினும்) உலகத்தினாது ஹிதத்தின் பொருட்டுச் சொல்லுகின்றேன், கேள். (எ-று)

அவ்வரேணிபன் வழியினனாகிய சிஷ்ய பரம்பரையினால் மற்றவர்களும் அதனைக்கேட்டுக் கிருதகிருத்தியராகுகவென்னும் அபிப்பிராயத்தால் ‘உனக்கு உலகத்தினாது ஹிதத்தின் பொருட்டுச் சொல்லுகிறேன்’ என்றதாம். (உ)

ज्ञेया मत्प्रकृतिः पूर्वं ततः स्याज्ज्ञानगोचरः ।
ततो विज्ञानसंपत्तिर्मयि ज्ञाते नृणां भवेत् ॥ ३ ॥

[உஉஅ] (அ-கை) ஞேயத்தினையே கூறுகின்றார்:—

(சு-ம்) எனது பிரகிருதி (எனது சம்பந்தமுடையதான முக்குண வடிவமாயை) முன்னர் அறியத்தக்கதாம். (மாயாகாரிய வடிவ தேகேந்திரியாதிகளை முன்னர் அறிந்து) அதன் பின்னர் ஞானத்தின் கோசரம் (ரூபாதி விஷயம்) உற்பத்தியாகின்றது. (இத்தன்மைய திருஷ்டி சிருஷ்டியினை யாசிரயித்துச் சித்தத்தினை உள்நோக்கத்தின தாக்கி) அதன் பின் (நிஷ்பிரபஞ்சமும் சர்வப்பிராணிகளின் பிரத்தியகாத்மாவு மான)யான் அறியப்பட்டபோது (அதிகாரிகளான) நரர்களுக்கு விஞ்ஞான சம்பத்தி (விஞ்ஞான சம்பத்தியநுபவ வடிவத்தால் கைவல்யம்) உண்டாகின்றது. (எ-று)

இந்திரியாதிகளை யறிந்து, அதன் பின் விஷயமுற்பத்தியாகின்றதென்னும் அர்த்தத்தினை வேதமானது சுழுத்தியினை

யெடுத்துக்கொண்டு, "அந்த இதனை வாக்கு எல்லா நாமங்களோடும் அடைகின்றது (இதில் ஒடுங்குகின்றது). சக்ஷு சர்வ ரூபங்களோடும் ஒடுங்குகின்றது" (கௌஷீ-ந-ந) என்று சர்வ லயாதிஷ்டானமாக ஆத்மாவினைக் கூறி, மறுபடியும் விழிப்பில் "எப்படி அக்கினியின் அற்பமான பொறிகள் சர்வ திக்குக்களினும் விசேஷமாக நிலைக்கின்றனவோ, அவ்வாறே இவ்வாத்மாவினின்று சகலப் பிராணன்களும் தமக்கு உரிய கோளகங்களில் விசேஷமாய் நிலைக்கின்றன. பிராணன்களினின்று தேவர்களும் தேவர்களினின்று லோகங்களு முண்டாகின்றன" (கௌஷீ-ந-ந) என்று ஆத்மாவிலிருந்தே அக்கினிப்பொறிகள் நியாயத்தால் பிராண சப்தத்தினுற் சொல்லப்பட்ட சக்ஷு முதலியவற்றிற்கும், அவற்றினின்று அவற்றின் அதிஷ்டாதாக்களான சூரியாதி தேவர்கட்கும், அவர்களினின்று அவற்றாற் பிரகாசிக்கப்படுவனவாகிய லோக (விஷய) ங்கட்கும் உற்பத்தி யுண்டானதாகக் கூறுகின்றது. (ந)

क्वनलौ खमहंकारः कं चित्तं धीसमीरणौ ।
रवीन्दू यागकृच्चैकादशधा प्रकृतिर्मम ॥ ४ ॥

[உஉக] (அ-கை) முக்குணவடிவ மாயையினைக் காரியவாயிலாகவே காட்டுகின்றார். இரஜ்ஜு சர்ப்பாதிகட்குக் காரணமான அஞ்ஞானம் இஃது எனுந் தன்மையால் காட்டக்கூடியதன்று; பிரமாணகோசர மாகாமையின்; ஆதலால் பதினொருவிதமான அதன் காரியத்தினையே கூறுகின்றார் :—

(சு-ம்) பிருதிவி, அக்கினி, ஆகாசம், அகங்காரம் (அபிமானம்), நீர், சித்தம், (சிந்தித்தல் வடிவினதாகிய புத்திவிருத்தி) புத்தி (நிச்சயவடிவினதாகிய புத்திவிருத்தி) வாயு, சூரியன், சந்திரன், யாகஞ்செய்வோன் (யஜமானன் அதாவது சங்காதமுழுவதிலும் மனிதன் யான் பிராஹ்மணன் யான் என்னு மபிமானமுடையவன்) என்னு மிது எனது சம்பந்தியான பதினொருவகைப் பிரகிருதி (மாயை) யாம். (எ-று)

பிரத்திபக்ஷமாக உறக்கத்தில் ஒடுங்குகின்றது, விழிப்பில் வெளிப்படுகின்றது, சொப்பனேந்திரஜாலம் போல வென்பது கருத்து.

இங்கு "இனி அதனால் விபூதிகளாவன அந்தப் புருஷனது வாக்கால் சிருஷ்டியில் பிருதிவியும் அக்கினியு முண்டாயின." என்றல் முதலியனவாக ஐதரேயத்திற் காணப்பட்டதாகிய சிருஷ்டிக்கிரமம் ஆதரிக்கத்தக்கதா மென்பதனைச் சூசித்தற்பொருட்டு 'பிருதிவி, அக்கினி' என்று பிருதிவியக்கினி யிரண்டனையும் கொண்டதாம். அதனால் "சக்ஷுவினல் சிருஷ்டியில் சுவர்க்கமும் ஆதித்தியனும் உண்டாயின. பிராணனால் சிருஷ்டியில் அந்தரிக்ஷமும் வாயுவு முண்டாயின" என்றல் முதலியனவும் கொள்ளப் படும். (ச)

अन्यां मत्प्रकृतिं वृद्धां मुनयः संगिरन्ति च ।
तया त्रिविष्टपं व्याप्तं जीवत्वं गतयानया ॥ ५ ॥

[உகூ0] (அ-கை) இவ்வாறு ஜடமான பிரகிருதியினைக் கூறி, சேதனமான ஜீவ வடிவப் பிரகிருதியினைக் கூறுகின்றார்:—

(சூ-ம்) அநாதியான வேறு எனது பிரகிருதியினையும் முனிவர் கூறுகின்றனர். அதனால் ஜீவத்தன்மையினை யடைந்த இப்பிரகிருதியால் மூவுலகும் வியாபிக்கப்பட்டதாம். (எ-று)

திருசியத்தினைப் போல சிதாபாச ரூப திரஷ்டாவும் அத்தியஸ்தமா மென்பது கருத்து. (ரு)

आभ्यामुत्पद्यते सर्वं चराचरमयं जगत् ।
संगाद्विश्वस्य संभूतिः परित्राणं लयोऽप्यहम् ॥ ६ ॥

[உகூக] (அ-கை) இவ்வாறு பிரகிருதி யிரண்டனைக் கூறி, அதன் காரியத்தினைக் கூறுகின்றார்:—

(சூ-ம்) இவ்விரண்டு (ஜடாஜடமான) பிரகிருதியி னின்றும் சராசர மயமான (ஜங்கமஸ்தாவர போக்திருப் பிரதானமான)

ஜகத்து முழுவதும் உற்பத்தியாகின்றது. இவ்விரண்டன் சங்கத்தால் யானே விசுவத்தின் உற்பத்தியும் ஸ்திதியும் இலயமு மாகின்றேன். (எ-று)

இது பொருளாம்:— "அது எப்படி உப்புக்கட்டி உள்ளின்றியதும் வெளியின்றியதுமாய் முழுவதும் இரஸகனமே யாகின்றதோ, அதுபோல இவ்வாத்மா உள்ளின்றியதும் வெளியின்றியதுமாய் முழுவதும் பிரஞ்ஞானகனமே யாகின்றது" (பிரு-ச·ரு-கங) என்னும் சுருதியினால், ஜாக்கிர சொப்பன சுழுத்தி வடிவ வெளியுள் அவஸ்தைப் பேதத்திலும் பிரஞ்ஞானகனமேயாம் ஆத்மா. எப்படி உற்பத்தி ஸ்திதிலயகாலத்திலும் உப்புக்கட்டி இரஸகனமேயாயிருக்கின்றதோ அதுபோல சர்வக்கிரியாகாரக பல வடிவமான இது யானே யென்பது பொருளாம். (சு)

तत्त्वमत्र निबोद्धुं मे यतते कश्चिदेव हि ।
वर्णाश्रमवतां पुंसां पुरा चीर्णेन कर्मणा ॥ ७ ॥

[உகூஉ] (அ-கை) இந்தச் சிதேக ரஸத்தின் உணர்ச்சியில் அதிக துர்லபத் தன்மையினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) புருஷர்களுள்ளும் வர்ணாசிரம தர்மங்களையுடைய புருஷர்களுள் இவ்வுலகத்தில் ஒருவனே முன் (ஜன்ம ஜன்மாந்தரங்களில்) செய்யப்பட்ட (புண்ணிய) கர்மத்தால் (பரப்பிரஹ்மமான) எனது தத்துவ (ஆரோபிக்கப் படுதலின்றிய ரூபமான ஆநந்தைகரஸ) த்தினை அபரோக்ஷீகரிக்க முயலுகின்றான். இது பிரசித்தம்: (எ-று)

அவ்வாறே "அநேக ஜன்மங்களில் நற்சித்தி பெற்றவனாய், அதனால் மேலான கதியினை அடைகின்றான்" என்னும் ஸ்மிருதியினால் ஆத்மதரிசனத்தில் பிரவிருத்தி அத்தியந்தம் துர்லபமாமென்பது சொல்லப்பட்டது. அவ்வாறே "சிரவணத்தின் பொருட்டும் அநேகரால் எது பெறக்கூடியதன்றோ, சிரவணஞ் செய்பவர்களும் அநேகர் எதனை யறியாரோ, (கட-உ-எ) என்று சுருதியும் கூறுகின்றது. (எ)

साक्षात्करोति मां कश्चिद्यत्नवत्स्वपि तेषु च ।
मत्तोऽन्यन्नेक्षते किंचिन्मयि सर्वं च वीक्षते ॥ ८ ॥

[உ௩௩] (அ-கை) இவ்விரண்டனையுமே கூறுகின்றார்:-

(சு-ம்) [ஒருவனே என்னையறிய முயலுகின்றான் என்பது சொல்லப்பட்டது. முயலுபவர்களிலும் ஒருவனே என்னைக் காண்கின்றானென்று கூறுகின்றார்.] அந்த யத்தனஞ் செய்பவரநேகரிலும் ஒருவனே (முற்கூறிய வித ஏகாஸனன) என்னைச் சாக்ஷாத்கரிக்கின்றான் (என்னைச் சாக்ஷாத்கரிப்பவனது இலக்ஷணத்தினைக் கேள்.) என்னின் (சின்மாத்திரத்தின்) வேறாக (சித்துஜடம்) எதனையும் பாரான். (சின்மாத்திரமான) என்னிடத்தில் (ஆகாயத்திற் கருமைபோல) எல்லாவற்றினையும் காண்கின்றான். (எ-று)

சொப்பனத்திற் போலத் தன்னின் வேறானதில்லையென்று காண்கின்றான் என்பது பொருள். எப்படிச் சொப்பனத்தில் என்னின் வேறான தெதுவுமில்லையோ, அதுபோல ஜாக்கிரத்திலும் காணப்படுகின்ற இது என்னின் வேறாக இல்லை கானலின் நீர் போல என்பது கருத்து. (அ)

क्षितौ सुगन्धरूपेण तेजोरूपेण चाग्निषु ।
प्रभारूपेण पूष्ण्यब्जे रसरूपेण चाप्सु च ॥ ९ ॥

[உ௩௪] (அ-கை) இவ்வாறு பரமசித்தாந்தத்தினைக் கூறி, அதனை யறியு முபாயமான விபூதிகளின் சிந்தனத்தினைச் சுருக்கமாக இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார்:—

(சு-ம்) (அநுபவவடிவ) யான் (ஜடமான) பூமியில் (இருப்புவடிவால் அசத்தாமிதில்) நல்வாசனை (சுகந்தாநுபவ) வடிவாகவும், அக்கினியில் தேயுவடிவாகவும், சூரியனில் வெயில்வடிவாகவும், சந்திரனில் நிலவுவடிவாகவும், நீரில் இரஸவடிவாகவும் இருக்கின்றேன். (எ-று)

இரஜ்ஜு சர்ப்ப சொப்பன மாயாதிகளில் ஜடமான சர்ப்பாதி சரீரமில்லாதிருக்கினும், அதனநுபவமாத்திர சரீரனுன யான் அனுபவிக்கப்படுவதன் சாக்ஷியான அவிக்கிரியனு யிருக்கின்றேன் என்பது கருத்தாம். (௯)

धीतपोबलिनां चाहं धीस्तपो बलमेव च ।
त्रिविधेषु विकारेषु मदुत्पन्नेष्वहं स्थितः ॥ १० ॥

[உ௩௫] (சு-ம்) புத்திமான்களது புத்தி (விஷயப் பிரகாச வடிவ அறிவு) யானே தபசிகளின் தபசு (மகாநுபாவத் தன்மை) யானே. பலிகளின் (யோகைசுவரியமான வலியுடையவர்களது) பலம் (அகஸ்தியர் முதலியோரது சமுக்திரத்தினை யுலர்த்துதல் முதலிய சாமர்த்தியமான ஐசுவரியம்) யானே (எனது மாயையினுல்) என்னிடத்தினின் றுண்டானவைகளான (ஜாக்கிர தபிமானி விசுவன், சொப்பனுபிமானி தைஜஸன், சுழுத்தி யபிமானி பிராஞ்ஞன் என்னும்) மூவகையான (பரஸ்பரம் வேறுபட்டன வாகிய) விகாரங்களில் (பூவில் நூல்போல்) தொடர்ந்திருக்கின்றவன் யானே. (எ-று)

அநுபவிக்கப்படும் கந்தாதியினும் அவ்விச்சையாற் கற்பிக்கப்பட்ட பூமியாதியினும் வேருக அநுபவவடிவ யானிருக்கின்றேனென்பது பொருள். (௧௦)

न मां विन्दति पापिष्ठा मायामोहितचेतनः ।
त्रिविकारा मोहयति प्रकृतिर्मे जगत्रयम् ॥ ११ ॥

[உ௩௬] (அ-கை) இந்த ஞானம் மிகத் துர்லபமா மென்று கூறுகின்றுர்:—

(சு-ம்) மாயாமோகித (மாயையுடையவர்களான பாஷண்டிகளால் போதிக்கப்பட்ட) சித்தமுடையவர்களாய் (அதனுலேயே) பாபிஷ்டரானவர் ["சரீரங்களிலிருந்தும் சரீரமில்லாததும் அநவஸ்தைகளி லிருப்பதும்" (கட-உ-உஉ) என்னும் சுருதியினுல் கால மூன்றிலும் சரீரசம்பந்த மில்லாத] என்னை அடையார்கள்.

(பிரமாதா பிரமாணம் பிரமேய மெனப்படும் அல்லது ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி யெனப்படும் அல்லது தமசு இராஜசு சத்துவ மெனப்படும்) மூன்று விகாரங்களையு முடையதான எனது சம்பந்தியான பிரகிருதி ("மாயையினைப் பிரகிருதியென்றும் மாயியை மகேசுவர னென்றும் அறிக" என்னும் சுருதியால் சர்வகாரியோபாதான வடிவ மாயை) ஜகத்து மூன்றனையும் (அத்தன்மைய மூடர்களை) மோகிக்கச் செய்கின்றது. (எ-று)

இம்மோகம் அதம மத்தியமர்களான திரியக்கு மனிதர்களிடத்துத் தானிருக்கிற தென்பதில்லை. மற்றோ, உத்தமர்களான தேவ தேவர்களிடத்தும் "பிரஜாபதி தன் மகளைச் சேர்ந்தார்." (ஐத-பிரா-கஙு-கூ) என்று கேட்கப்படுகின்றது. பாபத்தினைச் செய்தற் றன்மையால் அதன் சம்பந்தமுடையவர் பாபிஷ்டரெனப் படுவர் அதி துஷ்டர்களான பாஷண்டிக ளென்பது பொருள். அவர்களே தேகாதியாத்மவாதிகள். (கக)

योमे तत्त्वं विजानाति मोहं त्यजति सोऽखिलम् ।

[உஙுஎ] (அ-கை) மாயாநிவிருத்தி யுபாயத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) எவன் எனது தத்துவ (நிஷ்கலாநுபவ ரூப) த்தினை அறிகின்றானோ, அவன் எனது (என் விஷயமான) மோகம் முழுவதனையும் (மாயை யெனப்படும் அஞ்ஞானத்தினைக் காரியத்தோடு) விடுகின்றான் (ஞானத்தினாற் கெடுக்கின்றான்.) (எ-று)

முழுவதனையு மென்றது விதேக கைவல்யாபிப்பிராயமாம்; தத்துவ முணர்ந்தவனுக்கும் பிராரப்த கர்மத்தினைப் புசித்தற் பொருட்டு மாயாலேசத்தின் அநுவிருத்தி (பின்னிகழ்ச்சி) அங்கீகரிக்கப் படுதலாலும் "மறுபடியும் முடிவில் விசுவமாயையின் நிவிருத்தியாம்" (சுவேதா-க-க0) என்று சுருதியில் ஜீவன் முக்தி காலத்தில் நீங்கியதாகவும் மாயைக்கு மறுபடியும் நிவிருத்தி கூறுதல் விதேக கைவல்யாபிப்பிராயமா மென்று வியாக்கியானஞ் செய்யப்பட்டிருத்தலாலும்.

अनेकैर्जन्मभिश्चैवं ज्ञात्वा मां मुच्यते ततः ॥ १२ ॥

(அ-கை) இதுவும் வெகு ஜன்மசாத்தியமா மென்று கூறு கின்றார்:—

(சு-ம்) அநேக ஜன்மங்களால் இவ்வாறு என்னை யறிந்து அதனின்று விடுபடுகின்றான். (எ-று)

ஞானத்தின்பொருட்டு மிகுதியான யத்தனம் செய்யவேண் டியதா மென்பது அபிப்பிராயம். (கஉ)

अन्ये नानाविधान्देवान्यजन्ते तान्व्रजन्ति ते ।
यथा यथा मतिं कृत्वा भजते मां जनोऽखिलः ॥ १३ ॥

[உகஅ] (அ-கை) ஞானநிஷ்டை யில்லாதவர்களான காமனை யுடையவர்களும் என்னின் வேறானதாக யஜிக்கத்தக்க தின்மை யால் என்னையே அந்தந்தத் தேவதாரூபமாக யஜிக்கின்றனர் என்று கூறுகின்றார்:—

(சு-ம்) (ஞானிகளின்) வேறானவர் நாநாவிதமான தேவர்களை (சாத்துவிக ராஜஸதாமஸங்களான இந்திராதியரையும் யக்ஷராக்ஷ சாதிகளையும் பிரேத பூதகணாதிகளையும்) (அதிகாரத்திற் கேற்றபடி காமாநுசாரமாக) யஜிக்கின்றனரோ, அவர்கள் (ஆராதிப்பவர்) அவர் களை (தத்தமது ஆராத்தியர்களை) அடைகின்றனர். எல்லா ஜனங் களும் எப்படி எப்படி (சாத்துவிக ராஜஸ தாமஸமான எந்தவிதத் தினால்) மதியினை (காமத்தினால் இஞ்சிக்கப்பட்ட திட நிச்சயத் தினை)ச் செய்து (என்னின் வேறான தான பஜிக்கத்தக்கது இன்மை யால்) என்னையே பஜிக்கின்றனரோ, (கங)

तथा तथास्य तं भावं पूरयाम्यहमेव तम् ।
अहं सर्वं विजानामि मां न कश्चिद्विबुध्यते ॥ १४ ॥

[உகக] (அ-கை) அதனால் என்னையெனக் கூறுகின்றார்:—

(சு-ம்) அவர்களது (என்னை யாராதிக்கும்) அந்தந்தவிதமாக அந்தந்தபாவ (மனோரத) த்தினை யானே (அறிந்து) பூர்த்திசெய்

கின்றேன் (ஆராதிப்பவர்களது மனோரதம்) எல்லாவற்றையும் (சர்வ தேவதா வடிவத் தன்மையால்) யான் அறிகின்றேன். (பேதப் பிர தான திருஷ்டியுடைய ஆராதகன்) எவனும் (அந்தந்தத் தேவதா வடிவமான) என்னை அறியான். (எ-று) (கச)

अव्यक्तं व्यक्तिमापन्नं न विदुः काममोहिताः ।

[உசo] (அ-கை) எதனால் அறிகிறதில்லை யெனக் கூறுகின்றார்.:—

(சு-ம்) அவ்யக்த (அமூர்த்த) மான என்னைச் (சாதகர்களினநுக்கிரகத்தின் பொருட்டு அந்தந்த மூர்த்திபேதமாக) வியக்தியை (வெளிப்படுதலை) அடைந்தவனாக (யான் எல்லா மூர்த்திகளிலும் உட்கலந்த ஒருவனாயிருந்தும் மூர்த்திபேதத்தினாலபகரிக்கப்பட்ட சித்தத்தினராய்) (சாத்துவிக ராஜஸ தாமஸங்களான) காமங்களால் மோகிக்கப்பட்டவர்களாய் அறிகிறதில்லை. (மற்றோ நாநாத்துவத் தினை யறிகின்றனர்). (எ-று)

சாத்துவிகர் சுவர்க்க காமராய் யஜிக்கின்றனர். இராஜஸர் ஐஹிக சுக காமராய் யஜிக்கின்றனர். தாமஸர் பிறருக்குப் பித்தேற்றல் முதலியவற்றின் காமராய் யஜிக்கின்றனர் என்றதாம். காமத்தின்படி அந்தந்தத் தேவதையினைப் பஜிக்கின்றனர் என்பது பொருள்.

नाहं प्रकाशतां यामि अज्ञानां पापकर्मणाम् ॥ १५ ॥

(அ-கை) ஆதலால் அப்படிப்பட்டவர்கட்கு எனது ஞானம் துர்லபமாம் என்று கூறுகின்றார்:—

(சு-ம்) பாபகர்மமுள்ள அஞ்ஞானிகட்கு யான் பிரகாசத் தன்மையினை யடையேன் (வெளிப்படேன்.) (எ-று) (கரு)

यः स्मृत्वा त्यजति प्राणमन्ते मां श्रद्धयान्वितः ।
स यात्यपुनरावृत्तिं प्रसादान्मम भूभुज ॥ १६ ॥

[உசக] (அ-கை) அவர்கள் காமமோகிதராய்த் தம்மைப் பஜிக்கிறதில்லை; தாமும் அவர்கட்குப் பிரகாசமாகீர் எனின், அவர்கள் கதி யாதெனக் கூறுகின்றார் :—

(சு-ம்) பூபுஜனே! (பூவாகிய பிருதிவியைப் பாலிப்பவனே!) எவன் சிரத்தையோடு கூடியவனய், மரணகாலத்தில் என்னை ஸ்மரித்துப் பிராணனை விடுகின்றுனே, (எனது பாவத்தினை யடைந்த) அவன் எனது பிரசாதத்தினுல் மறுபடியும் திரும்புத லின்மையை யடைகின்றுன். (எ-று)

அரசனெவ்வண்ணம் அவ்வண்ணம் குடிகளும் என்னும் நியாயத்தால் நீ எனது சிந்தனபானுயின் சர்வஜனங்களும் உன்னைப்போன்றவ ராவர் என்பதனைச் சூசிப்பவராய் 'பூபுஜனே' என்று விளித்தார்.

எவ்வாறு திடதரமான சம்ஸ்காரத்தால் கடைசிகாலத்து சிரத்தா பூர்வகமான எனது ஸ்மரண முண்டாகுமோ, அவ்வாறு நிரந்தரம் எனது ஸ்மரணத்தினைச் செய்யவேண்டும். அதனுல் கடைசியில் எம்மதியோ அக்கதியுண்டா மென்னும் வசனத்தினுல் அவன் மறுபடியும் சம்ஸாரத்தினை யடையான். ஆதலால் அவர்களால் எனது ஸ்மரணமே அவசியம் செய்யத்தக்கதாம். இவ்விதமேயாம் அவர்கட்கு முக்தி யுபாய மென்பது பொருள். (கசு)

यं यं देवं स्मरन्भक्त्या त्यजति स्वं कलेवरम् ।
तत्तत्सालोक्यमायाति तत्तद्भक्त्या नरोत्तम ॥ १७ ॥

[உசஉ] (அ-கை) இந்த நியாயமே அந்நிய தேவதாதியானத்திலும் சமமா மென்று கூறுகின்றுர்:—

(சு-ம்) நரோத்தமனே (விஷ்ணு ருத்திரன் கௌரி கணேசன் சூரியன் என்னும்) எந்தெந்தத் தெய்வத்தைப் பக்தியோடு ஸ்மரித்துத் தனது சரீரத்தினை விடுகின்றுனே, அதனதன் பக்தியால் அவ்வத் தெய்வத்தின் சாலோக்யமான லோகவாசத்தினைப் பெறுகின்றுன். (எ-று)

பரதர் மானை நினைந்து பிராணனைவிட்டு மான்றன்மையினையே யடைந்தது போல நீ ஸ்திரியாதி பரனுகாதே என்பதனைச் சூசிப்பவராய் 'நரோத்தமனே' என்று விளித்தனர்.

சாலோக்கியத்தினை யென்றது உபலக்ஷணமாம், பாவனையின் தாரதம்மியத்தால் சாமீப்பிய சாரூப்பிய சாயுஜ்யங்களின் அடைவும் சம்பவித்தலால்.

இவர்கள் தேவதாஸ்மரணத்தினலேயே அவ்வச் சாலோக்கியாதிகளைப் பெறுகின்றனர் என்பது மாத்திரமில்லை; மற்றோ, யாதொரு பாவத்தினை யாயினும் பக்தியாகிய பிரீதியோடு ஸ்மரித்து இச் சரீரத்தினை விடுவார்களாயின் (அப்பக்தி காரணமாய்) அச் சாரூப்பியத்தினையும் பெறுவர் என்பது தோன்ற "அதனதன் பக்தியால்" என்றார். (௧௭)

अतश्चाहर्निशं भूप स्मर्तव्योऽनेकरूपवान् ।
सर्वेषामप्यहं गम्यः स्रोतसामर्णवो यथा ॥ १८ ॥

[௨௩௫] (அ-கை) பாவனையை விதிக்கும் சாஸ்திரத்தினை முடிக்கின்றார்:—

(சு-ம்) (எதனல் ஸ்மரிப்பவன் ஸ்மரிக்கப்படும் தேவதையின் சாலோக்கியாதிகளைப் பெறுகின்றானே) அதனல் பூபனே! பக்தியோடு பகலு மிரவும் (எப்போதும்) அநேக ரூபமுடைய யான் (வெகு வடிவினனாயினும் யாதேனுமோர் வடிவத்தினைப் பற்றி) ஸ்மரிக்க வேண்டியவனாகின்றேன். (அந்நியதேவதையின் சாரூப்பிய வாயிலாகவும்) ஆறுகள் சமுத்திரத்தினை அடைவது போல யானே எல்லோருக்கும் அடையத்தக்கவனாகின்றேன். (எ-று) (௧அ)

ब्रह्मविष्णुशिवेन्द्राद्याँल्लोकान्प्राप्य पुनः पतेत् ।
यो मामुपैत्यसंदिग्धः पतनं तस्य न क्वचित् ॥ १९ ॥

[௨௩௬] (அ-கை) அந்நிய தேவதையின் பக்தனும் கிரமமுக்தி நியாயத்தால் என்னை யடையான், மற்றோ ஜன்மாந்தரத்தினைப் பெறுதல் பூர்வகமாகவே என்னை அடைகின்றான் என்னும் அபிப்பிராயத்தாற் கூறுகின்றார்;—

(சு-ம்) பிரஹ்மா விஷ்ணு சிவன் இந்திரனென்னும் ஈசுவரர்களால் சர்வகாமங்களும் பொருந்தியனவாகிய லோகங்களை யடைந்து

மறுபடியும் விழுகின்றான் (அவ்வுலகங்களினின்று மறுபடியும் பிருதிவியினையே யடைகின்றான்; மேல் மேல் உலகத்திற்குச் செல்லுகிறதில்லை.) எவன் (அந்தராத்மாவாகிய) என்னைச் சந்தேகமின்றிய வனாய் (யான் பிரஹ்மமா அன்றா வென்னும் சம்சயமில்லாது, பிரஹ்மமே யான் என்னும் நிச்சயமுடையவனாய் முற்கூறிய யோக மார்க்கத்தினால்) அடைகின்றானோ, அவனுக்கு வீழ்தல் ஒருகாலத்து மில்லை (முக்தர்கட்கு மறுபடியும் பந்தம் சம்பவியாமையின்) என்பது கருத்து. (எ-று) (கக)

अनन्यशरणो यो मां भक्त्या भजति भूमिप ।
योगक्षेमौ च तस्याहं सर्वदा प्रतिपादये ॥ २० ॥

[உசடு] (அ-கை) இவ்வாறு பகலுமிரவும் தம்மைத் தியாநிப்ப வனுக்குத் தேகயாத்திரை (சரீர நிர்வாகம்) எவ்வாறு மெனக் கூறுகின்றார் :—

(கு-ம்) பூமிபனே! அநந்நிய சரணாய் (என்னையே சரண் புகுந்தவனாய்) எவன் பக்தி (பிரீதி) யோடு (குருதேவதா ரூபமான) என்னை (வேறு வியாபார மின்றியவனாய்) ப் பஜி (சேவி)க் கின்றானோ (தனது சரீர நிர்வாகச் சிந்திப்பின்றிய) அவனது யோகக்ஷேம மிரண்டினையும் (விசுவம்பரனான) யான் எப்போதும் சம்பாதிக்கின்றேன். (எ-று)

உம்மையால் யோகாநுகூல சம்பாதனமும் பிரதிகூல நீக்கமுமான மற்றதனையும் சம்பாதிக்கின்றேன் என்பது கொள்ளப்படும்.

அங்குப் பெறாததனைப் பெறுதல் யோகமாம். பெற்றதைச் சம்ரக்ஷித்தல் க்ஷேமமாம், எனது பக்தனுக்கு இஷ்டமானதெல்லாம் யானே சம்பாதிக்கின்றேன் என்பது பொருள். (உ0)

विविधा गतिरुद्दिष्टा शुक्ला कृष्णा नृणां नृप ।
एकया परमं ब्रह्म परया याति संसृतिम् ॥ २१ ॥

[உசஎ] (அ-கை) இனி யோகிகட்கும் ஞானமில்லாதவர்கட்கும் அடையத்தக்க இரண்டுவழிகளுண்டு, கர்மிகளின் தூமாதி

மார்க்கம் புநராவிருத்தி (மறுபடியும் திரும்புதலு)க்கு ஏதுவாம். யோகிகளின் அர்ச்சிராதிமார்க்கம் புநராவிருத்தியின்றியதாம். அங்கு யோகியால் மார்க்கமும் சித்திக்கத்தக்கதாம். உபகோசல வித்தையில், உபகோசலனுக்கு அக்கினிகள் பிரஹ்மவித்தையினைக் கொடுத்து, உனக்கு ஆசாரியரோ கதியினைச் சொல்லுபவ ராவரென்று ஆசாரிய ராதீனமான கதி பாகத்தினை எஞ்சுவிக்கின்றது. அது சேஷகதி யநுஸ்மிருதி யோகத்தாலும் என்னும் சூத்திராவயத்தினுல் கதி யநுஸ்மிருதிக்கு வித்தியாசேஷத்துவம் அறியவருதலின், உபாசக னுக்கு ஆதிவாகிக தேவதாநு சிந்தனத்தின் பொருட்டு அர்ச்சிராதி மார்க்கம் உபதேசிக்கப்படுகின்றது. தூமாதிமார்க்கமோ நிந்தை வாயிலாக அதன் (அர்ச்சிராதி மார்க்கத்தின்) துதியின் பொருட்டே உபந்நியசிக்கப்படுகின்றது என்னும் அபிப்பிராயத்தினுற் கூறுகின் ருர்:—

(சு-ம்) நிருபனே! நரர்களுக்குச் சுக்கிலம் (தேவயானம்) கிருஷ்ணம் (பிதிர்யாணம்) என்று இருவகை வழி சொல்லப்பட் டுளது. அவற்றுள், ஒன்றினுல் (முக்கியமான தேவயானமார்க்கத் தால்) பரமமான பிரஹ்மத்தினையும், மற்றதனுல் (பிதிர்யாண மார்க்கத் தினுல்) சம்சாரத்தினையும் அடைகின்முன். (எ-று) (உக)

ॐ तत्सदिति श्रीमद्गणेशगीतासूपनिषदर्थगर्भासु योगामृतार्थ-शास्त्रे श्रीगणेशपुराणे उ० श्रीगजाननवरेण्यसंवादे बुद्धियोगो नाम षष्ठोऽध्यायः ॥ ६ ॥

புத்தியோகமென்னும்

ஆறுமத்தியாயம்

முடிந்தது.



## எழாமத்தியாயம்

## விபூதியோகம்.

वरेण्य उवाच ॥

का शुक्ला गतिरुद्दिष्टा का च कृष्णा गजानन ।
किं ब्रह्म संसृतिः का मे वक्तुमर्हस्यनुग्रहात् ॥ १ ॥

[உசஎ] (அ-கை) முந்திய வத்தியாயத்தின் ஈற்றிற் சொல்லப் பட்ட இரண்டு கதிகளையும் அவற்று லடையப்படும் பிரஹ்மத்தினை யும் சம்சாரத்தினையு மறிய விரும்பியவராய் வரேணியர் கேட்கலாயி னார்:—

(சு-ம்) கஜானனரே! சொல்லப்பட்டுள்ள சுக்கிலகதி யாது? கிருஷ்ணகதி யாது? பிரஹ்மம் யாது? சம்சாரம் யாது? அதனை எனக்குக் கிருபையாற் சொல்லி யருள்வீராக. (எ-று) (க)

श्री गजानन उवाच ॥

अग्निर्ज्योतिरहः शुक्ला कर्मार्हमयनं गतिः ।
चान्द्रं ज्योतिस्तथा धूमो रात्रिश्च दक्षिणायनम् ॥ २ ॥
कृष्णैते ब्रह्मसंसृत्योरवाप्तेः कारणं गती ।

[உசஅ] (அ-கை) கேட்டதனையே ஸ்ரீ கஜானனர் சொல்லலாயி னார்:—

(சு-ம்) அக்கினியாகிய சோதி, பகல், கர்மார்ஹமான உத்தரா யனம் என்னும் மூன்றும் சுக்கிலமானகதி யாம். சந்திரனதாகிய சோதி, புகை, இரவு, தக்ஷிணாயனம் என்னும் நான்கும் கிருஷ்ண மான கதியாம். இவ்விருகதியும் கிரமமாகப் பிரஹ்மத்தினையும் அடைதற்குக் காரணமாம். (எ-று) (உ)

दृश्यादृश्यमिदं सर्वं ब्रह्मैवेत्यवधारय ॥ ३ ॥

[உசகூ] (அ-கை) சுக்கிலகதியினு லடையத்தக்க பிரஹ்மத் தினை அரைச் சுலோகத்தினுற் கூறுகின்றார்:—

(சு-ம்) நிருபிய (மூர்த்த) மும் அநிருபிய (அமூர்த்த) முமான இது வென்னும் வடிவத்திற்கு விஷயமாகும் யாவும் (முக்கியமான யானென்பதன் பொருளன்று இஃதில்லாததேயாமென்று மதித்து) பிரஹ்மமே (இது கானற்சலம்போலத் தோற்றுகிறது) என்று நிச்சயி. (எ-று)

அவ்வாறே சுருதியும், "பிரஹ்மத்திற்கு மூர்த்தமும் அமூர்த்த முமான இரண்டு ரூபங்களுள" (மைத்திரியு-சு-௩)என்று பிரஹ்மத் தினையும் அதன் ரூபத்தினையும் ஆக்ஷேபித்து, "இனி அதனல் இது ஆதேசமாம் நேதி (இத்தன்மையதன்று, நேதி(இத்தன்மையதன்று)" என்று அப்பியாசத்தினுல் இரண்டு ரூபங்களையும் நிஷேதித்து, "இனி மேலானது வேறில்லை" யென்று பிரஹ்மமாத்திரத் தின் இருப்பினை நிச்சயிக்கின்றது. (௩)

क्षरं पञ्चात्मकं विद्धि तदन्तरक्षरं स्मृतम् ।
उभाभ्यां यदतिक्रान्तं शुद्धं विद्धि सनातनम् ॥ ४ ॥

[உ௫0](சு-ம்) (பஞ்சீகிருத அபஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களி னுலாகிய ஸ்தூல சூக்ஷ்ம சரீர மிரண்டுமான) பஞ்சாத்மகத் (ஐவடிவின) தினை க்ஷரம் (அழியு மியல்பினது) என்று அறி. அதனுள் (அந்த க்ஷரத்தின் நடுவில் பிரவேசித்திருப்பது) அக்ஷரம் (அழிவின்றிய பிரஹ்மம்) கருதப்பட்டதாம். ("அதனைப் படைத்து அதிற் றுனே நுழைந்தது" (தைத்-உ-சு-க) என்று அவிகிருதனுன சிரஷ்டாவுக்கே பிரவேசம் காணப்படுதலால்) இரண்டினும் (பஞ்சாத்மகமான க்ஷரத்தினும் அதனபிமானத்தாற் சந்தோஷித்த அக்ஷரத்தினும்) எது அதிக்கிரமித்ததோ (பிரகாசிக்கப்படும் மூன்று உலகத்தினும் பிரகாசிக்கும் சூரியனைப்போல அத்தியந்தம் வேறுபட்ட தாகின்றதோ) அந்தப்பிரஹ்மம் சநாதன (இடைவிடாத ஏகரூப) மான சுத்த மென்றறி. (எ-று)

அவ்வாறே பகவானுலும் "எதனுல் யான் க்ஷரத்திற்கப்பாற் பட்டவனும் அக்ஷரத்தினும் உத்தமனுமா யிருக்கின்றேனே, அதனுல் உலகத்திலும் வேதத்திலும் புருஷோத்தம ... று சொல்லப் பட்டவனு யிருக்கின்றேன்" என்று சொல்லப்பட்டுளது. (௪)

अनेकजन्मसंभूतिः संसृतिः परिकीर्तिता ।
संसृतिं प्राप्नुवन्त्येते ये तु मां गणयन्ति न ॥ ५ ॥

[உ௰க] (அ-கை) இவ்வாறு சுக்கிலகதியால் கிரமமா யடையத் தக்க பிரஹ்மத்தினைக் கூறி, கிருஷ்ணகதியா லடையத்தக்கதான சம்சாரத்தினைக் கூறுகின்றார் :—

(சு-ம்) அநேக ஜன்மசம்பூதி (தேவ நர திரியகாதி சரீரக்கிரகணங்களைப் பெற்றபோது அவ்வச்சரீரத்தோடு ஒன்றுதல் அதாவது அவ்வச்சரீர தாதாத்மியம்) சம்ஸ்ருதியாம் (சம்சார லக்ஷணமாம்) என்று சொல்லப்பட்டுளது. எவர்கள் என்னைக் கணிக்கிறதில்லையோ, அவர் (நிரீசுவரர்)கள் அச்சம்சாரத்தினைப் பெறுகின்றார். (எ-று) (௫)

ये मां सम्यगुपासन्ते परं ब्रह्म प्रयान्ति ते ।
ध्यानाद्यैरुपचारैर्मां तथा पञ्चामृतादिभिः ॥ ६ ॥

[உ௰உ] (அ-கை) இவ்வாறு சம்ஸ்ருதியும் அதன் காரணமான நிரீசுவரத்துவமும் சொல்லப்பட்டது. இனி அதனை நிராகரிக்கு முபாயத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) எவர்கள் என்னைத் தியானுதிகளால் செவ்வையாய் உபாசிக்கின்றார்களோ அவர்கள் பரம்பிரஹ்மத்தினை அடைகின்றனர். அவ்வாறே பஞ்சாமிருத முதலிய உபசாரங்களாலும். (எ-று)

'தியானுதிகளால்' என்பதனுல், மைத்திராயணீயத்திற் சொல்லப்பட்ட பிராணுயாமம் பிரத்தியாகாரம் தியானம் தாரணை தர்க்கம் சமாதியென்னும் ஆறங்கங்களுள், பகிரங்கத்தன்மையாலும் அடிக்கடி சொல்லப்பட்டமையாலும் இரண்டு அங்கங்கள் உபேக்ஷிக்கப்பட்டு, மற்றத் தியான முதலிய நான்கங்கங்களும் சொல்லப்பட்டனவாம். அவற்றுள், அந்தக்கரண விருத்தியின் ஆற்றெழுக்குப் போன்ற ஒரே தன்மையான தொடர்பு தியானமாம். சித்தத்தினை என்னிடத்தில் நிறுத்துதல் தாரணையாம். யோகசித்திகளி னின்று விக்கினங்களை நீக்கல் தர்க்கமாம். நிர்விகற்பவடிவாக நிற்றல் சமாதியாம். இவ்வாற்றுல் முக்கிய உபாசனுப் பிரகாரம் சொல்லப்பட்டது.

'பஞ்சாமிருத முதலிய வுபசாரங்களாலும்' என்பது முதலிய வற்றினல் மிக்க பிராகிருதர்கட்குப் பாகியபூஜை கூறப்படுகின்றது. (சு)

स्नानवस्त्राद्यलंकारसुगन्धधूपदीपकैः ।
नैवेद्यैः फलताम्बूलैर्दक्षिणाभिश्च योऽर्चयेत् ॥ ७ ॥
भक्त्यैकचेतसा चैव तस्येष्टं पूरयाम्यहम् ।
एवं प्रतिदिनं भक्त्या मद्भक्तो मां समर्चयेत् ॥ ८ ॥

[உருக-உருச] (சு-ம்) ஸ்நானம் வஸ்திராதியலங்காரம் சுகந்தம் தூபம் தீப மென்பவற்ருலும், நைவேத்தியங்களாலும், பழ தாம்பூலங் களாலும் தக்ஷிணைகளாலும் பக்தி யொன்றனையே யுடைய சித்தத் தோடு எவன் என்னை யர்ச்சிப்பானே, அவன் இஷ்டத்தினை யான் நிரப்புகின்றேன். இவ்வாறு நாடோறும் என் பக்தன் என்னைப் பக்தியோடு செவ்வையாய் அர்ச்சிக்கக் கடவன். (எ-று) (எ-அ)

अथ वा मानसीं पूजां कुर्वीत स्थिरचेतसा ।
अथ वा फलपत्राद्यैः पुष्पमूलजलादिभिः ॥ ९ ॥

[உருரு] (அ-கை) இவ்வாறு இரண்டாவது பூஜாப்பிரகாரத் தினைக் கூறி மூன்ருவதனைக் கூறுகின்ருர் :—

(சு-ம்) அல்லது ஸ்திரசித்தத்தால் (அந்தர்முகமான மனதினல்) மானத (மனேமயத் திரவியசாத்தியமான) பூஜையினைச் செய்க. அல்லது (மனேராஜ்யம்போற் கற்பிதங்களான) பழம் பத்திர முதலிய வற்ருலும் புஷ்பம் கிழங்கு ஜலமுதலியவற்ருலும் பூஜிக்க. (எ-று) (கூ)

पूजयेन्मां प्रयत्नेन तत्तदिष्टं फलं लभेत् ।

[உருசு] (அ-கை) இப்பூஜைகளுள் ஒன்றினல் இஷ்ட விருப் புடையோன் என்னைப் பூஜிக்கவென்று அரைச்சுலோகத்திற் கூறு கின்ருர் :—

(சு-ம்) என்னைப் பிரயத்தினத்தினற் பூஜிக்க அவ்வவ் விஷ்ட மான பயனைப் பெறுவான். (எ-று)

त्रिविधास्वपि पूजासु श्रेयसी मानसी मता ॥ १० ॥

(அ-கை) இவ்வாறாயினும் மானதத்திற்குச் சிரேஷ்டத்துவம் கூறுகின்றார் :—

(சு-ம்) மூவகைப் பூஜைகளினும் மானதம் சிலாக்கியமானதாகக் கருதப்பட்டதாம். (எ-று)

அவற்றுள், தியானாதிகளாற் பூஜித்தல் அதிக சிரேஷ்டதமமாயினும் பிராகிருதர்களுக்குச் சாதித்தற்கரியதாம். பாகியத் திரவிய சாத்தியமானது சிலாக்கியமானதாயினும், பகிர்முகத்துவத்தினை விலக்குந் தன்மையின்மையால் சிரேயசுடைய தன்றாம். மானதமோ அந்தர்முகத் தன்மைக்குச் சாதகமாதலால் சிரேயசுடைய தென்பது ஸ்பஷ்டமாம். (எ-று)

साप्युत्तमा मता पूजाऽनिच्छया या कृता मम ।

(அ-கை) மானதமும் நிஷ்காமத்தினாற் செய்யப்படுவது மிக வுத்தமமா மென்று அரைச்சுலோகத்தினாற் கூறுகின்றார் :—

(சு-ம்) இச்சையின்மையாற் செய்யப்படும் எனது பூஜை எதுவோ அது உத்தமமானதென்று மதிக்கப்பட்டதாம். (எ-று)(க௰)

ब्रह्मचारी गृहस्थो वा वानप्रस्थो यतिश्च यः ॥ ११ ॥
एकां पूजां प्रकुर्वाणोऽप्यन्यो वा सिद्धिमृच्छति ।

[உ௱௪௭] (அ-கை) நான்காசிரமிகளில் ஒருவனாவது, அல்லது அவர்களின் வேறான சத்சூத்திர ராதியரில் ஒருவனாவது யாதேனு மொரு பூசையினைச் செய்வானாயின், படிக்கிரமமாக மேன்மேற் பூமியினைப்பெற்றுச் சித்தியினை யடைகின்றா னென்று கூறுகின்றார்:—

(சு-ம்) பிரஹ்மசாரியாவது, கிருகஸ்தனாவது, வானப்பிரஸ்தனாவது, சந்நியாசியாவது, வேறானவனாவது எவன் ஒரு பூஜையினை யாவது செய்பவனாகின்றானோ, அவன் சித்தியினை யடைகின்றான். (எ-று) (கக௭)

मदन्यदेवं यो भक्त्या द्विषन्मामन्यदेवताम् ॥ १२ ॥
सोऽपि मामेव यजते परं त्वविधितो नृप ।

[உடுஅ௭] (அ-கை) ஹரிஹர கௌரீ கணேச ஸூரியாதி தேவதைகளின் லௌகிகப் பிரசித்தமான பேதத்தினைக்கொண்டு கூறுகின்றார் :—

(சு-ம்) (எல்லோருடைய பிரத்தியகாத்மாவான) என்னின் வேறான தேவனை (ஹரிஹராதியரில் ஒன்றனை) எவன் பக்தியோடு யஜிக்கின்றானோ, (தன்னாலாராதிக்கப்படும் தேவதையி னபேக்ஷையால்) அந்நிய தேவதையான என்னைத் துவேஷிப்பவனாகின்றானோ, (பேததரிசியான) அவனும் வேறுவடிவத்தினைத் தரித்துள்ள என்னையே (துவேஷிப்பவனாயினும்) (வேறு மூர்த்திவடிவாகப்) பூஜிக்கின்றான். (அவனும் பூஜையின் பயனைச் சிறிதுபெறவே செய்வன்; பூர்ணமாகப் பெறான் பேதத்தினைத் தரிசித்தமையால்) ஆனாலோ நிருபனே விதியின்றிச் செய்கின்றான். (எ-று)

அவ்வாறே ஸ்காந்தத்தில் "பிரஹ்மாவினையும் கேசவனையும் சிவனையும் மோகமுடையவர்களாய்ப் பேத பாவமாகக் காண்கின்றனர். ஒன்றெனக் காணார் பாஷண்டர்களால் தகைக்கப்பட்டவர்கள்" என்று பேததரிசன நிந்தை ஸ்மரிக்கப்பட்டுளது. "இவனே எல்லாத் தேவர்களும்" (பிருக-க-ச-சு) என்று ஒருவனுக்கே சர்வ தேவதா ரூபத்துவம் கேட்கப்படுகின்றது. தேவதைகளிடத்து ஐக்கியங் காணாமையும் பேதங் காணுதலும் பிரத்தியவாயத்தினை யுண்டுபண்ணுவதா மென்று அபிப்பிராயப்பட்டு 'விதியின்றி' என்று கூறப்பட்டது. (கஉ௭)

यो ह्यन्यदेवतां मां च द्विषन्नन्यां समर्चयेत् ॥ १३ ॥
याति कल्पसहस्रं स निरयान्दुःखभाक् सदा ।

[உடுகூ௭] (அ-கை) இதனையே விவரிக்கின்றார் :—

(சு-ம்) எவன் (பேதவாதி) (தன்னாலாராதிக்கப்படுவத னபேக்ஷையால்) வேறான தேவதையினையும் (சர்வதேவதா சமஷ்டி

யும் ஏகமும் அந்தராத்மாவுமான) என்னையும் துவேஷிப்பவனுய் (தான்கொண்ட) மற்றொரு தேவதையைச் செவ்வையாய் அர்ச்சிக்கின்றானோ, அவன் கற்பங்களாயிரம் நிரய (நரக) ங்களைச் சேர்கின்றான். எப்போதும் துக்கமடைபவனாகின்றான். (எ-று)

அவனுக்குத் தண்டத்தை யான் செய்கின்றேன் என்றதாம். துவேஷிக்கலாகா தென்பதனையும் ஸ்மிருதி "எப்புத்திரன் பிதாவினைத் துவேஷிக்கின்றானோ, அவனை அந்நியவிந்துவிற்குப் பிறந்தவனென்றறிக. ஹரியையாவது ஹரனையாவது எவன் துவேஷிக்கின்றானோ அவனையும் அந்நியவிந்துவிற்குப் பிறந்தவனென் றறிக" என்று கூறுகின்றது. (௧௩௰)

भूतशुद्धिं विधायाऽऽदौ प्राणानां स्थापनं ततः ॥ १४ ॥

आकृष्य चेतसो वृत्तिं ततो न्यासमुपक्रमेत् ।
कृत्वान्तर्मातृकान्यासं बहिश्चाथ षडङ्गकम् ॥ १५ ॥

न्यासं च मूलमन्त्रस्य ततो ध्यात्वा जपेन्मनुम् ।
स्थिरचित्तो जपेन्मन्त्रं यथा गुरुमुखागतम् ॥ १६ ॥

जपं निवेद्य देवाय स्तुत्वा स्तोत्रैरनेकधा ।
एवं मां य उपसीत स लभेन्मोक्षमव्ययम् ॥ १७ ॥

य उपासनया हीनो धिङ् नरो व्यर्थजन्मभाक् ।

[உ௬௰-உ௬௧-உ௬௨-உ௬௩] (அ-கை) இனித் தாந்திரிக பூஜையினையும் அதனைச் செய்யாமையி லாம் பிரத்தியவாயத்தினையும் நான்கு சுலோகங்களாற் கூறுகின்றார்:—

(சு-ம்) முதலில் பூத சுத்தியினையும் அவ்வாறே பிராணப் பிரதிஷ்டையினையும் செய்து, சித்தத்தின் விருத்தியினை ஆகருஷி (இழு) த்து, அதன்பின் நியாஸத்தினைத் தொடங்குக. (௧௪௰) அந்தர்மாதிருகா நியாஸத்தினையும், பகிர்மாதிருகா நியாசத்தினையும், பின் ஷடங்க நியாசத்தினையும், மூலமந்திரத்தின் நியாசத்

தினையும் செய்து, அதன் பின் தியானஞ்செய்து, மந்திரத்தினை ஜபிக்குக. (கடுஉ) ஸ்திர சித்தனாய் மந்திரத்தினைக் குருமுகத்தினின்று வந்தபடி ஜபிக்குக. ஜபத்தினைத் தெய்வத்திற்கு ஒப்புவித்து, அநேகவித ஸ்தோத்திரங்களால் ஸ்துதித்து (கசுஉ) இவ்வாறு என்னை எவன் உபாசிக்கின்றானோ, அவன் அவ்வியயமான மோக்ஷத்தினைப் பெறுவன். எவன் உபாசனை செய்யாதவனோ, சை! அந்த நரன் வியர்த்தமான பிறப்பைப் பெற்றவன். (எ-று) ()

यज्ञोऽहमौषधं मन्त्रोऽग्निराज्यं च हविर्हुतम् ॥ १८ ॥
ध्यानं ध्येयः स्तुतिः स्तोत्रं नतिर्भक्तिरुपासना ।
त्रयीज्ञेयं पवित्रं च पितामहपितामहः ॥ १९ ॥

[உசுசஉ-உசுரு] (அ-கை) இதனினும் அந்தரங்க கர்மாங்கமாகப் பொருந்தியுள்ள ஆத்மோபாசனத்தினையும் ஆத்மாவின் ஐக்கிய ஞான பலத்தினையும் ஒன்றரைச்சுலோகத்தினாற் கூறுகின்றார் :—

(சு-ம்) யஞ்ஞம் (தேவதோத்தேசமான திரவியத்தியாகம்) யான். ஔஷதமும் (நெல் முதலிய ஹவிஸும்), (இருக்கு யஜுஸு சாமவடிவ) மந்திரமும், (ஹோமாதிகரணமான) அக்கினியும், நெய்யும், (அவதானமாகிய அல்லது வியவதானமாகிய) ஹவியும் (அக்கினியில் போடுவதான) ஹுதமும், (கர்மாங்கதேவதைகளின் ஆகார சிந்தனமான) தியானமும், (தேவதா விக்கிரகமான) தியேயமும், (தேவதையின் புகழ்ச்சியாகிய) ஸ்துதியும், (அதனைச் சமர்ப்பிக்கும் சப்தமாகிய) ஸ்தோத்திரமும், நமஸ்காரமும், பக்தியும், (ஆராதிக்கப்படுந் தன்மையாக அறிதலும்), உபாஸனமும் (தேவதாதி விஷயமான பிரத்தியயத்தின் ஆவிருத்தியும்) திரயீ யெனப்படும் ருக்வேத யஜுர்வேத சாமவேதங்களும், ஞேய (கர்மப்பிரஹ்மங்களின் சொரூப) மும், (அக்கினி பவித்திரம், சோமன் பவித்திரம், வாயு பவித்திரம் என்றல் முதலிய) பவித்திரமும், (அல்லது யஞ்ஞாதிகளால் சுத்திகரிக்கப்பட்ட ஆத்மாவினை யறியத் தக்கதான மனமே பவித்திர பதார்த்தமாம்), பிதாமகனுக்குப் பிதாமகனும் (ஆனந்தனான) யானே. (எ-று)

பூமியே வித்து முளை விருக்ஷம் அடிமரம் கிளை கொம்பு இலை கண்ணி புஷ்பம் பழ முதலிய வடிவாக விரிவதுபோல யானே சர்வ திருசிய வடிவாக ஸ்புரிக்கின்றேனென்று இவ்வுபாசனை உபதேசிக்கப் படுகின்றது. இவ்வெல்லாம் பரமாத்மத் தன்மையாகவே சிந்திக்கத்தக்கதா மென்பது கருத்து. (கஅ௭-கக)

ओङ्कारः पावनं साक्षी प्रभुर्मित्रं गतिर्लयः ।
उत्पत्तिः पोषको बीजं शरणं वा स एव च ॥ २० ॥

असन्मृत्युः सदमृतमात्मा ब्रह्माहमेव च ।
दानं होमस्तपो भक्तिर्जपः स्वाध्याय एव च ॥ २१ ॥

यद्यत्करोति तत्सर्वं स मे मयि निवेदयेत् ।

[உகூகூ-உகூஎ-உகூஅ] (அ-கை) இதனினும் அந்தரங்க பாவனையாகிய ஏகாத்மத்தன்மைத் திருஷ்டி-தார்ட்டியத்தினையே இரண்டரைச் சுலோகங்களாற் கூறுகின்றார் :—

(கூ-ம்) (தியானப் பிரதீகமான) ஓங்காரமும், பாவனமும் (சித்தசோதகமான அதனர்த்தத்தினையே தியானித்தலும்) சாக்ஷியும் (அசங்க சித்ரூபன் யானெனும் ஞானமும்), பிரபுவும் (ஜகத்கர்த்தாவும்), மித்திரனும் (யோகிகளின் ஆப்ததமனும்), கதியும் (முக்தர்களா லடையப்படுபவனும்), இலயமும் (லீனமாகின்றன யாவு மிதில் என்னும் விற்பத்தியால் துவைதபாதத்தின் அதிஷ்டானமும்), (வியதிரேகத்தினைக் கூறி அந்வயத்தினை கூறுகின்றார் :—) உற்பத்தியும் (ஜகத்தின் உற்பத்திக்கு முக்கியஸ்தானமும்), போஷக (ஸ்திதி செய்பவ) னும், பீஜமும் (சர்வப் பிரளயத்துமுள்ள சூக்ஷ்மமும்), சரணமும் (புகலும்), வாசமும் (இருப்பிடமும்), அசத்தா (துச்ச) மாகிய மிருத்தியுவும் (துவைதமும்) சத்தாகிய அமிருத (அத்வைத) மும், (இதிற்றானே இருளுமொளியு மென்பன முடிக்கத்தக்கனவாம், அவ்வாறே அப்பியாரோஹ மந்திரத்தில் “அசத்தினின்று என்னைச் சத்திற் சேர்ப்பி. தமசாகிய இருளினின்று என்னை ஜோதிஸாகிய ஒளியிற் சேர்ப்பி.

மிருத்தியுவினின்று என்னை அமிருதத்திற் சேர்ப்பி.” மிரு-௧-௬-௮௨. என்று மூவிரட்டை காணப்படுகின்றது.) ஆத்மாவும் (ஜீவனும்), பிரஹ்மமும் யானே. தானம், ஹோமம், தபசு, பக்தி, ஜபம், சுவாத்தியாயம் என்பவற்றில் எதெதனைச் செய்கின்றாயோ, அது முழுவதனையும் சமமான (விஷம மின்றிச் சர்வபூதங்கட்கும் அநுக்கிரகஞ் செய்யும் ஆபிரக்கனக்காண மாதா பிதாக்களினும் ஆப்ததமனான) என்னிடத்தில் நிவேதிக்க (அர்ப்பிக்க). (எ-று)

இதுவே பகவானால் “எதனைச் செய்கின்றாயோ” என்றல் முதலியவற்றாற் சொல்லப்பட்டுளது.

இலயம், சரணம், வாசம், என்பன மூன்றுவித பிரளயப் பிரதிபாதங்களான பரியாயங்களாம். (உ௦-உ௧-உ௨)

योषितोऽथ दुराचाराः पापास्त्रैवर्णिकास्तथा ॥ २२ ॥
मदाश्रया विमुच्यन्ते किं मद्भक्त्या द्विजातयः ॥ २३ ॥

[உ௬௯] (அ-கை) இவ்வாறு என்னிடத்தில் சர்வகர்மார்ப்பணஞ் செய்யும் மூடர்களான ஸ்திரீ முதலியோரும் முக்தராகின்றன ரெனின், நல்ல புத்திமான்களைப் பற்றிச் சொல்லுவ தென்னவென்று கூறுகின்றார் :—

(சு-ம்) ஸ்திரீகளும், அவ்வாறே துராசார முடையவர்களும், அவ்வாறே பாபிகளான மூவர்ணத்தவரும் என்னை ஆசிரயித்தவர்களாய் முக்தராகின்றனர் எனின், என் பக்தர்களான மூவருணத்தினர்கள் முத்தர் ஆதலைப்பற்றிச் சொல்லுவதென் ? (எ-று)

பிங்களை யென்னும் வேசி சர்வஜனங்களையும் வஞ்சிப்பவளாயிருந்தும், க்ஷணமாத்திரம் பகவதாசிரயம் செய்து முக்திபெற்றாள். இவ்வாறே அஜாமிளன் முதலியோரும் உதாகரிக்கத்தக்கவராவர். (உ௩)

न विनश्यति मद्भक्तो ज्ञात्वेमा मद्विभूतयः ।
प्रभवं मे विभूतीश्च न देवा ऋषयो विदुः ॥ २४ ॥

[உ௭௦] (அ-கை) பக்தியினையே சுருக்கமாகக் கூறுகின்றார்:—

(சு-ம்) என்பக்தன் இந்த (சொல்லப்படும்) எனது விபூதியினை அறிதலால் விநாசமடையான். எனது பிரபவத்தினையும் (இவ்வுலகம் என்னிடத்தி னின்றே யுண்டாயிற்று என்பதனையும்) விபூதிகளையும் தேவர்களும் ரிஷிகளும் அறியார். (எ-று)

இந்தப் பக்தி ஜீவர்களுக்குத் துர்லபமே யென்பது கருத்து. (உச)

नानाविभूतिभिरहं व्याप्य विश्वं प्रतिष्ठितः ।
यद्यच्छ्रेष्ठतमं लोके सा विभूतिर्निबोध मे ॥ २५ ॥

[உஎ] (அ-கை) பொதுவாக விபூதிகளையும் விபூதிலக்ஷணத்தினையும் கூறுகின்றார் :—

(சு-ம்) யான் நாநாவிபூதிகளால் விசுவத்தினை வியாபித்துத் தனது மகிமையில் நிலைத்தவனாகின்றேன். ("அந்தப் பகவான் எதில் நிலைத்திருக்கின்றான்?" "தனது மகிமையில் நிலைத்தவனாகின்றான்" (சாந்-எ-உச-க) என்று காணப்படுதலால்.) (சகல பிரஹ்மாண்டமுமே என்னிடத்தினின் றுண்டானதாயிருத்தலின் எனது வடிவாமென்னும் ஞானபூர்வகமாகச் சர்வப்பிரபஞ்சாராதனஞ்செய்யச் சக்தியில்லாதவனாய்) ஜகத்தில் (மனுஷ்ய பசு விருக்ஷ ஔஷதாதிகளுள்) எது எது சிரேஷ்டதமமோ (மிக மேலானதோ) அதுவே எனது விபூதி யென்று நிச்சயமாக அறி. (எ-று)

எது எது உத்தமமானதோ அதனையே எனது விபூதியென்றறிந்து, நமஸ்காராதிகளால் பூஜிக்குக என்பது கருத்து. (உரு)

ॐ तत्सदिति श्रीमद्गणेशगीतासूपनिषदर्थगर्भासु योगामृतार्थशास्त्रे श्रीगणेशपुराणे उ० श्रीगजाननवरेण्यसंवादे विभूतियोगो नाम सप्तमोऽध्यायः ॥ ७ ॥

விபூதியோக மென்னும்
ஏழாமத்தியாயம்
முடிந்தது.

## எட்டாமத்தியாயம்.

### விசுவரூப வீக்ஷணயோகம்.

वरेण्य उवाच ॥

भगमन्नारदो मह्यं तव नानाविभूतयः ।
उक्तवांस्ता अहं वेद न सर्वाः सोऽपि वेत्ति ताः ॥ १ ॥

[உஎஉ] (அ-கை) முந்திய அத்தியாயத்தில் பாவனையைச் சொல்லுதலாகிய 'யஞ்ஞம் யான்' என்றல் முதலியவற்றால் சில விபூதிகள் தமது முகத்தினாலேயே சொல்லப்பட்டன. 'எது எது சிரேஷ்டதமமோ' என்று அத்தியாயமுடிவில் விபூதிகளின் இலக்ஷணமும் சொல்லப்பட்டுளது. நாரதர் முகத்தாலும் சில விபூதிகள் கேட்கப்பட்டன. அவற்றிற்கு முடிவோ இல்லை. ஆகலால் தமது விசுவரூபத்தினையே தரிசிக்க விரும்புகின்றேன். அதன் தரிசனத்தால் அவை யாவும் செவ்வையா யறியப்பட்டனவா மென்னும் அபிப்பிராயமுடையவனாய் வரேணியன் கேட்கலாயினான் :—

(சு-ம்) பகவானே! நாரதர் எனக்குத் தமது நானாவிபூதிகளைக் கூறி யிருக்கின்றனர். அவற்றை யான் அறிவேன். ஆனால் அவரும் அவைகளெல்லாவற்றையும் அறியார். (எ-று) (க)

त्वमेव तत्त्वतः सर्वा वेत्सि ता द्विरदानन ।
निजं रूपमिदानीं मे व्यापकं चारु दर्शय ॥ २ ॥

[உஎ௩] (அ-கை) அவ்வாறாயின் என்னாலும் சொல்லக்கூடியதாகாதே யெனக் கூறுகின்றார் :—

(சு-ம்) கஜமுகரே! (ஆகாயம் எங்கட்கு அளவுபடாததாயினும் அதனைப் படைத்த தமக்கு அளவுபட்டதேயாம். ஆதலால்) அவ்வெல்லாவற்றையும் உண்மையாகத் தாமே யறிவீர். (ஆகலால் அவ்வெல்லாவற்றையும் அறிந்ததாகும்படி) இப்போது தமது வியாபகமான (விசுவ) ரூபத்தினை எனக்குச் செவ்வையாய்க் காட்டியருள்வீராக. (உ)

श्रीगजानन उवाच ॥

एकस्मिन्मयि पश्य त्वं विश्वमेतच्चराचरम् ।
नानाश्चर्याणि दिव्यानि पुरा दृष्टानि केनचित् ॥ ३ ॥

[உஎச] (அ-கை) அவனுக்கு இஷ்டார்த்தத்தினைச் சமர்ப்பித்தலால் அநுக்கிரகிப்பவராய் ஸ்ரீ கஜானனர் சொல்லலாயினர் :—

(சு-ம்) ஏகனுன என்னிடத்தில் (கண்ணுடியொத்த எனது சரீரத்தில்) சராசரமான இவ்வெல்லாவற்றினையும் பார். அவை முன் (நாரதாதியராகிய) சிலரால் நானா ஆச்சரியங்களும் திவ்விய (பிரஹ்மலோகாந்தமான அலெளகிக)ங்களுமான அவை பார்க்கப்பட்டனவாம். (எ-று)

பகவானே! "எதனையறிந்தால் இவ்வெல்லாமறியப்பட்டதாம்" (முண்-க-க-ங) என்று சர்வ வேதாந்தங்களினும் ஒன்றன் விஞ்ஞானத்தினுல் எல்லாவற்றின் விஞ்ஞானமும் கேட்கப்படுகின்றது. அதனையே நீ அபரோக்ஷீகரித்து, கிருதகிருத்தியனுகுக என்பது கருத்தாம். (ங)

ज्ञानचक्षुरहं तेऽद्य सृजामि स्वप्रभावतः ।
चर्मचक्षुः कथं पश्येन्मां विभुं ह्यजमव्ययम् ॥ ४ ॥

[உஎரு] (அ-கை) வெளிக்கண்ணுல் எது காணப்பட்டதோ அது அற்பமான வடிவமே, முழுவடிவமன்று; ஆதலால் உனக்கு ஞானக்கண்ணை யளிக்கின்றேனென்று கூறுகின்றுர் :—

(சு-ம்) இப்பொழுது யான் எனது பிரபாவத்தினுல் உனக்கு ஞானநேத்திரத்தினை யளிக்கின்றேன். (சூக்ஷ்மமும் தூரத்திருப்பதுமான வஸ்துவினை யறியமுடியாததும் சமீபத்திருக்கும் வஸ்துவினையும் ஏகதேசமாகவே கவரக்கூடியதுமான) சர்மநேத்திரமானது விபுவும் (விவிதரூபமாகப் பவிப்பவனும்,) (அவ்வாறுயினும்) அஜனும் (பிறப்பில்லாதவனும்), அவ்வியயனு (அழிவில்லாதவனு)மான என்னை எவ்வாறு காணும். (எ-று)

'எனது பிரபாவத்தினுல்' என்பதனுல் அநுக்கிரக விசேஷம் ஸ்பஷ்டமாக்கப் பட்டது. (ச)

व्यास उवाच ।

ततो राजा वरेण्यः स दिव्यचक्षुरवैक्षत ।

ईशितुः परमं रूपं गजास्यस्य महाद्भुतम् ॥ ५ ॥

[உ௪௬] (அ-கை) அந்த இவ்வரேணிய கணேச சம்வாதத்தினைச் சூதர்முன் சொல்லுபவராகிய வியாசர் சொல்லலாயினர்:—

(சு-ம்) அதன் (கணேசாநுக்கிரகத்தின்) பின் திவ்விய நேத்திர முடைய அவ்வரேணிய ராஜன் ஈசுவரனை கஜமுகரது மகாற்புதமான பரம (அலௌகிகமான) ரூபத்தினைத் தரிசித்தான். (எ-று)

மகத்தும் அதுவே அற்புதமுமாதலால் மகாற்புதமாம் அதாவது எல்லாவற்றுனும் பரிபூர்ணமும் நானா ஆச்சரியமயமுமாம் (ரு)

असंख्यवक्त्रललितमसंख्याङ्घ्रिकरं महत् ।

अनुलिप्तं सुगन्धेन दिव्यभूषाम्बरस्रजम् ॥ ६ ॥

असंख्यनयनं कोटिसूर्यरश्मि धृतायुधम् ।

तदूर्ध्वमणि त्रयो लोका दृष्टास्तेन पृथग्विधाः ॥ ७ ॥

दृष्ट्वेश्वरं परं रूपं प्रणम्य स नृपोऽब्रवीत् ।

[உ௪௭-உ௪அ] (அ-கை) அற்புதத் தன்மையினையே இரண்டரைச் சுலோகங்களாற் கூறுகின்றார்:—

(சு-ம்) எண்ணிறந்த முகங்களையுடைய மனோகரமும், எண்ணிறந்த கால்கைகளையுடையதும், பெரிதும், சுகந்தத்தினால் பூசப்பட்டதும், திவ்வியமான ஆபரண வஸ்திரமாலைகளை யுடையதும், எண்ணிறந்த கண்களுடையதும், கோடி சூரிய ரஸ்மியும் (கோடி சூரியர்களை ரஸ்மியாக அதாவது ஓரம்சமாக வுடையதும்), தரித்த வாயுதத்ததும், (அநேக கைகளாலும் தனுசு பாண முதலிய அநேகாயுதங்களைத் தரித்ததுமான ரூபத்தினைத் தரிசித்தா னென்று முந்திய சுலோகத்தோடு கூட்டுக). அதன் சரீரத்தில் வெவ்வேறு விதங்களான மூன்றுலகங்களும் அவனால் பார்க்கப்பட்டன. கண்ட ஐசுவரமான பரரூபத்தினைச் செவ்வையாய் வணங்கி அவ்வரசன் சொல்லலாயினன், (எ-று)

எல்லாஜந்துக்களின் அவயவங்கள் எவைவையோ அவையே சர்வாத்மாவாகிய கணேசனது அவயவங்களாதலால் அவருக்கு எண்ணிறந்த முகமுடைய முதலியன பொருந்துவனவாம். மனோ காத்துவம் சுகந்தத்தினால் பூசப்பட்டதும் என்பன முதலியவற்றால் காட்டப்பட்டதாம். (கூ-எ௭)

वीक्षेऽहं तव देहेऽस्मिन्देवानृषिगणान्पितॄन् ॥ ८ ॥
पातालानां समुद्राणां द्वीपानां चैव भूभृताम् ।
महर्षीणां सप्तकं च नानार्थैः संकुलं विभो ॥ ९ ॥
भुवान्तरिक्षं स्वर्गांश्च मनुष्योरगराक्षसान् ।
ब्रह्मविष्णुमहेशेन्द्रान्देवाञ्जन्तूननेकधा ॥ १० ॥

[உஎகூ-உஅ௩] (அ-கை) வியாஸரே வரேணியன் வாக்கியத்தினை அவதரிப்பிக்கின்றார் :—

வரேணியன் சொல்லலாயினான் :—

(கூ-ம்) விபுவே! தமது இச் சரீரத்தில் யான் தேவர்களையும், ரிஷிகணங்களையும், பிதிருக்களையும், நாநார்த்தங்களோடு கூடியனவாகிய சப்த பாதாளங்களையும், சப்த சமுத்திரங்களையும், ஏழு திவுகளையும், சப்த குலாசலங்களையும், சப்த மகரிஷிகளையும் (அ-கூ) பூமியோடு அந்தரிக்ஷத்தினையும், ஸ்வர்க்கங்களையும் ('எதில் முந்தியவர்களான சாத்தியர்களான தேவர்களிருக்கின்றார்களோ' என்னும் சுருதியினால் சாத்தியப் பெயருடைய தேவதா விசேஷங்களையும்), மனிதர் உரகர் இராக்கதர் என்பவர்களையும், பிரஹ்ம விஷ்ணு மகேசேந்திராதி தேவர்களையும், அநேகவிதமான ஜந்துக்களையும், காண்கின்றேன். (க0)

अनाद्यनन्तं लोकादिमनन्तभुजशीर्षकम् ।
प्रदीप्तानलसंकाशमप्रमेयं पुरातनम् ॥ ११ ॥
किरीटकुण्डलधरं दुर्निरीक्षं मुदावहम् ।
एतादृशं निरीक्षे त्वां विशालवक्षसं प्रभुम् ॥ १२ ॥

அநாதியநந்தமும் (தேசத்தால் முதலீறு இல்லாதவரும்), லோகாதியும் (உலகம் படைப்பவரும்), அநந்தபுஜசிரசுகளையுடைய வரும், கொழுந்துவிட்டெரியும் அக்கினிபோன்றவரும், அப்பிரமேய (அளவையினை லளக்கப்படாதவ) ரும், புராதனரும் (முன்னும் நவமாயிருப்பவரும் அதாவது சந்ததம் ஏக வடிவினரும்), [முன் சங்கையினல் புஜாதிகளின் அநந்தத்தன்மை கூறப்பட்டது. இங்கோ 'அநந்தபுஜ சிரசுகளையுடையவரும்' என்பதனல் காலத்தினல் அநந்தத்தன்மை சொல்லப்படுகின்றது.] (௧௧) கிரீட குண்டலங்களைத் தரித்தவரும், (இது முதலியன மனோகரத்துவத்தின் வியாக்கியானமாம்) நன்றாய்ப் பார்க்கமுடியாதவரும், பக்தர்களுக்குச் சந்தோஷ முண்டாக்குவதும், விசால மார்பு (எல்லா வற்றுனும் பரிச்சேதமின்றிய மனது) டையவரும், பிரபுவு (சமர்த்தரு) மான இத்தன்மையராகிய தம்மைக் காண்கின்றேன். (எ-று) (௧௨)

सुरविद्याधरैर्यक्षैः किंनरैर्मुनिमानुषैः ।
नृत्यद्भिरप्सरोभिश्च गन्धर्वैर्गानतत्परैः ॥ १३ ॥
वसुरुद्रादित्यगणैः सिद्धैः साध्यैर्मुदा युतैः ।
सेव्यमानं महाभक्त्या वीक्ष्यमाणं सुविस्मितैः ॥ १४ ॥

[உ அடு] (சு-ம்) களிப்போடு கூடியவர்களான (நாநாவித ஆச்சரியமயத் தன்மையால்) மிக வாச்சரியமடைந்தவர்களுமான சுர (தேவ) வித்தியாதரர்களாலும், இயக்கர்களாலும், கிந்நரர்களாலும், முநிகளாலும், மானுடர்களாலும், நர்த்தனஞ் செய்பவர்களான அப்ஸரசுகளாலும், கானதற்பரரான கந்தர்வர்களாலும், (௧௩) வசு ருத்திர ஆதித்தியகணங்களாலும், சித்தர்களாலும், சாத்தியர்களாலும், மகாபக்தியோடு பார்க்கப்படுகின்றவரும், சேவிக்கப் படுகின்றவரும். (௧௪)

वेत्तारमक्षरं वेद्यं धर्मगोप्तारमीश्वरम् ।
पातालानि दिशः स्वर्गान्भुवं व्याप्याखिलं स्थितम् ॥ १५ ॥
भीता लोकास्तथा चाहमेवं त्वां वीक्ष्य रूपिणम् ।

[உ௪௬] (சு-ம்) அறிபவரும் (சர்வஞ்ஞரும்), அக்ஷர (வியாபக) ரும், வேத்திய (வேதாந்தங்களால் அறியப்படுபவ) ரும், தர்மத்தினைக் காப்பவரும் (வியபிசரியாமல் தர்மபலனை யடைவிப்பவரும்), ஈசுவரனும் (இராஜாவைப்போல வெளிநியந்தாவும்), பாதாளங்களையும், திக்கி (ஆகாசத்தி) னையும், ஸ்வர்க்கங்களையும், பூமியையும் எல்லாவற்றினையும் (அக்கினி வாயுவாதிகளை) (அந்தரியாமித் தன்மையால்) வியாபித்து நிற்பவருமான இத்தன்மைய ரூபமுடைய தம்மைக்கண்டு லோகங்களும் யானும் பயமுடையவர்களாகின்றோம். (எ-று)

திக்கு என்பதனால் ஆகாசம் கொள்ளப்படுகின்றது. அவ்வாறே சுருதியும், "எவன் ஆகாசத்தில் நிற்பவனாய் ஆகாசத்தினும் அந்தரனாகின்றானோ, எவனை ஆகாசமறியாதோ, எவனுக்கு ஆகாசம் சரீரமோ, எவன் ஆகாசத்தினை உள்ளாயிருந்து இயக்குகின்றானோ, அவன் உனது அந்தரியாமி அமிருதன்" (பிரு-ரு-எ-கஉ) என்று அவனை ஆகாசாதிகளின் அந்தரியாமியாகக் காட்டுகின்றது. (கடு௭)

नानादंष्ट्राकरालं च

[உ௪எ] (அ-கை) அந்தரியாமி எவ்வாறு பய ஹேதுவாவரெனக் கூறுகின்றான்:—

(சு-ம்) நாநாவிஷ ஜெந்துக்களையுடையவரும்,

नानाविद्याविशारदम् ॥ १६ ॥

(அ-கை) ஆனால் பயநிவிருத்தி எதனாலெனக் கூறுகின்றான்:-

(சு-ம்) நாநாவித்தைகளிற் றேர்ந்தவரும்,

எப்படி நாநாவிசபய ஹேதுக்களான சர்ப்பாதிகளிருக்கின்றனவோ, அப்படியே அவ்வப்பயத்தினை நிவர்த்திக்கும் காருட முதலிய நாநா வித்தைகளு மிருக்கின்றன. அவற்றின் பிரவிருத்தியிற் பண்டிதர் நீர் என்று மதித்துக் கூறியதாம் என்பது கருத்து. (கசு)

प्रलयानलदीप्तास्यं जटिलं च नभःस्पृशम् ।
दृष्ट्वा गणेश ते रूपमहं भीत इवाभवम् ॥ १७ ॥

[உ௮௮] (சு-ம்) ஆகாயத்தைத் தொடுவதான பிரளயாக்கினிச் சுடர்போன்ற வாயும் ஜடையுமுடையவருமான அதாவது பிரளயாக்கினியானது எங்குமாக விரிந்த ஜ்வாலைகளாற் கொளுத்தப்பட்டதாயெரிவதுபோன்ற வாயினையும், அவ்வாறே நீண்டு பருத்து எதன் ஒளி பூமியிற் படிந்த ஜ்வாலைகளால் ஆகாயத்தினைத் தொடுவதாயிருக்கின்றதோ, அத்தன்மைய ஜடையினையு முடையவருமான தமது ரூபத்தினைக் கண்டு கணேசனே யான் (எனக்கநுக்கிரகஞ் செய்பவராதலின், தம்மின் வேறானதில்லவே யில்லை யென்னும் நிச்சயமுடையவனாயினும் திருஷ்டி விசேஷத்தினால்) பயந்தவனைப்போலானேன் (எ-று)

அவ்வாறே எனது அநுமானத்தினால் உலகத்தினரும் பயந்தனரென்று அறிந்தேன். ஆதலால் உலகத்தினருடையதும் என்னுடையதுமான பயம் நீங்கும்பொருட்டுச் சாந்தமான ரூபத்தினைக் காட்டியருள்வீராக என்பது பொருள். (௧௭)

देवा मनुष्या नागाद्याः खलास्त्वदुदरेशयाः ।
नानायोनिभुजश्चान्ते त्वय्येव प्रविशन्ति च ॥ १८ ॥

[உ௮௯] (அ-கை) பரமாநந்த வடிவினனாகிய யான் எவ்வாறு பயஹேதுவாவே னென்னும் ஆசங்கை கொண்டு, "இரண்டாவதனால் பயமுண்டாகின்றது" (பிரு-௧-௪-உ) என்னும் சுருதியினால் தர்ப்பத்தோடுகூடிய பயத்திற்கேதுவான துவைத முழுவதும் தமது வயிற்றிலேயே இருக்கிறது. அவற்றில் பிறரைவருத்தும் கொடிய நாகாதிகள் தமது கர்மத்தாலாம் துக்கத்தினை தம்மிடத்திலிருந்தே பெறுகின்றனர். தம்மிடத்திலேயே இலயமடைகின்றன ரென்று கூறுகின்றான்:—

(சு-ம்) தேவர்களும், மனிதர்களும், நாகாதிகளும், துஷ்டர்களும் தமது வயிற்றிற் கிடப்பவர்களாய், நாநாயோனி துக்கங்களைப் புசிப்பவர்களாய் முடிவில் தம்மிடத்திலேயே பிரவேசிக்கின்றனர். (எ-று) (௧௮)

अब्धेरुत्पद्यमानास्ते यथा जीमूतबिन्दवः ।

[உகூ0] (அ-கை) தம்மிடத்திலேயே பிரவேசிக்கின்றனவென்பதில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) அப்தியாகிய கடலினின்று உண்டாகிறவைகளான மேகபிந்துக்களாகிய அவை எப்படி அக்கடலிற் பிரவேசிக்கின்றனவோ அதுபோல (எ-று)

இரசவடிவினவாக அப்புக்கள் எதில் தரிக்கப்படுகின்றனவோ அந்த ஒரு வடிவான விரிவு அப்தியெனப்படும். அதனின்று சூரியனுலிழுக்கப்பட்டனவாகிய எல்லா இரசங்களும் மேகத்துளி வடிவாக அச்சமுத்திரத்தினையே பிரவேசிக்கின்றன என்னுமிதனை "ஆயிரமடங்கு விடுதற்பொருட்டு இரவி இரஸத்தினைக் கொள்ளுகின்றது" என்றும் கூறுவர். (கஅ௯)

त्वमिन्द्रोऽग्निर्यमश्चैव निर्ऋतिर्वरुणो मरुत् ॥ १९ ॥

गुह्यकेशस्तथेशानः सोमः सूर्योऽखिलं जगत् ।

[உகூக] (அ-கை) இது கேவலம் உன்னிடத்தினின்றுண்டாயிற்று உன்னிடத்திலேயே இலயமாகின்றதென்பதுமாத்திரமில்லை மற்றை ஸ்திதி காலத்திலும் இவ்வெல்லாம் நீயேயென்று கூறுகின்றான்:—

(சு-ம்) இந்திரனும், அக்கினியும், இயமனும், நிருதியும், வருணனும், வாயுவும், குபேரனும், ஈசானனும், சோமனும், சூரியனும், சர்வ ஜகத்தும் நீயே. (எ-று)

உற்பத்திக்கு முன்னும் பிரளயத்தின் பின்னும் ஸ்திதிகாலத்திலும் ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் ஆத்யாத்மிகமென்னும் மூவகை ஜகத்தும் நீயே என்பது பொருள். (ககூ0)

नमामि त्वामतः स्वामिन्प्रसादं कुरु मेऽधुना ॥ २० ॥

दर्शयस्व निजं रूपं सौम्यं यत्पूर्वमीक्षितम् ।

को वेद लीलास्ते भूमन् क्रियमाणा निजेच्छया ॥ २१ ॥

[உகூஉ] (அ-கை) இவ்வாறுணர்வாயாயின் கிருதகிருத்தியனுகின்றாயெனின் கூறுகின்றான்:—

(சு-ம்) (யசோதை கிருஷ்ண சரீரத்தில் விசுவத்தினைக் கண்டவளாயினும், மறுபடியும் மோகம் காணப்பட்டது. அர்ஜுனனுக்கும் மறுபடியும் ஆசுவமேதிகத்தில் ஸ்மரிக்கப்பட்டுளது. அவ்வாறு எனக்குண்டாகலாகா தெனும் பொருட்டு யான்) தம்மை நமஸ்கரிக்கின்றேன். ஆதலால் ஓ சுவாமி (தீனதயாளுவே)! இப்பொழுது எனக்குப் பிரசாதத்தினைச் செய்தருளுக. (பிரசாதமும் தாற்காலிக பிராந்திநிவிருத்திபூர்வகமாக உண்டாகின்ற தென்பதனால் அதனையே முதலிற் பிரார்த்திக்கின்றான்.) எது முன் பார்க்கப்பட்டதோ அந்த ஸௌமியமான (காட்சிக்கினிய) நிஜ (என்னாலாராதிக்கப்படும்) ரூபத்தினைக் காட்டுவீராக (எ-று)

அல்லது ஸ்வநிஜம் ரூபம் என்று பதம் பிரித்து, தன்னவர்களான பக்தர்களின் நிஜமான (தம்மதான) அநுக்கிரஹக மூர்த்தி வடிவத்தினைக் காட்டுவீராக என்று பொருள் செய்க. (உக)

अनुग्रहान्मया दृष्टमैश्वरं रूपमीदृशम् ।
ज्ञानचक्षुर्यतो दत्तं प्रसन्नेन त्वया मम ॥ २२ ॥

[உகூரு] (அ-கை) அளத்தற்கரியதேயாம் தமது மாகாத்மியமென்னு மபிப்பிராயமாகக் கூறுகின்றான்:—

(சு-ம்) பூமனே! (மூவித பேதமின்றிய சத்தா மாத்திர சொரூபனே!) நிஜ இச்சையினாற் செய்யப்பட்ட (விசுவ ரூபாதிகாட்டல் முதலிய) தமது லீலையினை (மாயாவிலாசத்தினை) யார் அறிவார்? (எவருமறியா ரென்பது பொருள்.) எதனால் பிரசன்னரான தம்மால் ஞானநேத்திரம் எனக்குக் கொடுக்கப்பட்டதோ, அவ்வநுக்கிரகத்தால் இத்தன்மைய ஐசுவரமான ரூபம் என்னாற் காணப்பட்டது. (எ-று) (உஉ)

श्रीगजानन उवाच ॥

नेदं रूपं महाबाहो मम पश्यन्ति योगिनः ।
सनकाद्या नारदाद्याः पश्यन्ति मदनुग्रहात् ॥ २३ ॥

[உகூச] (அ-கை) இவ்வாறு பிரார்த்திக்கப்பட்டவராய் வரேணியனை யநுக்கிரகித்து ஸ்ரீகஜானனர் சொல்லலாயினார்:—

[உகூo] (அ-கை) நம்மிடத்திலேயே பிரவேசிக்கின்றனரென்பதில் திருஷ்டாந்தத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) அப்தியாகிய கடலினின்று உண்டாகிறவைகளான மேக பிந்துக்களாகிய அவை எப்படி அக்கடலிற் பிரவேசிக்கின்றனவோ அதுபோல (எ-று)

இரசவடிவினவாக அப்புக்கள் எதில் தரிக்கப்படுகின்றனவோ அந்த ஒரு வடிவான விரிவு அப்தியெனப்படும். அதனின்று சூரியனுலிழுக்கப்பட்டனவாகிய எல்லா இரசங்களும் மேகத்துளி வடிவாக அச்சமுத்திரத்தினையே பிரவேசிக்கின்றன என்னுமிதனை "ஆயிரமடங்கு விடுதற்பொருட்டு இரவி இரஸத்தினைக் கொள்ளுகின்றது" என்றும் கூறுவர். (கஅ௯)

त्वमिन्द्रोऽग्निर्यमश्चैव निर्ऋतिर्वरुणो मरुत् ॥ १९ ॥

गुह्यकेशस्तथेशानः सोमः सूर्योऽखिलं जगत् ।

[உகூக] (அ-கை) இது கேவலம் உன்னிடத்தினின்றுண்டாயிற்று உன்னிடத்திலேயே இலயமாகின்றதென்பதுமாத்திரமில்லை மற்றோ ஸ்திதி காலத்திலும் இவ்வெல்லாம் நீயேயென்று கூறுகின்றான்:—

(சு-ம்) இந்திரனும், அக்கினியும், இயமனும், நிருதியும், வருணனும், வாயுவும், குபேரனும், ஈசானனும், சோமனும், சூரியனும், சர்வ ஜகத்தும் நீயே. (எ-று)

உற்பத்திக்கு முன்னும் பிரளயத்தின் பின்னும் ஸ்திதிகாலத்திலும் ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் ஆத்யாத்மிகமென்னும் மூவகை ஜகத்தும் நீயே என்பது பொருள். (ககூ௦)

नमामि त्वामतः स्वामिन्प्रसादं कुरु मेऽधुना ॥ २० ॥

दर्शयस्व निजं रूपं सौम्यं यत्पूर्वमीक्षितम् ।

को वेद लीलास्ते भूमन् क्रियमाणा निजेच्छया ॥ २१ ॥

[உகூஉ] (அ-கை) இவ்வாறுணர்வாயாயின் கிருதகிருத்தியனுகின்றாயெனின் கூறுகின்றான்:—

(சு-ம்) (யசோதை கிருஷ்ண சரீரத்தில் விசுவத்தினைக் கண்டவளாயினும், மறுபடியும் மோகம் காணப்பட்டது. அர்ஜுனனுக்கும் மறுபடியும் ஆசுவமேதிகத்தில் ஸ்மரிக்கப்பட்டுளது. அவ்வாறு எனக்குண்டாகலாகா தெனும் பொருட்டு யான்) தம்மை நமஸ்கரிக்கின்றேன். ஆதலால் ஓ சுவாமி (தீனதயாளுவே)! இப்பொழுது எனக்குப் பிரசாதத்தினைச் செய்தருளுக. (பிரசாதமும் தாற்காலிக பிராந்திநிவிருத்திபூர்வகமாக உண்டாகின்றதென்பதனுல் அதனையே முதலிற் பிரார்த்திக்கின்றான்.) எது முன் பார்க்கப்பட்டதோ அந்த ஸௌமியமான (காட்சிக்கினிய) நிஜ (என்னுலாராதிக்கப்படும்) ரூபத்தினைக் காட்டுவீராக (எ-று)

அல்லது ஸ்வநிஜம் ரூபம் என்று பதம் பிரித்து, தன்னவர்களான பக்தர்களின் நிஜமான (தம்மதான) அநுக்கிராஹக மூர்த்தி வடிவத்தினைக் காட்டுவீராக என்று பொருள் செய்க. (உக)

अनुग्रहान्मया दृष्टमैश्वरं रूपमीदृशम् ।
ज्ञानचक्षुर्यतो दत्तं प्रसन्नेन त्वया मम ॥ २२ ॥

[உகூங] (அ-கை) அளத்தற்கரியதேயாம் தமது மாகாத்மியமென்னு மபிப்பிராயமாகக் கூறுகின்றான்:—

(சு-ம்) பூமனே! (மூவித பேதமின்றிய சத்தா மாத்திர சொருபனே!) நிஜ இச்சையினுற் செய்யப்பட்ட (விசுவ ரூபாதிகாட்டல் முதலிய) தமது லீலையினை (மாயாவிலாசத்தினை) யார் அறிவார்? (எவருமறியாரென்பது பொருள்.) எதனுல் பிரசன்னரான தம்மால் ஞானநேத்திரம் எனக்குக் கொடுக்கப்பட்டதோ, அவ்வநுக்கிரகத்தால் இத்தன்மைய ஐசுவரமான ரூபம் என்னுற் காணப்பட்டது. (எ-று) (உஉ)

श्रीगजानन उवाच ॥

नेदं रूपं महाबाहो मम पश्यन्ति योगिनः ।
सनकाद्या नारदाद्याः पश्यन्ति मदनुग्रहात् ॥ २३ ॥

[உகூச] (அ-கை) இவ்வாறு பிரார்த்திக்கப்பட்டவராய் வரேணியனை யநுக்கிரகித்து ஸ்ரீகஜானனர் சொல்லலாயினார்:—

(க-ம்) மகாபாகுவே! உன்னால் காணப்பட்ட இவ்வெனது வடிவத்தினை (மற்ற) யோகிகள் காணார். மற்றோ, எனதநுக்கிரகத்தினால் ஸநகாதியரும் நாரதாதியருமே காண்பர். (எ-று)

நீயும் எனதநுக்கிரகத்தினால் அவர்கட்குச் சமமானவனாகின்றாய் என்பது கருத்து. (உங)

चतुर्वेदार्थतत्त्वज्ञाश्चतुःशास्त्रविशारदाः ।
यज्ञदानतपोनिष्ठा न मे रूपं विदन्ति ते ॥ २४ ॥

[உகூரு] (அ-கை) இத்தன்மைய எனது ரூபதரிசனம் அத்தியந்த துர்லபமா மென்று கூறுகின்றார்:—

(க-ம்) நான்கு வேதார்த்ததத்துவ முணர்ந்தவர்களும் நான்கு சாஸ்திரங்களிற் றேர்ந்தவர்களுமாய்க் காண்கின்றனர். யஞ்ஞதான தபோநிஷ்டர்களான அவர்கள் எனது ரூபத்தினை யறியார். (எ-று)

நான்கு வேதங்களுள் மூன்றினால் யஞ்ஞம் விதிக்கப்படுகின்றது. நான்காவதால் உபாசனை விதிக்கப்படுகின்றது. அதில் யஜிக்கத்தக்க தேவதையின் தத்துவத்தினையும் உபாசிக்கப்படும் தேவதா தத்துவத்தினையும் எவர்கள் அறிகின்றனரோ அவர்கள் நான்கு வேதார்த்த தத்துவ முணர்ந்தவராவர். அத்தத்துவ வுணர்ச்சியினும் நான்கு சாஸ்திரங்கள் உபாயங்களாம். அவற்றுள், ஆதியில் பதார்த்தமாத்திர ஞானத்தின் பொருட்டு வியாகரணமும், அவ்வளவினால் அர்த்த தத்துவம் நிச்சயிக்கக்கூடாமையினால் பூர்வ மீமாம்ஸை யெனப்படும் இரண்டாவது சாஸ்திரமும் அபேக்ஷிக்கப் படுவனவாம். "எவ்வளவு குதிரைகளைக் கிரகிக்கின்றானோ அவ்வளவு வாருணமான நாற்கபாலங்களை யாகத்திற்போட்டான்" என்று பததத்துவ முணர்ந்தவனால் பிரதிக்கிரகிப்பவனிடத்தில் இஷ்டி யடைவிக்கப்பட்டதாகாது. "பிரஜாபதி வருணனுக்கு அசுவத்தினைக் கொண்டுபோனான். அவன் தனது தேவதையினையடைந்தான். அவன் இவ்வாருணமானநாற்கபாலத்தினைக் கண்டான். அதனைக் கொண்டான். அதனால் யஜித்தான். அதனால் அவன் வருண பாசத்தினின்று விடுபட்டான்." என்று உபக்கிரமத்திலுள்ள பதக்

கூட்டங்களின் பரியாலோசனையினால் முன் பின் இருந்த ஏகவாக்கியத் தன்மையினை யறிபவனாகிய மீமாம்ஸகனாலேயே தாதாவுக்கு யஞ்ஞம் அடைவிக்கக்கூடியதாம். இதனைச்சுருதி "சாத்திகனாகிய அல்லது தார்க்கிகனாகிய ஒருவன் வாக்கின் அர்த்தத்தினைக் கண்டிலன்" என்று கூறுகின்றது. வாக்கு நியாய முணர்ந்தவனாயினும் மீமாம்ஸகன் தத்துவமஸியாதி வாக்கியத்தில் தத்பதார்த்தம் சர்வஞ்ஞனும் சர்வ சக்தியுள்ளவனுமான ஈசுவரன். துவம்பதார்த்தம் அற்பஞ்ஞனும் அற்பசக்திமானுமான ஜீவன். இவ்விரண்டன் அபேதம் யஜமானன் பிரஸ்தரன் என்றும் எனது பக்தனேயாகின்றான் என்றும் லோகப் பிரசித்தமான பதார்த்தங்களால் வியவகரிப்பவனாய் மீமாம்ஸகன் வாக்கியார்த்த முணர்பவனாயினும், மகா வாக்கியார்த்தத்தினைக் கெடுக்கவே செய்கின்றான். அது 'ஒருவன் கேட்பவனாயினும் கேட்கிறதில்லை' என்று சொல்லப்பட்டுளது. அதாவது சாஸ்திரத்திற் பிரதிபாதிக்கப் பட்ட தத்துவம்பதார்த்த முணராதவனாகிய மீமாம்ஸகனான ஒருவன் மகாவாக்கியார்த்தமாகக் கேட்டும் கேட்கிறதேயில்லை. மற்றென்னையெனின், வாக்கினைக் கேட்கின்றான் "ஆத்மா சிரவணஞ் செய்யத்தக்கது" என்னும் சாஸ்திரத்தினால் பிரவிருத்தித்தவன் உபக்கிரம உபசங்காராதி அறுவகை இலிங்கங்களால் தத்துவம் பதார்த்த சோதக பூர்வகமான மகாவாக்கியத்தினை அறிவான், பிறனறியான். இங்கும் மகாவாக்கியார்த்த நிர்ணயத்திலும் தத்துவ சாரமான அபேதம் சித்தித்திருக்கினும் பிரத்தியக்ஷாதி மற்றப் பிரமாணங்கட்கு விரோதமாதலால் விபரீதபாவனையாகிய வாக்கு அநாத்மாவாகிய தேக முதலியவைகளான ஆத்மபாவரூப முதலியவற்றில் இருக்கின்றதென்பதனால் வாக்கியார்த்தாநுபவ வழியில் ஏறுகிறதில்லையென்று, பின் "(ஆத்மா) மனனஞ் செய்யத்தக்கதாம் நிதித்தியாசனஞ் செய்யத்தக்கதாம்" என்றும் சுருதி கூறுகின்றது. மனனநிதித்தியாசனங்களால் கேட்டவண்ணமே பிரகாசிக்கின்றது. அது "(மனனநிதித்தியாசனஞ் செய்யும்) ஒருவனுக்கு வாக்கானது தனது இரகசியத்தினைப் பிரியமுள்ள பத்தினிபதிக்கு விளக்குவது போல விளக்குகின்றது" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வாற்றால் வியாகரணம், மீமாம்ஸை, வேதாந்தம், அத்யாத்ம சாஸ்திர மென்பன நான்கு சாஸ்திரங்களாம். அங்கும் தியானம் வேதாந்த மிரண்டற்கும், தியானித்து வேதாந்தங்களைக் கேட்க, கேட்டுத்தியானிக்க என்று விகற்பமாம்.

எல்லாவிதத்தாலும் நான்கு சாஸ்திரங்களிற் றேர்ந்தவர் இவ்வாறு என்னை யறிவர். யஞ்ஞாதி நிஷ்டர் அத்தன்மைய ரூபத்தினை யறியா ரென்பது பொருள். (உச)

शक्योऽहं वीक्षितुं ज्ञातुं प्रवेष्टुं भक्तिभावनः ।
त्यज भीतिं च मोहं च पश्य मां सौम्यरूपिणम् ॥ २५ ॥

[உகசு] (அ-கை) பக்திமான்களுக்கும் சற்பாவமுடையவர்கட்கும் யான் காணக்கூடியவனும் பிரசினஞ் செய்யக்கூடியவனுமாகின்றேன். பார்க்கப்பட்டவனும் அறியக்கூடியவனாகின்றேன். அறியப்பட்டவனும் பிரவேசிக்கக்கூடியவனாகின்றேன். இவ்வாறிருத்தலால் உனது பிரியரூப மெதுவோ அதனையே பார் என்று கூறுகின்றார் :—

(க-ம்) யான் பக்திபாவத்தினால் பார்க்கவும் அறியவும் பிரவேசிக்கவும் கூடியவனாகின்றேன். பயத்தினையும் மோகத்தினையும் விட்டு சௌமியரூபமுள்ள என்னைப் பார். (எ-று)

இது கருத்தாம்:- "வெளிக்கற்பிதமின்றிய விருத்தி மகாவிதேகமாம். அதனால் பிரகாசத்தின் ஆவரணம் (மறைப்பு) நீங்குகின்றது" என்னும் யோகசூத்திரத்தின்படி சௌமியமான கணபதிமூர்த்தியில் தேகப்பற்றின்றி மனதின் விருத்திலாபமாவது மகாவிதேகமென்னும் தாரணையாம். அது சித்தித்தபோது கணபதி காணப்பட்டதாகின்றது. அதிலேயே சித்தத்தின் சம்யமமாகிய திடதரமான தியான பரிபாகத்தால் மூர்த்தியின் பரிச்சேதாவரண ரூபம் மறையக் கணபதியின் பரமார்த்த சத்தியமான விசுவரூபத் தன்மை பிரகாசிக்கின்றது. இதுவே கணபதி ஞானமாம். விசுவரூபத்திற்கும் மும்மைமாத்திரத் தன்மையால் சர்வ விகற்பங்களின் க்ஷயத்தால் ஒடுங்கிய மனது உப்பு நீர் போலச் சம்பிரஞ்ஞாதத்தில் கணபதியினையே பிரகாசிக்

இன்றது என்பதாம். அந்த இம்மூன்றும் பார்க்கவும் அறியவும் பிரவேசிக்கவும் என்பதனாற் சொல்லப்பட்டதாம். (உரு)

मद्भक्तो मत्परः सर्वसङ्गहीनो मदर्थकृत् ।
निष्क्रोधः सर्वभूतेषु समो मामेति भूभुज ॥ २६ ॥

[உகஎ] (அ-கை) அத்தியாயார்த்தத்தினை முடிக்கின்றார்:—

(சு-ம்) பூமிபாலகனே! (பாகிய பூஜாபரனான) எனது பக்தனும், (மானஸ பூஜாபரனான) எனது பரனும் சர்வசங்க ஹீன (தியாத்திருதியான நியயப் பிரத்தியய மின்றிய நிர்விகற்ப) னும், எனதர்த்தத்தினைச் செய்பவனும் (விக்ஷேப காலத்தில் லோகசங்கிரகத்தின் பொருட்டு என் பொருட்டான ஸ்நான சந்தியாவந்தனாதி கர்மங்களைச் செய்பவனும்) சர்வபூதங்களிலும் கோபமில்லாதவனும் (சர்வ பூதங்கட்கும் அபயந்தரும் சந்நியாசியும்) சமனும் (ஐக்கியதரிசியும்) அத்விதீயனான என்னை யடைவான். (எ-று) (உசு)

ॐ तत्सदिति श्रीमद्गणेशगीतासूपनिषदर्थगर्भासु योगामृतार्थ-शास्त्रे श्रीगणेशपुराणे उ० श्रीगजाननवरेण्यसंवादे विश्वरूपदर्शनो नामा-ष्टमोऽध्यायः ॥ ८ ॥

விசுவரூப வீக்ஷணயோக மென்னும்.

எட்டாமத்தியாயம்

முடிந்தது.

---

## ஒன்பதாமத்தியாயம்

### க்ஷேத்திர க்ஷேத்திரஞ்ஞ விவேகயோகம்.

---

वरेण्य उवाच ॥

अनन्यभावस्त्वां सम्यङ् मूर्तिमन्तमुपासते ।
योऽक्षरं परमव्यक्तं तयोः कस्ते मतोऽधिकः ॥ १ ॥

[௨௬௰] (அ-கை) முந்திய அத்தியாயத்தில் வியக்தம் அவ்யக்தமென்னும் இரண்டு ரூபங்களின் பஜனம் சொல்லப்பட்டது. அவ்விரண்டில் எது சிரேயஸான தென்னும் சந்தேகமுடையவனாய் வரேணியன் கேட்கலாயினான் :—

(சு-ம்) எவன் அநந்யபாவ (ஏகாக்கிர சித்த) னாய் மூர்த்தியுடைய (வியக்தமான) உன்னை யுபாசிக்கின்றானோ, எவன் (வியக்தமின்றிய தன்மையினாலேயே) அக்ஷரமும் (நாசமில்லாததும்) பரமும் (வியக்தத்திலும் மேலானது) மான அவ்யக்தமான உன்னை யுபாசிக்கின்றானோ, அவ்விருவருள் உனக்குமேலாக மதிக்கப்படுபவன் எவன் ? (எ-று)

வியக்தத்திற்குச் சுகமாகக் கிரகிக்கத்தக்க தன்மை யிருக்கினும் தாழ்மையிருத்தலாலும், அவ்யக்தத்திற்குப் பரத்துவமிருக்கினும், துக்கத்தால் கிரகிக்கத்தக்க தன்மையிருத்தலாலும் என்பது அபிப்பிராயமாம் (க)

असि त्वं सर्ववित्साक्षी भूतभावन ईश्वरः ।
अतस्त्वां परिपृच्छामि वद मे कृपया विभो ॥ २ ॥

[௨௬௧] (அ-கை) இச்சமுசயத்தினைச் சேதிப்பவர் தம்மின் வேறானவரில்லை யென்னு மபிப்பிராயமாகக் கூறுகின்றான் :—

(சு-ம்) தாம் சர்வவித்தும் (சிறப்பாக எல்லாவற்றையும் அறிபவரும்) சாக்ஷியும் பூதங்களைப் பாவிப்பவரும், ஈசுவரனுமாயிருக்கின்றீர். ஆதலால் தம்மைக் கேட்கின்றேன். விபுவே! கிருபையோடு எனக்குச் சொல்லி யருள்வீராக :— (எ-று)

சர்வவித்துத் தன்மையால் எனக்கு எதில் அதிகாரமுளதோ அதனை யறிவீர். ஆதலால் அதே வியக்தமான அல்லது அவ்யக்தமான உபாசியத்தினைச் சொல்லியருள்வீராக என்பது பொருள். (உ)

**श्रीगजानन उवाच ॥**

यो मां मूर्तिधरं भक्त्या मद्भक्तः परिसेवते ।
स मे मान्योऽनन्यभक्तिर्नियुज्य हृदयं मयि ॥ ३ ॥

[௩௦௦] (அ-கை) கேட்ட அர்த்தத்தில் பிரீயத்தினை ஸ்ரீகஜானனர் கூறுகின்றார் :—

(சு-ம்) (சாதகனுன) எவன் என் பக்த (என் விஷயத்தில் சோம்பலில்லாதவ) னைப் பக்தியோடு (ஆதரவோடு) மூர்த்திதானன (கணேசாதிகளுள் ஒரு வடிவந்தாங்கிய) என்னைத் தன்னுள்ளத்தினை (மூர்த்தீகரித்த) என்னிடத்திற் செவ்வையாய்ச் செலுத்திச் சேவிக்கின்றானே, அநந்நிய பக்தியின் (ஐஹிக ஆமுஷ்மிக சுக சாதனங்களான அந்நியத்தில் சிரத்தையில்லாதவ) னை அவன் எனக்கு மான்யன் (பக்தத்தன்மையாற் கருதப்பட்டவன்). (எ-று)

சிலர் ஆதரவுடையவராயினும் சோம்பலினால் மந்த முயற்சியினராய்ச் சித்தியினை யடையார். சிலர் செலுத்தப்பட்டவராயினும், சிரத்தையின்மையாற் சித்தியடையார். ஆதலால் 'பக்தனைப் பக்தியோடு' என்று இரண்டும் சொல்லப்பட்டது. (௩)

खगणं स्ववशं कृत्वाऽखिलभूतहितार्थकृत् ।
ध्यायत्यक्षरमव्यक्तं सर्वगं कूटगं स्थिरम् ॥ ४ ॥

[௩௦௧] (அ-கை) வியக்தோபாஸ்தியின் பயனை நிரூபித்து அவ்யக்தோபாஸ்தியின் பயனைக் கூறுகின்றார் இரண்டு சுலோகங்களால் :—

(சு-ம்) அகில பூதஹிதார்த்தஞ்செய்பவன் இந்திரியகணங்களைத் தன்வசமாக்கி, அக்ஷரமும் அவ்யக்தமும் கூடஸ்த (நிர்விகார) மும், ஸ்திரமும் (பூர்ணத்தன்மையால் அசலமும்), எல்லாவற்றினிருப்பது (வியாபகமு) மான (என்னைத்) தியானிக்கின்றான். (எ-று)

எல்லாப் பூதங் (ஜீவர்) களின் ஹிதத்தின் சாதனவடிவ அர்த்த (காய வாக்கு மனதுகளால் எல்லாப்பிராணிகளையும் சந்தோஷிப்பித்தலாகிய பிரயோஜன) த்தினை எவன் செய்கின்றானே, அவனே இந்த அவ்யக்த பஜனத்தில் அதிகாரியாவன் என்பது 'அகில பூத ஹிதார்த்தஞ் செய்பவன்' என்பதனால் கூறப்பட்டதாம். (௪)

सोऽपि मामेत्यनिर्देश्यं मत्परो य उपासते ।
संसारसागरादस्मादुद्धरामि तमप्यहम् ॥ ५ ॥

[௧௦௨] (இ-ள்) அவனும் (அவ்யக்தோபாசகனும்) அநிர்த்தேசிய மான (குறிக்கப்படாத) என்னை அடைகின்றான். எவன் எனது பரனாய் உபாசிக்கின்றானோ (முற் கூறப்பட்ட) அவ்வெனது பக்தனையும் இச் சம்ஸார சாகரத்தினின்றும் கரையேற்றுகின்றேன். (எ-று)

அபிப்பிராயம் இதுவாம் :— அவ்வியக்தோபாஸகர்களான நிராலம்பர்களுக்குத் தியானத்தில் கிலேசம் மிக அதிகமானதாயினும், அவர்கள் இங்குதானே அநிர்த்தேசியமான பிரஹ்மத்தினை யடைந்து கிருதகிருத்திய ராகின்றனர். வியக்தாலம்பன முடையவர்களும் இங்கு தானே அவ்யக்தத்தினிலேறி முக்தராகின்றனர் அதிலேறாத வர்களோ காரியப் பிரஹ்மலோகத்தினை யடைந்து, காரியத்தின் முடிவில் காரியாத்தியக்ஷனோடு கூடவே முக்தராகின்றனர். (௫)

अव्यक्तोपासनाद्दुःखमधिकं तेन लभ्यते ।
व्यक्तस्योपासनात्साध्यं तदेवाव्यक्तभक्तितः ॥ ६ ॥

[௧௦௩] (அ-கை) இதனையே கூறுகின்றார் :—

(இ-ள்) அவ்யக்தோபாசனத்தால் துக்க முண்டாகின்றது. (உண்டாயினும்) அவர் (அவ்யக்தோபாஸகர்) களால் அதிகம் (பிரபஞ்சாதீதப் பிரஹ்மம்) அடையப்படுகின்றது. அதுவே அவ்யக்த பக்தியின் வாயிலாக வியக்தத்தினை உபாசித்தலால் சாதிக்கப்படுவதாம். (எ-று)

அவ்யக்தோபாஸகர்களுக்குத் துக்கசாத்தியமாம் முத்தியென்று சொல்லப்பட்டது. வியக்தோபாஸகர்களுக்கோ அவ்யக்த பக்திவாயிலாகச் சுகமாகச் சாதிக்கத்தக்கதாமென்பது பொருள். (௬)

भक्तिश्चैवादरश्चात्र कारणं परमं मतम् ।

[௧௦௪] (அ-கை) பக்தியினையே துதிக்கின்றார் :—

(இ-ள்) இங்கு (மோக்ஷோபாயங்களான சிரவண மனனநிதித் தியாசனங்களில்) பக்தியும் (ஆராதிக்கப்படுந் தன்மையாக அறித

னும்), ஆதரமும் (தியானத்தில் அத்தியந்த அவதானமுடைமையும்) மேலான (ஞான) காரணமென்று மதிக்கப்பட்டதாம்.

सर्वेषां विदुषां श्रेष्ठो ह्यकिंचिज्ज्ञोऽपि भक्तिमान् ॥ ७ ॥

(அ-கை) சிரவணுதிக ளின்றியவனுயினும், தியானமுடையவன் சுத்தனுவனென்று கூறுகின்றார் :—

(சு-ம்) ஒன்று மறியாதவனுயினும் பக்திமான் அறிஞரெல்லோருள்ளும் சிரேஷ்டனுவன். (எ-று) (எ)

भजन्भक्त्या विहीनो यः स चाण्डालोऽभिधीयते ।
चाण्डालोऽपि भजन्भक्त्या ब्राह्मणेभ्योऽधिको मम ॥ ८ ॥

[௯0௫] (அ-கை) தியானிப்பவனது பக்தியினையே அதிசயோக்தியினுற் றுதிக்கின்றார் :—

(சு-ம்) எவன் பக்தியில்லாதவனுய்ப் பஜிக்கின்றுனே, அவன் சண்டாளனென்று சொல்லப்படுகின்றுன். சண்டாளனும் பக்தியினுல் பஜித்து எனக்குப் பிராஹ்மணர்களினும் அதிகனுகின்றுன். (எ-று) (அ)

शुकाद्याः सनकाद्याश्च पुरा मुक्ता हि भक्तितः ।
भक्त्यैव मामनुप्राप्ता नारदाद्याश्चिरायुषः ॥ ९ ॥

[௯0௬] (அ-கை) வேறுவகையாற் சொல்லியதனையே விதிமுகத்தால் திடப்படுத்துகின்றார் :—

(சு-ம்) சுகாதியரும் ஸநகாதியரும் முன் பக்தியினுல் முக்தரானுர்; பிரசித்தம். நீண்ட ஆயுளுடைய நாரதாதியர் பக்தியினுலேயே என்னை யடைந்தவரானுர். (எ-று)

சுகாதியரின் சமத்துவத்தை யடைய விரும்புவோன் என்னிடத்தில் பக்தியினைச் செய்க என்பது கருத்து. (கூ)

अतो भक्त्या मयि मनो निधेहि बुद्धिमेव च ।
भक्त्या यजस्व मां राजंस्ततो मामेव यास्यसि ॥ १० ॥

[௩௦௭] (அ-கை) பக்தியின் மாகாத்மியத்தினை முடிக்கின்றார்:-

(சு-ம்) ஆதலால் அரசனே! என்னைப் பக்தியோடு யஜி. மனதினையும் புத்தியினையும் என்னிடத்திலேயே வை. அதனால் என்னையே அடைவாய். (எ-று)

முன்னர் என்னைப் பக்தியோடு யஜி (ஆராதனை செய்). அந்த யஞ்ஞாதியினால் மிகச் சுத்தமான சித்தமுடைய உனக்குப் பரமாத்மா அவசியம் அறியத்தக்கவர் என்னும் நிச்சயவடிவ புத்திவிருத்தியாகிய ஞானமுண்டாகும். அதன் பின் குருவைச் சரணடைந்தவனுக் குரவனாற் சொல்லப்பட்ட யுக்தியினால் என்னிடத்து மனதினை வை. அதனால் என்னைக்கண்டு கிருதகிருத்தியனாவாய் என்பது கருத்து. (௧௦)

असमर्थोऽर्पितुं स्वान्तं ध्रुवं मयि नराधिप ।
अभ्यासेन च योगेन ततो गन्तुं यतस्व माम् ॥ ११ ॥

[௩௦௮] (அ-கை) மனோ நிரோதத்தினால் என்னைக்காண அசக்தனவையாயினும், அப்பியாசம் யோக மிரண்டினாலும் அதன் நிரோதத்தினைச் செய் என்று கூறுகின்றார் :—

(சு-ம்) நராதிபனே! என்னிடத்தில் ஸ்திரமாக மனதினை நிறுத்த அசமர்த்தனாயின், அப்பியாசத்தினாலும் யோகத்தினாலும் என்னை யடைய முயல்வாய். (எ-று)

அப்பியாசமாவது தியேயமூர்த்தியில் சித்தத்தினை நிலைக்கச் செய்தற் பொருட்டு மறுபடியும் மறுபடியுங் யத்தனித்தலாம். யோகமாவது சர்வ சித்த விருத்தி நிரோதமாம். (௧௧)

तत्रापि त्वमशक्तश्चेत्कुरु कर्मसमर्पणम् ।
ममानुग्रहतश्चैवं परां निर्वृतिमेष्यसि ॥ १२ ॥

[௩௦௯] (அ-கை) அப்பியாச முதலியவற்றில் அசமர்த்தனுக்கு ஈசுவரார்ப்பண புத்தியால் தமது தர்மத்தினை யாசரித்தலே சிரேயசாமென்று கூறுகின்றார் :—

(சு-ம்) அதிலும் நீ அசக்தனாயின், கர்ம சமர்ப்பணத்தினைச் செய். (உன்னால் ஸ்வதர்மத்தினால் செவ்வையாய்த் தர்ப்பிக்கப் பட்டவனான) எனது அநுக்கிரகத்தினாலேயே (சித்தசுத்தியாதிக் கிரமத்தால் யோகசித்திவடிவ அத்தியாத்மப் பிரசாதத்தினாலேயே) பரமான நிர்விருதியினை (சுகத்தினை) அடைவாய். (எ-று)

"எதனின்றும் வாக்குக்கள் மனதோடு அடையாது திரும்புகின்றனவோ, அந்தப் பிரஹ்மத்தின் ஆநந்தத்தினை யறிந்தவன் எதனின்றும் அஞ்சான்." (தைத்-உ-கூ-க.) என்னும் சுருதிப் பிரசித்தமும், வாக்கு மனதிற்கெட்டாததும், கோசபஞ்சகத்திற் கப்பாற்பட்டதுமான ஆநந்தம் நிர்விருதி சப்தத்தினாற் சொல்லப்பட்டதாம். அது சர்வஞ்ஞத்துவாதி யநுபவத்தினைவிட மேலானது என்பது தோன்ற 'பரமான நிர்விருதி' என்றார். (கஉ)

अथैतदप्यनुष्ठातुं न शक्तोऽसि तदा कुरु ।
प्रयत्नतः फलत्यागं त्रिविधानां हि कर्मणाम् ॥ १३ ॥

[௩கO] (அ-கை) ஸ்வதர்மாநுஷ்டானத்திலும் அசக்தனுக்குக் கதி யாதெனக் கூறுகின்றார்:—

(சு-ம்) இனி இதனையும் (ஸ்வதர்மார்ப்பணத்தினையும்) செய்ய அசக்தனாவையாயின், அப்போது (புண்ணியம் பாவம் மிசிரமென்னும்) மூவகைக்கர்மங்களின் பலத்தியாகத்தினை (யான் இதன் கர்த்தா பலபோக்தா வென்னு மபிமானத்தை விடுதலை) ப் பிரயத்தினத்தோடு (புத்திபூர்வமாக) செய். (எ-று)

அவ்வாறே இப்பாவனைப் பிரகாரமான இது சாஸ்திரத்தில் "தர்மத்தினை அறிகின்றேன். அதில் எனக்குப் பிரவிருத்தி இல்லை. அதர்மத்தினை யறிகின்றேன். எனக்கு அதினின்று நிவிருத்தி யில்லை. இருதயத்தி லிருப்பவனான ஓர் தேவனால் எவ்வாறு செலுத்தப்பட்டவனாகின்றேனோ, அவ்வாறு செய்கின்றேன்" என்று காட்டப்பட்டுளது. (கங)

श्रेयसी बुद्धिरावृत्तेस्ततो ध्यानं वरं मतम् ।
ततोऽखिलपरित्यागस्ततः शान्तिर्गरीयसी ॥ १४ ॥

[௬.கக] (அ-கை) அகர்த்திருத்துவ அபோக்திருத்துவாபிமானத்தின் ஆவிருத்தியினால் என்ன உண்டாகுமோ அதனைக் கூறுகின்றார் :—

(சு-ம்) ஆவிருத்தியினும் (அகர்த்திருத்துவாதி யநுசந்தானத்தினை விட) புத்தி (அகர்த்தாவே யான் அபோக்தாவே யான் என்னும் அதன் பயன் வடிவ நிச்சய ரூபமான சித்தவிருத்தி) சிறந்ததாம். அதனைவிடத் தியானம் (வியக்தமான அல்லது அவியக்தமான கணபதியின் ஸ்வரூபத்தில் சித்தத்தினை நிலைக்கச்செய்தல்) மேலான தென்பது என் அபிப்பிராயம். அதனினும் எல்லாவற்றினையும் (அநாதிபேதவாசனையா லுண்டாவன வாகிய அஸ்மிதை பரியந்தமான சகல துவைதத்தினையும்)விடுதல் சிறந்ததாம். (எதனாலெனின்) அதனால் (விடுபாட்டால்) உண்டாம் சாந்தி (நிர்விகற்பமான பிரத்தியக்கில் நிலைத்தல்) மேன்மையுடையதாம். (எ-று)

இப்பொழுதே கைவல்யத்திற் கேதுவாதலால் சத்தியலோகப் பிராப்தியினைவிட மேலானதாம் என்பது பொருள். (கச)

निरहंममताबुद्धिरद्वेषः करुणा समः ।
लाभालाभे सुखे दुःखे मानामाने स मे प्रियः ॥ १५ ॥

[௬.கஉ] (அ-கை) இதே கைவல்யத்தின் சாதனங்களைக் கூறுகின்றார் .—

(சு-ம்) அகந்தை (கர்வம்) மமதை (இஃதென தெனும் புத்தி) களின்மைப் புத்தி (அவ்விரண்டினின்மைவிஷயத்தில் நிச்சய வடிவ ஞானம்), துவேஷமின்மை, கருணை (இரக்கம்) என்பவற்றையுடையவனாய் இலாபநஷ்டத்திலும், சுக துக்கத்திலும், மானாவமானத்திலும், எவன் சமமானவனா யிருக்கின்றானோ அவன் எனக்குப் பிரியன். (எ-று) (கரு)

रिपौ मित्रेऽथ गर्हायां स्तुतौ शोके समः समुत् ।
मौनी निश्चलधीभक्तिरसङ्गः स च मे प्रियः ॥ १६ ॥
यं वीक्ष्य न भयं याति जनस्तस्मान्न च स्वयम् ।
उद्वेगभीकोपवुद्धिरहितो यः स मे प्रियः ॥ १७ ॥

[௬கக-௬கச-] (சு-ம்) சத்துருமித்திரனிடத்தும், நிந்தை ஸ்துதியிலும் சமமானவனும், சோகத்திலும் (புத்திராதிகளுடைய விரஹத்தில் எனது பந்தகாரணம் நஷ்டமாயிற்றென்று) சந்தோஷமுடையவனும், மௌனியும் (தியான நிஷ்டனும் அல்லது வாக்கடங்கியவனும்), நிச்சல புத்தி பக்தியுடையவனும் (ஸ்திர புத்தியையும் ஸ்திர பக்தியினையு முடையவனும் அல்லது ஸ்திர புத்தியாகிய பக்தியினை யுடையவனும்), அசங்க (பற்றின்றியவ) னுமாயிருப்பவன் எவனோ அவன் எனக்குப்பிரியன் (கசு) எவனைக் கண்டு ஜனங்கள் பயத்தினையடைகிறதில்லையோ, எவன் தான் அவர்களினின்றும் பயத்தினையடைகிறதில்லையோ, எவன் வியாகுலபய கோப புத்தியில்லாதவனாவனோ அவன் எனக்குப் பிரியன்.

(எ-று) (கஎ)

संशीलयति यश्चैनमुपदेशं मया कृतम् ।
स वन्द्यः सर्वलोकेषु मुक्तात्मा मे प्रियः सदा ॥ १८ ॥

[௬கரு] (அ-கை) இச்சாதனகணங்களையே துதிக்கின்றார்:—

(சு-ம்) எவன் (இதன்-கரு-வது சுலோகத்தில்) என்னாற் சொல்லப்பட்ட (அகங்கையின்மை முதலிய சாதன சமூகமான) இவ்வுபதேசத்தினைச் செவ்வையாய்ப் பழகுகின்றானோ, அவன் சர்வலோகங்களிலும் வணங்கப்படுபவன். முக்தாத்மா எனக்கு எப்போதும் பிரியன்.

(எ-று) (கஅ)

अनिष्टाप्तौ च न द्वेष्टीष्टप्राप्तौ न च तुष्यति ।
क्षेत्रतज्ज्ञौ च यो वेत्ति स मे प्रियतमो भवेत् ॥ १९ ॥

[௬கசு] (அ-கை) அநிஷ்டப் பிராப்தியிலு (பனிக்காலத்துப் பிராதஸ்நானாதி நேர்ந்த விடத்து)ம் துவேஷிக்கிறதில்லை. இஷ்டப் பிராப்தியிலு (கோடையில் மத்தியான்ன ஸ்நானாதி நேர்ந்த விடத்து)ஞ் சந்தோஷிக்கிறதில்லை. (சொல்லப்படும் லக்ஷணமுடைய) க்ஷேத்திரத்தினையும் அதனை யறிபவனையும் (பாத்திய அபாத்தியத் தன்மையாக) எவன் அறிகின்றானோ அவன் எனக்குப் பிரியதமனாகின்றான். (எனக்கந்நியனாகாமையா லென்பது கருத்து.)

(ககூ)

वरेण्य उवाच ॥

किं क्षेत्रं कश्च तद्वेत्ति किं तज्ज्ञानं गजानन ।
एतदाचक्ष्व मह्यं त्वं पृच्छते करुणाम्बुधे ॥ २० ॥

[கூகஎ] (அ-கை) ஸ்ரீகணேசரால் இடையிற் சொல்லப்பட்ட க்ஷேத்திராதிகளெதுவோ அதனை அறியவிரும்பியவனுய் வரேணியன் கேட்கலாயினுன் :—

(சு-ம்) க்ஷேத்திரம் யாது? அதனை எவன் அறிகின்றுன்? கஜானனரே! அதன் ஞானம் யாது? கருணுசமுத்திரரே! இதனைக் கேட்பவனுகிய எனக்குச்சொல்லி யருள்வீராக. (எ-று) (௨0)

श्रीगजानन उवाच ॥

पञ्च भूतानि तन्मात्राः पञ्च कर्मेन्द्रियाणि च ।
अहंकारो मनो बुद्धिः पञ्च ज्ञानेन्द्रियाणि च ॥ २१ ॥

[கூகஅ] (அ-கை) இதனுத்தரத்தினை மூன்று சுலோகங்களால் ஸ்ரீகஜானனர் சொல்லலாயினர் :—

(சு-ம்) பூதங்கள் ஐந்தும், தன்மாத்திரைகள் ஐந்தும், கர்மேந்திரியங்கள் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், அகங்காரமும், மனமும், புத்தியும், (எ-று)

பஞ்சபூதங்களென்றது ஸ்தூலசரீரத்தை யுண்டுபண்ணுவனவாய்ப் பஞ்சீகிருதங்களான ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவி யென்பனவாம். அவையும், ஆதிபௌதிகம் ஆதிவாஹிகமென்னும் பேதத்தால் இருவகையினவாம். அவை உலர்ந்ததும் ஈரமுமான மட்பிண்ட மொத்தனவாம். அவற்றுள் முதலாவதில் ஜன்மவிருத்திக்ஷயங்களை யுடைய நம்மனோர் சரீரங்கள் ஆக்கப்படுகின்றன. ஆதிவாஹிகங்களினலோ தேவர்களது சரீரமும் பாமர சரீரங்களும் ஆக்கப்படுகின்றன. தன்மாத்திரைகளாவன வாசனுமயங்களான ஐந்து பூதங்களாம். அவற்றின் விகிருதி, பஞ்சப்பிராண மனோபுத்தி தசேந்திரிய வடிவினதாய், அபஞ்சீகிருத பூதத்தினின்றெழுந்ததாய், சூக்ஷ்மாங்க பூத சாதனமென்று

சொல்லப்படுவதான இலிங்க சரீரமும் சொப்பனப் பிரபஞ்சமுமாம். அகங்காரத்தினைப் புத்தியிலும் சித்தத்தினை மனதிலும் அடக்கிக் கூறுவர். (உக)

इच्छाव्यक्तं धृतिद्वेषौ सुखदुःखे तथैव च ।
चेतनासहितश्चायं समूहः क्षेत्रमुच्यते ॥ २२ ॥

(௩கக) (சு-ம்) இச்சையும், (இஃதெனக் குண்டாகுக வென்னும் அபிலாஷையும்), அவ்யக்தமும் (சதசத்துற்பவ பல ஹேதுக்களான தர்மாதர்மங்களும்), திருதியும் (சித்த நிக்கிர முதலியவற்றிலும் யுத்த முதலியவற்றிலும் உற்சாகங் கெடாமையாகிய தைரியமும்), துவேஷமும், சுகமும், அவ்வாறே துக்கமும், சேதனை (சிதாபாஸனைக் கர்ப்பத்திலுடைய சித்தவிருத்தி) யோடு கூடியதுமான இச் சமூகம் (சங்காதம்) [சம்ஸாரசங்கடத்திலும் அவவவ்விடங்களினின்றும் க்ஷேபித் (எறி)தலால்] க்ஷேத்திர மென்று சொல்லப்படும். (எ-று)

துஷ்பிரவிருத்தமான இதனால் சிதாபாசவடிவ பிராணிகள் சம்ஸரிக்கின்றன. நற்பிரவிருத்தமான இதனால் தர்மமும் மோக்ஷமும் சாதிக்கின்றன. (உஉ)

तज्ज्ञं त्वं विद्धि मां भूप सर्वान्तर्यामिणं विभुम् ।
अयं समूहोऽहं चापि यज्ज्ञानविषयौ नृप ॥ २३ ॥

[௩உ0] (அ-கை) க்ஷேத்திரத்தினைக் கூறி க்ஷேத்திரஞ்ஞனைக் கூறுகின்றார்:—

(சு-ம்) பூபனே! (ஜீவனாகிய) நீ சர்வாந்தரியாமியும் விபுவுமான என்னை அந்த க்ஷேத்திரத்தினை யறிபவ (ஈசுவர)னாக அறி. இந்த (ஆகாசாதி ஜடங்களும் அந்த க்ஷேத்திராபிமானிகளான சிதாபாஸர்களுமான இவற்றின்) சமூகமும், (மூன்றாவது அந்தரியாமியான) யானும் எவனது (துரியனான க்ஷேத்திரஞ்ஞனது) ஞானத்தில் விஷயங் (பிரகாசிக்கப்படுபவர்களான சமூகாந்தரியாமி) களாவோமோ அந்த க்ஷேத்திரஞ்ஞன் யானே. (எ-று)

க்ஷேத்திரஞ்ஞனை யறியாது பூமியைப் பாலிக்கின்ற பூப னுக்கு அவசியம் குடிகள் செய்த தோஷங்கள் வந்து அமிழ்த்தும்; க்ஷேத்திரஞ்ஞனையோ ஜநகனைப்போல இவை அமிழ்த்தாவென் னும் அபிப்பிராயமாகப் பூபனே யென்று விளித்ததாம்.

சேதனையுடைய ஜீவர்களே தத்தம் சங்காதத்தினைப் பிரகாசிக் கின்றனர். அசங்கராகிய தமக்கு அந்த க்ஷேத்திரஞ்ஞத்துவம் எங் கிருந்துளதா மென்னு மாசங்கையினைப் பரிகரித்தற் பொருட்டு 'சர்வாந்தரியாமியும் விபுவுமான என்னை' என்று கூறியதாம். ஜீவ னே அவ்வவ்வம்சாபிமானியாய் மின்மினிபோல அந்தந்த க்ஷேத் திரபோகத்தினையே பிரகாசிக்கின்றான். யானோ சங்காதத்தினின்று வேறுபட்டவனா யிருத்தலால் சூரியனைப்போல சர்வசங்காதத்தினை யும் விபுத்தன்மையால் ஒருங்கே பிரகாசிக்கின்றேன் என்றதாம். அவ்வாறே சுருதியும், "எவன் ஆகாசத்தினு முள்ளாய் ஆகாசத் தில் நிற்கின்றானோ, எவனை ஆகாசம் அறிகிறதில்லையோ, எவ னுக்கு ஆகாசம் சரீரமோ, எவன் உள்ளிருந்து ஆகாசத்தினை இயக்குகின்றானோ, அவன் உனது அந்தரியாமியான அமிருதன்" (பிருத-ங-எ-கஉ) என்றல் முதலியவற்றாலும், 'எவன் ஆத்மாவி லிருந்து கொண்டு மனதினுள்ளாய் ..........., சர்வ பூதங்களினு மிருந்து கொண்டு..........." என்றல் முதலியவற்றாலும் ஜடாஜட சர்வப் பிரபஞ்சத்தினை விளக்குந்தன்மையைக் கூறுகின்றது. ஆத லால் எப்படி ஆகாயத்திருக்கும் சூரியன ஒருவனே தனது பிரதி பிம்பங்களையும் அவற்றினதாரங்களான உபாதிகளையும் விளக்கு கின்றானோ, அப்படியே மகத்து ஆகாய முதலிய உபாதிகளையும் அவற்றிலிருக்கும் சிதாபாஸர்களையும் எல்லாவற்றையும் ஒருங்கே அந்தரியாமித்தன்மையா லதிஷ்டித்து நியமிக்கின்றேன்.

துரியனுக்கு மூன்றும் விஷயமாமென்பதனைச் சுவேதா சுவதர சுருதியும் "போக்தா (சிதாபாசன்), போக்கியம் (ஜடம்), பிரேரிப்பவன் (பரமேசுவரன்) இம் மூன்றனையுமறிந்து இந்த மூவகையினது பிரஹ்மம் என்று சொல்லப்பட்டது" என்று கூறுகின்றது. அவ்வாறே சாந்தோக்கியமும் "இந்தச் சம்பிரசா தன் (சிதாபாசன்) இச் சரீரத்தினின்று மெழுந்து பரஞ்சோதி

யினை யடைந்து தனது வடிவமாக ஆகின்றான். அவன் உத்தம னான புருஷன்" (அ-௩-ச) என்று ஒரே பரஞ்சோதி சப்தத்தினாற் சொல்லப்படும் உத்தம புருஷனுக்குச் சரீரசப்தத்தாற் சொல்லப் படும் ஜடத்தன்மையினையும், சம்பிரசாத சப்தத்தினாற் சொல்லப் படும் சிதாபாஸத் தன்மையினையும், ஸ்வரூப சப்தத்தினாற் சொல்லப் படும் ஈசுவரத்தன்மையினையும் காட்டுகின்றது. (உ௩)

आर्जवं गुरुशुश्रूषा विरक्तिश्चेन्द्रियार्थतः ।
शौचं क्षान्तिरदम्भश्च जन्मादिदोषवीक्षणम् ॥ २४ ॥

समदृष्टिर्दृढा भक्तिरेकान्तित्वं शमो दमः ।
एतैर्यच्च युतं ज्ञानं तज्ज्ञानं विद्धि बाहुज ॥ २५ ॥

[௩௨௧-௩௨௨] (அ-கை) போக்தா போக்கியம் ஈசுவரன் என்பவற்றைப் பிரகாசிக்கும் துரியம் எதுவோ அதனை யறியும் சாதனங்களை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார் :—

(சு-ம்) ஆர்ஜவம் (நேர்மை = கபடமின்மை), குருபணிவிடை (மாதா பிதா ஆசாரியர் அக்கினி இவற்றின் சேவை), இந்திரியார்த் தத்தினின்று விரக்தி (இந்திரியகோசரங்களாகும் திவ்விய கந்த ரஸாதிகளில் ஆசையில்லாமை), சௌசம் (மண் நீர் முதலிய வற்றாலாம் பாகிய சுத்தியும், மனத்தூய்மையான ஆந்தர சுத்தியும்), பொறுமை (கோபமுண்டாகாமை), இடம்ப மின்மை (தர்மத்தினை வெளியிடாமை), பிறப்பு முதலியவற்றின் தோஷத்தினைக் காணு தல் (பிறத்தல், மூப்பு, மரித்தல், குருட்டுத்தன்மை, செவிட்டுத் தன்மை முதலியவற்றில் தோஷங்களான வசமின்மை முதலிய வற் றின் (அநுசந்தானம்), சமதிருஷ்டி (பகை நட்பு மானம் அவமானம் சுகம் துக்கம் முதலியன நேர்ந்தபோதும் புத்தி விகாரமடையாமை), (தேவதாதிகளில்) திடமான பக்தி, ஏகாந்தித்துவம் (தனித்திருக்கு மியல்பு), சமம் (மனவடக்கம்), தமம் (புறவிந்திரியவடக்கம்) என்னு மிவற்றோடு கூடிய ஞான மெதுவோ, அதனைப் புயத்திற் பிறந்தவ (க்ஷத்திரிய)னே! ஞானமென்றறி. (எ-று)

இந்த ஞானம் பரோக்ஷஞானிகட்குத் திடமாக இழுக்கப்பட்டதாயும் அபரோக்ஷ ஞானிகட்கு இயல்பாகப் பெறப்பட்டதாயு மிருக்கும் என்பது பொருள். (உச-உரு)

तज्ज्ञानविषयं राजन्ब्रवीमि ते शृणुष्व मे ।
यज्ज्ञात्वेति च निर्वाणं मुक्त्वा संसृतिसागरम् ॥ २६ ॥

[ஙஉஙு] (அ-கை) ஞானசாதனத்தினைக் கூறி ஞேயத்தினைக் கூறுகின்றார் :—

(சு-ம்) அரசனே! எதனை (பிரஹ்மத்தினை) அறிந்து சம்ஸாரசாகரத்தினைக் கடந்து நிருவாண (கைவல்ய)த் தினை யடைவானோ, அந்த ஞானவிஷயத்தினை (ஞானசாதன சமூகத்தின் பிரகாசியமான பிரஹ்மத்தினை) உனக்குச் சொல்லுகிறேன். அதனை எனது வாக்கியத்தினாற் கேள். (எ-று) (உகூ)

यदनादीन्द्रियैर्हीनं गुणभुग्गुणवर्जितम् ।
अव्यक्तं सदसद्भिन्नमिन्द्रियार्थावभासकम् ॥ २७ ॥

[ஙஉச] (அ-கை) எதனைச் சொல்லுகிறேன் என்றாரோ அதனையே கூறுகின்றார் :—

(சு-ம்) எது (எந்த ஞேயவஸ்து) அநாதியும், (கைகால் முதலிய) இந்திரியங்களில்லாததாய்க் குண (விஷய)ங் களைப் புசிப்பதும், (சத்துவாதி) குணங்களின்றியதும், அவ்வியக்தமும் (ரூபாதிகளின்றியதும்), சத்து (காரியம்) அசத்து (காரணம்) இரண்டற்கும் வேறானதும், (சப்தாதி) இந்திரியார்த்தங்களை விளக்குவதும், (எ-று)

அநாதி யென்பதற்கு ஆதியான காரணமின்றியது அதாவது எல்லாவற்றின் ஆதிவடிவினது என்பது பொருளாம்; "சௌமியனே! இது முன் சத்தாகவே இருந்தது" என்னும் சுருதியால். இந்திரியங் களின்றி விஷயங்களைப் புசிப்பன் என்பதற்கு "கை கால்களில்லாதவனாய்க் கிரகிப்பவனும் வேகமுடையவனு மாகின்றான். அவன் கண்ணில்லாதவனாய்க் காண்கின்றான். காதின்றியவனாய்க் கேட்கின்றான். அவன் வேத்திய (விஷய)த்தினை அறிகின்றான். அவனை

யறிபவனில்லை. அவனே முதன்மையான மகாந்தபுருஷனென்பர்" (சுவே-ந-கக) என்பது சுருதியாம். குணமின்றிய தென்பதற்கு, "அநாதியும் அநந்தமும் பகத்தின் மேலானதும், சாசுவதமுமான இதனை அறிந்து மிருத்தியுவின் வாயினின்றும் விடுபடுகின்றான்" (கட-ங-கரு) என்பது சுருதியாம். அவ்யக்தமென்பதற்கு "சப்த மின்றியது, ஸ்பரிசமின்றியது, ரூபமின்றியது, அவ்யயம், அவ்வாறே இரசமின்றியது, நித்தியம் கந்தமின்றியது" என்பது சுருதியாம். காரண காரியங்களின் வேறான தென்பதற்கு "முன் (காரணம்) இன்றியதும், பின் (காரியம்) இன்றியதுமாம்" (பிருக-உ-ரு-கக) என்றல் முதலியன சுருதியாம்.

இந்திரியார்த்தங்களை விளக்குவதென்பதற்கு "எதனால் பார்க்கின்றானோ, எதனால் கேட்கின்றானோ, எதனால் கந்தங்களை முகருகின்றானோ, எதனால் பேசுகின்றானோ எதனால் உருசி அருசிகளை யறிகின்றானோ" (ஐத-ரு-க) என்பது சுருதியாம். (உஎ)

विश्वभृच्चाखिलव्यापि त्वेकं नानेव भासते ।
बाह्याभ्यन्तरतः पूर्णमसङ्गं तमसः परम् ॥ २८ ॥

[கூஉரு] (சு-ம்) உலகந்தாங்குவதும், சர்வவியாபியு (சர்வோபாதானத் தன்மையால் சர்வகாரியங்களிலும் வியாபித்திருப்பது) மாமோ (உண்மையில்) ஏகமாயிருந்தும் நாநாபோலத் தோற்றுகின்றதோ, வெளியிலு முள்ளிலுமாகப் பூர்ணமும் (இரண்டாவ தின்மையால்) அசங்கமும், தமசு (பிரகிருதி) க்கு மேலானதுமாமோ, (எ-று)

"பிரஹ்மனே! எல்லாப் பூதங்களையும் கப்பலிற்போல உள்ளே செவ்வையாய் வைத்திருப்பதாம்." என்னும் சுருதியினால் கப்பலைப் போல ஆதாரத்தன்மைமாத்திரமன் றென்பதன் பொருட்டு 'சர்வ வியாபி' எனப்பட்டது. சர்வோபாதானத்துவம் "எதனால் பிருதிவியில் நால்வகை ஜீவராசிகளைப்போல இவ்வெல்லாம் பிரஹ்மத்திலேயே பிறக்கின்றதோ, பிரஹ்மத்திலேயே ஒடுங்குகின்றதோ, பிரஹ்மத்திலேயே சேஷ்டிக்கின்றதோ அதனால் இவ்வெல்லாம் பிரஹ்மமே" (சாந்-ங-கச-க) என்னும் சுருதியினால் கூறப்பட்டுளது. அத்தியாத்மாதிதைவாதிபூத பேதத்தால் நாநாவைப்போலத் தோற்றுகிறதே

யன்றி நாநாவாகிறதில்லை யென்பதனைச் சுருதி "எங்குத் துவைதம் போல் ஆகின்றதோ அப்போது அந்நியன் அந்நியம்போலக் காண்கின்றான்" (பிரு-௨-௪-௧௪) என்று கூறுகின்றது. இங்கு இவ = போல என்னும் சொல்லால் துவைதத்தின் மித்தியாத்துவத்தினைக் காட்டுகின்றது. "எங்கு இவனுக்கு எல்லாம் ஆத்மாவே யாகின்றதோ அப்போது எதனால் எதனைப்பார்ப்பான்." (பிரு-௨-௪-௧௪) என்று ஆத்மாவின் ஏகத்துவத்தினை யறிந்தபோது தரிசனாதி வியவகார மின்மையைக் காட்டுகின்றது. வெளியினு முள்ளினுமாக நிறைந்த தென்பதற்கு "அது எப்படி சைந்தவகனம் (உப்புக்கட்டி) உள்ளின்றியதும் வெளியின்றியதுமாய் முழுவதும் இரஸகனமாயிருக்கின்றதோ, அதுபோல இவ்வாத்மா முழுவதும் பிரஞ்ஞானகனமாம் (ஏகரசத்தன்மையாகப் பூர்ணமாம்)" (பிரு-௪-௫-௧௩) என்பது சுருதியாம். அசங்கனுக்குச் சங்கமுடைமையும் ஏகரஸனுக்கு நாநாரஸத்துவமும் கானலில் அநேக அலை முதலியவற்றோடு கூடிய குளமுதலியன தோற்றுவதுபோல இல்லாதிருந்தும் தோற்றுகின்றது. அவ்வாறே சுருதியும், இங்கு நாநாவென்பது சிறிதுமில்லை." (பிரு-௪-௪-௧௧) என்றும், "மாயாமாத்திரமாம் இத்துவைதம்" என்றும் கூறுகின்றது. (௨௮)

दुर्ज्ञेयं चातिसूक्ष्मत्वाद्दीप्तानामपि भासकम् ।
ज्ञेयमेतादृशं विद्धि ज्ञानगम्यं पुरातनम् ॥ २९ ॥

[௩.௨௯] (சு-ம்) அதிஸூக்ஷ்மத்தன்மையால் அறிதற்கரியதும், [ஆகாயம் ரூபம் ஸ்பரிச முதலியனவின்றியதன்மையால் அதிஸூக்ஷ்மமாயினும் அவகாசத்தினைத் தருந்தன்மையினாலும் ஏகரஸத் தன்மையினாலும் சாக்ஷிபாவ்யமாம் (சாக்ஷியினால் அறியப்படுவதாம்); ஆத்மாவோ சர்வசாக்ஷியா யிருத்தலினாலேயே சாக்ஷிபாவ்யமாகாது, அநவஸ்தை நேர்தலால் என்பது பொருளாம்.] (அவ்வாறாயின், அதனை யுணர்தல் எதனாலெனக் கூறப்படுகின்றது) (சூரிய சந்திராதிகளும் நேத்திர முதலியனவுமான) பிரகாசமுடைய வற்றிற்கும் பிரகாசகமும், ஞானத்தினால் அறியப்படுவதும் (யான் பிரஹ்மமென்னும் வாக்கிய ஜந்ய பிரஹ்மாகார அந்தக்கரண விருத்தி

யினால் சர்வ துவைதமும் ஒடுங்குதலோடு தோற்றும்பொடிபோல் அவ்விருத்தி தானும் ஒடுங்குதலால் அறியப்படுவதாம்.) புராதன (நித்திய சித்த)முமாமோ, இத்தன்மையதனை (அநாதியுமென்றல் முதலிய விசேஷணங்களாற் சொல்லப்பட்டதனை) ஞேயம் (அறியத் தக்க பிரஹ்மம்) என்று அறி. (எ-று)

பிரகாசகங்கட்கும் பிரகாச மென்பது "அந்தப்பிரகாச முடைய ஆத்மாவினைத் தழுவியே யாவும் பிரகாசிக்கின்றன. அதனது பிரகாசத்தினால் இவ்வெல்லாம் பிரகாசிக்கின்றது" என்னும் (சுவே-சு-கச) சுருதியினாற் கூறப்பட்டுளது.

இத்தன்மைய பிரஹ்மம் உபாசனையால் அடையத்தக்கதன் றென்று சொல்லுதற்பொருட்டு 'புராதனம்' என்னும் அடை கொடுக்கப்பட்டதாம். (உக)

एतदेव परं ब्रह्म ज्ञेयमात्मा परोऽव्ययः ।

[கூஉஎ] (அ-கை) இவ்வாறு சுலோக மூன்றினாற் சொல்லப் பட்ட பிரஹ்மத்திற்குப் பிரத்தியகபின்னத்துவம் கூறுகின்றார் :—

(சு-ம்) இந்த (முற்கூறியவிதமான) பிரஹ்மமே பரமான ஞேய மாம். (உபாஸிய சொரூபமோ அந்தப் பிரத்தியயமுடைமையால் அவர அதாவது தாழ்ந்த ஞேயமாம்) (இப் பிரஹ்மமே எம்மனோர் முதலிய ஜீவர்களது) ஆத்மாவாம். (அவ்வாத்மா யாதெனின்,) பரமாம் (அந்நமயாதி ஐந்திற்கும் மேலான ஆறுவதாம்) (அதனால்) அவ்யயமாம் (முந்திய ஐந்தும் உபாதியுடையனவாய் உபாதியின் கிரியையால் விகாரப்படுகின்றன. இதுவோ உபாதியின்றிய தன்மை யால் விகாரமின்றியதாம்) (அதனால் தத்துவம் பதார்த்தலக்ஷிய மிரண்டற்கும் லக்ஷணபேத மில்லை என்பது கருத்து.)

गुणान्प्रकृतिजान्भुङ्क्ते पुरुषः प्रकृतेः परः ॥ ३० ॥

(அ-கை) அவ்வாறாயின், தத்துவ முணர்ந்தவர்கட்கும் ஆத்மா வினிடத்துக் கர்த்திருத்துவாதி தோற்றம் எவ்வாறு மெனக் கூறு கின்றார் :—

(சு-ம்) பிரகிருதிக்கு மேற்பட்ட புருஷன் (அக்குணவடிவப்) பிரகிருதியினின் றுண்டாகிய குணங்களை (முக்குணவடிவ சப்த ஸ்பரிசாதிகளை)ப் புசி (அநுபவி)க் கின்றான். (எ-று)

பிரகிருதியின் மூலமாக வந்தவன் பரனுயினும் அசங்கனுயினும் தேகாதி பஞ்சகமான புரியில் வசிக்கின்றான் என்பதனுல் புருஷனு கின்றான். எப்படி நிரவயவமாயினும் ஆகாசம் நீர்க்குடத்தில் வசிப்பதாய் நீரின்அசைவு முதலியவற்றால் அசைகின்றதோ, அதுபோலவாம். இம்மகாகாசமோ அசைகிறதில்லை. பிரதிபிம்பாகாசமு மில்லை, அதனின் விச்சின்னதேசமாம். அஃதசையுங்கால் மகாகாசத்தில் அசைதற் பிரசக்தியே யில்லை. ஆதலால் சரீரவாசமாத்திரத்தினுல் அதனின் வெளிப்பட்டவனை ஆத்மாவுக்குக் குணத்தினைப் புசிக்குந்தன்மை எவ்வாறுமெனின் கூறப்படுகின்றது :—

முதலில் பிம்பப் பிரதிபிம்ப மிரண்டற்கும் விச்சின்னதேசம். தேசத்திருத்தற்றன்மை யில்லை. ஜலாதி யுபாதியினை யடைந்து அங்கிருப்பதான பலமுடைய சூரிய வொளியினுல் சில நீர்த்தாரைகள் பிரவர்த்திக்கப்பட்டனவரய்ப் பிம்பத்தினையே கிரகிக்கின்றன. முந்திய பிரவிருத்தி சம்ஸ்காரத்தினுலோ தனது தேசத்திருப்பதனையும் சுகமாக அகண்ட புத்தியால் அதிதேசத்திருப்பதைப் போலக் கிரகிக்கின்றன ஆதலால் வாஸ்தவமாக உபாதி சம்பந்தமில்லாவிடினும், அதன் சாந்நித்திய (சமீபத்தன்மை) மாத்திரத்தால் விகாரப் படாததாயினும் விகாரப்படுவதுபோல விளங்குகின்றது. அதனுல் மூடதிருஷ்டியினுலேயே புருஷன் பிரகிருதியினுலாம் குணங்களைப் புசிக்கின்றான் என்றும், சுத்த திருஷ்டியினுல் புசிக்கிறதில்லை யென்றும் கொள்ளுக. (கூ0)

गुणैस्त्रिभिरियं देहे बध्नाति पुरुषं दृढम् ।

[கூஉஅ] (அ-கை) இவ்வித்தையினையே உபஜீவித்துப் பிரகிருதி புருஷனைக் கட்டுகிற தென்று கூறுகின்றார் :—

(சு-ம்) இது (பிரகிருதி) (சத்துவ ரஜஸ் தமசுகளான) மூன்று குணங்களால் புருஷனை (தேகாபிமானியை)த் தேகத்தில் (தூண்

களில் பசுக்களைப்போல தேகங்களான பாசங்களால்) திடமாகக் கட்டுகின்றது. (எ-று)

'திடமாக' என்பதனுல் பூர்வ பூர்வ வாசனையால் உத்தரோத்தர சரீரப்பிராப்தியின் விச்சேதமின்மையால் பந்தத்திற்குச் சேதித்தற் கரிய தன்மை காட்டப்பட்டதாம்.

यदा प्रकाशः क्षान्तिश्च वृद्धे सत्त्वे तदाऽधिकम् ॥ ३१ ॥

(அ-கை) அவற்றுள்ளும் இரஜசும் தமசும் பந்தஹேதுக்களாம். சத்துவம் பந்தத்தினைச் சேதிப்பதாமென்றறிவிக்கும் விருப்பத்தால் குணகாரியங்களைப் பிரிக்கின்ருர் :—

(சு-ம்) எக்காலத்தில் பிரகாசமும் (எல்லா வஸ்துக்களையும் விஷயிக்கும் உண்மையான நல்லறிவும்), சாந்தியும் (க்ஷோபஹேதுக்களினும் சித்தம் விகாரப்படாமையும்) விருத்தியடைந்தனவோ அப்போது சத்துவகுணம் அதிகபட்டதென்றறிக. (எ-று) (கூக)

लोभोऽशमः स्पृहाऽऽरम्भः कर्मणां रजसो गुणः ।
मोहोऽप्रवृत्तिश्चाज्ञानं प्रमादस्तमसो गुणः ॥ ३२ ॥

[கூஉகூ] (அ-கை) இரஜசு தமசுகளின் காரியங்களைப் பிரிக்கின்ருர் :—

(சு-ம்) லோபம் (தனுதியில் கர்வம்), அசமம் (அர்த்தம் கிடைத்த போதும் திருப்தி யின்மை), ஸ்பிருஹை (அதிகாபிலாசை), கர்மங் (கிருகக்ஷேத்திராதி) களின் ஆரம்பம் (செய்கை) என்பன இரஜசின் குணமாம் (இரஜோகுண பரிணுமமாம்). மோகம், தர்மாதியில் புத்தியின் பிரவிருத்தியின்மை, அஞ்ஞானம் (வஸ்துதத்துவப் பிரகாசமின்மை), பிரமாதம் (மறதி) என்பன தமசின் குண(தமோகுண பரிணும)ங்களாம். (எ-று) (கூஉ)

सत्त्वाधिकः सुखं ज्ञानं कर्मसङ्गं रजोधिकः ।
तमोधिकश्च लभते निद्राऽऽलस्यं सुखेतरत् ॥ ३३ ॥

[கூகூ0] (அ-கை) மூன்றன் முக்கியகாரியங்களைக் கூறுகின்ருர் :—

(சு-ம்) சத்துவமதிகரித்தபோது சுகத்தினையும் ஞானத்தினையும், இராஜசு அதிகமானபோது கர்மசங்கத்தினையும், தமசு அதிகமானபோது நித்திரையினையும் சோம்பலையும் துக்கத்தினையும் (மௌட்டிய மெனப்படுவதையும்) பெறுகின்றான். (எ-று) (௯௩)

एषु त्रिषु प्रवृद्धेषु मुक्तिसंसृतिदुर्गतीः ।
प्रयान्ति मानवा राजंस्तस्मात्सत्त्वयुतो भव ॥ ३४ ॥

[௯௩௧] (அ-கை) குணகாரிய விபாகத்தின் பயனைக் கூறுகின்றார் :—

(சு-ம்) இவை மூன்றும்மிக வதிகரித்தபோது மனிதர்கள் சத்துவத்தால் முக்தியையும், இராஜஸால் சம்சாரத்தினையும், தமசால் துர்க்கதியினையும் அடைகின்றனர். ஆதலால் அரசனே! (மோக்ஷார்த்தியான நீ இராஜசு தமசு இரண்டினையும் விட்டு) சத்துவமுடையவனாய் (சத்துவம் மிகவு மதிகரிக்கச்செய்). (எ-று)

சத்துவமதிகரிக்கச் செய்தலால் நிரதிசயமான சத்துவோத்கர்ஷத்தில் என்னையறிந்து முக்தனாவாய் என்பது கருத்து. (௯௪)

ततश्च सर्वभावेन भज त्वं मां नरेश्वर ।
भक्त्या चाऽव्यभिचारिण्या सर्वत्रैव च संस्थितम् ॥ ३५ ॥

[௯௩௨] (அ-கை) சத்துவவிருத்தி ஹேதுவினைக் கூறுகின்றார் :—

(சு-ம்) நரேசுவரனே! (எதனால் சத்துவ விருத்தியினதீனமாய் முக்தியிருக்கின்றதோ) அதனாலேயே நீ (சத்துவவிருத்தியின் பொருட்டு) எங்குமே (சர்வபூதங்களிலும்) இருப்பவனான என்னை வியபிசாரமின்றிய பக்தியால் சர்வபாவத்தாலும் (பிரஹ்மமே இவ்வெல்லா மென்னும் புத்தியாகிய எல்லாவித பாவத்தினாலும்) பஜிப்பாயாக. (எ-று)

அவ்யபிசாரியான பக்தியாவது பிராணிமாத்திரத்தினைத் தனதொப்பாகக் காண்டல்! 'நரேசுவரனே (சர்வஜகத்தினையும் பரிபாலிக்கும் அதிகாரியே)! இந்தச் சாதனத்தினால் ஜகத்தினைப் பரிபா

லித்தலாகிய அதுவே எனது பஜனமாம். அதனுலேயே சத்துவ விருத்தியாகி, உள்ளவாறுன பிராப்தியும் சித்திக்கு மென்பது கருத்தாம். (கூ௫)

अग्नौ सूर्ये तथा सोमे यच्च तारासु संस्थितम् ।
विदुषि ब्राह्मणे तेजो विद्धि तन्मामकं नृप ॥ ३६ ॥

[கூகூகூ] (அ௯-க) முற்கூறியவித பஜனத்தில் அசக்தனுனவனைக் குறித்து வேறுவிதமான பஜனத்தினைக் கூறுகின்றுர் :—

(சு-ம்) எது (அர்த்தத்தினை விளக்கும் சக்தி) அக்கினியினும், சூரியனிடத்தும், சந்திரனிடத்தும், (சுக்கிரன் பிருகஸ்பதிமுதலிய) தாரகை (கிரகங்) களினும், ஞானியினிடத்தும், பிராஹ்மண (பிரஹ்மநிஷ்ட) னிடத்தும், செவ்வையாய்ப் பொருந்தியிருக்கின்றதோ, அவ்வெல்லாத் தேஜஸையும் என்னதென்றறி. (எ-று)

எனது அநுக்கிரகத்தினுலேயே இவ்வர்த்தத்தினைப் பிரகாசிக்கின்றது, ஜடமாதலால் தானுக அறிகிறதில்லை என்பது கருத்து.

அக்கினியாதிகளினுள்ள அர்த்தப்பிரகாசன சக்தி லோகப்பிரசித்தமாம். அத்தியாத்மமோ அக்னியினு லநுக்கிரகிக்கப்பட்ட வாக்கில் சப்தார்த்தப் பிரகாசன சக்தியாம். சூரியனு லநுக்கிரகிக்கப்பட்ட சக்ஷுவினும், சோமனு லநுக்கிரகிக்கப்பட்ட மனதினும், பிருகஸ்பதி முதலியோரா லநுக்கிரகிக்கப்பட்ட புத்தி முதலியவற்றினும், வித்துவானிடத்தும், பிரஹ்மநிஷ்டனிடத்தும் முக்காலத்துப் பொருளைப் பிரகாசிக்கும் சக்தியாம். (கூசு)

अहमेवाखिलं विश्वं सृजामि विसृजामि च ।
ओषधीस्तेजसा सर्वा विश्वं चाप्याययाम्यहम् ॥ ३७ ॥

[கூகூச] (அ-கை) இவ்வாறுகவே ஜடங்கட்குச் சாங்கியனைப்போல சித்தின் வேறுன இருப்பு வாய்த்த விடத்தும் அவற்றிற்கும் தன்னின் வேறுகாமையைக் கூறுகின்றுர் :—

(சு-ம்) (எப்படி நால்வகைப்பிராணி சமூகம் தன்னினின்றுக்குகின்றதோ, தன்னிலேயே மறையச்செய்கின்றதோ, ஸ்திதி காலத்தில்

தனக்கே போஷிக்கின்றதோ அதுபோல) யானே (ஆகாயாதி) இவ் வெல்லாவற்றினையும், எல்லா ஒஷதிகளையும் (அங்கமாகிய போஜ்யத் தினையும்), எல்லா விசுவ (போக்திருவர்க்க) த்தினையும் சிருஷ்டிக் கின்றேன், மறைக்கின்றேன், போஷிக்கின்றேன். (எ-று)

இதனால் ஜடமும் என்னைவிட வேறல்ல வென்பது காட்டப் பட்டது. (கூஎ)

सर्वेन्द्रियाण्यधिष्ठाय जाठरं च धनंजयम् ।
भुनज्मि चाखिलान्भोगान्पुण्यपापविवर्जितः ॥ ३८ ॥

[கூகூ] (அ-கை) சம்சாரத்தில் சேதனரூபமும் யானே என்று கூறுகின்றார் :—

(க-ம்) (சுரோத்திராதி ஞானகரணங்களும் வாக்காதிகர்ம கரணங்களும் எல்லாவற்றையும் அநுக்கிரகிப்பதான மனதுமான) எல்லா விந்திரியங்களையும், ஜாடராக்கினியையும் (அவ்வவ் விந்திரியா நுக்கிராஹக தேவதா ரூபமாக) அதிஷ்டித்து (அநுக்கிரகித்து) எல் லாப்போக (சப்தாதி சரீராந்தமான விஷய) ங் களையும் யானே புசிக் கின்றேன் (இவ்வாறு புசிப்பவனாயினும்) புண்ணியபாபங்களினின் றும் (போக பலன்களான சுகதுக்கங்களினின்றும்) நீங்கியவனாயிருக் கின்றேன். (எ-று)

ஒருவனுக்கே போக்திருத்துவம் எவ்வாறுமெனின், கூறப் படுகின்றது :- கட்டையில் வியாபித்திருப்பதான அக்கினிக்குக் கட்டையினை யெரிக்குந்தன்மை கடையுமிடத்திற்றான் காணப்படு கின்றது. அதுபோலச் சர்வவியாபகனான எனக்கு வியக்தமான தேகேந்திரியாதி தாதாத்மிய முடையவனானபோது போக்திருத்துவ மாம்; இயல்பாக இல்லை யென்று கொள்ளுக. (கூஅ)

अहं विष्णुश्च रुद्रश्च ब्रह्मा गौरी गणेश्वरः ।
इन्द्राद्या लोकपालाश्च ममैवांशसमुद्भवाः ॥ ३९ ॥

[கூகூ] (அ-கை) அவ்வவ் விந்திரியங்களை யநுக்கிரகிக்கும் தேவதாரூபத்திற்கும் மமதை போக்திருத்துவமுண் டென்னு மபிப் பிராயமாகக் கூறுகின்றார் :—

(சு-ம்) (சுத்தப்பிரஹ்மமேயா யிருக்கும் மகாகணபதியாகிய) யான் (மாயாவியான) விஷ்ணுவும் (மாயையின் முதற்காரியமான அகங்காரத்தின் அதிஷ்டாதாவான) ருத்திரனும், பிரஹ்மாவும், ("அந்த இத் திரயீயே (வேதமே) வித்தை தபசு" (மகாநா-உ-கஉ) என்னும் சுருதியினால் வேத மூன்றன் வடிவமாயிருத்தலால் பிரஹ்ம சப்தத்தாற் சொல்லப்படுவதான சூரியனும்), (கிரியாசக்தியாகிய) கௌரியும், கணேசுவரனுமாயிருக்கின்றேன். இந்திராதி லோக பாலகர்களும் எனதம்சத்தினாலேயே உண்டானவராவர். (எ-று)

விஷ்ணு ருத்திரன் என்பதனால் ஆநந்தமய விஞ்ஞானமய கோசங்க ளிரண்டும் சொல்லப்பட்டனவாம். பிரஹ்மாவென்பது மனோமய கோசமாம்; "அதற்கு (மனோமயகோசத்திற்கு)யஜுஸே சிரமாம். இருக்கு வலது இறகாம். சாமம் இடதுபக்ஷமாம்; ஆகாசம் ஆத்மா; அதர்வாங்கிரசன் புச்சமான (வாலாகிய பிரதிஷ்டையாம்." (தை-உ-ஙு-க) என்று வேதமயத்துவம் கேட்கப்படுதலால் அதற்கு பிரஹ்ம சப்தவாச்சியார்த்துவமாம். கௌரியென்பதனால் கிரியாசக்தியுடைய பிராணமயகோசம் சொல்லப்படுகின்றது.

கணமென்பது பாஞ்சபௌதிகதேகம்; முந்திய ஐந்தினாலும் அநுப்பிரவேசிக்கப்பட்டதான அதன் ஈசுவரன் (அபிமானி) கணேசுவரன் யான் மனிதன், பிராஹ்மணன், கர்த்தா, போக்தா என்னு மபிமானமய கோசமாம்.

தனித்தனி சமஷ்டி வியஷ்டி வடிவத்தால் வெவ்வேறுகளான ஐந்து கோசங்களால் ஆத்மாவினை விரித்து நிற்கின்றேன் என்பது முற்பாதியின் பொருளாம்.

இந்திராதியர் என்பதனால் பிரத்தியக்கின் வேறான சேதன தேவதைகள் எவர்களோ பிரசித்தரான அவர்களும் யானே என்றதாம்.

ஆத்மாநாத்ம வடிவ சகலத்துவைதமும் சின்மாத்திரத்தினும் வேறல்லாததேயா மென்றநுசந்திக்கத் தக்கதா மென்பது கருத்து. அவ்வாறே "வெகுவாய்ச் சொல்லி யென்னை இங்கு யான் அத்வய சாசனத்தினைச் சுருக்கமாகச் சொல்லுகின்றேன் கேள். சகல வாக்கு

மனதினுல் போக்குவரத்தாம் அவ்விரண்டினுல் சகலவாக்கு மன வியவ காரம்பெறுவதாம்" என்னும் பெரியோர் வாக்கு முளது. (கூசு)

येन येन हि रूपेण जनो मां पर्युपासते ।
तथा तथा दर्शयामि तस्मै रूपं सुभक्तितः ॥ ४० ॥

[கூகூஎ] (அ-கை) இவ்வாறு எல்லா நாமரூபத்திற்கும் சின்மாத்திரத்துவம் நிலைக்கவே எந்தரூபம் எவனுல் பக்தியோடு உபாசிக்கக் படுகின்றதோ அந்த ஸ்வரூபமாக அவனுக்குத் தனதாத்மாவினைக் காட்டுகின்றேன் என்று கூறுகின்ருர்:—

(கூ-ம்) எந்தெந்த ரூபத்தினுல் ஜனங்கள் நல்ல பக்தியோடு என்னை யுபாசிக்கின்றனரோ, அவர்கட்கு அந்தந்தவிதமான ரூபத்தினைக் காட்டுகின்றேன். (எ-று)

பக்தியின் நன்மையாவது சாத்துவிகத்தன்மையாம். இரஜஸ் தமோமயமான பக்தி அவ்வவ்விஷயத்தினையே கோசரிக்கும். என்னையோ சாத்துவிகமான பக்தியொன்றே கோசரிக்கு மென்பது கருத்தாம். (சO)

इति क्षेत्रं तथा ज्ञाता ज्ञानं ज्ञेयं मयेरितम् ।
अखिलं भूपते सम्यगुपपन्नाय पृच्छते ॥ ४१ ॥

[கூகூஅ] (அ-கை) அத்தியாயார்த்தத்தினை முடிக்கின்ருர்:—

(கூ-ம்) பூபதியே! சரணடைந்து கேட்பவனுகிய உனக்கு இவ்வாறு க்ஷேத்திரமும் அவ்வாறே ஞாதா ஞான ஞேயமுமான யாவும் என்னுல் சொல்லப்பட்டது. (எ-று) (சக)

ॐ तत्सदिति श्रीमद्गणेशगीतासूपनिषदर्थगर्भासु योगामृतार्थशास्त्रे श्रीगणेशपुराणे उ० श्रीगजाननवरेण्यसंवादे क्षेत्र क्षेत्रज्ञविवेकयोगो नाम नवमोऽध्यायः ॥ ९ ॥

க்ஷேத்திர க்ஷேத்திரஞ்ஞ விவேகயோகம்
என்னும்
ஒன்பதாமத்தியாயம்
முடிந்தது.

## பத்தாமத்தியாயம்
## உபதேச யோகம்.

श्रीगजानन उवाच ॥

दैव्यासुरी राक्षसी च प्रकृतिस्त्रिविधा नृणाम् ।
तासां फलानि चिह्नानि संक्षेपात्तेऽधुना ब्रुवे ॥ १ ॥

[௯௯௯] (அ-கை) நல்லபக்தியோடு என்று உத்தம பக்திக்கு ஆத்மதரிசனப் பிரயோஜனத்தன்மை கூறப்பட்டது. அங்கு விபக்ஷ பரிகாரத்தின் பொருட்டுப் பத்தாமத்தியாயத்தினை ஆரம்பிக்கின்றார். அங்குத் தாமே ஸ்ரீகஜானனர் கருணையினாற் சொல்லலாயினர் :—

(சு-ம்) நரர்களுக்குப் பிரகிருதியானது தைவீ, ஆசுரீ, ராக்ஷஸீ என்று மூன்றுவிதமாம். அவற்றின் பயன்களையும் இலக்ஷணங்களையும் இப்போது உனக்குச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். (எ.று)

எதனால் கர்மங்களை மிகுதியாகச் செய்கின்றானோ அது பிரகிருதியாம். முந்திய பாவனையாலாம் சம்ஸ்காரசம்பத்து. அது, சாத்துவிகமானது தைவீயாம்; இராஜஸதாமஸங்கலந்ததான பிரவிருத்திப் பிரதானமானது ஆசுரீயாம். அதுவே ஹிம்ஸையினைப் பிரதானமாயுடையதாயின் இராக்ஷஸீயாம். (க)

आद्या संसाधयेन्मुक्तिं द्वे परे बन्धनं नृप ।

[௯௬௦] (அ-கை) அவற்றுள், பயன்களையே அரைச்சுலோகத்தினாற் கூறுகின்றார் :—

(சு-ம்) முதலாவது முக்தியினைச் செவ்வையாய்ச் சாதிப்பிக்கும். மற்றிரண்டும் அரசனே! பந்தனமாம். (எ-று)

மோக்ஷார்த்தி முதலாவதான தைவீசம்பத்தினையே ஆசிரயிக்க வேண்டு மென்பது பொருள். ஆசுரீ ராக்ஷஸீயென்னு மிரண்டும் பந்தஹேதுக்களாதலால் தொடலாகா தென்பது கருத்து.

चिह्नं ब्रवीमि चाद्यायास्तन्मे निगदतः शृणु ॥ २ ॥

(அ-கை) முதலாவதன் இலக்ஷணத்தினைக் கூறப் பிரதிஞ்ஞை செய்கின்றார் :—

(சு-ம்) முதலாவதன் இலக்கணத்தினைச் சொல்லுகின்றேன் சொல்லுவோனாகிய எனது அவ்வார்த்தையினைக் கேள். (எ-று)

கேட்பவனாயிருக்கவும் கேள் என்று பிரேரித்தல் சாரவடிவமான இவ்வாக்கியத்தில் அத்தியந்தம் கவனமுடையவனாகுக என்றற் பொருட்டேயா மென்பது பொருள். (உ)

तेजोऽभयमहिंसा च क्षमा शौचममानिता ।
अपैशुन्यं दयाऽक्रोधोऽचापल्यं धृतिरार्जवम् ॥ ३ ॥
इत्यादि चिह्नमाद्याया आसुर्याः शृणु सांप्रतम् ।

[கஉக] (அ-கை) கூறியதனையே கூறுகின்றார் :—

(சு-ம்) தேஜஃ (சங்கடத்திலும் தீனத்துவமின்மை) அபயம் (பயஹேதுக்களான யுத்த முதலியவற்றிற் கஞ்சாமை), அஹிம்ஸையும், (காய மனோவாக்குக்களால் பிறரைத்துன்புறுத்தாமை, உம்மையால் அதன் விபரீதமாகக் காயவாக்கு மனதுகளால் பிறருக்குச் சுகத்தை யுண்டுபண்ணுதல்), க்ஷமை (க்ஷோபத்திற் கேதுவிருக்கினும் அதனை யுண்டுபண்ணாமை), சௌசம் (காயசுத்தியும் மனச்சுத்தியும்), அமானித்துவம் (யானே பெரியவனென்று தன்னை மதிக்குந் தன்மை யின்மை), பிசுனத்துவ மின்மை (பிறர் அபவாதமின்மை), தயை (உபாதியின்றிய பிறர் துயர் நீக்குமிச்சை), குரோதமின்மை (பிறருக்கு இஷ்டமில்லாததனைச் செய்யாமை), அசாபல்யம் (கைகால்களின் பரபரப்பின்மை), திருதி சாத்துவிகமான உற்சாகங்களை யுண்டுபண்ணுதல்), ஆர்ஜவம் (கபடமின்மை) என்றல் முதலியன முதலாவதன் (தைவீசம்பத்தின்) இலக்ஷணமாம். இப்போது ஆசுரீசம்பத்தின் இலக்ஷணத்தினைக் கேள். (எ-று)

முதலியன என்பதனால் குருசாஸ்திராதிசேவனம் கொள்ளப்படும். (௩)

अतिवादोऽभिमानश्च दर्पोऽज्ञानं सकोपता ॥ ४ ॥

[௩.௪உ] (அ-கை) அதனையே கூறுகின்றார் :—

(சு-ம்) அதிவாதம் (தனது மேன்மையை வெளிப்படுத்தல்), அபிமானம் (யானே இவ்வுலகத்தில் பெரியவனென்னும் புத்தி) தர்ப்பம் (கர்வம்), அஞ்ஞானம் (தர்மத்தில் அதர்மபுத்தியும், அதர்மத்தில் தர்மபுத்தியும், இதங்களில் அஹிதபுத்தியுமான விபரீத ஞானம்), கோபமுடைமை (இதனால் அசூயை ஈரிஷை மாத்ஸரிய முதலியனவும் கொள்ளப்படும்) என்னு மிவைமுதலியன நிருபனே! ஆசுர்யப் பிரகிருதியின் இலக்ஷணங்களாம். (எ-று)

முதலியன வென்பதனால் பண்டிதர் முதலியோர்களிடத்துத் துச்சபுத்தியும், தேவாதிகளில் சிரத்தாதியின்மையும் கொள்க. (௪)

एवमाद्यानि चिह्नानि आसुर्याः प्रकृतेर्नृप ।
निष्ठुरत्वं मदो मोहोऽहंकारो गर्व एव च ॥ ५ ॥

द्वेषो हिंसाऽदया क्रोध औद्धत्यं दुर्विनीतता ।
आभिचारिककर्तृत्वं क्रूरकर्मरतिस्तथा ॥ ६ ॥

अविश्वासः सतां वाक्येऽशुचित्वं कर्महीनता ।
निन्दकत्वं च वेदानां भक्तानामसुरद्विषाम् ॥ ७ ॥

मुनिश्रोत्रियविप्राणां तथा स्मृतिपुराणयोः ।
पाखण्डवाक्ये विश्वासः संगतिर्मलिनात्मनाम् ॥ ८ ॥

सदम्भकर्मकर्तृत्वं स्पृहा च परवस्तुषु ।
अनेककामनावत्त्वं सर्वदाऽनृतभाषणम् ॥ ९ ॥

परोत्कर्षासहिष्णुत्वं परकृत्यपराहतिः ।
इत्याद्या बहवश्चान्ये राक्षस्याः प्रकृतेर्गुणाः ॥ १० ॥

[௫௧-௫௪அ] (அ-கை) இராக்ஷஸீ சம்பத்தினை ஐந்தரைச் சுலோகங்களாற் கூறுகின்றார் :—

(சு-ம்) நிஷ்டுரத்தன்மை, மதம், மோகம், அகங்காரம், கர்வம், ஆவேஷம், ஹிம்ஸை, தயை யின்மை, குரோதம், துடுக்குத்தன்மை, புரட்டுத்தன்மை, மாரணமுதலியவற்றைச் செய்யுந்தன்மை, குரூரச் செய்கையில் பிரியமுடைமை, சத்துருக்களின் வாக்கியத்தில் விசுவாச மின்மை, அசுசித்தன்மை, கர்மஹீனத்துவம், வேதங்களையும் பக்தர் களையும் தேவர்களையும், தியான நிஷ்டரான முநிகளையும், அங்கங் களோடு வேதாத்தியயனஞ் செய்துள்ளவரான சுரோத்திரியர்களை யும், காவியகர்த்தாக்களான விப்பிரர்களையும், அவ்வாறே ஸ்மிருதி புராணங்களையும் நிந்திக்குந்தன்மையும், பாஷண்டர் (வேதபாகியர்) வாக்கியத்தில் விசுவாசமும், மலினாத்மாக்களின் கூட்டுரவும், இடம்பத் தோடு கர்மங்களைச் செய்யுந்தன்மையும், பிறர்பொருட்களிலாசையும், அநேக காமனை (இச்சை) களுடைமையும், எப்போதும் பொய் பேசுதலும், பிறர் மேன்மையைச் சகியாமையும், பிறர் செய்ததை யழித்தலுமான இவை முதலிய மற்று மநேகங்கள் இராக்ஷஸீ பிர கிருதியின் குணங்களாம். (எ.று)

முதலிய என்பதனுல் துராக்கிரக முதலியன கொள்ளப்படும். மற்று மநேகங்களென்பதனுல் பொய் நிர்பந்த முதலிய மகாபாதக உபபாதக முதலியனவும் கொள்ளப்படும். (ரு-க௦)

पृथिव्यां स्वर्गलोके च परिवृत्य वसन्ति ते ।
मद्भक्तिरहिता लोका राक्षसीं प्रकृतिं श्रिताः ॥ ११ ॥

[ருசகக] (அ-கை) இராக்ஷஸீ பிரகிருதியினை ஆசிரயித்தவர் களான அவர்கள் ஸ்வர்க்கத்திலும் வசிக்கின்றனரென்று கூறுகின் ருர்:—

(சு-ம்) எனது பக்தியின்றியவர்களாய் இராக்ஷஸீ பிரகிருதி யினை ஆசிரயித்தவர்களான அந்த ஜனங்கள் பூமியிலும் சுவர்க்கத்தி லும் சுழன்று (போக்குவரத்துடையவர்களாய்) வசிப்பர். (எ-று)

இராக்ஷஸர்களுக்கு ஸ்வர்க்ககதி எவ்வாறுமென்னு மாசங்கை நீக்குதற்குப் ‘பக்தியில்லாதவர்களாய்’ என்றதாம். பக்தியாவது என்னிடத்துச் சர்வகர்மமும் அர்ப்பித்தல். அஃதில்லாதவர்கள் கேவ லம் காமிய கர்மநிஷ்டையால் ஸ்வர்க்கத்தினை யடைந்தவர்களாயினும்

இராகத்துவேஷாதி துர்வாசனைகளின் வசப்பட்டவர்களாய், அங்கும் இராக்ஷஸீவாசனையினால் முக்தராகார் என்பது பொருள். (கக)

तामसीं ये श्रिता राजन्यान्ति ते रौरवं ध्रुवम् ।
अनिर्वाच्यं च ते दुःखं भुञ्जते तत्र संस्थिताः ॥ १२ ॥
दैवान्निःसृत्य नरकाज्जायन्ते भुवि कुब्जकाः ।
जात्यन्धाः पङ्गवो दीना हीनजातिषु ते नृप ॥ १३ ॥
पुनः पापसमाचारा मय्यभक्ताः पतन्ति ते ।
उत्पतन्ति हि मद्भक्ता यां कांचिद्योनिमाश्रिताः ॥ १४ ॥
लभन्ते स्वर्गतिं यज्ञैरन्यैर्धर्मैश्च भूमिप ।

[கஉ-கரு௲] (அ-கை) இத் தர்மத்தினின்று தாமஸீ சம்பத்தின் பயனைக் கூறுகின்றார் :—

(இ-ம்) அரசனே! தாமஸீ சம்பத்தினை யாசிரயித்தவர்கள் எவர்களோ அவர்கள் சாசுவதமான ரௌரவ நரகத்தினை யடைகின்றனர்; அவர்கள் சொல்லமுடியாத துக்கத்தினை அநுபவிக்கின்றனர். அதில் கிடப்பவர்கள் ஊழால் அந்நரகத்தினின்று வெளிப்பட்டுப் பூமியில் அவர்கள் கூனரும், பிறவிக்குருடரும், முடவரும், தீனரும் (ஆசையாற் றாழ்ந்தவரும்) தாழ்ந்தஜாதிகளிலுமாகப் பிறக்கின்றனர். அரசனே! மறுபடியும் அவர்கள் பாபாசாரர்களாய் என்னிடத்துப் பக்தியில்லாதவர்களாய் வீழ்கின்றனர். எனது பக்தர்கள் யாதேனுமோர் யோனியினை யாசிரயித்தவர்களாய் மேற் செல்லுகின்றனர். பூமிபனே! யஞ்ஞங்களாலும் பிறதர்மங்களாலும் ஸ்வர்க்க கதியினைப் பெறுகின்றனர். (எ-று)

எனது பக்தியின்றியவர்கள் கஷ்டமான அதோகதியடைவர். எனது பக்தியுடையவர்கள் பிரயாதத்தினால் மகாபாபிகளாயினும், ஏறுதற்கிரமத்தால் லோக மூன்றற்கும் மேலான எனது பதத்தினை யடையவே செய்வர்; பக்தி மாகாத்மியத்தினாலேயே மேல் மேல் பெறப்பட்ட சத்வாசனையிருத்தலின் என்றதாம். அவ்வாறே பகவா

னால் "சீக்கிரம் தர்மாத்மாவாகின்றான் நீண்ட சாந்தியினை யடைகின்றான். குந்தி புத்திரனே! எனது பக்தன் எவ்விதத்தாலும் கெடானென்று அறி" என்று சொல்லப்பட்டுளது. (கஉ-கச)

सुलभास्ताः सकामानां मयि भक्तिः सुदुर्लभा ॥ १५ ॥

विमूढा मोहजालेन बद्धाः स्वेन च कर्मणा ।
अहं हन्ता अहं कर्ता अहं भोक्तेति वादिनः ॥ १६ ॥

अहमेवेश्वरः शास्ता अहं वेत्ता अहं सुखी ।
एतादृशी मतिर्नृणामधः पातयतीह तान् ॥ १७ ॥

तस्मादेतत्समुत्सृज्य दैवीं प्रकृतिमाश्रय ।
भक्तिं कुरु मदीयां त्वमनिशं दृढचेतसा ॥ १८ ॥

[கநக-கநரு] (அ-கை) ஆதலால் இவ்விதமான பக்தி பெரும் பயனுள்ளதாம். ஆதலால் மிகத் துர்லபமாமென்று கூறுகின்றார் :—

(க-ம்) சகாமர்களுக்கு அவை (ஸ்வர்க்க கதிகள்) சுகமாகப் பெறப்படுவனவாம். என்னிடத்தில் நிஷ்காமமான பக்தியோ மிகத் துர்லபமாம். (கரு) (பக்திஹீனர்களான, விசேஷ மூடர்கள் (புத்திர களத்திர வித்தாதி சிநேகத்தினால் பரமார்த்தவிஷயத்தில் மனதின்மையாகிய) மோகவலையாலும், தமது புண்ணியபாப கர்மத்தினாலும் பந்த (தம்ப தர்ப்பாதிகளால் விழுங்க) ப்பட்டவர்களாய், யான் கொல்லுகிறவன், யான் கர்த்தா, யான் போக்தா வென்னும் வாதிகளாய், (கசு) யானே ஈசுவரன், ஆளுவோன், யான் அறிபவன், யான் சுகி யென்று கருதுகின்றனர். இத்தன்மைய (தர்ப்பாதிகளோடு கூடிய) புத்தி நரர்களுக்கு அவர்களை நரகத்திற் செலுத்துவதாம். (கஎ) [எதனால் இவ்வாறு தைவீ ஆசுரீ ராக்ஷஸீ சம்பத்துக்களுக்கு வெவ்வேறு வகையான விபாக (கர்மபல) முளதோ] அதனால் இதனை (விரோதமுடைய வியாபகமுள்ள சம்பத்திரண்டனையும்) விட்டுத் தைவீகப் பிரகிருதியினை (சம்பத்தினை) ஆசிரயி. திடசித்தத்தினால் எப்போதும் எனது பக்தியினைச் செய். (கரு-கஅ)

सापि भक्तिस्त्रिधा राजन्सात्त्विकी राजसीतरा ।
यद्देवान्भजते भक्त्या सात्त्विकी सा मता शुभा ॥ १९ ॥

[கூ௯௯] (அ-கை) பக்திக்கும் மூவகைமையினைக் கூறுகின்றார் :—

(சு-ம்) அந்தப் பக்தியும் அரசனே! சாத்துவிகி, இராஜஸீ, தாமஸீ யென்று மூவகையினதாம். தேவர்களைப் பக்தியினால் பஜிப்பது எதுவோ, அது சுபமான சாத்துவிகீ யென்று கொள்ளப்பட்டதாம் (மோக்ஷஹேதுவாதலால்). (எ-று) (௧௯)

राजसी सा तु विज्ञेया भक्तिर्जन्ममृतिप्रदा ।
यद्यक्षांश्चैव रक्षांसि यजन्ते सर्वभावतः ॥ २० ॥

[கூ௯எ] (அ-கை) இராஜஸீ பக்தியினைக் கூறுகின்றார் :—

(சு-ம்) யாதொரு உலகம் எல்லாபாவத்தோடும் (பூர்ணபக்தியோடு) இயக்கர்களையும் அரக்கர்களையுமே பஜிக்கின்றதோ, அது (மோக்ஷத்தினைத் தருவதாகாது) ஜனன மரணப் பிரவாகத்தினையே மிகுதியாகத் தருவதான இராஜஸீ பக்தி யென்று அறியத்தக்கதாம். (எ-று) (௨0)

वेदेनाविहितं क्रूरं साहंकारं सदम्भकम् ।
भजन्ते प्रेतभूतादीन्कर्म कुर्वन्ति कामुकम् ॥ २१ ॥

शोषयन्तो निजं देहमन्तःस्थं मां दृढाग्रहाः ।

[கூ௯அ-கூ௯௯] (அ-கை) தாமஸீ பக்தியினை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார் :—

(சு-ம்) வேதத்தில் விதிக்கப்படாத (உள்ளில்வைக்கப்பட்ட எலும்பு முதலியவற்றைச் சத்துருமாரணாதியின்பொருட்டுப் பூஜித்தல் முதலிய) குரூரமும், அகங்காரத்தோடு கூடியதும், இடாம்பிகமும், காமிகமுமான கர்மத்தினைச் செய்கின்றனர். பிரேத பூதாதிகளைப் பஜிக்கின்றனர். (சரீரக்குறை நேர்ந்தபோதும் அத்தன்மைய

விரதத்தினை விடாத) திடமான ஆக்கிரகமுடையவர்களாய் (கொடிய கடுகு பக்ஷண விரதாதியால்) தமது தேகத்தினையும் உள்ளிருக்கும் என்னையும் உலரச் செய்பவராவர். (எ-று)

எனக்குச் சம்போகப் பிராப்தியில்லையாயினும், அதனைக் காணுதலால் விசேஷமுளதா மென்பது கருத்து.

तामस्येतादृशी भक्तिर्नृणां सा निरयप्रदा ॥ २२ ॥

(அ-கை) தாமஸியின் பயனைக் கூறுகின்றார் :—

(சு-ம்) நரர்களுக்கு இத்தன்மையான தாமஸீபக்தி யெதுவோ அது நரகத்தினைத் தருவதாம். (எ-று) (உக-உஉ)

कामो लोभस्तथा क्रोधो दम्भश्चत्वार इत्यमी ।
महाद्वाराण्यवाचीनां तस्मादेतांस्तु वर्जयेत् ॥ २३ ॥

[௩௬௦] (அ-கை) அத்தியாயார்த்தத்தினை முடித்துத் தாற்பரியத்தினைக் கூறுகின்றார் :—

(சு-ம்) காமம் (இஃதெனக்குண்டாகுக வென்று தனுதிகளிலாம் கர்மமாகிய இச்சை) லோபம் (இஷ்டமானது கிடைத்தவிடத்தும் அதிக அபேக்ஷை), குரோதம் (பிறர் கேட்டிற் கேதுவான சித்த விகாரம்), இடம்பம் (தர்மத்துவஜத்தன்மை) என்னு மிந்நான்கும் நரகங்கட்கு பெருத்த வழிகளாம். ஆதலால் இவற்றினை விடவேண்டும். (எ-று) (உ௩)

ॐ तत्सदिति श्रीमद्गणेशगीतासूपनिषदर्थगर्भासु योगामृतार्थशास्त्रे श्रीगणेशपुराणे उ० श्रीगजाननवरेण्यसंवादे उपदेशयोगो नाम दशमोऽध्यायः ॥ १० ॥

உபதேசயோக மென்னும்
பத்தாமத்தியாயம்
முடிந்தது.

௨.

# பதினோராமத்தியாயம்

## குணத்திரயவிக்ருதி யோகம்.

---

**श्रीगजानन उवाच ॥**

तपोऽपि त्रिविधं राजन्कायिकादिप्रभेदतः ।

[௩௯௧-௩௯௨] (அ-கை) எப்படிப் பக்திக்குச் சாத்துவிக ராஜஸ தாமஸ பேதத்தால் மூவகைமை சொல்லப்பட்டதோ அப்படியே தபசு முதலியவற்றிற்கும் மூவகைமை கூறுகின்றார். சாத்துவிகங்களின் கொள்ளத்தக்க தன்மையினையும், இராஜஸ தாமஸங்களின் தள்ளத்தக்க தன்மையினையும் காட்டுபவராய் ஸ்ரீகஜானனர் சொல்லலாயினர் :—

(சு-ம்) அரசனே! தபசும் காயிகாதி (வாசிகமானஸிக) பேதத்தால் மூவகையினதாம்.

ऋजुतार्जवशौचानि ब्रह्मचर्यमहिंसनम् ॥ १ ॥

गुरुविज्ञद्विजातीनां पूजनं चासुरद्विषाम् ।

स्वधर्मपालनं नित्यं कायिकं तप ईदृशम् ॥ २ ॥

(அ-கை) அவற்றுள், காயிகத்தினைக் கூறுகின்றார் :—

(சு-ம்) ருஜுத்துவம் (பனிக்காலத்தில் பிராதஃஸ்நாநாதிகளில் வக்கிரத்துவமின்மை அதாவது ஐயோ கஷ்டம் இதனை எப்படிச் செய்வது என்னும் புத்தியின் விபரீயமின்மை), ஆர்ஜவம் (அதிற்றனே சிரத்தையோடு பிரவர்த்தித்தல்), சௌசம் (மண் நீர் முதலியவற்றால் அழுக்கைப் போக்கலும், கங்காஸ்நாநாதிகளால் சுத்தியினைச் சம்பாதித்தலுமாம்) பிரஹ்மசரியம் (எண்வகை மைதுனமின்மை), அஹிம்ஸை (பிறரைவருத்தாமை), (ஆசாரியர் முதலிய) குரவர், (பிரஹ்மநிஷ்டரான) வித்வான்கள் (சுரோத்திரியரான) துவிஜாதிகள் (இருபிறப்பாளர்), அசுரத்துவேஷிகளான தேவர்கள்

என்பவர்களைப் பூஜித்தல் (பாத்தியம் அர்க்கியம் ஆசமனீயம் கந்தம் புஷ்பமுதலிய வற்ருலர்ச்சித்தல்), நித்தியம் தத்தம் வர்ணுசிரம தர்மத்தினைப் பரிபாலித்தல் என்னும் இத்தன்மையது காயிகமான சாத்துவிக தபசெனப்படும் (எ-று) (க-உ)

मर्मास्पृक्प्रियं वाक्यमनुद्वेगि हितम् ऋतम् ।

अधीतिर्वेदशास्त्राणां वाचिकं तप ईदृशम् ॥ ३ ॥

(அ-கை) வாசிகமான சாத்துவிக தபசினைக் கூறுகின்ருர் :—

(கூ-ம்) மர்மத்தினைத்தீண்டாததும், பிரியமும் (கேட்டற்கினியதும்) கொதிப்பின்றியதும், இதமானதும் சத்தியமுமான வாக்கியமும் வேதசாஸ்திரங்களை யோதுதலுமான இத்தன்மையது, வாசிகமான சாத்துவிக தபசெனப்படும். (எ-று)

இரகசியமான தோஷத்தினை வெளிப்படுத்துதல் மர்மத்தினைத் தொடுதலாம், அஃதின்றிய வாக்கியம் மர்மத்தினைத்தீண்டாததாம். (ந)

अन्तःप्रसादः शान्तत्वं मौनमिन्द्रियनिग्रहः ।

निर्मलाशयता नित्यं मानसं तप ईदृशम् ॥ ४ ॥

[நகூச] (அ-கை) மானஸீகமான சாத்துவிக தபசினைக் கூறுகின்ருர்:—

(கூ-ம்) உள்ளத்தெளிவு (வைஷம்யமான காமிய முளபோதும் மனதின் கலக்கமின்மை), சாந்தத்துவம் ஆசையின்மை), மௌனம் (தியான நிஷ்டத்துவம்), (அதன்முக்கியசாதனமான) இந்திரிய நிக்ரகம், நித்தியம் (எப்போதும்) நிர்மலாசயத்துவம் (இராகத்துவேஷங்கள் தீண்டாதசித்தமுடைமை) என்னும் இத்தன்மையது மானஸமான சாத்துவிக தபசெனப்படும். (எ-று (ச)

अकामतः श्रद्धया च यत्तपः सात्त्विकं तु तत् ।

ऋद्ध्यै सत्कारपूजाभ्यां सदम्भं राजसं तपः ॥ ५ ॥

तदस्थिरं जन्ममृती प्रयच्छति न संशयः ।

परात्मपीडकं यच्च तपस्तामसमुच्यते ॥ ६ ॥

[௧௬-௧௯] (அ-கை) இரண்டு சுலோகங்களால் சாத்துவிக ராஜஸ தாமஸங்களான தபசுகளை ஸ்வரூபத்தாலும் பலத்தாலும் பகுக்கின்றார்:—

(சு-ம்) காமமின்றியதாய்ச் சிரத்தையோடு கூடியதெதுவோ, அது சாத்துவிக தபசெனப்படும். ஆக்கத்தின்பொருட்டும் சத்கார (சர்வலோகப்பிரியதமத்துவத்தின் பொருட்டும் பூஜை (பூஜிதை) யின் பொருட்டு மான இடம்பத்தோடு கூடியதான தபசு இராஜச மெனப்படும். அது அஸ்திரமாய் (அழியும் பயனுடையதாய்) ஜனன மரணங்களை (சம்சாரத்தினை)த் தருகின்றது. சம்சயமில்லை. பிறரையும் தன்னையும் வருத்துவதான தபசுஎதுவோ அது தாமஸ மெனப் படும். (எ-று)

பிறரை வருத்துவதென்பது தாமஸ தபசின் ஸ்வரூபமும், தன்னை வருத்துவதென்பது அதன் பயனுமாம். (௫-௬)

विधिवाक्यप्रमाणार्थं सत्पात्रे देशकालतः ।
श्रद्धया दीयमानं यद्दानं तत्सात्त्विकं मतम् ॥ ७ ॥

[௧௬எ] (அ-கை) குணபேதத்தினால் தானத்தின் மூவகைமையைக் கூறுகின்றார்:—

(சு-ம்) ("சிரத்தையோடு கொடுக்கவேண்டும்" என்னும்) விதிவாக்கியமாகிய பிரமாணத்தினையே பிரயோஜனமாக வுடைய (எப் பயனையு முத்தேசியாது கொடுக்கவேண்டு மென்பதனாலேயே கொடுப்ப)தாய், (குடும்பத்தில் வருந்தும் சுரேத்திரியனான) சத்பாத்திரத்தில், தகுந்த தேசகாலத்தால் சிரத்தையோடு கொடுக்கப்படுவதான தான மெதுவே, அது சாத்துவிகமென்று கருதப் பட்டதாம். (எ-று) (௭)

उपकारं फलं वापि काङ्क्षद्भिर्दीयते नरैः ।
क्लेशतो दीयमानं वाऽभक्त्या राजसमुच्यते ॥ ८ ॥

[௧௬அ] (அ-கை) இராஜஸதானத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) பிரதியுபகாரத்தையாவது பயனை (தனதிலாபத்தினை) யாவது விரும்புகிறவர்களான நரர்களால் கொடுக்கப்படுவது அல்

லது கிலேசத்தினல் (பொருட்செலவு துக்க பூர்வகமாக) பக்தியின் றிக் கொடுக்கப்படுவது எதுவோ அது இராஜஸ தானமாம். (எ-று) (அ)

अकालदेशतोऽपात्रेऽवज्ञया दीयते तु यत् ।
असत्काराच यद्दत्तं तद्दानं तामसं स्मृतम् ॥ ९ ॥

[கசகூ] (அ-கை) தாமஸதானத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) அகாலத்திலும் அதேசத்திலும் (கூத்தாடி குரங்காட்டி முதலிய) அபாத்திரத்திலும் அவமதிப்போடும் அசத் காரத்தோடும் (பூஜையின்றியும்) எது கொடுக்கப்படுகின்றதோ அது தாமஸ தான மெனப்படும். (எ-று) (கூ)

ज्ञानं च त्रिविधं राजञ्शृणुष्व स्थिरचेतसा ।
त्रिधा कर्म च कर्तारं ब्रवीमि ते प्रसङ्गतः ॥ १० ॥

[கஎ0] (அ-கை) ஞானம் கர்மம் கர்த்தாவென்பவைகள் ஒவ் வொன்றன் மூவகைமையினைச் சொல்லப் பிரதிஞ்ஞை செய்கின்றார்:-

(சு-ம்) அரசனே! (சாத்துவிக ராஜஸ தாமஸ பேதத்தால்) மூவகை ஞானத்தினையும், மூவகைக் கர்மத்தினையும் அவ்வாறே மூவகைக் கர்த்தாவையும் உனக்குப் பிரசங்கத்தாற் கூறுகின்றேன். ஸ்திரசித்தத்தோடு கேட்பாயாக. (எ-று)

கிரேயஸைச் செய்வனவாகலின் ஞானாதிகளான சாத்துவிகங் களே சொல்லத்தக்கனவாம். இராஜஸ தாமஸங்களான அவைகளும் பிரசங்கத்தினல் அறிதற்பொருட்டு அல்லது தெரிந்து கெடுத்தற் பொருட்டுச் சொல்லப்படுகின்றன (க0)

नानाविधेषु भूतेषु मामेकं वीक्षते तु यः ।
नाशवत्सु च नित्यं मां तज्ज्ञानं सात्त्विकं नृप ॥ ११ ॥

[கஎக] (அ-கை) சாத்துவிக ஞானத்தினைக் கூறுகின்றார்:—
(சு-ம்) நாநாவிதங்களும் (உத்தம மத்தியமாதமப் பிரகாரங் களும்), நாசமுள்ளனவு (பிறப்பு வளர்ச்சி யழிவுகளை யுடையனவு)

மாகிய (பிருதிவியாதிகளும் ஜராயுஜாதிகளுமான) பூதங்களில் (சத்ரூபமாகவும் ஸ்புரணரூபமாகவும் தொடர்ந்திருக்கும்) நித்தியமான என்னொருவனை எவன் அறிகின்றானோ, அவனது அந்தஞானம் அரசனே! சாத்துவிக மெனப்படும் (அத்வைத விஷயத்தன்மையால்). (எ-று) (கக)

तेषु वेत्ति पृथग्भूतं विविधं भावमाश्रितः ।
मामव्ययं च तज्ज्ञानं राजसं परिकीर्तितम् ॥ १२ ॥

[கஎஉ] (அ-கை) இராஜஸ ஞானத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) அவற்றில் (நாநாவித பூதங்களில்) என்னை (உபாதானத் தன்மையால் எங்கும் அநுசூதனாயினும்) வேறுவடிவாக (சரீரந்தோறும் பின்னமாக)ப் பல்வகைத் தன்மையினை (ஹீனமத்தியம உத்தம பாவத்தினை) ஆசிரயித்தவனாக அறிகின்றான் (அத்தன்மைய பேத புத்தியுடையவன்) என்னை அவ்வியயனாயிருக்கவும் (சரீரந்தோறும் ஹர்ஷவிஷாதாதி விகாரவடிவ) வியயமுடையவனாக அறிகின்றான். அவ்வாறறியும் ஞானம் இராஜஸ மென்று சொல்லப்பட்டதாம். (எ-று) (கஉ)

हेतुहीनमसत्यं च देहात्मविषयं च यत् ।
असदल्पार्थविषयं तामसं ज्ञानमुच्यते ॥ १३ ॥

[கஎக] (அ-கை) தாமஸஞானத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) (காரணமும் பயனுமாகிய) ஹேதுக்களின்றியதும், பொய்யும், தேகாத்ம விஷயமும் (யானே அழகுடையவன் செங்கிறத்தன் என்றல் முதலிய விஷயமுடையதும்), அசத் அர்த்தமும் (அநித்திய விஷயமுடையதும்) அற்ப (துச்ச) விஷய முடையதுமான ஞான மெதுவோ அது தாமஸ மெனப்படும். (எ-று) (கங)

भेदतस्त्रिविधं कर्म विद्धि राजन्मयेरितम् ।
कामनाद्वेषदम्भैर्यद्रहितं नित्यकर्म यत् ॥ १४ ॥
कृतं विना फलेच्छां यत्कर्म सात्त्विकमुच्यते ।

[கஎசு] (அ-கை) கர்ம மூவகைமையைப் பிரதிஞ்ஞை செய்து சாத்துவிகத்தினை அரைச்சுலோகத்தாற் கூறுகின்றார்:—

(சு-ம்) அரசனே! என்னாற் சொல்லப்பட்ட கர்மம் (சாத்துவிக ராஜஸ தாமஸ) பேதத்தால் மூவகையினது என்றறி. காமமின்றியதும், (நிஷ்காமமும்), துவேஷமி (பிறரை வருத்துதலி) ன்றியதும், (தர்மத்துவஜமான) இடம்ப மின்றியதுமான (அக்கினிஹோத்திர சந்தியோபாசனாதி) நித்தியகர்மம் எதுவோ எக்கர்மம் மறுமைப் பயன் விருப்பமின்றிச் செய்யப்பட்டதோ, அது சாத்துவிக மெனப் படுகின்றது. (எ-று) (கசு)

यद्बहुक्लेशतः कर्म कृतं यच्च फलेच्छया ॥ १५ ॥
क्रियमाणं नृभिर्दम्भात्कर्म राजसमुच्यते ।

[கஎஎ] (அ-கை) இராஜஸ கர்மத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) எக்கர்மம் வெகு கிலேச (தேகாதி வருத்த)த்தாற் செய்யப்பட்டதோ, எது பயனை விரும்பிச் செய்யப்பட்டதோ, நரர்களால் இடம்பத்தால் எக்கர்மம் செய்யப்படுகின்றதோ, அது இராஜஸ மெனப்படும். (எ-று) (கஎ)

अनपेक्ष्य स्वशक्तिं यदर्थक्षयकरं च यत् ॥ १६ ॥
अज्ञानात्क्रियमाणं यत्कर्म तामसमीरितम् ।

[கஎஅ] (அ-கை) தாமஸகர்மத்தினைக் கூறுகின்றார்:—

(சு-ம்) எது தனது சக்தியை யெதிர்பாராது செய்யப்படுகின்றதோ, எது பொருளழிவினைச் செய்வதோ, எது அஞ்ஞானத்தினாற் செய்யப்படுகின்றதோ, அக்கர்மம் தாமஸமெனப்படும். (எ-று) (கஅ)

कर्तारं त्रिविधं विद्धि कथ्यमानं मया नृप ॥ १७ ॥
धैर्योत्साही समोऽसिद्धौ सिद्धौ चाविक्रियस्तु यः ।
अहंकारविमुक्तो यः स कर्ता सात्त्विको नृप ॥ १८ ॥

[கீதை-க-அ] (சு-ம்) அரசனே! என்றுற் சொல்லப்படும் கர்த்தாவினை (சாத்துவிகாதி பேதத்தால்) மூவகையாக அறி. எவன் தைரியமும் (கடந்த யோகபூமியி னின்று நழுவாமையும்) உற்சாகமு (மேற் பூமியிற் செல்லுமாசையு)டையவனும், பலத்தின் அசித்தி யிலும் சித்தியிலும் சமமானவ (னிர்விகார)னும், அவிக்கிரியனும் (ஆலசியம் அசிரத்தை முதலிய தன்மையாகிய விக்கிரியை யில்லாத வனும்) ஆவனோ, எவன் அகங்கார விமுக்தனோ (யான் கர்த்தா வென்னு மபிமான மின்றிய வனாய் ஈசுவரனுற் பிரேரிக்கப்பட்டவனாய்ச் செய்கின்றேன் என்னும் பாவனையுடையவனோ) அத்தன்மைய கர்த்தா அரசனே! சாத்துவிகனாவன். (எ-று) (கஅ)

कुर्वन्हर्षं च शोकं च हिंसां फलस्पृहां च यः ।
अशुचिर्लुब्धको यस्तु राजसोऽसौ निगद्यते ॥ १९ ॥

[கீதை-கக] (அ-கை) இராஜஸ கர்த்தாவினைக் கூறுகின்றார்:— (சு-ம்) எவன் (லாபத்தில்) சந்தோஷத்தினையும் (நஷ்டத்தில்) சோகத்தினையும் ஹிம்சையினையும் பயன் விருப்பத்தினையும் செய்பவனாய்ச் செய்கின்றானோ, எவன் அசுசியாய் (வெளியுள் சௌசமில்லாதவனாய்) உலுத்தனாய் வேடனைப்போற் பிறரை வஞ்சித்தலில் நிபுணனாய்ச் செய்கின்றானோ அவன் இராஜஸ கர்த்தா வெனப்படுவன். (எ-று) (கக)

प्रमादाज्ञानसहितः परोच्छेदपरः शठः ।
अलसस्तर्कवान्यस्तु कर्तासौ तामसो मतः ॥ २० ॥

[கீதை-உ0] (அ-கை) தாமஸகர்த்தாவினைக் கூறுகின்றார்:—
(சு-ம்) பிரமாதமும் (எச்சரிக்கை யின்மையும்) அஞ்ஞானமும் (கர்த்தவ்வியத்தினை அறியாமையும்) உடையவனாய், பிறருக்குக் கேடுசெய்பவனாய், சட (வஞ்சனபர)னாய், சோம்பலுடையவனாய், தர்க்கமுடையவனாய்ச் செய்பவன் எவனோ அவன் தாமஸ கர்த்தா வென்று மதிக்கப்பட்டவன். (எ-று) (உ0)

सुखं च त्रिविधं राजन्दुःखं च क्रमतः शृणु ।
सात्त्विकं राजसं चैव तामसं च मयोच्यते ॥ २१ ॥

[௩.வுக] (அ-கை) தர்மிரத்தினாலேயே சாத்துவிக ராஜஸ தாமஸங்களான சுகங்கள் துக்கங்கள் என்பவற்றின் விபாகத்தினைச் சொல்லப் பிரதிஞ்ஞை செய்கின்றார் :—

(அ-ம்) அரசனே! சுகமும் துக்கமும் மூவகையினவாம் கிரமமாகக் கேள். அவை சாத்துவிகமும் இராஜஸமும், தாமஸமுமென்று என்னாற் சொல்லப்படும் (எ-று) (உக)

विषवद्भासते पूर्वं दुःखस्यान्तकरं च यत् ।
इष्यमाणं तथा वृत्त्या यदन्तेऽमृतवद्भवेत् ॥ २२ ॥
प्रसादात्स्वस्य बुद्धेर्यत्सात्त्विकं सुखमीदृशम् ।

[௩.வுஉ௩] (அ-கை) சாத்துவிகமான சுக துக்க மிரண்டனையும் மூன்றரைச் சுலோகத்தினாற் பிரிக்கின்றார் —

(அ-ம்) எது முன்னர் விஷம்போல் தோன்றுகின்றதோ, துக்கத்தின் (லோபப் பிரவிருத்தியாதி வடிவ இரஜஸ் பரிணாமத்தின்) அந்தத்தினை (முடிவினை)ச் செய்வதாகின்றதோ, அதனால் எது (விருத்தியினால் (நிக்கிரகிக்கப்பட்ட பிரத்தியக்கு நோக்கமுள்ள சித்தத்தினால்) இச்சிக்கப்படுவதாயினும் முடிவில் (பரிபாகத்தில்) அமிருதம்போலாகின்றதோ, (சாத்துவிக) சுகமான தனது புத்திப் பிரசாதத்தால் (இரஜஸ் தமோமலமின்றிய தன்மையால் சொச்சமாயிருத்தலால்) எது (சம்பிரஞ்ஞாத அசம்பிரஞ்ஞாதங்களின் சமாதி சுகம் பெறப்படுகின்றதோ அத்தன்மைய சுகம் சாத்துவிக மெனப்படும் (எ-று)

யோகம் அநுஷ்டிக்கப்படுவதாய் ஆசனாதியால் தேகேந்திரியப் பிராணங்கள் நிக்கிரகிக்கப்படுங்கால் முன்னர் விஷம்போல் தோற்றுகின்றது; துக்கத்தினைத் தருவதாயிருத்தலின், அவ்வித துக்கம் சாதகனுக்குச் சத்துவ மேம்பாடுள்ளபோதுதான் செவ்வையாய்ச் சகிப்பதாகின்றது ஆதலால் இத்துக்கம் இரஜஸின் பரிணாமமாயினும் சாத்துவிக மெனப்படுகின்றது. அவ்விது "முன்னர் விஷம்போல் தோற்றுகின்றது" என்பதனாற் சொல்லப்பட்டதாம்.

'அமிருதம்போலாகின்றது' என்பதற்கு எவ்வாறு சித்தம் பிரத்தியக்கினை நோக்குவதாகின்றதோ, அவ்வாறு சொரூப சுகம்

அதிகமாய் ஆவிர்ப்பவிக்கின்றது என்பது பொருளாம். அது விருத்தர்களால் "எவ்வளவுக் கெவ்வளவு இவன் தேகாதிகளை நீக்கிப் பிரத்தியக்கில் செல்லுகின்றானோ அவ்வளவுக்கவ்வளவு தத் அர்த்தமும் பரமாத்மாவும்) துவம் அர்த்தத்தில் (ஜீவனிடத்தில்) பிரவேசிக்கின்றான்" என்று சொல்லப்பட்டுளது. சமாதி சுகம் சாத்துவிக மென்பதனைச் சுருதி "சமாதியினால் மலநீங்கியதாய் ஆத்மாவிற் செலுத்தப்பட்ட சித்தத்திற்கு எச்சுக முண்டாகுமோ அதனை வாக்கினால் வர்ணிக்கமுடியாது. அப்போது அது அந்தக் கரணத்தினால் சுவயம் கரகிக்கப்படுகின்றது" (மைத்-கூச) என்று கூறுகின்றது (உஉ.ு)

विषयाणां तु यो भोगो भासतेऽमृतवत्पुरा ॥ २३ ॥
हालाहलमिवान्ते यद्राजसं सुखमीदृशम् ।

[கூஅ|கூ௭] (அ-கை) இராஜஸ சுகத்தினைப் பகுக்கின்றான்:—

(சு-ம்) விஷயங்களின் (மாலை சந்தன வனிதா திவ்யயானாதிகளின்) எப்போகம் (சுகத்தின் பொருட்டான அது) முன்னர் (போககாலத்தில்) அமிருதம்போல் (பிரீதியினைச் செய்வது) ஆகின்றதோ, எது முடிவில் ஹாலாஹலம் (விஷம்) போல் (துக்கம்) ஆகின்றதோ, அத்தன்மைய சுகம் இராஜஸ மெனப்படும். (எ-று)

இச் சுகம் "பூதங்களை வருத்தாமல் போகம் சம்பவியாது" என்னும் நியாயத்தாலும், "பூதங்களை வருத்துதலாகிய தோஷத்தினாலாம் இந்திரிய சம்பந்த (விஷய) சுகம் அரசனே! சுவர்க்கத்தில் நரகமேயாம்" என்னும் வசனத்தினாலும் முடிவில் நரகத்தினைத் தருவதாகலின் 'ஹாலாஹலம் போலாகின்றதோ' என்று கூறப்பட்டது. (உகூ௭)

तन्द्रिप्रमादसंभूतमालस्यप्रभवं च यत् ॥ २४ ॥
सर्वदा मोहकं स्वस्य सुखं तामसमीदृशम् ।

[கூஅ|ச௭] (அ-கை) தாமஸ சுகத்தினைப் பகுக்கின்றார்:—

(சு-ம்) எது தந்திரீ (அயர்ச்சி) பிரமாதங்களாலுண்டானதோ, ஆலசியத்தினை யுண்டுபண்ணுவதோ, எப்போதும் தனக்கு மோகத்

திலைச் செய்வதாகின்றதோ அத்தன்மைய (கட்குடி முதலியவற் றின்கண்) சுகம் தாமஸ மெனப்படும். (எ-று) (௨௰௪)

न तदस्ति यदेतैर्यन्मुक्तं स्यात्त्रिविधैर्गुणैः ॥ २५ ॥

[௩அ௰௫] (சு-ம்) யாது இந்த (பிரகிருதி ஸ்திதிலய மென்னும் சத்திவயத்துள் தனதான்) மூவகைக்குணங்களால் விடுபட்டதாகுமோ, அஃது (அத்தன்மையது) இல்லை. (எ-று)

யாது இங்கு உளதோ அது இம்மூன்று குணங்களினுலேயே யுளதாம். இங்கு உலகம் யாது பிரஹ்மாதி மிருத்திகை யந்தமான பிராணிக் கூட்டமாயுளதோ அது முழுவதும் இம் முக்குணங்களினுலேயே நிர்மிக்கப்பட்டதாம். இச் சம்சாரத்தில் முக்குணத்தன்மையின் வேறுனதோர் உபாதானமில்லை. அதனுற்றுன் இவற்றினுல் விடுபட்டதான அஃதில்லை யென்றதாம். அதனுல் சத்வோத்கர்ஷமான பந்தனம் (கட்டு) ஊர்த்துவகதியாம். தமோத்கர்ஷமான கட்டு அதோகதியாம். ஆதலால் குணைச வைஷம்யத்தினுலாக்கப்பட்டதேயாம். பிரஹ்மாதி ஸ்தம்ப பரியந்தமானவற்றின் தாரதம்மியம், குண விடுபாட்டினுலாகிய தன்றென்பது கருத்து. (௨௰௫)

राजन्ब्रह्मापि त्रिविधमोंतत्सदिति भेदतः ।
त्रिलोकेषु त्रिधा भूतमखिलं भूप वर्तते ॥ २६ ॥

[௩அ௯] (அ-கை) அவ்வாருயின், எவ்வாறு குணங்களினின்று விடுபடுவா னென்னும் அபேக்ஷையில் தனது தர்மத்தினை ஆசரித்தலினுலேயே விடுபடுகின்ருன் என்று சொல்லக்கருதியவராய்ச் சுவ தர்மாசார நிபந்தகமான சித்துபாசனுப் பிரகாரத்தினை முதலில் விதிக்கின்ருர் :—

(சு-ம்) அரசனே! பிரஹ்மமும் ஓம் தத்ஸத் என்னும் பேதத்தால் மூவகையினதாம். (அம்மூவகைப் பிரஹ்மமும்) மூவுலகங்களில் (மூவகை யுலகங்களான சாத்துவிக ராஜஸ தாமஸ புருஷர்களிடத்தில்) அவ்வக்குணப் (பிரதானத் தன்மையால்) மூவிதமாகிச் சகல சர்ப்பமுமா யிருக்கின்றது. (எ-று)

பிரஹ்மஞ்ஞம் என்று பிரஹ்மசப்தம் வேதத்தில் காணப்பட்டதாம், பிரஹ்மார்ப்பணமென்று ஈசுவரனிடத்தில் பிரஹ்மசப்தம் காணப்பட்டதாம். "எவன் செய்யப்படும் பிரஹ்மத்தினை அருகிற் கொண்டுபோகின்ருனே," என்று யஞ்ஞத்தில் பிரஹ்மசப்தம் காணப் படுகின்றது. இவ்வாறு பிரஹ்மம் மூவகையாம். அங்கு ஓங்கார பூர்வகங்களாகச் சர்வ மந்திரங்களும் சர்வகர்மங்களும் பிரவர்த்திக் கின்றன. அவ்வாறே ஓங்காரார்த்தம் பரமாத்மா; அதன் பிரீதியர்த்த மாய்ச் சர்வ கர்மங்களும் பிரவர்த்திக்கின்றன. அக்கர்மங்களே அழியாத பயனுடைமையால் சத் என்னும் சொல்லாற் சொல்லப் படுகின்றன. அந்த இம்மூன்று விதமுமான பிரஹ்மம் ஓம் தத்ஸத் என்னும் சப்தங்களாற் சொல்லப்படுகின்றது. அது விதியினுற் செய்யப்பட்டதும் ஈசுவரனிடத்திலர்ப்பிக்கப்பட்டது மான அந்தி யயன யஞ்ஞாதிகர்மங்கள் மோக்ஷத்தின் பொருட்டா மென்று சொல்லப்பட்டுளது. வியதிரேக முகத்தால் வாஜஸநேயிகள், கார்கியே! இந்த அவ்வக்ஷரத்தினை யறியாது இவ்வுலகத்தில் வெகு ஆயிரவருஷங்கள் யஜிக்கின்ருனே, கொடுக்கின்ருனே, தபசினைச் செய்கின்ருனே, அது இவனுக்கு நாசமுடையதே யாகின்றது." (பிரு-௩-அ-அ) என்று காட்டுகின்றனர். முதலக்ஷரத்தினையறியாது இவ்வுலகத்திற் செய்யப்பட்ட கர்மம் அழிகின்றது. அதுவே அக்ஷரப் பிராப்தியுத்தேசத்தாற் செய்யப்பட்டதாய் அவிநாசியான பயனுடையு தாய் சத் ஆகின்றதென்பது பொருள்.

மூவகைக் கர்மங்களுள் சாத்துவிக பக்ஷம் கூறிய விதப்படி காட்டப்பட்டதேயாம். இவ்வாறே இராஜஸர்களும் வைதிக கர்மத் தினைக் கூறிய விதிப்படிப் புத்திராதிகாமியத்தாற் செய்து அதன் வாயிலாக ஈசுவரப்பிரீதியினை யுண்டுபண்ணி, அவனநுக்கிரகத்தால் அவ்வக்காமத்தினைப் பெறுகின்றனர். இவ்வாறே இது "சியேன மென்பதனல் அபிசரித்து யஜிக்கக்கடவன்" என்று விதிக்கப்பட்ட சியேனுதி தாமஸங்களிலும் பொருத்தத்தக்கதாம். இங்கு இராஜஸ தாமஸ பக்ஷங்கள் நீக்குதற்பொருட்டுக் காட்டப்பட்டனவாம். (உசூ)

ब्रह्मक्षत्रियविट्शूद्राः स्वभावाद्भिन्नकर्मिणः ।
तानि तेषां तु कर्माणि संक्षेपाच्चेऽधुना वदे ॥ २७ ॥

[கூ௰எ] (அ-கை) இவ்வாறு அறிஞர்களான சாத்துவிகர்களுக்கு மோக்ஷோபாய வடிவினவும் கர்மாசிரிதங்களுமான சில விசேஷணங்களைக் கூறி நான்கு வர்ணங்களுக்கும் ஆவசியகமான கர்மவிபாகத்தி (பிரிவி)னைச் சொல்லப் பிரதிஞ்ஞை செய்கின்றார் :-

(சு-ம்) பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்கள் ஸ்வபாவத்தினாலேயே பின்ன கர்மமுடையவராவர். அவர்களது அக் கர்மங்களை இப்போது உனக்குச் சுருக்கமாகச் சொல்லுகின்றேன். (எ-று) (உஎ)

अन्तर्बाह्येन्द्रियाणां च वश्यत्वमृजुता क्षमा ।
नानातपांसि शौचं च द्विविधं ज्ञानमात्मनः ॥ २८ ॥
वेदशास्त्रपुराणानां स्मृतीनां ज्ञानमेव च ।
अनुष्ठानं तदर्थानां कर्म ब्राह्ममुदाहृतम् ॥ २९ ॥

[கூ௰அ-கூ௰கூ] (அ-கை) பிராஹ்மணர்களது ஸ்வாபாவிகங்களான கர்மங்களை இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார் :—

(சு-ம்) அந்தர்பாகியேந்திரியங்களின் வசியத்துவம், ருஜுத்துவம் (கபடமின்மை) க்ஷமை (பொறுமை), (கூறியவித காயிக வாசிகமானஸிகங்களாகிய சாத்துவிகங்களேயான) நாநாவித தபசுகள், (வெளித்தூய்மையும் அகத்தூய்மையுமான) இருவகைச் சௌசம், ஆத்மாவின் (சாஸ்திராசாரியோபதேசத்தினலாகும் பரோக்ஷமும், தியானத்தினலாம் அபரோக்ஷமுமான) இருவகை ஞானத்தினையும் வேதசாஸ்திர புராணங்களின் அர்த்தத்தினையும் (மநுவாதிபதினெண்) ஸ்மிருதிகளின் அர்த்தத்தினையும் அறிதல், அவற்றிற் காட்டப்பட்ட அர்த்தங்களை யதிகாரத்திற்கேற்றபடி யநுஷ்டித்தல் என்னுமிவை பிராஹ்ம (பிராஹ்மண ஜாதிக்கு விதிக்கப்பட்ட) கர்மமென்று என்னாற் சொல்லப்பட்டனவாம். (எ-று)

இதனை யாசிரிக்கும் பிராஹ்மணன் அவசியம் முக்தனுவானென்பது கருத்து. (உ௮-உகூ)

दार्ढ्यं शौर्यं च दाक्ष्यं च युद्धे पृष्ठाप्रदर्शनम् ।
शरण्यपालनं दानं धृतिस्तेजः स्वभावजम् ॥ ३० ॥

प्रभुता मनऔन्नत्यं सुनीतिर्लोकपालनम् ।
पञ्चकर्माधिकारित्वं क्षात्रं कर्म समीरितम् ॥ ३१ ॥

[கூ௯௦-கூ௯௧] (அ-கை) க்ஷத்திரஜாதிக்குரியதான ஸ்வ பாவத்தாலாகிய கர்மத்தினைக் கூறுகின்றார்:—

(௬-ம்) தார்டியம் (சஸ்திராஸ்திர வித்தையில் திடதரமான அப்பியாஸம்), சௌர்யம் (சஸ்திராஸ்திரப் பிரயோக சாமர்த்தியம்), தாக்ஷியம் (பிறரால் பிரயோகிக்கப்பட்ட அஸ்திர சஸ்திரங்களைத் தடுப்பதிலும் அவற்றின் வீழ்ச்சியிலும் கலங்காமை), (இம்மூன்றன் பயனுன) யுத்தத்தில் முதுகுகாட்டாமை, என்னு மிதுவே க்ஷாத்திர கர்மமாம். சரண்ய பாலனம் (சிபி திலீபர் முதலியோர்போலத் தன்சரீரார்ப்பணத்தினுலும் சரணமடைந்தவர்களைக்காத்தல்)(இஃது இரண்டாவது கர்மம்). தானம் (கர்ணன் ததீசி முதலியோர் போலத் தனது அங்கசமர்ப்பணத்தன்மையிலும் அதிதியினையே முக்கியமாகச் சம்பாதித்தல்) (இது மூன்றுவது கர்மம்). ஸ்வபாவத்தாலாகிய திருதி (தைரியம்) தேஜசு (பராக்கிரமம்) [இது முந்திய மூன்றற்கும் விசேஷணமாம். அவ்வாறே முன் கூறப்பட்ட மூன்றும் ஸ்வ பாவத்தாலாகிய அல்லது * ஆகந்துகமாகிய தேஜசினுலும் சாமர்த்தியத்தினுலு மின்றி யாகாவென்பதனுல் இவ்விசேஷணம் பொருத்தமுடையதாம். வேதாத்தியயனமும் அவ்வர்த்தானுஷ்டானமும் மூவர்ணத் தன்மையினுலடையப்பட்டமையாற் சொல்லப்படவில்லை. அல்லது தானமென்னும் உபலக்ஷணத்தாற் கொள்ளப்படுவனவாம்]. (௩௦) பிரபுத்துவமான மனவுயர்ச்சி, (இது நான்காவதாம்). நல்ல நீதியாகிய உலகபாலனம் (இஃது ஐந்தாவதாம்.) என்னும் இவ்வைந்து கர்மங்களின் அதிகாரமுடைமை க்ஷாத்திரமான கர்மமென்று சொல்லப்பட்டதாம். (எ-று)

இவ்வைந்தனையும் செய்து க்ஷத்திரியன் கிரமமுக்தி ஸ்தானத்தினைப் பெறுகின்முன். அவ்வாறே, "உலகத்தில், யோகத்தோடு கூடிய சந்நியாசியும் யுத்தத்தில் முதுகுகாட்டாது எதிர்த்தவனும்

* ஆகந்துகம் = செயற்கை.

இறந்தவனுமான இவ்விரண்டு புருஷர்களும் சூரியமண்டலத்தினைப் பேதித்துச் செல்லுபவராவர்" என்று ஸ்மிருதி கூறுகின்றது. (௯௧)

नानावस्तुक्रयो भूमेः कर्षणं रक्षणं गवाम् ।
त्रिधा कर्माधिकारित्वं वैश्यानां कर्म ईदृशम् ॥ ३२ ॥

(அ-கை) வைசியகர்மத்தினைப் பகுக்கின்றார் :—

[௯௨] (சு-ம்) நாநாவஸ்துக்கிரயம் (கிரயமென்பது விக்கிரயத்திற்கும் உபலக்ஷணமாம்), பூமியினை உழுதல் (பயிர்த்தொழில்) கோக்களை இரக்ஷித்தல் (பசுக்காத்தல்) என்னும் மூவகைக் கர்மாதிகார முடைமையாகிய இத் தன்மையது வைசியர்களது கர்மமாம். (எ-று)

இம்மூன்றும் வைசியர்களது ஜீவிப்பாம். யாக அத்தியயன தானங்கள் மூவர்ணத்தன்மையாற் பெறப்பட்டனவாம்; அதனால் இவன் ஆரோகக்கிரமத்தால் மோக்ஷயோக்கியனாகின்றான். (௯௨)

दानं द्विजानां शुश्रूषा सर्वदा शिवसेवनम् ।
एतादृशं नरव्याघ्र कर्म शौद्रमुदीरितम् ॥ ३३ ॥

[௯௩] (அ-கை) சூத்திரகர்மங்களைப் பகுக்கின்றார் :—

(சு-ம்) தானம், துவிஜ (இருபிறப்பாள)ரின் சுசுரூஷை, எப்போதும் சிவனைச் சேவித்தல் என்னும் இத்தன்மையது நரசிரேஷ்டனே! சூத்திருக்குரிய கர்மமெனப்படும். (எ-று) (௯௩)

स्वस्वकर्मरता एते मय्यर्पिताखिलकारिणः ।
मत्प्रसादात्स्थिरं स्थानं यान्ति ते परमं नृप ॥ ३४ ॥

[௯௪] (அ-கை) நான்கு வர்ணங்கட்கும் விதித்த கர்ம விபாகத்தின் பயனை முடிக்கின்றார் :—

(சு-ம்) தத்தம் கர்மங்களில் இரதர் (கிரத்தாதிசயத்தால் பிரீதியோடு கூடியவர்) களும், (பரமகுருவான) என்னிடத்தி லர்ப்பித்து எல்லா கர்மங்களையும் செய்பவருமான இவர்கள் (நால்வருணத்தர்)

பரம (மேலான) ஸ்திரமாகிய ஸ்தானத்தினை அரசனே! எனது பிரசாதத்தினால் அடைகின்றனர். (எ-று)

அர்ப்பித்துச் செய்பவர் என்பது வாய்பிளந்து தூங்கினான் என்பதிற்போல அர்ப்பித்து என்பது பிக்தியகாலத்து நிகழ்வதாம் **अर्प्य** அர்ப்பிய என்பது அசமாஸமாயினும் **क्त्वा** (க்த்வா) என்பதற்கு **ल्यप** (ல்ப்ய) என்னும் ஆதேசம் (திரிபு) ஆர்ஷமாம். பரமஸ்திர மென்னும் இரண்டு விசேஷணங்களாலும் கிரமமுக்தி ஸ்தானத்தினை அவர்களடைகின்றனர் என்பது சொல்லப்பட்டதாம்.

"எனது பிரசாதத்தினால்" என்பதனால் என்னால் வேதவாயிலால் ஆஞ்ஞாபிக்கப்பட்ட ஸ்வதர்மத்தினை அநுஷ்டிக்கின்றவர்களாய் அவர்கள் எனது ஆணையைச் செய்யுந் தன்மையால் எனது பிரீதியினைச் செய்பவராகின்றனர். பிரீதியடைந்த யான் பிரசன்னனாய் அவர்களைச் சம்சாரசாகரத்தினின்று கரையேற்றுகின்றேன் என்பது கருத்தாம். (௩௪)

इति ते कथितो राजन्प्रसादाद्योग उत्तमः ।
साङ्गोपाङ्गः सविस्तारोऽनादिसिद्धो मया प्रिय ॥ ३५ ॥

[௩௫] (அ-கை) உபபாதனஞ்செய்யப்பட்ட சாஸ்திரத்தினை முடிக்கின்றார்:—

(சு-ம்) அரசனே! பிரியனே! இவ்வாறு உனக்கு அநாதிசித் (வேதத்தினால் போதிக்கப்பட்ட) உத்தமமான யோகம் (யோகப்பிரதானமான ஆத்ம வித்திபாரூபம்) சாங்கோபாங்கமாக (இயம நியமாதி அங்கங்களோடும் நிஷ்காமங்களான யஞ்ஞாதி உபாங்கங்களோடும் கூடியதாக) சவிஸ்தாரமாய் என்னால் பிரசாதத்தால் சொல்லப்பட்டது. (எ-று)

'பிரசாதத்தினால்' என்பது வரேணியனிடத்தில் தனது அநுக்கிரகத்தினை வெளிப்படுத்தியதாம். பிரியனே என்பதனால் பிரசாதத்தில் ஹேது காட்டப்பட்டது. (௩௫)

इत्थं योगं मयाख्यातं नाख्यातं कस्यचिन्नृप ।
गोपयैनं ततः सिद्धिं परां यास्यस्यनुत्तमाम् ॥ ३६ ॥

[௩௰௬] (அ-கை) இதனைக்காத்தலில் (இரகசியமாய் வைத்த லில்) மேலான சித்தி யுண்டென்று கூறுகின்றார் :—

(க-ம்) அரசனே! இவ்விதமாக என்னால் யோகம் விரித் துரைக்கப்பட்டது. (அபக்தனான) எவனுக்கும் என்னாற் சொல்லப் பட்டதன்று. இத்தன்மைய யோகத்தினை இரக்ஷி. அதனால் (இரக்ஷித்தலால்) அநுத்தமமான (இதனின் மேலான தின்றியதான) பரமாகிய (மேன்மையுள்ள) சித்தியினைப் பெறுவாய். (எ-று)

வித்தையாகிய யோகத்தினை இரக்ஷித்தலாவது அபாத்திரங் களில் வெளிப்படுத்தாமையாம். அதனாலேயே வித்தை நிர்வீரிய மில்லாததாமென்று சுருதியில் "வித்தை பிரஹ்மாவினிடம் வந்து யான் உனக்கு நிதியாயிருக்கின்றேன். என்னை இரக்ஷி அசூயை யுள்ளவனுக்கும் ருஜுத்துவ மில்லாதவனுக்கும் சுசியில்லாத வனுக்கும் சொல்லாதே. அதனால் (சொல்லாமையால்) வீரிய முள்ளவளாவேன்" (நி-உ-ச) என்று கேட்கப்படுகின்றது. (௩௰௬)

व्यास उवाच ॥

इति तस्य वचः श्रुत्वा प्रसन्नस्य महात्मनः ।
गणेशस्य वरेण्यः स चकार च यथोदितम् ॥ ३७ ॥

[௩௰௭] (அ-கை) அவ்விதத கஜானன வரேணிய சம்வாதத் தினை உபசங்கரித்து வியாசர் கூறலாயினர் :—

(க-ம்) இவ்வாறு பிரசன்னரும் மகாத்மாவு (பரமேசுவரனு) மான அக்கணேசரது (பிரசாத வடிவ கீதா) வாக்கியத்தினைக் கேட்டு அவ்வரேணியராஜன் கணேசராற் சொல்லப்பட்டபடி (சாங் கோபாங்கமான யோகத்தின் அநுஷ்டானத்தினை) ச் செய்தான். (எ-று) (௩௰௭)

त्यक्त्वा राज्यं कुटुम्बं च कान्तारं प्रययौ रयात् ।
उपदिष्टं यथा योगमास्थाय मुक्तिमाप्तवान् ॥ ३८ ॥

[௩௬௮] (அ-கை) இதனையே விளக்குகின்றார் :—

(சு-ம்) இராஜ்யத்தினையும் குடும்பத்தினையும் விட்டு வேக மாய்க் காட்டிற்குச் சென்றான். அங்குக் கணேசரா லுபதேசிக்கப் பட்டபடி யோகத்தினை யநுஷ்டித்து முக்தியினை யடைந்தான். (எ-று)

'இராஜ்யத்தினைவிட்டு' என்பதனால் வித்தைஷணாத்தியாக மும், 'குடும்பத்தினை விட்டு' என்பதனால் புத்திரைஷணை லோகை ஷணைகளின் தியாகமும் சொல்லப்பட்டனவாம். "இவ்வாறு இவ் வாத்மாவினை யறிந்து பிராஹ்மணர்கள் புத்திரைஷணையினின்றும் வித்தைஷணையினின்றும் லோகைஷணையினின்றும் எழுந்து (விடு பட்டு) பின் பிக்ஷாசரியத்தினை சரிக்கின்றனர் (சந்நியாசத்தினைக் கொள்ளுகின்றனர்)" (பிரு-௩-௫-க) என்று சுருதியில் ஏஷணை மூன்றன் தியாக பூர்வகமான பாரிவிராஜ்ய (சந்நியாச) மே ஆத்ம சிரவணத்தின் பின் சொல்லப்பட்டுளது. அவ்வாறாயினும், "இந்த வைஷ்ணவமான லிங்க (குறி) தாரணமாகிய தர்மம் (சந்நியாசம்) முகத்திற் பிறந்தவர்களான பிராஹ்மணர்களுக்காம். புயத்திற் றோன்றியவர்களும் தொடையிற் பிறந்தவர்களுமான க்ஷத்திரிய வைசியர்களுக்கு இத்தர்மம் விதிக்கப்படுகிறதில்லை." என்பத னாலும்.

"ब्राह्मणानां क्रमेणैते मताश्चत्वार आश्रमाः ।
क्षत्रियाणां च वैश्यानां संन्यासो न प्रविद्यते ॥
गार्हस्थ्यमेव शूद्राणामाश्रमः परिकीर्तितः ।
अन्त्यजानां तदेवापि ज्ञातव्यं विद्वद्भिः सदा ॥

பிராஹ்மணர்கட்குக் கிரமமாக இந் நான்காசிரமங்களும் மதிக்கப்பட்டனவாம். க்ஷத்திரியர்களுக்கும் வைசியர்களுக்கும் சந்நியாச மில்லை சூத்திரர்கட்குக் கிருகஸ்தாசிரமமே சொல்லப்பட் டுளது. அந்தியஜர்களுக்கும் அவ்வாறேயா மென்று அறிஞர்களால் எப்போது மறியத்தக்கதாம்." (முத்கலபுராணம் கண்டம்-௩- அத்தியாயம் கஅ சுலோகம் ௩-௪) என்பதனாலும்,

அப்பிராஹ்மணனை க்ஷத்திரியனாகிய வரேணியனுக்கு நான்காவது ஆசிரம ஸ்வீகாரம் நிஷேதிக்கப்படுதலால் ஏஷணாத்

நியத்நியாக பூர்வகமாக வரேணியராஜன் புத்திரனிடத்துப் பாரியையைவைத்து ஏகாகியாய் (ஒருவனாய்) வனத்தை (வானப்பிரஸ்தாசிரமத்தினை) யடைந்தான் என்று காணத்தக்கதாம். (கஅ)

**इमं गोप्यतमं योगं शृणोति श्रद्धया तु यः ।**
**सोऽपि कैवल्यमाप्नोति यथा योगी तथैव सः ॥ ३९ ॥**

[கசன] (அ-கை) இச்சாஸ்திர சிரவணத்தின் பயனைக் கூறுகின்றார் :—

(சு-ம்) எவன் இந்த அத்தியந்த இரகசியமான யோகத்தினைச் சிரத்தையோடு கேட்கின்றானோ அவனும் கைவல்யத்தினை யடைகின்றான். எப்படி யோகியோ அப்படியே அவனும். (எ-று)

'அடைகின்றான்' என்பதற்கு "வர்த்தமான சாமீப்பியத்தில் வர்த்தமானம்போல" என்றபடி. யோகமில்லாதவன் கேட்டு மனனஞ் செய்து, தியானித்துச் சீக்கிரமாகவே கைவல்யத்தினைப் பெறுவான் என்பது பொருளாம். 'யோகி எப்படியோ அப்படி அவன்' என்பதனால் யோகிக்கு எப்படி சித்த சுத்தியும் பிறருக்கனுக்கிரகிக்கும் சாமர்த்தியமு முளதோ, அப்படியே சிரத்தையோடு இதனை கேட்டவனுக்கும் அவ்விரண்டு முண்டாம் என்பது பொருளாகின்றது. (கசு)

(அ-கை) இந்தக் கிரந்தத்தினைக் கேட்பிப்பவனுக்கும் வியாக்கியானஞ் செய்பவனுக்கும் பயனைக் கூறுகின்றார் :—

**य इमं श्रावयेद्योगं कृत्वास्यार्थं सुबुद्धिमान् ।**
**यथा योगी तथा सोऽपि परं निर्वाणमृच्छति ॥ ४० ॥**

[சoo] (சு-ம்) எந்தநற்புத்திமான் இந்த யோகத்தினை இதன் அர்த்தத்தினைச் செய்து கேட்பிக்கின்றானோ அவனும் யோகி எப்படியோ அப்படியே மேலான நிர்வாணத்தினை யடைகின்றான். (எ-று)

'இதன் அர்த்தத்தினைச்செய்து' என்பதனால் முகத்தால் வியாக்கியானஞ் செய்தலும், ஸ்வரூபமாக அனுஷ்டித்தலுமான இரண்டும் காட்டப்பட்டதாம். (சo)

यो गीतां सम्यगभ्यस्य ज्ञात्वा चार्थं गुरोर्मुखात् ।
कृत्वा पूजां गणेशस्य प्रत्यहं पठते तु यः ॥ ४१ ॥

[௪0௧] (அ-கை) படிப்பவர் இருவகையினருக்கும் சமமான பயனைச் சொல்லக்கருதியவராய்க் கூறுகின்றார் :—

(சு-ம்) எவன் கீதையை குருமுகமாகச் செவ்வையாய் அப்பியசித்து, அர்த்தத்தினையுமறிந்து தினந்தோறும் படிக்கின்றானோ, எவன் கணேசரது பூஜையினைச்செய்து தினந்தோறும் படிக்கின்றானோ. (எ-று)

அர்த்தஞான பூர்வகமாக மறுபடியும் மறுபடியும் படிக்கிறான் என்பது ஒருவன். படிப்பிப்பவரின்றித் தெரிந்தபடி கணபதி பூஜா பூர்வகமாகப் படிக்கின்றான் என்பது மற்றையவன். (௪௧)

एककालं द्विकालं वा त्रिकालं वापि यः पठेत् ।
ब्रह्मीभूतस्य तस्यापि दर्शनान्मुच्यते नरः ॥ ४२ ॥
न यज्ञैर्न व्रतैर्दानैर्नाग्निहोत्रैर्महाधनैः ।
न वेदैः सम्यगभ्यस्तैः सम्यग्ज्ञातैः सहाङ्गकैः ॥ ४३ ॥
पुराणश्रवणैर्नैव न शास्त्रैः साधु चिन्तितैः ।
प्राप्यते ब्रह्म परममनया प्राप्यते नरैः ॥ ४४ ॥
ब्रह्मघ्नो मद्यपः स्तेनो गुरुतल्पगमोऽपि यः ।
चतुर्णां यस्तु संसर्गी महापातककारिणाम् ॥ ४५ ॥
स्त्रीहिंसागोवधादीनां कर्तारो ये च पापिनः ।
ते सर्वे प्रतिमुच्यन्ते गीतामेतां पठन्ति चेत् ॥ ४६ ॥

[௪0௨-௪0௬] (அ-கை) இவ்விருவரின் பயனையும் பிரவிருத்தி மிகுதற்பொருட்டு ஐந்து சுலோகங்களால் துதிக்கின்றார் :—

(சு-ம்) ஒருகாலமாவது இரண்டுகாலமாவது மூன்றுகாலமாவது எவன் படிக்கின்றானோ, பிரஹ்ம வடிவினனாகிய அவனது

தரிசனத்தினாலும் நான் முக்தனாகின்றான். (௪௨) யஞ்ஞங்களி னாலும், விரதங்களாலும், தானங்களாலும், அக்கினிஹோத்திரங் களாலும், மகாதனங்களாலும், செவ்வையாய் அப்பியசிக்கப் பட்டனவும், செவ்வையாய் அறியப்பட்டனவும், அங்கங்களோடு கூடியனவுமான வேதங்களாலும், புராண சிரவணங்களாலும் நன் றாய்ச் சிந்திக்கப்பட்ட சாஸ்திரங்களாலும் பரம (மேலானர்.) பிரஹ்மம் அடையப்படுகிறதில்லை. இதனால் (இக்கீதாபடனத்தால்) நார்களால் அடையப்படுகின்றது. (௪௩-௪௪) பிரஹ்மக்கொலைஞன், குடியன், திருடன், குருபத்தினியைச்சேர்ந்தவன் எவனோ, மகா பாதகஞ்செய்பவர்களான நால்வரின் கூட்டரவைச் செய்பவன் எவனோ, ஸ்திரீஹிம்ஸை கோவத முதலியவற்றைச் செய்யும் பாபி கள் எவர்களோ, அவர்களெல்லோரும் இக்கீதையினைப் படிப்பார் களாயின் முக்தராவர். (எ-று) (௪௫-௪௬)

यः पठेत्प्रयतो नित्यं स गणेशो न संशयः ।
चतुर्थ्यां यः पठेद्भक्त्या सोऽपि मोक्षाय कल्पते ॥ ४७ ॥

[௪௭] (அ-கை) நித்திய பாடத்தின் பலத்தினையும் சதுர்த்தீ பாடத்தின் பலத்தினையும் கூறுகின்றார் :—

(சு-ம்) எவன் சுசியாய்த் தினந்தோறும் படிக்கின்றானோ, அவன் கணேசன் (கணேசனைப்போல் கிருதகிருத்தியன்) ஆகின் றான்; சம்சயமில்லை. எவன் (பக்ஷந்தோறும்) சதுர்த்தியில் பக்தி யோடு படிக்கின்றானோ, அவன் மோக்ஷத்திற்குரியவனாகின்றான். (எ-று) (௪௭)

ततः क्षेत्रं समासाद्य स्नात्वाभ्यर्च्य गजाननम् ।
सकृद्गीतां पठन्भक्त्या ब्रह्मभूयाय कल्पते ॥ ४८ ॥

[௪௮] (அ-கை) பக்ஷமிரண்டிலும் அசக்தனுக்குப் பக்ஷாந் தரத்தினைக் கூறுகின்றார் :—

(சு-ம்) (எதனால் நித்தியபாடத்திலும் பக்ஷபாடத்திலும் அசக்தனாகின்றானோ) அதனால்க்ஷேத்திரத்தினை(கணபதிதேவதை யின் ஓர் க்ஷேத்திரத்தினையும் தேவாலயத்தினையும்) அடைந்து

அங்கு ஸ்நானஞ்செய்து கஜானனரை அர்ச்சித்து, ஒருமுறை இக் கீதையினைப் பக்தியோடு படித்து (ஒருமுறை படித்தலினாலேயே) பிரஹ்ம பாவத்திற்கு யோக்கியனாகின்றான். (எ-று)

க்ஷேத்திரத்தில் ஒருமுறை படித்தலாலாம் புண்ணியத்தினாலேயே ஜன்மாந்தரத்தில் ஞானத்தினைப்பெற்று அவசியம் முக்தனாகின்றான் என்பது பொருள். (௪௮)

भाद्रे मासे सिते पक्षे चतुर्थ्यां भक्तिमान्नरः ।
कृत्वा महीमयीं मूर्तिं गणेशस्य चतुर्भुजाम् ॥ ४९ ॥
सवाहनां सायुधां च समभ्यर्च्य यथाविधि ।
यः पठेत्सप्तकृत्वस्तु गीतामेतां प्रयत्नतः ॥ ५० ॥
ददाति तस्य तुष्टोसौ गणेशो भोगमुत्तमम् ।
पुत्रान्पौत्रान्धनं धान्यं पशुरत्नादिसंपदः ॥ ५१ ॥
विद्यार्थिनो भवेद्विद्या सुखार्थी सुखमाप्नुयात् ।
कामानन्याँल्लभेत्कामी मुक्तिमन्ते प्रयान्ति ते ॥ ५२ ॥

[௪௯-௫௨] (அ-கை) க்ஷேத்திரம் கிட்டாதவிடத்து வேறு உபாயத்தினை நான்கு சுலோகங்களாற் கூறுகின்றார் :—

(கூ-ம்) பாத்திரபத மாசத்தில் சுக்கிலபக்ஷத்தில் சதுர்த்தியில் பக்தியுடையவனான நரன் கணேசனது சதுர்புஜமுள்ள பிருதிவிமயமான (மண் மரம் கல் முதலிய வடிவ) மூர்த்தியினை வாகனத்தோடும் ஆயுதத்தோடும் செய்து, (கற்பத்திற் சொல்லப்பட்ட ஐம்பத்தாறு பேதங்களில் ஒரு விக்கிரகத்தினைச் செய்து) விதிப்படி செவ்வையாய் அர்ச்சித்து, எவன் எழுமுறை இக்கீதையினைப் பிரயத்தனத்தோடு படிக்கின்றானோ, அவனுக்கு இக்கணேசர் சந்தோஷித்தவராய் உத்தமமான போகத்தினையும் புத்திரர்களையும் பௌத்திரர்களையும் தனத்தினையும் தானியத்தினையும் பசுரத்நாதி சம்பத்துக்களையும் கொடுக்கின்றார். வித்தையை விரும்பியவனுக்கு வித்தையுண்டாம். சுகத்தைவிரும்பியவன் சுகத்தைப்பெறுவான்.

காமியானவன் மற்றைய காமங்களைப்பெறுவான். அவர்கள் (அர்த்த காமபரராயினும்) முடிவில் (நரகத்தினையடையாது) முக்தியினையே யடைவார். (எ-று)

"அறியத்தக்க வித்தைகள் பரை அபரையென்று இரண்டுண்டு" என்று உபக்கிரமித்து, அவற்றுள், அபரை ருக்வேதம் யஜுர்வேதம் என்றல் முதலியவற்றால் ருக்வேத சாஸ்திராதி லக்ஷணமுள்ள அபராவித்தையினைக் கூறி பின் எந்தப்பதம் அதிருசியமும் அக்ராஹியமுமாமோ அப் பராத்பரமான அக்ஷரம் எதனாலறியப்படுகின்றதோ என்று குருப்பிரசாதத்தா லடையப்படும் யோககலையால் அடையப்படுவதான பராவித்தையும் சொல்லப்பட்டுளது. அவ்விருவகை வித்தையையும் இச்சித்தபடி படைத்தால்பெறுவான் என்பார் 'வித்தையை விரும்பியவனுக்கு வித்தையுண்டாம்' என்றார்.

"சுதத்தை விரும்பியவன்" என்பதனால் இருவகை வித்தையின் பயனை விரும்பியவனாவன். அவற்றுள், அபரா வித்தையின் ஐஹிகபலன் "யௌவனமுள்ளவனாய், நல்ல யௌவனனாய், வேதாதி ஓதி யுணர்ந்தவனாய், நல்ல சுகியாய், மிகத் திடமுள்ளவனாய், மிக வலியுடையவனாய், அவனது பூமிமுழுவதும் தனத்தின் நிறைவுடையதாயிருக்கும். அது ஒரு மானுட ஆநந்தமாம்." என்று(தை-உ-அ-க) கூறிய சார்வபௌம சக்கரவர்த்தியினதாகிய மானுடாநந்த முடிவினதாம். அபராவித்தையின் ஆமுஷ்மிக பலனோ மானுடாநந்தமுதல் மேல் மேல் நூறுமடங்கதிகமாகப் பரார்த்த மதிகமான மானுடாநந்த வளவினதாக "அது ஒரு பிரஹ்மாவின் ஆநந்தமாம்" (தை-உ-அ-க) என்று சுருதியிற் சொல்லப்படும் இரணிய கர்ப்பாநந்த முடிவினதாம். இவ்வாறே பராவித்தையின் ஐஹிக பலன்; "யான் பிரஹ்மம் என்று எவன் இவ்வாறு அறிகின்றனோ அவன் இவ்வெல்லா மாகின்றான" (பிரு-க-ச-க௦) என்னும் சர்வாத்ம பாவமும், "ஆத்மாவின் தரிசனத்தினாலும் சிரவணத்தினாலும் மனனத்தாலும் விஞ்ஞானத்தினாலும் இவ்வெல்லாம் அறியப்பட்டதாம்" (பிரு-உ-ச-ரு) என்னும் சர்வஞ்ஞத்துவமும்,

“அவன் எல்லாக்காமங்களையும் கூடவே அநுபவிக்கின்றான்” (தை-உ-க-க) என்னும் ஒருங்கே சர்வ காமாப்திபுமான இது அவாந்தர திருஷ்டபலமாம். முக்கியமோ, “ஆத்மாவினை யறிந்த வன் சோகத்தினைக் கடக்கின்றான்” (சாந்தோ-எ-க-௩) சுருதியால் அநர்த்த நிவிருத்தியும், “எங்கு இவனுக்கு யாவும் ஆத்மாவே யாகின்றதோ அப்போது இவன் எதனால் எதனைப்பார்ப்பான்” என்றல் முதலியவற்றால் அத்வைத தரிசன வடிவ பரமாநந்தா வாப்திபுமாகச் சொல்லப்பட்டுளது. இதனால் தர்மகாமனுக்கும் மோக்ஷகாமனுக்கும் இக்கணேச கீதாத்தியயனம் விதிக்கப்பட்ட தாம்.

‘காமி மற்றக்காமங்களைப் பெறுவான்’ என்பதனால் காமிக் கப் படுகின்றன என்னும் விற்பத்தியால் காமங்கள் என்பன ஸ்திரியாதி அர்த்தங்களும், அவற்றின் சம்யோகத்தினலாம் ஸ்பரி சங்களுமாம் என்னும் தந்திரத்தால் அர்த்தம் காமமிரண்டும் கொள்ளப்படுகின்றன. இதனால் அர்த்தத்தை விரும்பியவனும் காமத்தினை விரும்பியவனும் இச்சாஸ்திரத்தினைப் படிக்கவேன்பது சொல்லப்பட்ட தாகின்றது.

அப்படியானல், ‘அரசனே! இந்திரிய சம்பந்தமான (விஷய) சுகம் ஸ்வர்க்கத்தில் நரகமேயாம்’ என்று ஸ்மரிக்கப்படுதலால் அர்த்தகாமங்களை விரும்பியவர்கட்குக் கணேசகீதாபாடம் பயனால் சியேனயாகாதிகளைப் போல அநர்த்தத்தினைத் தருவதாமேயென் ருசங்கித்து, அது ‘முடிவில் முத்தியினையே யடைவர்’ என்பத னல் பரிகரிக்கப்பட்டதாம். இஃதபிப்பிராயம் :– “சியேனத்தால் அபிசரித்து யஜிக்கக்கடவன்” என்று விதிக்கப்பட்ட சியேனம் சத்துருமாரணமெனப்படும் தனது பிரயோஜனமாத்திர சித்தியின் பொருட்டதாம் என்பதனல் பயனால் அநர்த்தத்தினைத் தருவதாம். கணேசகிதா பாடமோ, உலர்ந்துபோகும் பயிர்கள் செவ்வையாய் ஜீவிக்க (தளிர்க்க) விரும்பியவன் “காரீரியால் யஜிக்கக்கடவன்” என்று தனது பிரயோஜனத்தின் பொருட்டதாய் விருஷ்டி காம (மழையை விரும்பியவ) னல் செய்யப்படுவதாயினும், காரீரியாகம் மழைவடிவ பயனல் எல்லாவுலகையும் சந்தோஷிப்பிக்கிறது. அது

ஞல் அதில் மிக வற்பமாம் திருஷ்டபலம்; அதிருஷ்டபலமோ கர்த்தாவுக்கு அபரிமிதமாம் (அளவிடப்படாததாம்). இவ்வாறு கணேசகீதை படிப்பவனுக்கும் திருஷ்டபலம் அற்பமும், அதிருஷ்டபலம் அபரிமிதமுமாகின்றது என்பதனுல் மோக்ஷத்தின் பொருட்டாகின்றது. அதனுல் முடிவில் முத்தியினையே யடைவர் என்று கூறியது பொருத்தமுடைத்தாம். (எ-று)

அதிரை நாளிற் றேன்றி யருண்மிகு நடனங் கண்டவ்
வாதிரை யான்ற னன்பர்க் கன்புசெய் குப்பு சாமி
யாதிரை நாளன் றேன்ற லங்கர னுயர்கீ தைக்குச்
சூதிலா வுரைசெய் திட்டான் றுயர்க்கட லிக்து மாறே.

ॐ तत्सदिति श्रीमद्गणेशगीतासूपनिषदर्थगर्भासु योगामृतार्थशास्त्रे श्रीगणेशपुराणे उ० श्रीगजाननवरेण्यसंवादे गुणत्रयविकृतिनामैकादशोऽध्यायः ॥ ११ ॥

॥ श्री गजाननार्पणमस्तु ॥

குணத்திரய விக்ருதியோக மென்னும்,

பதினேராமத்தியாயம்

முடிந்தது.

---

ஸ்ரீ கணேசகீதை முடிந்தது.

---

வாழ்க மாமறை வானவ ரந்தணர்
வாழ்க வையமும் வளமிக வோங்கியே
வாழ்க விநூலினை மதியோடு கற்பவர்
வாழ்க வைங்கரன் மலரடி யென்றுமே.

* இருடியே பிரமம்வின்றே டேவெனுங் கலியப்தத்து
மருவிடு நளவெனுண்டின் மகரமா மதிநாளாதி
லொருபகோ டொன்றதாகு முயர்திதி யமாபக்கத்
தருதியில் காசினுதனருளினுன் முடிந்த திந்நூல்.

---

* ௭—வின்—பிரமம்—இருடி } = 5017-வது கலியப்தம்
௫ 0 ௧ ௭